நினைவு கெடுகின்ற நெஞ்சத்தினையுடைய யாங்கள் நின்பெண்டிருள் நோராகி ஊரன் உரனல்லனென்ற வார்த்தையைக் களைந்து நின்குறியிடத்தே வந்து ஆண்டுக் காணுமையின் எம்மிடத்தே வந்தாயென்று கருதி எங் கதவத்தைச் சேர்ந்து தட்டின கையின் வளையினுலே தம் வரவினைச் * சொல்லுதலை இயல்பாகவுடைய அப்பரத்தையரை நோவேமோ? அதற்கு யாங்கள் உரியே மல்லேமே; எ - று.

இது †"வண்ணம் பசந்து புலம்புறு காலை, யுணர்ந்த போல‡வுறுப்பினைக் கிழவி, புணர்ந்த வகையிற் புணர்க்கவும் பெறுமே"(க)என்பதனுன் உறுப்பினை உணர்வுடையதுபோற் கூறிற்று.

௧௨ ஊடியார் நலந்தேம்ப வொடியெறிந் தவர்வயின்
மாறீர்க்கு மவள்மார்பென் றெழுந்தசொன் னோவேமோ
முகை||வாய்த்த (உ)முலைபாயக் குழைந்தநின் முறெள்ள
(௩)வகைவரிச் (ச)செப்பினுள் வைகிய கோதையேம்

எ-து: முகையின்றன்மை வாய்த்த முலைகள்முயங்குகையினுலே ÷செவ்வி குலைந்த நினதுமாலை எம்மை இகழ்ந்துகூறக், கூறுபாட்டினை ×யுடைத்தாகிய ∴வரியினையுடைய 'பூச்செப்பிலே பயன்படாது தங்கிய மாலைத்தன்மையை யுடைய யாங்கள் இற்பரத்தையர் ஊடினமகளிர் ஊடலைத்தீர்த்துமுயங்காதே

---

க. தொல். பொருளி. சூ. அ. இச்சூத்திரத்தினுரையிலும் இவர், தலைவி தன்மேனி பசந்து தனிப்பட ருறுங் காலத்துத் தனது உறுப்பினை உணர்ந்ததுபோலக் கூறினதற்கு, "கேளல..........நெஞ்சத்தேம்" என்பதை மேற்கோள் காட்டியிருக்கிருர்.

உ. "ஒல்லா முயக்கிடைக் குழைகவென் முரே" புறம். எ௩: ௧௪.

௩. "வகைவரிச் செப்பினுள் வைகிய மலர்போற், றகைநலம் வாடி 'மலர் வனம் புகூஉ, மாதவி பயந்த மணிமே கலையொடு" மணி. ௪; ௫௫-௬எ.

௪. (அ) "பெய்யாது வைகிய கோதை போல, மெய்சா யினையவர் செய் குறி பிழைப்ப" நற்.௧௧:௧-உ.(ஆ)"மடைமாண் செப்பிற் றமிய வைகிய, பெய்யாப் பூவின் மெய்சா யினளே" குறுந். ௯.(இ)"பீர்தங்கிப் பெய்யா மலரிற்பிறி தாயி ஞளே" சீவக.௧௯௬௦.என்பவையும்(ஈ)"பாதிரிக் குறு மயிர் மாமலர், நறுமோரோடமொ டுடனெறிந் தடைச்சிய, செப்பிடந் தன்ன நாற்றம்" நற். ௩௩எ:௪-௬.(உ)"செப்புவாயவிழ்ந்த தேம்பொதி நறுவிரை, நறுமலர்" சிலப். உஉ: [1]௧உ௧ - ௧உஉ. (ஊ) "பித்திகைக் கோதை செப்புவாய் மலரவும்" பெருங். (௧) ௩௩: எ௬. (எ) "கற்பக

(பிரதிபேதம்) * சொல்லுதலையுடைய பரத்தையரை † வண்ணந்திரிந்து புலம்புறுகாலை ‡ உறுப்பினைக்கிளவி புணர்ந்த; || வாய்ந்த, ÷ செவ்விகுலைந்த மாலையெம்மை × உடைத்தாகிய வச்செப்பிலே ∴ வரியினையுடையசெப்பிலே

அவர்கள் நலங்கெடும்படி அவரை (க) இடையன்கொன்ற *மரமாக்கினைத்து அச்சேரிப்பரத்தையரிடத்து வேட்கையைத்தீர்க்கும், அவனுடையமார்பென்று ஊரிற்பிறந்தசொல்லைநோவேமோ; அதற்கு யாங்கள் உரியேமல்லேமே; எ - று.

ஓடியவெறிந்தென்பது, (உ)†ஓடியெறிந்தெனவிகாரமாயிற்று.

கசு சேரியாற் சென்றுநீ சேர்ந்தவில் ‡விளையினன்
றேரொடு திரிதரும் பாகனைப் பழிப்பேமோ
||வொலிகொண்ட சும்மையான் மண÷மனை குறித்தெர்பிற்
பொலிகெனப் புகுந்தநின் புலையனைக் கண்டயாம்

எ - து: ஆரவாரத்தை மாறுமற் றன்னிடத்தேகொண்ட ஆரவாரத்தாலே நீ மணஞ்செய்கின்ற மனையாகக் கருதி எம்முடைய ×மனையிலே பொலிக பொலிகவென்று கூறிப் **புகுந்த நின்னுடைய புலைத்தொழிலையுடைய பாணனைக் கண்ட யாங்கள் சேரிதோறுஞ் சென்று நீ ††சேர்ந்த இல்லை விளையினையுத் தேரோடே கூடத் திரிதலைச்செய்யும் பாகனைக் குறைகூறுவேமோ? அதற்கு யாங்கள் ‡‡உரியேமல்லேமே; எ - று.

சேரியான் என்றது "ஊரானோர் தேவகுலம்" என்றாற்போல் நின்றது. சும்மையை ஒலி விசேடித்து நின்றது. |||புலையன், செறற்சொல்.

× ×எனவாங்கு, அசை.

---

மாலையுஞ், சேம மணிநகைச் செப்பினு ளேந்துபு" சூளா. மந்திர. ருசு. என்பவையும் இங்கே அறிதற்பாலன.

க. (அ) "இடைய னெறிந்த மரம்" பழமொழி. ௩௧௪. (ஆ) "இடைய னெறிந்த மரமேயொத் திராமே"பெரியதிருமொழி. (கக) அ : சு. (இ) "இடைமகன் கொன்ற வின்ற மரத்தினேன்" சீவக. ககூகச. (ஈ) "பொதுவனோர்மகன், கொன்றிடுமுலவையின்கொள்கையாயினேன்" கந்த. மூவாயிரர்வதை. எக. (உ) "நன்றுநய் கேள்வ னருமொன வெண்ணி நாப்புலர்ந் துள்ளழிந் தாயன், கொன்றதீன் மரம்போ லெழினலம்வாடிக் குற்றுயி ரொடும்பதை பதைத்தாள்" கூர்ம. இராமன் வைகுந்த. ௩க. (ஊ) "ஆயன் கொன்ற மரம்பொர, மூபண விந்தொரு பற்று மின்றி முடிந்த பாணியின்" தணிகை. இந்திர னருள். கஉ.

உ. (அ) "ஓடியெறியத் தீரா பகை" பழமொழி. ௩அ௪. (ஆ) "தெழியினோ யொடியெறி கிற்பவ ரொத்து" கலிங்க. சகக. (இ) "ஓடியெறிந்து மூரிவா ரொழுக்கினர்" விநாயக. சிந்தாமணி. எஅ.

(பிரதிபேதம்) * மரமாக்கினைத்துச் சேரிப்பரத்தை †ஓடியெறிந்ததெனவிகாரம் சேரியாற் சென்று ‡விளைவினன் || வலிகொண்ட ÷மனைக்குறித், × மனையிலேபொலிக வென்று **புகுந்த நம்முடைய ††சேர்வில்லை ‡‡ உரியமல்லேமே |||| புலையன் செற்றச்சொல் × × எனவாங்கு ஆங்கசை கனவினன்;

உ0 நனவினான் வேறாகும் வேளா முயக்க
*மனைவரிற் பெற்றுவந்து மற்றெந்தோள் வாட
வினைய ரெனவுணர்ந்தா ரென்றேக்கற் றாங்குக்
(க)கனவினா னெய்திய செல்வத் †தனையதே
(உ)ஐயய வெமக்குநின் மார்பு

எ - து: எம்மனைக்கண்ணே நீ ஒருகாலத்தே ‡வந்தாயாயின் நின்னைப் பெற்று மகிழ்ந்து நீ நீங்கிய பின் எந் தோள் மெலிகையினாலே அதனை உணர்ந்தவர்கள் இக்காலத்து இவளும் ||இவரும் இத்தன்மையராயினாரென்று புறங்கூறுதலின் அக்கூற்றை யாம் ஏற்றுக்கொண்டு பழையநிலையைப் பெறு தற்கு ஏக்கற்று முயங்குமாறுபோலே வியக்கத்தக்க நின் மார்பினிடத்தே முயங்கினும் உண்மையிடத்து வேறாயிருக்கும் நீ விரும்பாத முயக்கம் எமக்குக் கனவின்கண் வரப்பெற்ற செல்வத்தையொப்ப தொன்றாய் இருக்கும்; எ-று.

இதனாற் பயனின்றென ஊடினாள். ×நனவினான் கனவினானென்பன, இடப்பொருள. நனவு - உண்மை; கனவு - பொய்.

ஐயென்னும் உரிச்சொல், ஐயவென ஈறு திரிந்தது.

இது மெய்யன்றிப்பொய்யாகக்கோடலிற் (ந)பொய்யாக்கோடலென்னு மெய்ப்பாடு.

இஃது ÷ஈரடிமிக்க தாழிசையும் வருதலிற்கொச்சகம். (ந)

(சா௲)போதவிழ் பனிப்பொய்கைப் புதுவது தளைவிட்ட
தாதாரும் தாமரைத் தனிமலர்ப் புறஞ்சேர்பு
காதல்கொள் வதுவைநாட் கலிங்கத்து ளொடுங்கிய
மாதர்கொள் மானோக்கின் மடந்தைதன் றுணையாக

க. (அ) "கனவுகண்டது நனவினெய்துத, தேவர் வேண்டினு மிசைதல் செல்லாது, காவ லாள கற்றோர் கேட்பிற், பெருநகை யிதுவெனப் பேர்த்துரை கொடாஅ" பெருங். (ச) எ: ககO - ந. (ஆ)"செம்பொன் கனவினாற் காண்டல் கைப்புகுமோ" இருசமய. (ந) க: க, க. (இ) "கண்டகனவின் பொருள்போல யாவும் பொய்" திருவரங்கத். சஉ.

உ. "ஐவியப்பாகும்" தொல். உரி. சூ. அஎ.

ந. பொய்யாக்கோடலென்பதற்கு மெய்யைப் பொய்யாக்கோடலென்று பொருள்கூறி அம்மெய்ப்பாட்டிற்கு "கனவினா னெய்திய........... மார்பு" என்பதை மேற்கோள் காட்டினர், பேராசிரியரும்; தொல். மெய்ப். சூ. உஉ. இ - வி. உரைகாரரும் இதனையே பின்பற்றினர்; இ - வி. சூ. ருஅO.

(பிரதிபேதம்) * மனைவயிற்பெற்று †இனையதே ‡வந்தாயினின்னை || இவனுமித்தன்மை ×கனவினா னென்பன இடப்பொருட்டு நனவுகனவுண்மைபொய் = திரிந்தது மெய்யன்றிப்பொய்யாகக்கொண்டலிற்பொய்யாகக்கொண்டலெனும் மெய்ப்பாடு ÷ ஈரடித்தாழிசை

ரு வோதுடை யந்தண னெரிவலஞ் செய்வான்போ
லாய்தூவி யன்னந்தன் னணிநடைப் பெடையொடு
மேதகத் திரிதரூஉ மிகுபுன னல்லூர ;

அ தெள்ளரிச் சிலம்பார்ப்பத் தெருவின்கட் டாக்கிநின்
னுள்ளங்கொண் டொழித்தாளைக் குறைகூறிக் கொளநின்றாய்
துணிந்தது பிறிதாகத் துணிவில ளிவளெனப்
பணிந்தாய்போல் வந்தீண்டுப் பயனில மொழிவாயோ ;

கஉ பட்டுழி யறியாது பாகனைத் தேரொடும்
விட்டவள் வரனோக்கி விருந்தேற்றுக் கொளநின்றாய்
நெஞ்சத்த பிறவாக நிறையில ளிவளென
வஞ்சத்தான் வந்தீங்கு வலியலைத் தீவாயோ;

கரு இணர்ததை தண்காவி னியன்றநின் குறிவந்தாள்
புணர்வினிற் புகன்றாங்கே புனலாடப் பண்ணியாய்
தருக்கிய பிறவாகத் தன்னில ளிவளெனச்
செருக்கினால் வந்தீங்குச் சொல்லுருத் தீவாயோ;

எனவாங்கு;

உக தருக்கேம் பெருமநின் னல்கல் விருப்புற்றுத்
தாழ்ந்தாய்போல் வந்து தகவில செய்யாது
சூழ்ந்தவை செய்துமற் றெம்மையு முள்ளுவாய்
வீழ்ந்தார் விருப்பற்றக் கால்.

இதுவும் அது.

இதன் பொருள்.

போதவிழ் பனிப்பொய்கைப் புதுவது தளைவிட்ட
தாதுசூழ் தாமரைத் தனிமலர்ப் புறஞ்சேர்பு
காதல்கொள் (க)வதுவைநாட் கலிங்கத்து *ளொடுங்கிய

---

க. (அ)"சாணிடை நெடிய வாட்கண் டளையவிழ் குவளை பூப்பப், பூணுடை முலையின் பாரம் பொறுக்கலாச் சுளிவின் மேலு, நாணட நடுங்கிக் கையா னகை முகம் புதைத்த தோற்றஞ், சேணிடை யரவு சேர்ந்த திங்களை யொத்ததன்றே" சீவக. உசசுக.(ஆ)"கைம்மலரின் வீரனவள் கைம்முகிழ் பிடிப்ப, மெய்ம்மயி ரெறிந்துமணி வேர்நுத லரும்பிச் செ............சீறடிகள் செவ்வனிட மாட்டா, வம்மயிலி னுணதளை

(பிரதிபேதம்) * ஒங்கிய.

(௧) மாதர்கொண் மானோக்கின் மடந்தைதன் றுணையாக
(௨)*வோதுடை யந்தண(௩)னெரிவலஞ் செய்வான்போ
(௪)லாய்தூவி யன்னந்தன் னணிநடைப் பெடையொடு
மேதகத் திரிதரூஉ மிருபுன லூர

எ-து:†உத்தரீயத்துள்ளேகாணல்ஒடுங்கிநோக்குகின்ற(௫) காதல்கொண்ட (௬)மான்போலுநோக்கினையுடையமடந்தை தனக்கு (௭)இம்மை மறுமைக்குத்

யாவரறை கிற்பார்" சூளா. கல்யாண. உளஎ. என்பவைகளும் (இ) "வதுவையயர்தல் வேண்டுவலாங்குப், புதுவை போலுநின்வரவுமிவள், வதுவைநா ணொடுக்கமுங் காண்குவல் யானே" (கலி. ௫௨: உ௩ - ௫.) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

௧. "மாதர்கொண் மானோக்கின் மடநல்லாய்" கலி. ௫௬: ௧எ.

௨. (அ) "அந்தண ரோத்துடைமை யாற்ற மிகவினிதே" இனியது. அ. (ஆ) "ஓத்துடை யந்தணர்க்கு" மணி. ௧௩: உ௫.

௩. (அ) "சாலி யொருமீன் றகையாளைக் கோவலன், மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிடத், தீவலஞ் செய்வது காண்பார்க ணோன்பென்னை" சிலப். ௧: ௫௧ - ௫௩. (ஆ) "இட்ட வுத்தரியமின்னு மெரி மணிப்பருமுத்தார, மட்டவிழ்கோதை வெய்ய வருமுலைதாங்கலாற்று, நெட்டிருங் கூந்த லாட னோர்வளை முன்கை பற்றிக், கட்டழல் வலங் கொண்டாப் பொற் கட்டிரூனேறினனே" (இ) "குளிர்மதி கொண்ட நாகங் கோள்விடுக் கின்றதேபோற், றளிர்புரை கோதைமாதர் தாமரை முகத்தைச்சேர்ந்த வொளிர்வளைக் கையைச் செல்வன் விடுத்தவ ளிடக் கைபற்றி, வளரெரி வலங்கொண் டாய்பொற் கட்டிரு னேறி னனே" சீவக. அ௩௫, உ௪௬அ. (ஈ) "தங்கழல் வேள்விமுற்றித் தையலக் காளை யோடும், பொங்கழல் வலஞ்செய் போழ்தில்" சூளா. சுயம்வர. உஎஅ. (உ) "இடம்படு தோளவ னோடியை வேள்வி, தொடங்கிய வெங்கனல் சூழ்வரு போதின், மடம்படு சிந்தையண் மாறு பிறப்பி, னுடம்புயி ரைத்தொடர் கின்றதை யொத்தாள்" கம்ப. கடிமண. ௯௧. (ஊ) "தன்மங் கலந்த மனத்தோனையத் தைய லோடுந், தொன்மங் கலச் செஞ் சுடர்த்தீவலஞ் சூழுவித்தார்" வில்லி. திரௌபதிமாலை. ௯௪. (எ) "பொங்கு செந்தழல் சூழ்வந்து" நைடதம். மணம். உ௦.

௪. "ஆய்தூவி யனமென" கலி. ௫௬: ௧௫.

௫. "மாதர் காதல்" என்பது தொல். உரிச். சூ. ௩௦. இச்சொல் ஈறு திரிந்து மாதென்றும் வரும்.

௬. மான் போலும் நோக்கு - மானோக்குப் போலும் நோக்கு.

எ. "இம்மை மாறி மறுமை யாயினு, நீயா கியரென் கணவனை, யானு கியர்நின் னெஞ்சுநேர் பவளே." குறுந். ௪௯.

(பிரதிபேதம்) *ஓத்துடையந்தணன், † உத்தரீயத்துள்ளே,

துணையாகக் காதலித்தலைக்கொள்கின்ற *கலியாணநாளிலே ஓத்தினையுடைய அந்தணன் அங்கியங்கடவுளை வலஞ்செய்வான்போலே (௧)மெல்லிதாகியகுட்டு மயிரினையுடைய அன்னம் தன்னுடைய அழகிய நடையினையுடைய பேட்டோடே கூடிப் பூக்கள் அலர்ந்த குளிர்ச்சியினையுடைய பொய்கையிடத்தே நின்ற தாமரையினது புதிதாக முறுக்கு நெகிழ்ந்த தாது சூழ்ந்த தனித்த மலரைப் புறத்தே சேர்ந்து பெருமை தரும்படி திரிதரும் பரந்த புனலையுடைய நல்ல ஊரினையுடையவனே; எ - று.

வலஞ்செய்வான் போலென்ற ஏனையுவமம் பயவுவமமின்றி வினையுவம மாத்திரையை மேல்வருகின்ற கருப்பொருட்குக் கொடுத்து †அதனைச் சிறப்பித்துநின்றது, ‡அன்னத்திற்கு அங்கியங்கடவுள் அறிகரியாக மந்திர||விதியாற் சூழுங் கருத்தின்றித் தாமரையைச் சூழவருகின்ற தொழின்மாத்திரையே கோடலின். அந்தணன் எரிவலஞ்செய்வான் =போல அக்கருத்தில்லாத அன்னம் பெடையோடே தனிமலரைச் சூழத் திரியும் ஊரவென்றதனான் நீயும் அக் கருத்தின்றிக் குலமகளிரைத் தீவலஞ்செய்துவரைந்துகொண்டு பாதுகாவாது ஒழுகுகின்ற நினக்கு எம்மைப் பாதுகாத்தலுளதாமோவெனக் காமக் கிழத்தியும் உள்ளுறையுவமங் கூறினளாகவுரைக்க. இதனை, "ஏனோர்க் கெல்லா மிடம்வரை வின்றே"(௨)என்று உவமப்போலியிற் கூறிய விதியாற் கொள்க.

அ (௩)தெள்ளரிச் சிலம்பார்ப்பத் தெருவின்கட் ÷டாக்கிநின்
னுள்ளங்கொண் ×டொழித்தாளைக் குறைகூறிக் கொளநின்றாய்
துணிந்தது பிறிதாகத் துணிவில ளிவளெனப்
பணிந்தாய்போல் வந்தீண்டுப் (௪)பயனில மொழிவாயோ

எ - து: தெளிந்த உள்ளிடுமணியையுடைய சிலம்பு ஆரவாரிப்ப வந்து தெருவிடத்தே (௫) தாக்கணங்குபோலத் தாக்கி நின்னெஞ்சை அகப்படுத்திக்

---

௧. "ஒய்த லாய்த னிழத்தல் சாஅ, யாவயினான்கு முள்ளத நுணுக்கம்" தோல். உரி. சூ. ௩௨.

௨. தோல். உவம. சூ. ௨௭.

௩. "தெள்ளரிப் பொற்சிலம்பு" மது. ௪௪௪.

௪. குறள். 'பயனில சொல்லாமை' என்னும் ௨0-ஆம் அதிகாரம் இங்கே அறிதற்பாலது.

௫. தாக்கணங்கென்பதற்கு, தாக்கி வருத்துவதோரணங்கு (குறள் ௧0௮௨. பரி) தீண்ட வருத்தஞ்செய்யுந் தெய்வம்; சீதேவியுமாம் (சிலப். ௧௪: ௧௬0. அரும்பத) தீண்ட வருத்துந் தெய்வமகள் (சிலப். ௭௪: ௬௬0. அடியார்க்கு) தீண்டி வருத்துந்தெய்வம் (மணி. ௩: ௫௭. உரை) வருத்துந்

(பிரதிபேதம்) * கல்லியாண நாளிலே. † அதனைப்பிறப்பித்துநின்றது, ‡ அன்னத்திற்றங்கியகடவுள், || விதியிற்சூழும் = போலக்கருத்தில்லாத, ÷ தாக்குநின் × ஒளித்தாளை,

கொண்டபின்னர்க்கைவிட்டவளை நின் (க) வருத்தத்தைச்சொல்லி அழைத்துக் கொள்ளக் கருதிநின்ற நீ அறுதியிட்டு வந்த காரியம் வேறொன்றாயிருக்க இவள் தனக்கென ஓர் (உ) அறுதியுடையளல்லளென்று கருதி இவ்விடத்தே தாழ்ந்தாயைப்போல வந்து பயனில்லாத சொற்களைச் சொல்லக்கடவை யோ? அது நின்னை வருத்தாதோ? எ - று.

கஉ. (ங)பட்டுழி யறியாது பாகனைத் தேரொடும்
விட்டவள் வரனோக்கி விருந்தேற்றுக் கொளநின்றாய்
(ச)நெஞ்சத்த பிறவாக *நிறையில ளிவளென
வஞ்சத்தான் †வந்திங்கு வலியலைத் தீவாயோ

எ-து: ‡நீ செல்லாதே அகப்பட்ட (ரு)பரத்தையரது நெஞ்சு வலிதென்று ||அறியாது பாகனைத்தேரொடும்போகவிட்டு அவள் உன்னைவிருந்தாக எதிர் கொள்ள அவள் வரவினைக் கருதிநின்ற நீ அவள் வரக்காணாமையினாலே நின்னெஞ்சத்திடத்தன வேறுசிலவாயிருக்க இவள் (சு) நிறையென்கின்ற

தெய்வம் (அகம். எ:ச. உரை)என்று பொருளெழுதப்பெற்றிருத்தலால் அவ்வுரைகாரர் பலரும் பெரும்பாலும் ஒரு கொள்கையர்; நச்சினார்க் கினியர் "வேய்நெடுந் தோளியோர், தாக்கணங் கோமக ளோவெனத் தாழ்ந்தான்" (சீவக. கசஎங) என்புழியும் இச்சொற்குத் திருவென்றே பொருள் கூறியுள்ளார். இவர் கொள்கைக்கு, "தாக்கணங்குறை யுந்தடந்தாமரை" (சீவக. அஎக) என்பதும் சிலப். அரும்பத. இரண் டாவதுரையும் நிகண்டுகளும் ஒத்தனவாம்.

க. குறை - ஆகவேண்டிய காரியமுமாம்.

உ. அறுதி - வரையறை; நிச்சயம்.

ங. "உள்ளது வர்த்தல்" என்னும் மெய்ப்பாட்டிற்கு, "பட்டுழி ........... கொள நின்றாய்" என்பது மேற்கோள்; தொல். மெய்ப். சூ. உச. பே.

ச. தோழிக்குந் தலைவிக்கும் உரித்தாகிய வெளிப்படக் கூறுதலுள், ஆற்றாமை வாயிலாகத் தலைவன் வந்துழித் தலைவி வெளிப்படக் கூறிய தற்கு, "நெஞ்சத்த பிறவாக.................ஈவாயோ" என்பது மேற் கோள்; தொல். பொருளி. சூ. சஎ. நச்.

ரு. "இரும்பியன் றன்ன கருங்கோட் டெருமை" (அகம். ருசு: ங.) என் பதற்கு, 'இரும்பு போன்ற நெஞ்சினை யுடையராகிய பரத்தையர்' என்று எழுதி யிருக்கும் உள்ளுறை இங்கே அறிதற்பாலது.

சு. நிறையென்பதற்கு 'மறை பிறரறியாமை' என்று நவ்வந்துவனாரும், 'ஐம்பொறிகளையும் அடக்குதல்' என்று பேராசிரியரும், 'காப்பன காத்துக் கடிவன கடிந்தொழுகு மொழுக்கம்' என்று மணக்குடவரும், 'காப்பன காத்துக் கடிவன கடிந்தொழுகு மொழுக்கம்' என்றும் 'கற்பு' என்றும் பரிப்பெருமாளும், 'நெஞ்சைக்கற்புநெறியில் நிறுத்துதல்' என்றும் 'மனத்து அடக்கற்பாலனவற்றை அடக்குதல்' என்றும் 'மறை

(பிரதிபேதம்) * நிறைவில ளிவளென † வந்தீண்டு வலிதொலைத் தீவாயோ. ‡ நீசொல்லா தெய்தப்பட்ட || அறியாதபாகனை;

குணமுடைய னல்லனென்று கருதிப் பொய்வன்மையாலே இவ்விடத்தே வந்து உன் (க)ஊராண்மையாலே அலைக்கக்கடவையோ? அது நின்னை வருத்தாதோ? எ - று.

நெஞ்சத்தவென்ற பன்மை தன்வயத்த னாக்கிக்கொள்ளக் கருதிய தொழில்களை.

௧௬ (உ)இணர்ததை தண்கானல் வியன்றுறைநின் குறிவந்தாள்
புணர்வினிற் புகன்றாங்கே புனலாடப் பண்ணியாய்
தருக்கிய பிறவாகத் தன்னில வெவனெனச்
செருக்கினால் வந்தீங்குச் (௩)சொல்லுகுத் தீவாயோ

எ-து: பூங்கொத்து நெருங்கின குளிர்ந்த பொழிலிலே நீ செய்த குறியிடத்தே வந்தவளைப் புணர்ச்சியிடத்தே கொண்டாடி அப்பொழுதே கூடப் புனலாடும்படி பண்ணின நீ நின்னெஞ்சின் மிக்குநடக்கின்றவை வேறொன்றாயிருக்க இவள் (௪) தனக்கென *ஒரு நெஞ்சுடையளல்லளென்று கருதி மனச் செருக்காலே இவ்விடத்தேவந்து பரத்தையர்க்குக்கூறும் பயன்படுசொற்களைப் பாழே †போக்கக்கடவையோ? அது நின்னை வருத்தாதோ? எ - று.

"வாயிற் கிளவி வெளிப்படக் கிளத்த, றாவின் றுரிய தத்தங் கூற்றே" (௫)என்பதனால், துணிவிலன் நிறையிலனென ஆற்றாமைவாயிலாகத் தலைவன் வந்துழி வெளிப்படக்கூறினாள்.

எனவாங்கு, அசை.

௨௧ (௬)தருக்கேம் பெருமநின் னல்கல் விருப்புற்றுத்
தாழ்ந்தாய்போல் வந்து தகவில செய்யாது

---

பிறரறியாமை'என்றும்பரிமேலழகரும், 'மனத்தைநிறுத்துதல்'என்றும் 'மறைபிறரறியாமை' என்றும் நச்சினார்க்கினியரும் பொருள் கூறுவர்.

க. "ஊராண்மைக் கொத்த படிறுடைத்து" (கலி. ௮௧: ௨) என்பதும் அதன் உரையும் குறிப்பும் பார்க்க.

உ. "இணர்ததையும் பூங்கானல்" சிலப். எ: ௩௧.

௩. (அ) "கானலந் துறைவற்குச் சொல்லுகுப்போயே" ஐங். ௧௩௬. (ஆ) "பளுகுபா லன்னவென் சொல்லுகுத் தேனே"

௪. "அவர்நெஞ் சவர்க்காதல் கண்டு மெவனெஞ்சே, நீயெமக் காகா தது" குறள். ௧௨௯௧. என்பதும் கலி. ௬எ: தாழிசைகளின் ஈற்றடிகளும் இந்நூற்பக்கம் ௪0அ: ௩ - ஆம் குறிப்பும் நோக்குக.

௫. தொல். பொருளி. ௬. ௪எ.

௬. "தருக்கேம் பெரும ..........விருப்பற்றக்கால்" என்பது ஊடலுக்கு மேற்கோள். தொல். அகத்திணையியல். ௬. ௧௪. ௩௪.

(பிரதிபேதம் * ஓர்நெஞ்சு; † போகக்கடவையோ வாயிற்கிளவி.

சூழ்ந்தவை செய்துமற் றெம்மையு முள்ளுவாய்
வீழ்ந்தார் விருப்பற்றக் கால்

எ-து: பெருமா! நின்னருளால் யாங்கள் *மனஞ்செருக்கேம்;எம்மிடத்தே விருப்பமுற்றுக் (க) குறைந்தாய்போலேவந்துநின்று நினக்குத் தகுதிப்பாடில்லாதவற்றைச் செய்யாதே நீவிரும்பினாரிடத்து நுகரக்கருதியவற்றைச் செய்துமுடித்து ஆண்டுள்ள விருப்பமற்றஇடத்துப் பின்புஎம்மையும் நினைப்பாயென ஊடல் தீர்கின்றாள் கூறினாள்; எ - று.

இதனால், இருவர்க்கும் புணர்ச்சியுவகை பிறந்தது.

இது வெள்ளைச்சுரிதகத்தாலிற்ற ஒத்தாழிசைக்கலி. (ரு)

(எO.) மணிநிற மலர்ப்பொய்கை மகிழ்ந்தாடு மன்னத்தன்
னணிமிகு சேவலை யகலடை மறைத்தெனக்
கதுமெனக் காணாது கலங்கியம் மடப்பெடை
மதிநிழ னீருட்கண் டதுவென வுவந்தோடித்
துன்னத்தன் னெதிர்வரூஉந் துணைகண்டு மிகநாணிப்
பன்மல ரிடைப்புகூஉம் பழனஞ்சே ரூரகேள்;

எ நலநீப்பத் துறந்தெம்மை நல்காய்நீ விடுதலிற்
பலநாளும் படாதகண் பாயல்கொண் டியைபவாற்
றுணைமலர்க் கோதையார் வைகலும் பாராட்ட
மணமனைத் ததும்புநின் மணமுழவந் தெடுப்புமே;

கக அகலநீ துறத்தலி னழுதோவா வுண்கணெம்
புதல்வனை மெய்தீண்டப் பொருந்துத லியைபவா
னினக்கொத்த நல்லாரை நெடுநகர்த் தந்துநின்
றமர்பாடுந் துணங்கையு ளரவம்வந் தெடுப்புமே;

கரு வாராய்நீ துறத்தலின் வருந்திய வெமக்காங்கே
நீரிதழ் புலராக்கண் ணிமைகூம்ப வியைபவா
னேரிழை நல்லாரை நெடுநகர்த் தந்துநின்
றேர்பூண்ட நெடுநன்யா னெண்மணிவந் தெடுப்புமே;

எனவாங்கு;

---

(க) தாழ்தலென்பது குறைதலென்னும் பொருளில் வருமென்பதை, "தாழ்ந்தான்" "தாழ்ந்து" (சீவக. கசஎக, உகருள) என்பவற்றிற்கு இவர் எழுதியிருக்கும் உரையாலும் அறிக.

(பிரதிபேதம்) * மனச்செருக்கேம்.

மெல்லியான் செவிமுதன் மேல்வந்தான் காலைபோ
லெல்லாந் துயிலோ வெடுப்புக நின்பெண்டி
ரில்லி னெழீஇய யாழ்தழீஇக் கல்லாவாய்ப்
பாணன் புகுதராக் கால்.

இது பரத்தையிற் பிரிந்துவந்த தலைவன் றோழியை வாயில்வேண்ட அவள் வாயினேர்வாள் நெருங்கிக் கூறியது.

இதன் பொருள்.

(க)மணிநிற மலர்ப்பொய்கை மகிழ்ந்தாடு (உ)மன்னந்தன்
னணிமிகு சேவலை யக(ங)லடை மறைத்தெனக்
கதுமெனக் காணாது கலங்கியம் மடப்பெடை
மதி(ச)நிழ னீருட்கண் டதுவென வுவந்தோடித்
துன்னத்தன் னெதிர்வரூஉந் துணைகண்டு மிகநாணிப்
(ரு)பன்மல ரிடைப்புகூஉம் பழனஞ்சே (சு)ரூரகேள்

எ - து: பலமணிகள் போலும் நிறங்களையுடையவாகிய மலர்களையுடைய பொய்கையிலே சேவலோடு மகிழ்ந்து விளையாடும் அன்னப்பெடை தனது அழகுமிக்க சேவலன்னத்தை அகன்ற தாமரையிலை மறைத்ததாக அதனைக் காணமற் (எ) கதுமெனக்கலங்கி அந்தஅறியாமையையுடையபெடை மதியினுடைய நிழலை நீருக்குள்ளே கண்டு அச்சேவலென்றுஉவந்து ஓடிச்சென்று

க. "மணிநிற மலர்ப்பொய்கை•வளர்ந்தருளு மயிலோனே" தொல். செய். சூ. கஉ. நச். மேற். "மணிநிற நெய்தல்" ஐங். கசு; ஐந் - எழு. சுO.

உ. "அன்னச் சேவ லயர்ந்துவிளை யாடிய, தன்னுறு பெடையைத் தாமரை யடக்கப், பூம்பொதி சிதையக் கிழித்துப் பெடைகொண், டோங்கிருந் தெங்கி னுயர்மடல் வேறு" மணி. ரு: கஉங-கஉசு.

ங. இந்நூற்பக்கம் உசு: க-ஆம் குறிப்புப்பார்க்க.

ச. "வண்சிறைப் பவளச் செவ்வாய்ப் பெடையன்ன மடமை கூரத், தண்கய நீருட் கண்ட தன்னிழல் பிறிதென் றெண்ணிக், கண்டனங் கள்வ மற்றுன் காதலி தன்னை நீர்க்கீழ்ப், பண்டைய மல்லம் வேண்டா படுக்கவென் றாடிற் றன்றே" சீவக. கசுஉங.

ரு. "பன்மலர்ப் பழனத்த" கலி. எஅ: க.

சு. 'ஊரகேள்' கலி. எஎ: எ; எக: சு. அண்மைசுட்டிய விளிநிலைக்கிளவியின் முன் வல்லெழுத்து இயல்பாய் வந்ததற்கு இப்பகுதி மேற்கோள்; தொல். உயிர்மயங். சூ. அ. நச்.

எ. கதுமென - விரைய. (அ) "கதுமெனச், சிறுகுடி துயிலெழூஉம்" (ஆ) "கதுமென வெரீஇ"(இ)"கதுமெனக் கண்டவர்க், குண்ணின்ற நோய்

தணனைச் சேருதற்கு எதிரேவருகின்ற சேவலைக்கண்டு மிகவும் நாணிப் பல் பூக்களின் *செறிவுக்குட் புக்கு ஒளித்திருக்கும்(க)பழனநிலஞ்சூழ்ந்த ஊரனே! யான் கூறுகின்றதனைக்கேள் ; எ - று.

பரத்தையர்சேரியிலே இருந்து நின்னோடே புணர்ந்து விளையாடுகின்ற பரத்தை வேறொரு பரத்தை களவொழுக்கத்தாலே மறைத்துக் கொண்டு போனாளாக நின்னைக் காணாது கதுமெனக் கலங்கி அந்தப் பரத்தையை வேறோர் தலைவன் வதுவையயர்கின்றதனை நீ வதுவையயர்கின்றாயென்று கருதி உவந்து சென்று தன்னைக் கூடுதற்கு எதிரேவருகின்ற நின்னைக் கண்டு இவன் தானே வருகின்றதனை அறியாது நாங் †தேடிவந்தோமேயென்று அதற்குநாணித் தன் சுற்றத்திடத்தேயிருந்து நின்னை வருத்துகின்றாளென்று உள்ளுறை யுவமங்கூறித் தலைவனைத் தோழிநெருங்கினாள்.

எ நலநீப்பத் (உ)துறந்தெம்மை நல்காய்நீ விடுதலிற்
பலநாளும் படாதகண் பாயல்கொண் டியைபவாற்
றுணைமலர்க் கோதையார் வைகலும் பாராட்ட
மணமனைத் (௩)ததும்புநின் மணமுழவந் தெடுப்புமே

எ - து: நீ எம்மை நலம்போம்படியாக நீங்கிப் பின்னர் ‡ஒருகாலத்தும் அருளாயாய்க் கைவிடுகையினாலே பலநாளுந் துயிலாத கண்கள் வருத்தமிகுதியால் யாங்கள் இருத்தலாற்றாது ஒருநாட் (௪) படுக்கையையும் இடமாகக்

---

மிக வுயிரெஞ்சு துயர்செய்தல்" (௩) "கதுமெனநோக்கி" (உ) "கதுமெனத்தாம்வந்தார்"(ஊ) "கதுமெனவந்து" (எ)"கதுமெனநோக்கன் மின்வந்து" என்று இந்நூலுள் வருவனவும், (ஏ) 'கதுமென' விரைவுணர்த்துமென்று (தொல். இடை. சூ. ௪அ. நச்.) எழுதப்பெற்றிருத்தலும் நோக்குக. (ஐ) "கதுமென் விரைவில்" என்றார் சேக்கிழாரும்.

க. (அ) பழனம் பொதுநிலமென்பர் ஐங்குறு நூற்றுரைகாரர்; ஐங். ௪. (ஆ) நீர்நிலைச்செறுவென்பர் அடியார்க்குநல்லார் சிலப். ௧௦: ௧௧௩.

உ. "நல்காது துறந்த காதலர்" அகம். ௧௧௩: ௧.

௩. ததும்புதல் - ஒலித்தல்; (அ) "அருவி, முதுவாய்க் கோடியர் முழவிற் றதும்பி" குறுந். ௭௮. (ஆ) "வெண்ணெ லரிநர் பின்றைத் ததும்புந், தண்ணுமை" அகம். ௪௦: ௧௩ - ௪. (இ) "அருவி, தாழ்ந்து வீழ்ந்தவை முழவிற் றதும்பின" சீவக. ௧௫௯௦. (ஈ) "இமிழ்முழாத் ததும்பு, மரங்கம்" (உ) "முழவொடு பல்லிய முன்றிற் றதும்ப" பெருங். (க) ௩௪: ௧௪௦-௧௪௩; (ரு) ௯: ௪. என்பவை இங்கே ஒப்பு நோக்கற்பாலன.

௪. பாயல், உறக்கமென்னும் பொருளிலும் வரும்; இதனை இந்நூற்பக்கம் ௧௫௯: ௩-ஆம் குறிப்பால் உணர்க.

(பிரதிபேதம்) *செறிவுக்குள்ளே புக்கு † தேடிவந்தேமோ ‡ ஒருகாலும்

கொள்கையினாலே *இமைபொருந்துதலுங் கூடும், அதனை இணைந்த மலராற் செய்த கோதையினையுடைய (க) கலைகளெல்லாம் முற்றக்கற்ற † முதிர்ந்த பரத்தையர் நன்றென்று கொண்டாடும்படி நாடோறும் மணஞ் செய்யும் ‡மனைகளிடத்தே நின்று முழங்கும் நின் மணத்தை எமக்கு உணர்த்தும் முழவோசை வந்து போக்கும், அதுவே குறை; எ - று.

இயைய, அகரவீற்றுத் தொழிற்பெயர். ஆல், ஐயப்பொருட்டு.

கக (உ)அகலநீ துறத்தலி னழுதோவா வுண்கணெம்

||புதல்வனை மெய்தீண்டப் பொருந்துத ÷லியைபவா

---

க. கலைகளென்றது. (அ) "வேத்தியல் பொதுவிய லென்றிரு திறத்துக், கூத்தும் பாட்டுந் தூக்குந் துணிவும், பண்ணியாழ்க் கரணமும் பாடைப் பாடலுந், தண்ணுமைக் கருவியுந் தாழ்தீங் குழலுங், கந்துகக் கருத்து மடைநூற் செய்தியுஞ், சுந்தரச் சுண்ணமுந் தூநீ ராடலும், பாயற் பள்ளியும் பருவத் தொழுக்கமுங், காயக் கரணமுங் கண்ணிய துணர்தலுங், கட்டுரை வகையுங் கரந்துறை கணக்கும், வட்டிகைச் செய்தியு மலராய்ந்து தொடுத்தலுங், கோலங் கோடலுங்கோவையின் கோப்புங், காலக் கணிதமுங்கலைகளின் றுணிவு, நாடக மகளிர்க்கு நன்கனம் வகுத்த, வோவியச் செந்நூ லுரைநூற் கிடக்கையும்" (மணி. உ: கஅ - ௩௧.) எனக் கூறப் பட்டனவும் பிறவுமாகிய மகளிர்க்குரிய அறுபத்துநான்கு கலைகளை; இவை பரத்தையர்க்கு இன்றியமையாதவை யென்பது (ஆ) "எண்ணெண் கலையு மிசைந்துடன்... ..............பசந்த மேனியள்" (இ) "எண்ணெண் கலையோர்" (ஈ) "எண்ணான் கிரட்டி யிருங்கலை பயின்ற, பண்ணியன் மடந்தையர்" சிலப். அ: ௬ச-௬அ, கச: கசு, உஉ: க௩அ - க௩௧. (உ) "கலையுணர் மகளிர்" (ஊ) "கலைவலார்" சீவக. கசுஉ௫, உக௦எ. (எ) "கலையுணர் மகளிர்" பெருங். (க) ச௦: கஅச. (ஏ) "கலையுணர் நெஞ்சிற் கூத்தியர்" கூர்ம. நவகண்டத். ௫௦. என்பவற்றாலும் அறியலாகும்; (ஐ) இக்கலைகளை, "யாழ்முதலாக அறுபத்தொருநான்கு" என்பர், சொங்கு வேளிர்; பெருங். (க) ௩௫: அச.

உ. (அ)¹கிழவோன் விளையாட்டும் காமத்தின் மிகுதியைக் காட்டு மென்பதற்கு, "அகலநீ ........ வந்தெடுப்புமே" என்பதனை மேற்கோள்காட்டி, விளையாட்டாற் காமமிக்கு உறங்காமை கண்டு கொள்க வென்பர்; இளம்; தொல். கற்பி. சூ. உ௦. "கிழவோன்விளை" (ஆ) இப்பகுதியை வாயிலாய் வந்தார்க்கு மறுத்துத் தலைவனது பழிகளைத் தலைவி

(பிரதிபேதம்) *இமைப்பொருந்து தலுங்கூடுமதனை நின்மணத்தை..............முழவோசை வந்து பொருதுமதுவேகுறை இணைந்த. † முதிர்ந்துபரத்தையர், ‡ மனைகளிடத்தே நின்றுமுழங்கு முழவென்று முழவிற்கடையாக்குக: இயைபஅகரவீற்றுவினைத்தொழிற்பெயர் || புகல்வனை, ÷ இயையவதால்.

னினக்கொத்த நல்லாரை நெடுநகர்த் தந்துநின்
றமர்பாடுந் (க)துணங்கையு ளரவம்வந் தெடுப்புமே

எ - து: நீ எம்மை நீங்கத் தாம் †துயிலைத் துறக்கையினாலே அழுது மாறாத மையுண்கண் * எம்மெய் புதல்வனைத்தீண்டுகையினாலே பொருந்துதலுங் கூடும்; அதனை நின் இளமைமைப்பருவச்செவ்விக்கொத்த பரத்தையரை அவர்க்கென்று சமைத்த நெடிய மனையிலே கொண்டுவந்து(உ)நின்சுற்றமாகிய பரத்தையர் நின்று பாடுந் துணங்கைக்கூத்தில் எழுந்த ஆரவாரம் வந்து போக்கும்; அதுவே குறை. எ - று.

௧ரு வாராய்நீ துறத்தலின் வருந்திய வெமக்காங்கே
*நீரிதழ் புலராக்கண் ணிமைகூம்ப வியைபவா

---

வெளிப்படையாகக் கூறியதற்கு, மேற்கோள் காட்டுவர் நச்சினியார்க்கினியர் ; தொல். பொருளி. சூ. ௫எ.

௧. "துணங்கை, இங்கே மகளி ராடுந் துணங்கைக் கூத்து; சிங்கிக் கூத்தென்றும் சொல்லப்படும்; இது மகிழ்ச்சிக்காலத்தில் தமருடன் ஆடப்படுவது; இதற்கு முழவு முதலிய வாச்சியத்தானும் பாட்டானும் ஒலியுண்மையின் 'துணங்கையுளரவம்' என்றார். (அ) "துணங்கையந் தழூஉவின் மணங்கமழ் சேரி" மது. ௩உ௯. என்பதும் (ஆ) "இலங்கு வளை மடமங்கையர், துணங்கை யஞ்சீர்" மது. ௧ருகூ-௧௬0. (இ) "மகளிர் தழீஇய துணங்கை யானும்" குறுந். ௩௧. (ஈ) "கலிகெழு துணங்கை யாடிய மருங்கின்" (உ) "முழா அவிமிழ் துணங்கைக்குத் தழூஉப்புணை யாகச், சிலைப்புவல்லேற்றிற் றலைக்கைதந் துநீ, நளிந்தனை வருத லுடன்றன ளாகி" பதிற். ௧௩: ரு; ருஉ: ௧௪ - ௧௬. (ஊ) "தளரிய லவரொடு, துணங்கையாய்" (எ) "நிரைதொடி நல்லவர் துணங்கையுட் டலைக்கொள்ளக், கரையிடைக் கிழிந்தநின் காழகம்வந் துரையாக்கால்" கலி. ௬௬: ௧எ - ௧அ; எ௩: ௧௬ - ௧எ. (ஏ) "முழவிமிழ் துணங்கைதூங்கும் விழவின்" அகம். ௩௩௬: ௧௯. என்பவையும் ஈண்டு அறிதற்பாலன; இதற்கு இலக்கணம் (ஐ) "பழுப்புடையிருகை முடக்கி யடிக்கத், துடக்கிய நடையது துணங்கையாகும்" என்பது; வீரர் வென்றாடு துணங்கையும் பேய்கள் ஆடும் துணங்கையும் இதனின் வேறு.

உ. 'நின் றமர்பாடும்' என்ற தொடரை 'நின்று அமர்பு ஆடும்' எனச் சொற்பிரிவுசெய்து, நின்று விரும்பி யாடுகின்ற வெனப் பொருள் கொண்டனர், இளம்பூரணர்; தொல்.

(பிரதிபேதம்) * எம்மெய்ப் புதல்வனை. † ஈரிதழ்,

(க)னேரிழை நல்லாரை நெடுநகர்த் தந்துநின்
றேர்பூண்ட நெடுநன்மான் றெண்மணிவந் தெடுப்புமே

எ - து: நீ ஈண்டு வாராயாய் யாந் துயிலைத் துறக்கையினாலே வருந்திய எமக்கு நீர் வீழ்கின்ற இதழ்போல் நீர் மாறாத கண்கள் பாயலிலே இமை பொருந்துதலுங் கூடும்; அதனை ஒத்த இழையினையுடைய பரத்தையரைத் தமக்குச் * சமைத்த நெடிய இல்லிலே கொண்டுவருகையினாலே பிறந்த நின் தேரிலே பூண்ட உயர்ந்த நல்ல குதிரையிற் கட்டின தெளிந்த மணியோசை வந்து போக்கும்; அதுவே குறை. எ - று.

எனவாங்கு, †அசை.

(உ)மெல்லியான் செவிமுதன் மேல்வந்தான் காலைபோ
லெல்லாந் துயிலோ வெடுப்புக நின்பெண்டி
ரில்லி னெழீஇய யாழ்தழீஇக் கல்லாவாய்ப்
பாணன் புகுதராக் கால்

எ - து: நாற்படையாற் குறைந்த (ங)அகத்துழிஞையான் செவியிடத்தே மேலே வந்துவிட்ட புறத்துழிஞையானுடைய பள்ளியெழுச்சி முரசுபோல முற்கூறியவெல்லாம் அரிதிற்பெற்றதுயிலையோபோக்குக. பரத்தையரில்லிலே வாசித்த யாழைத் தழுவிக்கொண்டு வாயிலாய்த்திரிகின்றதொழியப்பாட்டைத் திருந்தக்கல்லாத வாயினையுடைய பாணன் நம் இல்லின்கண் வாராதவிடத்து; அவன்வரவேகாண் எமக்கு வருத்தமெனை நெருங்கிக்கூறினாள். எ - று.

இதனால், இருவர்க்கும் புணர்ச்சியுவகை பிறந்தது.

"வாயிற்கிளவி வெளிப்படக் கிளத்த, றாவின் றுரிய தத்தங் கூற்றே" (ச) என்பதனால், தோழி தாழிசைகளில் வெளிப்படக் கூறினாள்.

இது வெள்ளைச்சுரிதகத்தாலிற்ற ஒத்தாழிசைக்கலி. (௫)

---

க. "நேரிழை மகளிர்" பட். உஉ.

உ. கலிப்பாவி னிறுதி வெண்பாவியலினாற் பண்புற வந்ததற்கு, "மெல்லியான் செவிமுதல்..................புகுதராக்கால்" என்பது மேற்கோள்; தொல். செய். சூ. ௭௭. பேர். நச்.

ங. அகத்துழிஞை புறத்துழிஞை யென்னும் வழக்கினை, தொல். புறத். சூ. க௰ - கங. நச். உரைகளானுணர்க. அகத்துழிஞையை நொச்சி யென்பர் பிறநூலார்.

ச. தொல். பொருளி. சூ. ௪௭.

(பிரதிபேதம்) * சமைத்தவில்லிலே, † ஆங்கசை மெல்லியான்.

(எக.) விரிகதிர் மண்டிலம் வியல்விசும் பூர்தரப்
புரிதலை தளையவிழ்ந்த பூவங்கட் புணர்ந்தாடி
வரிவண்டு வாய்சூழும் வளங்கெழு பொய்கையுட்
டுனிசிறந் திழிதருங் கண்ணினீ ரறல்வார
ரு வினிதமர் காதல னிறைஞ்சித்தன் னடிசேர்பு
நனிவிரைந் தளித்தலி னகுபவண் முகம்போலப்
பனியொரு திறம்வாரப் பாசடைத் தாமரைத்
தனிமலர் தளைவிடூஉந் தண்டுறை நல்லூர;

கூ ஒருநீ பிறரில்லை யவன்பெண்டி ரெனவுரைத்துத்
தேரொடுந் தேற்றிய பாகன்வந் தீயான்கொ
லோரிற்றன் கொணர்ந்துய்த்தார் புலவியுட் பொறித்தபுண்
பாரித்துப் புணர்ந்தநின் பரத்தைமை காணிய;

கங மடுத்தவன் புகுவழி மறையேனென் றியாழொடு
மெடுத்துச்சூள் பலவுற்ற பாணன்வந் தீயான்கொ
லடுத்துத்தன் பொய்யுண்டார்ப் புணர்ந்தநின் னெருத்தின்க
ணெடுத்துக்கொள் வதுபோலுந் தொடிவடுக் காணிய;

கஎ தணந்தனை யெனக்கேட்டுத் தவறோரா தெமக்குநின்
குணங்களைப் பாராட்டுந் தோழன்வந் தீயான்கொல்
கணங்குழை நல்லவர் கதுப்பற லணைத்துஞ்சி
யணங்குபோற் கமழுநின் னலர்மார்பு காணிய;

என் றுநின்;

உஉ தீரா முயக்கம் பெறுநர்ப் புலப்பவர்
யார்நீ வருநாட்போ லமைகுவம்யாம் புக்கீமோ
மாரிக் கவாவுற்றுப் பீள்வாடு நெல்லிற்காங்
காராத் துவலை யளித்தது போலுநீ
யோர்யாட் டொருகால் வரவு.

**இது பரத்தையிற் பிரிந்துவந்த தலைவனது வரவுகண்டு ஊடிய காமக்கிழத்தி ஊடியவாறுகண்டு சென்று சார்ந்த தலைவனுடன் அவள் ஊடல் தீர்கின்றாள் கூறியது.**

இதன் பொருள்.

(க)விரிகதிர் மண்டிலம் வியல்விசும் *பூர்தரப்
புரிதலை தளையவிழ்ந்த பூவங்கட் புணர்ந்தாடி
வரிவண்டு வாய்சூழும் †வளங்கெழு பொய்கையுட்
டுனிசிறந் திழிதருங் கண்ணினீ ரறல்வார
ரு வினிதமர் (உ)காதல னிறைஞ்சித்தன் னடிசேர்பு
நனி(ங)விரைந் தளித்தலி னகுபவண் முகம்போலப்
பனியொரு திறம்வாரப் (ச)பாசடைத் தாமரைத்
தனிமலர் தளைவிடூஉந் (ரு)தண்டுறை நல்லூர

எ - து: மேல் விரியுங் கதிரையுடைய இளஞாயிறு அகற்சியையுடைய விசும்பிலே பரவா நிற்க விடியற்காலத்தே இதழ்கள் முறுக்குண்ட தலைகள் அம்முறுக்கு நெகிழ்ந்த செவ்விப்பூவிடத்து அழகியதேனை(சு)வரியினையுடைய வண்டுகள் அனைத்துங் கூடி நுகர்ந்து அதனாலும் அமையாது (எ) பின்னும் நுகர்தற்கு அவ்விடத்தைச் சூழ்ந்து திரியுஞ் செல்வம் மிக்க‡பொய்கையிடத்தே (அ)துனிமிகுதலாலே பெருக்கு மாறாது வீழ்கின்ற கண்ணினுடைய நீர் காமத்

---

க. "உள்ளுறையுவமம்" என்னும் தோல்.அகத். சசு-ஆம் சூத்திரவுரையில் "விரிகதிர்.........நல்லூர" என்பதனை மேற்கோள்காட்டி, இதனிற் சிறிது வேறுபடப் பொழிப்புரையும் விசேடவுரையுமெழுதி இது சிறப் பென்னு முள்ளுறையுவமம் என்று கூறி, தோல். பொருளி. சஅ-ஆம் சூத்திரவுரையினும் "விரிகதிர் மண்டிலமென்னும் மருதக் கலியுட் சிறப்புக்கொடுத்து நின்றது காட்டினும்" என வலியுறுத்தினர்; நச். காரிரத்ன கவிராயரும் "இச்சிறப்பென்ற உள்ளுறை, 'விரிகதிர் மண் டிலம்' என்னும் மருதக்கலியுள்ளும் வந்தமை காண்க" என்பர்; மாற னலங். உஅக. மேற்கோளுரை.

உ. "மறங்கொள் வெங்கதிர் வேலவன் வார்கழல், கறங்க வேகித்தன் காதலி யூடலை, யுறைந்த வொண்மலர்ச் சென்னியி னீக்கினு, னிறைந்த தின்ப நெடுங்கணிக் கென்பவே" சீவக. கOங௪.

ங. "துனிகொ டயர்தீரக் காதலர் துனோதர" கலி. கஉ0: உக.

ச. "பாசடைத் தாமரை" கலி. ருக: க; எங - உ; எஅ: க.

ரு. "தண்டுறை யூரன்" ஐங். கங, உக, அங, அஅ; கலி. எக: சு.

சு. 'வரிவண்டு' கலி. சுசு: உ; எச: க; கூஉ: உக. முன்பு இத்தொடர் மொழியில் வரியென்பதற்குப் பாட்டென்று பொருள்கூறியுள்ளார்; கோடுகளுமாம்.

எ. கலி. எச: தரவும், அதன் முதலாவது குறிப்பும் பார்க்க.

அ. துனி - கையிகந்த வூடல்.

(பிரதிபேதம்) * ஊாதாமபபுரிதலை, † வயங்கெழு,‡பொய்கையிடத்தே பசியவிலைக்குள்ளே.

நீயாற் சுவறி அறுதலையுடைத்தாய் ஒழுக அவ்வருத்தத்தைக் கண்டு இனிதாக அமர்ந்த கணவன் தன் அடியைச் சேர்ந்து இறைஞ்சி மிகவிரைந்து அளித்தலாலே சிறிது மகிழ்பவள் முகம்போலப் பசிய இலைக்குள்ளே நின்ற தாமரையினது தனித்த மலர் தனக்கு வருத்தத்தைச்செய்யும் பனி ஒருகூற்றிலே வடியாநிற்கத் தான் மிகச் செவ்வியின்றி அலருங் குளிர்ந்த துறையினையுடைய நல்ல ஊரனே ! எ - று.

இதனால் வைகறைக்காலத்து மனைவயிற் செல்லாது இளைய செவ்வியையுடைய பரத்தையரைப் புணர்ந்து விளையாடி அதனினும் அமையாது பின்னும் அவரைப் புணர்தற்குச் சூழ்ந்துதிரிகின்ற இவ்வூரிடத்தே நின்னைப் பெறாது சுற்றத்திடத்தேயிருந்து *கண்ணீர் வாராநிற்க, நீ ஒருகாலத்து அளித்தலிற் சிறிது செவ்வி பெற்றாளாயிருக்கும்படி தலைவியை வைத்தாய்; என்னை வருத்துதல்கூறவேண்டுமோவெனக்காமக்கிழத்தி உள்ளுறையுவமம்†கூறினாள்.

முகம்போலவென்ற வினையுவமம் தாமரைமலர் பனிவாரத் தளைவிடுமென்ற உள்ளுறையுவமத்தைத் தருகின்ற கருப்பொருட்குச் சிறப்புக்கொடுத்து நின்றது. இஃது உவமப்போலி. "இனிதுறு கிளவியுந் துனியுறு கிளவியு, முவம மருங்கிற் றோன்று மென்ப" (௧) என்பதனான் இரண்டுந் தோன்ற‡நின்றது.

௯ ஒருநீ பிறரில்லை யவன்பெண்டி ரெனவுரைத்துத்
||தேரொடுந் தேற்றிய பாகன்வந் தீயான்கொ
லோரிற்றான் கொணர்ந்துய்த்தார் புலவியுட் பொறித்தபுண்
பாரித்துப் புணர்ந்தநின் ÷பரத்தைமை காணிய

இ - து: அவன்பெண்டிர் நின்னையொழியப் பிறர் இல்லை; அதனை ஓர்ந்து பாரெனக் கூறித் தனக்குத் தெய்வமாகிய தேரைத் தொட்டுச் சூளுற்ற பாகன் ஈண்டு வாரானோ? தான் கொண்டுவந்த பரத்தையரெல்லாரும் வருதற்கு ✕சமைத்ததோர் இல்லிலேவிட்ட பரத்தையர்புலவியாலே அழுந்தின வடுக்கள் நாணமின்மையின் இவைகிடக்க**வேண்டுமென்றுபரப்பிஇட்டுவைக்கையினால் அவை மறையாமற் கூடிக்கிடந்த நின் ††பரத்தைமையைக் காண்டற்கு. எ-று.

உம்மை, சிறப்பு. வந்தீயான், ‡‡ வினைத்திரிசொல். ஓர் என்னுஞ்சொல், உகரம் பெற்று வந்தது.

---

௧. தொல். உவம. ௫. ௨௮.

(பிரதிபேதம்) * கண்ணீரால் வாராநிற்க, † கூறினாள் துனிமிகுதலாலே..........சிறிது மகிழ்பவள் முகம்போலவென்ற வேனையுவமம். ‡ நின்றது ஓரென்னுஞ் சொல்லுகரம் பெற்றமரூஉ ஒருநீ. || தேரொடு தேற்றிய, ÷ பரத்தமை. ✕ சமைத்தவோரில்லிலே, ** வேணுமென்றதுபரப்பி, †† பரத்தமையை, ‡‡ வினைத்திரிசொல் ஓரென்னுஞ் சொல்லுகரம் பெற்று வந்தது மடுத்தவன்.

கரு (க)மடுத்தவன் புகுவழி மறையேனென் றியாழொடு
மெடுத்துச்சூள் பலவுற்ற பாணன்வந் தீயான்கொ
லடுத்தத்தன் பொய்யுண்டார்ப் புணர்ந்தநின் னெருத்தின்க
ணெடுத்துக்கொள் வதுபோலுங் (உ)தொடிவடுக் காணிய

எ - து: அப்பரத்தையர் உடன்பா டின்றித் தானே செல்லுமிடத்து நின்னை மறையேனென்று கூறி யாழாகிய தெய்வத்தோடும் பல தெய்வங்களையுங் கூட்டிப் பலசூளுஞ் சூளுற்ற பாணன் வாரானோ? இவன்செய்தி பொய்யென்று அறிந்துவைத்தும் மருண்டு அப்பொய்யைப் பலகாலும் அனுபவித்தவர்களைக் கூடின நின் கழுத்தின்கண்ணே அள்ளிக்கொள்ளலாவதொன்றுபோலும் மறையாமற் கிடக்கின்ற தொடித்தழும்பைக் காண்டற்கு. எ - று.

கஎ தணந்தனை யெனக்கேட்டுத் தவறோரா தெமக்குநின்
குணங்களைப் பாராட்டுந் தோழன்வந் தீயான்கொல்
(ங)கணங்குழை நல்லவர் (ச)கதுப்பற லணைத்துஞ்சி
(ரு)மணங்கமழ் தெய்வத்தி னளநின் னலர்மார்பு காணிய

எ - து: நின் தீயகுணங்களை உணர்ந்திருக்கின்ற எமக்கு நீ எங்களை நீங்கினையென்று பிறர்கூறக் கேட்டிருந்து நின் தவறுகளை ஓராதே நினக்கு நற்குணங்கள் உளவாகக் கொண்டாடுந் தோழன் வாரானோ? திரட்சியுடைத்தாகிய குழையினையுடைய மகளிருடைய புணர்ச்சியாற் குலைந்து வீழ்ந்த அறலையுடைய கதுப்பாகிய அணையிலே துஞ்சுகையினாலே தெய்வம்போல மணக்கும் நின் அலர்ந்த மார்பைக் காண்டற்கு. எ - று.

இது நாற்றச்செவ்வி குலையாமல் வந்தமைகூறலின் (சு)மருதத்து விடியற் காலங் கூறிற்றாம்.

---

க. (அ) "ஈனுத்தாயர் மடுப்பவு முண்ணுள்" அகம். கOரு: சு. (ஆ) "மடுத்தவா யெல்லாம்" குறள். சுஉச.

உ. (அ) "தொடியுற்ற வடுக்காட்டி" (ஆ) "தொடியு முகிரும்படையாக நுந்தை, கடியுடைமார்பிற் சிறுகண்ணுமுட்காள், வடுவுங்குறித்தாங்கே செய்யும்" (இ) "செறிதொடியுற்ற வடுவும்" கலி. எஅ: உஉ, அஉ: உஅ - ஙO, கசு: கக.

ங. "கணங்குழை" என்பதற்கு, 'பலவாய்த் திரண்ட குழை' என்று பொருள் கூறுவர், பிறர்; குறள். கOஅக. பரி. உரைபார்க்க.

ச. "கூந்தற் றுயில்பெறும்" கலி: கOச: உO; என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

ரு. "மணங்கமழ் தெய்வத் திளநலம்" முருகு. உசுO.

சு. "மருதத்துக் காலைவந்ததற்கு, "தணந்தனை.........மார்பு காணிய" என்பது (தொல். அகத். சூ. அ. நச். உரையிலும்)மேற்கோள்.

என்றுநின்

௨௨ தீரா முயக்கம் பெறுநர்ப் புலப்பவர்
யார்நீ வருநாட்போ லமைகுவம்யாம் புக்கிமோ
(௧)மாரிக் கவாவுற்றுப் (௨)பீள்வாடு நெல்லிற்காங்
காராத் *துவலை யளித்தது போலுநீ
யோர்யாட் டொருகால் வரவு

எ - து: இங்ஙனம் நின்னன்புநீங்காதமுயக்கத்தை என்றும் பெறுகின்ற பரத்தையரை வெறுப்பார் யார்? நீ ஓர் யாண்டிடத்து ஒருகால் வருகின்ற வரவு எமக்கு மழைக்கு அவாவுற்றுத் தோன்றின †கதிர் உலரும் நெல்லிற்கு அப்பருவத்தே நிறையப்பெய்யாதே ஆராத சிறுதுவலையைப் பெய்த தன்மை போல மிக்க வருத்தத்தைத் தரும்; ஆதலான் நீ வருநாட்போல யாம் ஆற்றியிருப்பேம்; நீ அவர் வருந்தாமல் அவர்மனைக்கட் செல்வாயாக. எ - று.

இதனால், இருவர்க்கும் புணர்ச்சியுவகை தோன்றிற்று.

இது வெள்ளைச்சுரிதகத்தாலிற்ற ஒத்தாழிசைக்கலி. (௬)

(எ௨.) இணைபட நிவந்த நீலமென் சேக்கையுட்
டுணைபுண ரன்னத்தின் றாவிமெல் லணையசைஇச்
சேடியல் வள்ளத்துப் பெய்தபால் சிலகாட்டி
யூடுமென் சிறுகிளி யுணர்ப்பவண் முகம்போலப்
புதுநீர புதலொற்றப் புணர்திரைப் பிதிர்மல்க
மதிநோக்கி யலர்வீத்த வாம்பல்வான் மலர்நண்ணிக்
கடிகயத் தாமரைக் கமழ்முகை கரைமாவின்
வடிதீண்ட வாய்விடூஉம் வயலணி நல்லூர;

௧௦ கண்ணிநீ கடிகொண்டார்க் கனைதொறும் யாமழப்
பண்ணினுற் களிப்பிக்கும் பாணன்காட் டென்றுனே

௧. (அ) "சாலிகள் வளரு மெல்லைத் தடம்புனல் வறுமைத் தாக, வாலிது குரல் வாங் காது வருத்தொடு மாய்வதே போன், மேலவ னருளாற் போகம் வெறுத்தலிற் கருமல் கின்றி, ஞாலமன் னுயிர்கண் முற்று நாடொறுங் குறைந்த வன்றே" கந்த. மேருப். ௨அ. என்பதும் (ஆ) "உலகங், கயங்க ணற்ற பைதறு காலைப், பீளொடு திரங்கிய நெல் லிற்கு, நள்ளென் யாமத்து மழைபொழிந் தாங்கே" நற். ௨௨: அ-கக. என்பதும் இங்கே அறிதற்பாலன.

௨. (அ)"பீள்விரிந் திறைஞ்சிய பிறங்குகதிர்க் கழனி" அகம். ௨சு௩: ௬.
(ஆ) "பொன்னிறச் செந்நெற் பொதியொடு பீள்வாட" நாலடி. ௨௬௧.

(பிரதிபேதம்) *திவலை,† கதிரலரும்.

பேணுனென் றுடன்றவ ருகிர்செய்த வடுவினான்
மேனுணின் றோள்சேர்ந்தார் நகைசேர்ந்த விதழினை;

௧௩ நாடிநின் றூதாடித் துறைச்செல்லா ளூரவ
ராடைகொண் டொலிக்குநின் புலைத்திகாட் டென்றாளோ
கூடியார் புனலாடப் புணையாய மார்பினி
லூடியா ரெறிதர வொளிவிட்ட வரக்கினை;

௧எ வெறிதுநின் புகழ்களை வேண்டாரினெடுத்தேத்து
மறிவுடை யந்தண னவளைக்காட் டென்றானோ
களிபட்டார் கமழ்கோதை கயம்பட்ட வுருவின்மேற்
குறிபெற்றார் குரற்கூந்தற் கோடுளர்ந்த துகளினை;

எனவாங்கு;

செறிவுற்றே மெம்மைநீ செறிய வறிவுற்
றழிந்துகு நெஞ்சத்தே மல்ல வுழப்பக்
கழிந்தவை யுள்ளாது கண்ட விடத்தே
யழிந்துநிற் பேணிக் கொளலி னிழிந்ததோ
விந்நோ யுழத்த லெமக்கு.

இதுவும் அது.

இதன் பொருள்.

(௧) இணைபட நிவந்த நீலமென் சேக்கையுட்
டுணைபுண ரன்னத்தின் றூவிமெல் லணையசைஇச்

(அ) "மெல்லிதின் விரிந்த சேக்கை மேம்படத், துணைபுண ரன்னத் தூநிறத் தூவி, யிணையணை மேம்படப் பாயணையிட்டு" (நெடுநல். ௧௩௧ - ௧௩௩) என்பதும் (ஆ) 'என்புருகி மிக்க அன்போடு புணர்ந்த விற் சூட்டிற்கு மென்மை பிறக்குமென்பது தோன்றத் துணைபுண ரன்னத் தூநிறத் தூவி யென்றார்' என்னும் அதன் விசேடவுரைப் பகுதியும், (இ) "துணைபுண ரன்னத் தூவியிற் செறித்த, விணையணை" (சிலப். ௪: ௬௬-எ.) என்பதும் (ஈ) 'தன் சேவலோடு புணர்ந்த அன்னப்பேடை அப்புணர்ச்சியான் உருகியுதிர்த்த வயிற்றின் மயிர் எஃகிப் பெய்தபலவகை அணை' என்னும் அதன் விசேடவுரைப் பகுதியும்,(உ) "ஆதரம் பெருகு கின்ற அன்பின லன்ன மொத்தும்" (சீவக. ௧௮௬) என்புழி, "ஆதரம் பெருகுமன்பாவது: புணர்வதன் முன்னும் பின்னும் ஒருதன்மைத்தாய்ச் செயற்கையால் மிகுமன்பு. அன்னம், புணர்ச்சியால் மெய்யுருகு மென்மைக்கு உவமம். பலரும், 'துணைபுண ரன்னத்தின் றூவி' என்று புணர்ச்சியால் தூவிக்கு மென்மை பிறக்கு

சேடியல் வள்ளத்துப் பெய்தபால் சிலகாட்டி
யூட்டுமென் (க)சிறுகிளி யுணர்ப்பவண் முகம்போலப்
*புதுநீர புதலொற்றப் புணர்திரைப் பிதிர்மல்க
மதிநோக்கி †யலர்வீத்த வாம்பல்வான் மலர்நண்ணிக்
கடிகயத் தாமரைக் கமழ்முகை கரைமாவின்
வடிதீண்ட வாய்விடூஉம் வயலணி நல்லூர

எ - து: (உ)ஐந்துவகைப்படப் படுத்தலால் உயர்ந்த நீலப்பட்டாற்செய்த மெல்லிய படுக்கையிடத்துக்கிடந்த துணையோடேகூடிய அன்னத்தின்(௩)தூவியாற் செய்த மெல்லிய அணையைச் சார்ந்திருந்து பெருமையின்ற வெள்ளி வட்டியிலே வார்த்த பாலைச் சிறிது‡காட்டி அப்பாலையுண்ணாது வெறுத்திருந்த கிளி அதனை உண்டற்கு வேண்டும் மொழிகளைக் கூறி உண்ணப்பண்ணுவித்து அவ்வுணவினுன் மகிழ்ந்து முத்தங்கொள்பவள் ||முகம்போல மிகுதியுடைய கயத்திடத்துநின்ற புதிய நீரிடத்தனவாகிய பசிய தூறுகளின்மேலே இடைவிடாது வருகின்ற திரைகள் மோதுகையினுலே அதன் துவலை மிகாநிற்க இடைநின்ற தாமரையினது கமழாநின்ற முகை தனக்குரிய வண்டு நுகர அலராமல் நின்று கரையில் நின்ற மாவினது வடு மதியைநோக்கி அலர்ந்த ஆம்பலினது வெள்ளிதாகிய மலரை முதற் றீண்டிப் பின்னர்த் தன்னைத் தீண்ட அலரும் வயலணிந்த நல்ல ஊரனே! எ - று.

---

மென்றூர்" என்றுஇதனை மேற்கோள்காட்டி எழுதியிருத்தலும் இங்கே அறிதற்பாலன.

க. (அ) "கோங்கலர் சேர்ந்த மாங்கனி தன்னைப், பாங்குற விருந்த பல்பொறி மஞ்ஞையைச், செம்பொற் றட்டிற் றீம்பா லேந்திப், பைங்கிளியூட்டுமோர் பாவையா மென்றும்" மணி. கக: கஎ - எ௦. (ஆ) "வண்டளிர் மாஅத்துக், கிளிபோல் காய கிளைத்துணர்" அகம். ௩எ: எ-அ.

உ. (அ) "ஐந்துமூன் றடுத்த செல்வத் தமளி" சீவக. அ௩அ. (ஆ) "பதினோந் தமைத்த படையமை சேக்கையுள்" பெருங். (௪) ௫: ௫க. (இ) "தூயமென் பஞ்சி யன்னத் தூவியூ றினிய செய்யு, மாய்மயிர் முதல மூவைந் தடுக்கிய வமளி" நைடதம். மணம். உ௬.

௩. தூவியென்றது சிறகினை; இச்சொல் அன்னத்தின்சிறகிற்குப் பெரும்பான்மையாயும் கிளி வெள்ளாங்குருகு நாரை காக்கை மயில் முதலியவற்றின் சிறகிற்குச் சிறுபான்மையாயும் வரும்.

(பிரதிபேதம்) *புதுநீர்ப்புதல், †அலர்வித்தவாம்பல், ஆவித்த வாம்பல், ‡காட்டிப் பாலை, || முகம்போல வென்ற வேனையுவமம்.

முகம்போலவென்ற வுனையுவமம் மேல்வருகின்ற கருப்பொருட்குச் சிறப்புக்கொடுத்துநின்றது. "சிறுபூளை செம்பஞ்சு வெண்பஞ்சு சேண,(௧)முறு *தூவி தாமிவையோ ரைந்து." (௨)துணையைப் புணர்ந்த காலத்து மெய்யுருகி உதிர்ந்த தூவிதானும் மிக மெல்லிதாயிருக்குமென்பது உணர்தற்குத் துணை புணரன்னமென்றார். பாலைச் சிறிதென்றது (௩)சிலவென்றல்†மரூஉ.

தாமரை வண்டுநுகர்வதற்குப்பயன்கொடாது வடுத்தீண்ட‡ அலருமென்பதனால் நின் தலைவி நீ நுகர்ந்த செவ்விபெறாமற்|| சேக்கை யிடத்தே இருந்து பால் உண்ணாத புதல்வன் பால் உணப் பெற்றதற்கு அவனை முத்தங் கொண்டு மகிழ்ந்திருக்குமாறுபோல(௪)ஆற்றியிருக்குந்தன்மை எமக்கின்றெனக் ÷ காமக்கிழத்தி உள்ளுறையுவமங்கூறினாள்.

௧௩ (ரு)கண்ணிநீ கடிகொண்டார்க் கனைதொறும் யாமழப்
பண்ணினாற் களிப்பிக்கும் பாணன்காட் டென்றானே

---

௧. "உறுதூவி சேக்கையோ ரைந்து" நெடுநல். ௧௩௩. ௩ – உரை. சீவக. அ௩அ. உரை.

௨. பறவைகள் போகத்தால் அவசமாகி மெய்யுருகுமென்பதை, "அருந் தளிர் நயந்து நல்கி யலகுட னலகு சேரப், பொருந்துமுன் னவசமாகிப் போகமென் குயிலும் பேடு, மிருந்துமெய் யுருகுங் காவில்" என்பதும் வலியுறுத்தும். வில்லி. சம்பவச்சருக்கம். ௧௯. இந்நூற் பக்கம் ௪௩௨: ௧ – ஆம் குறிப்பும் பார்க்க.

௩. இந்நூற் பக்கம் எ௩: ௪-ஆம் குறிப்புப்பார்க்க.

௪. (அ) "அகலநீ துறத்தலி னழுதோவா வுண்கணெம், புதல்வனை மெய் தீண்டப் பொருந்துத லியைபவால்" (கலி. எ0: ௧௧ - ௧௨) என்பதும், (ஆ) "ஊடி யவரை யுணராமை வாடிய, வள்ளி முதலரிந் தற்று" (குறள். ௧௩0௪) என்பதன் விசேட வுரையில் பரிமேலழகர் "நீர் பரத்தையரிடத்திராயவழி எம்புதல்வரைக்கண்டு ஆற்றியிருக்கற்பால மாய யாம் நும்மோடு ஊடுதற் குரியமல்லம்; அன்மையின், எம்மை யுணர்த்தல் வேண்டா; உரியராயூடிய பரத்தையரையே உணர்த்தல் வேண்டுவது; அதனால் ஆண்டுச்சென்மி னென்பதாம்." என்று எழுதியிருப்பதும் இங்கே அறிதற்பாலன.

ரு. பாணன் முதலியோர் வாயிலாயதற்கு, "கண்ணிநீ........துகளினை" என்னும் பகுதிகள் மேற்கோள்; தொல். கற்பி. சூ. ௯. நச்.

(பிரதிபேதம்) * தூவி சையையோ ரைந்து, †மரு மிகுதியையுடைய..................தாமரை வண்டு, ‡அலரும் என்பதிதன்கருத்து இதனால் நின்தலைவி,|| செங்கையிடத்தே,

(க)பேணுனென் றூடன்றவ ருகிர்செய்த வடுவினுன்
மேனுணின் றூள்சேர்ந்தார் நகைசேர்ந்த விதழினை

எ - து: நம்மைப் பேணுகின்றிலனென்று கோபித்தவர் தம்மைப் பேணுதற்காக உகிராற்செய்த வடுக்காரணமாக அவர்க்குப் பின்னுள்ள நாளிலே நின் தோளைச் சேர்ந்த பரத்தையருடைய எயிறு அழுந்தின இதழைத் தங் கூட்டத்திற் பிறந்த இன்பத்தைக் கருதி நீ காவல்கொண்ட 'பரத்தையரைச் செறியுந்தோறும் யாம் அழும்படி நின்னைப் பண்ணலேகளிப்பிக்கும் பாணன்எனக்குக் காட்டென்று சொன்னுனே? எ - று.

மேனுளென்றது, பின்னுள். யாம்அழப் பண்ணினுற் களிப்பிக்குமென்றது, இல்லறம் நிகழ்த்துவதற்கு உரியனவற்றைப் பாடிக்காட்டி யாம் வருந்தாதபடி பண்ணுது (உ) பரத்தையரிடத்தே ஒழுகுதற்குவேண்டுவனவற்றைப் பாடிக் காட்டிக் களிப்பிப்பனென்றவாறு.

கஙு (ங)நாடிநின் றூ(ச)தாடித் துறைச்செல்லா ளூரவ
ராடைகொண் டொலிக்குநின் புலேத்திகாட்டென்றுளோ

---

க. (அ) "தொடியு முகிரும் படையாக நுந்தை, கடியுடை மார்பிற் சிறுகண்ணு முட்காள், வடுவுங் குறித்தாங்கே செய்யும்" (ஆ) "புள்ளிக் களவன் புனல்சேர் பொதுக்கம்போல், வள்ளுகிர் போழ்ந்தனவும் வாளெயி றுற்றனவும்" (இ) "கூருகிர் சாடிய மார்பும்" கலி. அஉ: உஅ - ஙப. அஅ: கO - கக. ௬க: கஉ. (ஈ) "கள்ளுயிர்க்குமென் குழலியர் முகிழ் விரற் கதிர்வாள், வள்ளுகிர்ப் பெருங் குறிகளும் புயங்களின் வயங்க" (உ)"மடந்தையர்..................தங் கூருகிர்ப் பெருங்குறி தோண்மேற், கவச நீங்கினர்க் கண்டுகண் டாருயிர் கழித்தார்" கம்ப. பிணிவீட்டு. ஙக; படைத்தலைவர். சுசு. (ஊ) "அகனமர் கணிகைய ரடிகள் சூடியே, முகனுறு முவகையான் முயங்கி யன்னவர், நகனுறு குறிகொளீஇ நாளுங் காமநூற், றகைமைசெய் காளையர் தொகுதி சான்றதே" (எ) "ஆறறி முனிவர னகங்க நூன்முறை, வீறுடு புணர்தலும் வெய்ய மாயவள், கீறின ணகத்தினுல்" கந்த. திருநாட்டுப். ருங. அசுரர்தோற்று. கரு.

உ. "நிறைநீ ரூரர் நெஞ்சகம் பிரிக்கும், பிணிமொழிப் பாணன்" கல்.ருக.

ங. ஆடை கழுவுவாளை வாயிலென்றதற்கு "நாடிநின்.........அரக்கினை" என்பது மேற்கோள்; தொல். கற்பியல். சு. சு. நச்.

ச. "கண்ணுடி வென்று" (சீவக. உஉஉஎ) என்பதற்கு, 'கண் எல்லாரிடத்திலும் உலாவி வென்று' என்று பொருள் கூறி, "காலாடு போழ்தின்" (நாலடி: ககங) 'என்றாற்போல' என இவ்வுரையாசிரியர் பொருள் விளக்கியிருப்பதும், "வாளாடு கூத்தியர் கண்போல்" (நாலடி: கஅக) என்பதும் இங்கே அறிதற்பாலன.

(க)கூடியார் புனலாடப் புணையாய மார்பினி
லூடியா ரெறிதர வொளிவிட்ட வரக்கினை

எ - து: கூடினமகளிர் புனலாடுதற்குத் தெப்பமாகிய மார்பிலே அப் புனலாட்டுப்பெறாது ஊடியமகளிர் சாதிலிங்கம்இருந்த(உ)செப்போடே அதனை எறிதலைச் செய்கையினாலே விளக்கம் மிக்க சாதிலிங்கத்தை நினக்குக் கூடலாம் பரத்தையரைத் தேடித் தூதாய்த் திரிந்து துறையிற் செல்லாள் ஊரிலுள்ளாருடைய ஆடைகளை இடுவித்துக்கொண்டு ஒலியாமற் றிரியும் நின்னுடைய புலைத்தி எனக்குக் காட்டென்று சொன்னாளோ ? எ - று.

ஒலிக்கும், * இகழ்ச்சிக்குறிப்பு. ஒளிக்குமென்றும் பாடம். (௩) புலைத்தி, † செறற்சொல்.

௧௭ வெறிதுநின் ‡புகழ்களை வேண்டாரி லெடுத்தேத்து
(௪)மறிவுடை யந்தண னவளைக்காட் டென்றானோ

---

க. "தாழ்நீ ரிமிழ்சுனை நாப்பட் குளித்தவண், மீநீர் நிவந்த விறலிழை கேள்வனை, வேய்நீ ரழுந்துதன் கையின் விடுகெனப், பூநீர்பெய் வட்டமெறியப் புணைபெறா, தருநிலை நீரி னவடுயர் கண்டு, கொழுநன் மகிழ் தாங்கிக் கொய்பூம் புனல் வீழ்ந்து, தழுவுந் தகைவகைத்துத் தண்பரங் குன்று" பரி. உக: ௩௬-௪௫.

உ. (அ)"வண்ணநீர் கரந்த வட்டுவிட் டெறிவோரும்" (ஆ)"புல்லா தூடிப் புலந்து நின்றவள், பூவெழில் வண்ணநீர் பூரித்த வட்டெறிய" பரி. கக: ௫௫; கஉ: ௬எ - அ. (இ) "குலிகநீர் நிறைந்த பந்திற் கொம்பனாரோச்ச மைந்தர், மெலிவுகண் டுவந்து மாதோ விருப்பொடு மறலினாரே" சீவக. ௬௬அ. (ஈ) "காதன் மங்கைய ராகத் தெறியுஞ், சாதிங் குலிகமுஞ் சந்தனத் தேய்வையும்" (உ) "அஞ்செஞ் சாந்த மாகத் தெறிந்தும்" பெருங். (க) ௪௧: கஉ௬ - ௩௦; ௪உ: கஅஎ.

௩. (அ) "அறனில்புலைத்தி யெல்லித் தோய்த்த, புகாப்புகா(க்) கொண்ட புன்பூங் கலிங்கமொடு" நற். ௬௦: ௩ - ௪. (ஆ) "நலத்தகைப் புலைத்தி பசைதோய்த் தெடுத்துத், தலைப்புடைப் போக்கித் தண்கயத் திட்ட, நீரிற் பிரியாப் பருஉத்திரி" குறுந். ௩௩௦. (இ) "பசைகொள் மெல்விரற் பெருந்தோட் புலைத்தி" (ஈ) "பசைவிரற் புலைத்தி நெடிது பிசைந் தூட்டிய, பூந்துகில்" அகம். ௩௪: கக. ௩அஎ, ௬ - எ. என்பவையும் (உ) "களர்ப்படு கூவற் றோண்டி நாளும், புலைத்தி கழீஇய தூவெள்ளறுவை" புறம். ௩கக: க-உ. என்பதும் ஈண்டு அறிதற்பாலன.

௪. (அ) "தவ்வையைக் காட்டி" என்புழி, தவ்வைக்குக்காட்டி யென்று பொருள்கூறி, "தவ்வையைக் காட்டியென்பது 'அறிவுடை யந்தண

(பிரதிபேதம்) * இகட்ச்சிக்குறிப்பு, † செற்றச்சொல். ‡ புகழினை வேண்டாரின்.

(க)*களிபட்டார் கமழ்கோதை கயம்பட்ட வுருவின்மேற்
குறிபெற்றார் குரற்கூந்தற் கோடுளர்ந்த துகளினை

எ - து: கூட்டத்தாற் களித்தல் பிறந்தவருடைய கமழ்கின்ற மாலை முயக்கத்தான் மென்மைபடுதற்குக் காரணமான வடிவின்மேலே அதற்குப் பின்பு நின்றாற் குறியிடம்பெற்றாருடைய பற்றத்தினையுடைத்தாகிய மயிரினுடைய முடியை †நீ வகிர்ந்து கைசெய்து முடிக்கையினாலே வீழ்ந்துகிடந்த பூந்துகளைநின்புகழ்களைக்கேட்கவேண்டாதஎங்கள்இல்லிலே(உ)ஒருபயனின்றி மிகுத்துக்கொண்டாடும்அறிவில்லாத அந்தணன்அவளைக்காணப்பண்ணென்று சொன்னானோ? எ - று.

(ங)கயம் - மென்மை; ஈண்டுத் துவட்சியை உணர்த்திற்று. அறிவுடையந்தணன், இகழ்ச்சி. அவட்கு என உருபு ‡மயக்கமாம்.

|| எனவாங்கு, அசை.

உஉ ÷செறிவுற்றே மெம்மைநீ செறிய வறிவுற்
றழிந்துகு நெஞ்சத்தே மல்ல லுழப்பக்
கழிந்தவை யுள்ளாது கண்ட விடத்தே

னவளைக் காட்டென்றானோ' என்பதுபோல உருபுமயக்கம்" என்று இலக்கணமுங் கூறி, (ஆ) "களித்தானைக் காரணங்காட்டுதல்" என்புழி, "களித்தானையென்னும் இரண்டாவது, 'அறிவுடை........... என்றானோ' என்புழிப்போல நின்றது" என்றும் எழுதினர், பரி, குறள். கசஎ; கூஉக. (இ) உருபுமயக்கத்திற்கு இவ்வடியை மேற்கோள் காட்டி, ஐயைக்குவ்வாகக்கொள்கவென்றனர் மயிலை; நன். பெயரி. சூ. கூ0. (ஈ)சம்பிரதானம் வடநூலார்கூறாத இரண்டனோடும் வந்ததென்று இவ்வடியை யெடுத்துக் காட்டுவர் சுப்பிரமணிய தீக்ஷிதர்; பிரயோக. கரு. (உ) "யாரே யாயினு மிவன்மக ளொருத்தியைச், சீர்கெழு வீணை சிறப்பொடு காட்டி" என்பது, பெருங். (க) ஙச: அ0 - அக.

க. "வெறிது" பெருங். (ங) உ: உஅ. கம்ப. மாயாசீதை. எ.

உ. "களிபட்டார் கமழ்கோதை கயம்பட்ட வுருவின்மேல்" என்பது; கூழைமோனைக்கு மேற்கோள்; தொல். செய். சூ. கூஉ. நச்.

ங. கயவென்பது உரிச்சொல்லாதலின், அது விகாரவகையாற் கயமென நின்றது; "வயவென்னுமுரிச்சொல் விகாரவகையால் வயமென நின்றது; சிறுபான்மை மெல்லெழுத்துப் பெற்றதெனினும் அமையும்" (கோவையார். ங0. கொளு. உரை) என்று பேராசிரியர் எழுதியிருத்தல் இங்கு அறிதற்பாலது.

(பிரதிபேதம்) * கழிபட்டார், † வகிர்ந்து வகைசெய்து, ‡ மயக்கமுமாம், || எனவாங்கு அசை, ÷ செறிவுற்றேயெம்மை,

யழிந்துநிற் பேணிக் கொளலி னிழிந்ததோ
விந்நோ யுழத்த லெமக்கு

எ - து: முன்பு எம்மை நீ செறிகையினாலே யாமும் நின்னோடு செறிதலை யுற்றேம்; இக்காலத்து நீ செய்யுங் குறைகளை அறியலுற்று அதனானே அழிந்துகெடுகின்ற நெஞ்சத்தினையுடையேம்; அதன்மேலே வருத்தத்திலே தங்கும்படியாக நீ செய்து கழிந்த இக்குறைகளைக் குறையென்று நினையாதே நின்னைக் கண்டவிடத்தே நெஞ்சு அழிந்து நின்னைப்பேணிக்கொள்ளுதலின், இக்காமநோயிலே தங்குதல் எமக்குத் தாழ்ந்ததொரு * தொழிலோ? இஃது இழிந்ததன்றுகாண். எ - று.

இதனால், இருவர்க்கும் புணர்ச்சியுவகை பிறந்தது.
இது வெள்ளைச்சுரிதகத்தாலிற்ற ஒத்தாழிசைக்கலி. (எ)

(௭௩.) அகன்றுறை யணிபெறப் புதலொடு தாழ்ந்த
பகன்றைப்பூ வுறநீண்ட பாசடைத் தாமரை
கண்பொர வொளிவிட்ட வெள்ளிய வள்ளத்தாற்
றண்கமழ் நறுந்தேற லுண்பவன் முகம்போல
வண்பிணி தளைவிடூஉம் வயலணி நல்லூர ;

௬ நோதக்க வெனநின்னை நொந்தீவா ரில்வழித்
தீதிலேன் யானெனத் தேற்றிய வருதிமன்
ஞெகிழ்தொடி யிளையவ ரிடைமுலைத் தாதுசோர்ந்
திதழ்வனப் பிழந்தநின் கண்ணிவந் துரையாக்கால்;

௧௦ கனற்றிநீ செய்வது கடிந்தீவா ரில்வழி
மனத்திற்றீ திலனென மயக்கிய வருதிம
னலமர லுண்கண்ணா ராய்கோதை குழைத்தநின்
மலர்மார்பின் மறுப்பட்ட சாந்தம்வந் துரையாக்கால்;

௧௪ என்னைநீ செய்யினு முரைத்தீவா ரில்வழி
முன்னடிப் பணிந்தெம்மை யுணர்த்திய வருதிமன்
னிரைதொடி நல்லவர் துணங்கையுட் டலைக்கொள்ளக்
கரையிடைக் கிழிந்தநின் காழகம்வந் துரையாக்கால்;

எனவாங்கு;

௧௮ மண்டுநீ ராரா மலிகடல் போலுநின்
றண்டாப் பரத்தை தலைக்கொள்ள நாளும்

(பிரதிபேதம்) * தொழிலோவிது இழிந்ததன்று காணென்ன வூடலீர்ந்தாள் இதனால்,

புலத்தகைப் பெண்டிரைத் தேற்றிமற் றியாமெனிற்
றோலாமோ நின்பொய் மருண்டு.

இது "தங்கிய வொழுக்கத்துக் கிழவனை வணங்கி, யெங்கையர்க் குரையென விரத்தற்கண்" (க)தலைவி கூறியது.

இதன் பொருள்.

அகன்றுறை யணிபெறப் புதலொடு தாழ்ந்த
(உ)பகன்றைப்பூ வுறநீண்ட பாசடைத் தாமரை
கண்பொர வொளிவிட்ட வெள்ளிய வள்ளத்தாற்
(ங)றண்கமழ் நறுந்தேற லுண்பவண் முகம்போல
வண்பிணி தளைவிடூஉம் வயலணி நல்லூர

எ-து: அகன்ற நீருண்ணுந்துறை அழகுபெறும்படி சிறுதூறுடே வந்து தாழ்ந்து கிடந்த பகன்றையினது பூவைச்சேரும்படி வளர்ந்த பசிய இலையினையுடைய தாமரைமுகை கண்வெறிகொள்ளும்படி ஒளிவிட்ட (ச)*வெள்ளி வள்ளத்தாலே குளிர்ந்த நறிய கள்ளை உண்பவள் முகம்போல வளவிய முறுக்குநெகிழும் வயலணிந்த நல்ல ஊரனே ! எ - று.

---

க. தொல். கற்பி. சூ. ௬. இச்சூத்திரவுரையில் "அகன்றுறை யென்னு மருதக்கலியுள் 'நோதக்காய்..................உரையாக்கால்' எனவும் 'மண்டுநீ ராரா..............மருண்டு' எனவும் கூறுதலால், தலைவி தான் தாழ்ந்தவாறும் பின்னர் எங்கையர்க்கு உரையெனக் கூறிய வாறும் காண்க" என்றனர் இளம்பூரணர்; நச்சினார்க்கினியரும் இதனையே தழுவினர்.

உ. (அ) "பகன்றைப்பூ வுறநீண்ட பாசடைத்தாமரை" என்பது,பகன்றை கிலுகிலுப்பையன்று; சிவதையென்பதற்குமேற்; குறிஞ்சி. அஅ. உரை. (ஆ)"பாண்டிலொப்பிற்பகன்றைமலருங்,கடும்பனியற்சிரம்" நற். அ௬. (இ) "வெள்ளிதழ்ப், பகன்மதி யுருவிற் பகன்றை மாமலர்" ஐங்குறு. ௪௫௬. (ஈ) "பாசிலை பொதுளிய புதலொறும் பகன்றை, நீலுண்...... .........தோலெறி பாண்டிலின் வாலியமலர" (உ) "பகன்றை வான் மலர் பனிநிறைந்ததுபோற், பால்பெய்வள்ளஞ் சால்கைபற்றி" அகம். உகஎ: ௬ - அ. உகக: ச - ௫.

ங. (அ) "தண்கமழ் தேறல்" புறம். உச. ௩உ. (ஆ) "தண்ணறவுண் களி நீ" கோவையார். கஉஉ. (இ) "மணங்கமழ் தேறல்" மது. எஅ௦. (ஈ) "தேங்கமழ் தேறல்" பெருங். (உ) கச: ௬க.

ச. "வள்ளத் துமூநறவு வாக்குந, ரவுசெறி யுவவுமதியென வங்கையிற் றங்கி, யெறிமகர வலய மணிதிகழ் நுதலியர், மதியுணர மகளென வாம்பல்வாய் மடுப்ப" பரி. க௦: எ௫ - எஅ.

(பிரதிபேதம்) * வெள்ளிய வள்ளத்தாலே.

வெள்ளியவள்ளமென்பது அம்முச்சாரியையின் மகரங் கெட்டு அகரம் யகரவுடம்படு மெய்பெற்று நின்றது; "மென்மையு மிடைமையும் வரூஉங் காலை, யின்மை வேண்டு மென்மனார் புலவர்" (க) என்பதனால்.

அகன்றதுறை பரத்தையர்சேரியாகவும், அழகுபெறும்படி புதலொடு வந்து தாழ்ந்த(உ)மணமில்லாத பகன்றைப்பூப்பாணர்முதலியவாயில்களோடே வந்து தங்கின அன்பில்லாத பரத்தையராகவும், அதனை உற நீண்ட தாமரை அப்பரத்தையரிடத்தே சேர்ந்த தலைவனாகவும், அத்தாமரை கள்ளைத் தீதென்று உணர்ந்துவைத்தும் அதனை உண்டு களிக்கின்றவள் முகம்போலத் தளைவிடுதல் அன்பில்லாத மகளிரிடத்துப் பெறுகின்ற இன்பநுகர்ச்சி தீதென்று உணர்ந்துவைத்தும் அதனை நுகர்ந்து மகிழ்கின்ற தலைவனாகவும் உள்ளுறை யுவமங் கொள்க. முகம்போல வென்னும் ஏனை யுவமம் கருப் பொருட்குச் சிறப்புக்கொடுத்து நின்றது.

௬ (௩)நோதக்கா யெனநின்னை நொந்தீவா ரில்வழித்
தீதிலேன் யானெனத் தேற்றிய வருதிமன்
ஞெகிழ்தொடி யிளையவ (௪)ரிடைமுலைத் தாதுசோர்ந்
திதழ்வனப் பிழந்தநின் (௫)கண்ணிவந் துரையாக்கால்

எ - து: நீ நீங்குதலான் நெகிழ்ந்த தொடியினையுடைய பரத்தையருடைய முலையிடையிலே தாதுகள் உதிர்ந்து இதழ்கள் அழகிழந்த நின் கண்ணி நினக்கு உட்பகையாய்வந்து நின் பரத்தைமையை எமக்கு உரையாத பொழுது நீ யாங்கள் வெறுக்கத்தக்க பரத்தைமையை*யென்றுஒருகாலத்தும் நின்னை வெறுப்பார் இல்லாத இடத்தே யான் தீதிலேனென்று தேற்றுதற்கு வருவாய்; அதனாற் பெற்றதென் ? எ - று.

௧0 கனற்றிநீ செய்வது கடிந்தீவா ரில்வழி
†மனத்திற்றீ திலனென மயக்கிய வருதிம

க. தொல். புணரியல். ௬. உ௮.

உ. "பேரிலைப் பகன்றைப் பொதியவிழ் வான்பூ, வின்கடுங் கள்ளின் மணமில் கமழும், புன்கண் மாலையும்" என்று (குறுந். ௩௩0.) காணப்படுவது ஆராயத்தக்கது; பகன்றை, பெருங்கையா லென்னும் கொடியென்பர் அடியார்க்குநல்லார். சிலப். ௧௩: ௧௫௭. உரை.

௩. "நின்னணங் குற்றவர் நீ செய்யுங் கொடுமைக, ளென்னுழை வந்து நொந் துரையாமற் பெறுகற்பின்" கலி. ௭௭: ௧௪ - ௫.

௪. "இடைமுலை" கலி. ௧௨: ௧௩.

௫. "கரிகூறுங் கண்ணியை யீங்கெம்மில் வருவதை" கலி. ௭௮: ௧௪.

(பிரதிபேதம்) * என்று மொருகாலத்து நின்னை, † மனத்தினிற் றீதில னென்மயக்கி வருதிமன்.

(௧)அலமர லுண்கண்ணா ராய்கோதை குழைத்தநின்
மலர்மார்பின் மறைப்பட்ட சாந்தம்வந் துரையாக்கால்

எ-து: தம்வயத்தராதற்கு உரியாரைத் தேடிச்(௨)சுழல்கின்றமையுண்கண்ணினையுடைய பரத்தையருடைய அழகிய மாலைகள் முயக்கத்தாற் குழைவித்த நின் மலர்ந்த மார்பிற் பூசின பாடழிந்த சந்தனம் நினக்கு உட்பகையாய் வந்து நின் பரத்தைமையை எமக்கு உரையாதபொழுது நெஞ்சைக்கனலப்பண்ணி நீ ஒழுகுகின்ற பரத்தைமையை வெறுப்பாரில்லாதஇடத்தே யான் தீதுடையேனல்லேனென்று எங்கள் மனத்திடத்தே ஊடலுணர்த்துதற்கு வருவாய்; அதனாற் பெற்றதென்? எ - று.

௧௪ என்னைநீ செய்யினு *முரைத்தீவா ரில்வழி
(௩)முன்னடிப் பணிந்தெம்மை யுணர்த்திய வருதிமன்
னிரைதொடி நல்லவர் (௪)துணங்கையுட் டலைக்கொள்ளக்
கரையிடைக் கிழிந்தநின் காழகம்வந் துரையாக்கால்

எ - து: நிரைத்த தொடியினையுடைய பரத்தையர் ஆடுந் துணங்கைக் கூத்திடத்தே நீ சென்று (௫) தலைக்கைகொடுத்தற்றொழிலை நின்னிடத்தே கொள்கையினாலே அவர் †சிலம்பு தொடக்கிக் கரையிடத்தே கிழிந்த நின்னுடைய நீல ஆடை நினக்கு உட்பகையாய் வந்து நின்பரத்தைமையை எமக்கு உரையாதபொழுது எப்படிப் பெரிய குறைகளை நீசெய்யினும் இக்குறைகளைச்

---

௧. (அ) கலி. ௬௭: ௧௦-௧௧; (ஆ) கலி. ௧௨: ௧௩. (இ) பு-வெ. பெருந். ௧௨.

௨. (அ) "அலமர லமருண்க ணந்நல்லார்" கலி. ௧௧௩: ௨. (ஆ) "மண்ணிற் பாய்வன மாதிரஞ் சூழ்வன, விண்ணிற் றாவுவ வீதியிற் செல்வன, வெண்ணிற் பல்பொரு ளிச்சைகொள் வேசியர், கண்ணிற்கொப்பன கந்துக ராசியே" கந்த. அக்கினி முகாசுரன்வதை. ௨௪. (இ) "கூற்றமோ கொடும் பகழியோ வெனக்குளிர் முகத்துத், தோற்றுவாள்விழி கொட்புறு தொழிலினை நோக்கி, யாற்றல் சான்றதன் னெஞ்சமு மலமர முனிவன், மாற்றி னானெழு விழைவினை மாற்றிடு முன்னர்" விநாயக. அங்காரக. ௩.

௩. (அ) "முன்னடி யொல்கி யுணர்த்தினவும்" (ஆ) "தலையுற முன்னடிப் பணிவான் போலவும்" (இ) "மணங்கம ழைம்பாலா ருடலை யாங்கே, வணங்கி யுணர்ப்பான் றுறை" கலி. ௬௨: ௫௬; ௧௨௮: ௧௭; ௧௩௧: ௩௯ - ௪௦.

௪. இந்நூற்பக்கம் ௪௨௫: ௧-ஆம் குறிப்புப் பார்க்க.

௫. "மெல்லிணர்க் கண்ணி மிலைந்த மைந்தர், எல்வளை மகளிர் தலைக்கை தரூஉந்து" புறம். ௨௪: அ - ௯.

(பிரதிபேதம்) * உணர்த்தீயார், † சிலம்புதுடக்கி.

செய்யாநின்றாயென்று கூறுவாரில்லாத இடத்தே அடிமுன்னே பணிந்து எம்மை ஊடலுணர்த்துதற்கு வருவாய்; அதனாற்பெற்றதென்? எ - று.

"பயங்கெழு*துணையணை புல்லிய புல்லா, துயங்குவனள் கிடந்த கிழத்தியைக் குறுகிப், புல்கென முன்னிய நிறையழி பொழுதின், மெல்லென் சீறடி புல்லிய விரவினும்" (க)என்பதனான் முன்னடிப்பணிந்தென்றார்.

†எனவாங்கு, அசை.

மண்டுநீ ராரா மலிகடல் போலுநின்
றண்டாப் பரத்தை தலைக்கொள்ள நாளும்
புலத்தகைப் பெண்டிரைத் தேற்றி‡மற் றியாமெனிற்
றோலாமோ நின்பொய் மருண்டு.

எ - து: யாற்றினின்று மிக்குச்சென்றுவீழ்கின்ற நீரால் நிறையாத மிகுகடல்போலும் நின் அமையாத ||பரத்தைமை மேலிடுகையினாலே நாடோறும் நின்னொடு புலக்குந் தகுதியையுடைய பெண்டிரைத் தெளிவிப்பாய்; பின்னை யாமாயின் நின்பொய்யை மெய்யாக நினைந்து நினக்குத் தோலாதிருப்பேமோ? தோற்பேமன்றோ? என்று எங்கையர்க்கு உரையென்றாள். எ - று.

இதனால், தலைவிக்கு முனிவு பிறந்தது.

இது வெள்ளைச்சுரிதகத்தாலிற்ற ஒத்தாழிசைக்கலி. (அ)

(எ௪.) பொய்கைப்பூப் புதிதுண்ட வரிவண்டு கழிப்பூத்த
நெய்தற்று தமர்ந்தாடிப் பாசடைச் சேப்பினுட்
செய்தியற்றி யதுபோல வயற்பூத்த தாமரை
மைதபு கிளர்கொட்டை மாண்பதிப் படர்தரூஉங்
கொய்குழை யகைகாஞ்சித் துறையணி நல்லூர ;

அன்பில னறனில னெனப்படா னெனவேத்தி
நின்புகழ் பலபாடும் பாணனு மேமுற்றான் ;

நஞ்சுயிர் செகுத்தலு மறிந்துண்டாங் களியின்மை
கண்டுநின் மொழிதேறும் பெண்டிரு மேமுற்றார்;

முன்பகற் றலைக்கூடி நன்பக லவணீத்துப்
பின்பகற் பிறர்த்தேரு நெஞ்சமு மேமுற்றாய்;

---

க. தொல். கற்பி. சூ. ௫. இச்சூத்திரத்தின் இவருரையில் மெல்லென் சீறடி புல்லிய இரவினைத் தலைவிகூறியதற்கு 'அன்னை நீ செய்யினும் ............வந்துரையாக்கால்' என்னும் இப்பகுதி மேற்கோள்.

(பிரதிபேதம்) * துணையணைப் புல்லிப் புல்லா, துயங்குவள்.........குறுகி, யலகன முன்னிய நிறை, † ஆங்கசை மண்டு, ‡ மற்றியாமேற், || பரத்தமை,

எனவாங்கு;

௧௩ கிண்கிணி மணித்தாரோ டொலித்தார்ப்ப வொண்டொடிப்
பேரமர்க் கண்ணார்க்கும் படுவலை யிதுவென
வூரவ ருடனகத் திரிதருந்
தேரே முற்றன்று நின்னினும் பெரிதே.

இது பரத்தையிற்பிரிந்து வந்த தலைவனோடு ஊடிய காமக்கிழத்தியை அவன் இவ்வகையன கூற நீ ஏழற்றயோவென்றற்கு அவள் கூறியது.

இதன் பொருள்.

(௧)பொய்கைப்பூப் புதிதுண்ட(௨)வரிவண்டு கழிப்பூத்த
நெய்தற்றா தமர்ந்தாடிப் பாசடைச் *சேப்பினுட்
செய்தியற்றி யது†போல வயற்பூத்த தாமரை
‡மைதபு கிளர்கொட்டை மாண்பதிப் படர்தரூஉங்
(௩)கொய்குழை யகைகாஞ்சித் துறையணி நல்லூர

எ - து: பொய்கையிடத்துப் பூவினுடைய தேனையுண்ட வரியினையுடைய வண்டு கழியிடத்துப் பூத்த நெய்தற்பூவிற்றாதை மனம்பொருந்தி நுகர்ந்து

௧. (அ) "வெறிகொ ளினச்சுரும்பு மேய்ந்ததோர் காவிக், குறைபடுதேன் வேட்டுக் குறுகும்-நிறைமதுச்சேர்ந், துண்டாடுந் தன்முகத்தே செவ்வி யுடையதோர், வண்டா மரைபிரிந்த வண்டு" தொல். அகத். சூ. ௰௧ இள. மேற். (ஆ) "முழுநீர்ப் பொய்கையுட் பொழுதொடு விரிந்த, செழுமலர்த் தாமரைச் செவ்விப் பைந்தாது, வைக லூதா வந்தக் கடைத்து, மெவ்வந் தீராது நெய்தற் கவாவும், வண்டே யனையர் மாந்த ரென்பது, பண்டே யுரைத்த பழமொழி மெய்யாக், கண்டே னொழிகினிக் காமக்கலப்பென" பெருங். (௨) ௧௬: ௩௨ - ௩௮ (இ) "செங்கதிர் விரித்தசெந் திருமலர்த் தாமரைப், பெருந்தே னருந்தி யெப் பேரிசை யனைத்தினு, முதலிசைச் செவ்வழிவிதிபெறப் பாடியத், தாதுடறதைந்த மென் றழைச்சிறை வண்டினம், பசுந்தாட்புல்லிதழ்க் கருந்தா ளாம்பற், சிறிதுவா மதுவமுங் குறைபெற வருந்தியப், பாசடைக் குலகவர் பயிலாத்தாரியை, மருளொடு குறிக்கும் புனலணி யூர" கல். ௯௨: ௧௬ - ௨௩. (ஈ) "கன்னி நறுந்தேறன் மாந்திக் கமலத்தின், மன்னித் துயின்ற வரிவண்டு, பின்னையும் போய், நெய்தற் கவாவு நெடுநாட" நள. கலிநீங்கு. ௪௯.

௨. இந்நூற்பக்கம் ௪௨அ: ௬ - ஆம் குறிப்புப்பார்க்க.

௩. குழை யென்னு முறைப்பு மரத்திற்கு வருதற்கு "கொய்குழை........ நல்லூர" என்பது மேற்கோள்; தொல். மரபி. சூ. ௮௭. பேர். நச்.

(பிரதிபேதம்) *செப்பினுள், † போலும் வயற், ‡ மைதவழ்புகிளர்,

வயலிடத்துப் பசிய இலையினையுடைய தான்றோன்றுங் கிழங்கிடத்தைக்கை செய்து பண்ணினதுபோலப் *பூத்த, கரிய இதழ்பொதிந்த, நீங்குகின்ற தாமரைப்பூவினது விளங்குகின்ற கொட்டையாகிய மாட்சிமையையுடைய பதியிடத்தே மீண்டுவரும் (க)மகளிர்கொய்யுத் தழை தளிர்க்கின்றகாஞ்சிமரத்தினையுடைய துறையணிந்த நல்ல ஊரனே ! எ - று.

மைதபுதாமரையெனக் †கூட்டுக. தேரேற்றிக்கொண்டுவந்த பரத்தையரை முற்படநுகர்ந்து பின்னர்ச் சேரிப்பரத்தையரை நுகர்ந்து விடியற்‡காலத்துத் தலைவிமனைவயிற் செல்கின்ற ஊரனென்று காமக்கிழத்தி புலந்துகூறினாள்.

௫ (௨)அன்பிலனறனில னெனப்படா னெனவேத்தி
நின்புகழ் பலபாடும் பாணனு மேமுற்றான்

எ-து: அவன் அன்புடையனல்லனென்றும் அறனுடையனல்லனென்றும் நீ சொல்லப்படானென்று நின்னைப் புகழ்ந்து நின் புகழ் பலவற்றையும் பாடிக்காட்டும் பாணனும் பித்தேறினான். எ - று.

௮ (௩)நஞ்சுயிர் செகுத்தலு மறிந்துண்டாங் களியின்மை
கண்டுநின் மொழிதேறும் பெண்டிரு மேமுற்றார்

எ - து: நஞ்சு தன்னை நுகர்ந்தாருயிரைப் போக்குதலையும் அறிந்து வைத்து உண்டாற்போல நின் மனக்கருத்து அருளின்றி வருத்துதலைக்கண்டு ||வைத்தும் பின்னும் நின்பொய்மொழியை மெய்யாகத்தெளியும்பரத்தையரும் பித்தேறினார். எ - று.

÷செகுத்தலுமென்ற உம்மை, சிறப்பு.

---

க. தழைத்த காஞ்சியென்பதற்கு "விளையாட்டுமகளிர் பலரும் தளிரும் முறியும் தாதும் பூவும் கோடலாற் சிதைவுபட்டுக்கிடக்கின்ற காஞ்சி" என்று எழுதியிருக்கும் விளக்கம் இங்கே அறியத்தக்கது; பதிற். ௨௩: ௧௯-உரை.

௨. (அ) "அருளு மன்பு நீக்கித் துணைதுறந்து, பொருள்வயிற் பிரிவோ ருரவோ ராயி, னுரவோ ருரவோ ராக, மடவ மாக மடந்தை நாமே." குறுந். ௨௦. (ஆ) "அன்பு மறனு முடைத்தாயி னில்வாழ்க்கை, பண்பும் பயனு மது" குறள். ௪௫.

௩. (அ) "முந்தை யிருந்து நட்டோர் கொடுப்பி, னஞ்சு முண்பர் நனி நா கரிகர்" நற். ௩௫௫: ௬ - ௭. (ஆ) "பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க, நா கரிகம் வேண்டு பவர்" குறள். ௫௮௦.

(பிரதிபேதம்) * பூத்த தாமரைப்பூவினது, † கூட்டுக கரியவிதழ் பொதிந்த நீங்குகின்ற தாமரையென்க. தேறேற்றி, ‡ காலத்துத் தலைத்தலைவி, || வைத்துப்பின்னும் ÷ செகுத்தலுமென வும்மை சிறப்பு.

௧௦ (௧)முன்பகற் றலைக்கூடி (௨)நன்பக லவணீத்துப்
பின்பகற் பிறர்த்தேரு நெஞ்சமு மேமுற்றாய்

எ - து: நாட்காலமெல்லாம் ஒருத்தியிடத்தே கூடியிருந்து உச்சிக்காலமெல்லாம் அவளைக்கைவிட்டுப் பலரிடத்தே சென்று அந்திக்காலத்திற் கூடுதற்கு வேறுசிலரை ஆராயும் நின்னெஞ்சமும் பித்தேறினாய். எ - று.

அவளையென்னும் இரண்டாவது *"ஒழியாதுவருதலும்" (௩.) என்றதனாற் சிறுபான்மை ஒழிந்துநின்றது. நெஞ்சமுமேமுற்றாயெனச் சினைவினை முதலொடு முடிந்தது. உம்மைகள், எண்ணும்மை.

†எனவாங்கு, அசை.

௧௩ கிண்கிணி மணித்தாரோ டொலித்தார்ப்ப வொண்டொடிப்
பேரமர்க் ‡கண்ணார்க்கும் படுவலை யிதுவென
ஊரவ ருடனகத் திரிதருந்
(௪)தேரே முற்றன்று நின்னினும் பெரிதே

எ - து: ||சதங்கை தண்டை சிறுமணிகள் கோத்த தாருடனே ஒலியெழுந்து ஆரவாரிப்ப ஒள்ளிதாகிய தொடியினையுடைய பெருத்து (௫)அமர்த்த

௧. "முற்பகல் பிற்பக லென்பன, பின் முன்னாகத் தொக்க ஆறும் வேற்றுமைத்தொகை" என்பர், பரி; குறள். ௩௧௯.

௨. உச்சிப்பொழுது என்னும் பொருளில் நண்பகலென்பதே யன்றி நன்பகலென்பதும் வருமென்பதை, "நன்பகலந்தி" (பொருந. ௪௯.) "நன்பகலுங் கூகை நகும்" (பு - வெ. வஞ்சி. ௪.) என்புழி நன்பகலென்பதற்கு எழுதப்பெற்றிருக்கும் உரையும் "பைங்கருங் காலிச் செங்கனி யளைஇ, நன்பகற் கமைந்த வந்துவர்க் காபு, மிருங்கண் மாலைக்குப் பெரும்பழுக் காயும், வைகறைக் கமையக் கைபுனைந் தியற்றிய, வின்றே னளைஇய விளம்பசுங்காயும்" (பெருங். (௩) ௧௪: ௮௩ - ௮௫) என்று வரும் பகுதியும் வலியுறுத்தும்.

௩. தொல். தொகை. சூ. ௧௫.

௪. (அ)எமுறுதல் என்பதற்கு மயக்கமுறுதலென்று பொருள்கூறி, "தேரே முற்றன்று நின்னினும் பெரிதே" என்பதனை மேற்கோள் காட்டினர் நச்; தொல். களவி. சூ. ௧௮. சீவக. ௨௮௪௧. (ஆ) பித்துறுதலென்று பொருள்கூறுவர், பரி; குறள் ௮௭௩.

௫. அமர்க்கணென்பதற்கு, (கலி. ௭௫: ௭) போரைச்செய்யுங் கண்ணென்று எழுதியிருக்கும் உரை இங்கே அறிதற்பாலது.

(பிரதிபேதம்) * ஒழியாதென்றதனாற் சிறுபான், † எனவாவது ஆங்கசை, ‡ கண்ணார்க்குப் படுவலை, || சதங்கைத்தண்டை,

கண்ணினையுடைய *பரத்தையர்க்கும் †அவர்கள் அகப்படுத்தற்குக் காரணமான வலை இதுவென்று சொல்லி ஊரிலுள்ளார் சேரச் சிரிக்கும்படி திரிதருந் தேர் நின்னினும் பெரிதாகப் பித்தேறிற்று ; யான் † பித்தேறிலேனென்று ஊடினாள். எ - று.

தேரென்றது, ‡ஆகுபெயராய்ப் பாகனையுணர்த்திற்று.

இதனால், இருவர்க்கும் புணர்ச்சியுவகை பிறந்தது.

இது சிறுமைக்கெல்லைகூறிய ஈரடித்தாழிசையான்வந்த ஒத்தாழிசைக்கலி

(௭௫.) நீரார் செறுவி னெய்தலொடு நீடிய
நேரிதழ் மாம்ப னிரையிதழ் கொண்மார்
சீரார் சேயிழை யொலிப்ப வோடு
மோரை மகளி ரோதை வெரீஇயெழுந்
தார லார்கை யஞ்சிறைத் தொழுதி
யுயர்ந்த பொங்க ருயர்மர மேறி
யமர்க்கண் மகளி ரலப்பிய வந்நோய்
தமர்க்குரைப் பனபோற் பல்குரல் பயிற்று
முயர்ந்த போரி னொலிநல் லூரன்
புதுவோர்ப் புணர்தல் வெய்ய னாயின்
வதுவை நாளால் வைகலு மஃதியா
னோவேன் றோழி நோவாய் நீயென
வெற்பார்த் துறுவோய் கேளினித் தெற்றென ;

எல்லினை வருதி யெவன்கூறித் தனையெனச்
சொல்லா திருப்பே னாயி னொல்லென
விரியுளைக் கலிமான் றேரொடு வந்த
விருந்தெதிர் கோடலின் மறப்ப லென்றும்

வாடிய பூவொடு வாரலெம் மனையென
வூடி யிருப்பே னாயி னீடா
தச்சா றாக வுணரிய வருபவன்
பொய்ச்சூ ளஞ்சிப் புலவே னாகுவல் ;

௧. இச்செய்யுள் கற்பின்கண் தலைவிகூற்றுப் பெட்பின்கண் வந்ததற்கு மேற்கோள்; தொல். கற்பி. சூ. ௬. இளம். நச்.

(பிரதிபேதம்) * பரத்தையர்க்கவர்களகப், † பித்தேறிற்றிலே னென்று, ‡ ஆகுபெயராற் பாகனை. இதனால்.

௨௨ பகலாண் டல்கினே பரத்த வென்றியா
ணிகலி யிருப்பே ஞயிற் றுன்றன்
முதல்வன் பெரும்பெயர் முறையுளிப் பெற்ற
புதல்வற் புல்லிப் பொய்த்துயி றஞ்சும் ;

ஆங்க;

௨எ விருந்தெதிர் கொள்ளவும் பொய்ச்சூ ளஞ்சவு
மரும்பெறற் புதல்வனை முயங்கக் காணவு
மாங்கவிந் தொழியுமென் புலவி தாங்கா
தவ்வவ் விடத்தா னவையவை காணப்
பூங்கண் மகளிர் புனைநலஞ் சிதைக்கு
மாய மகிழ்நன் பரத்தைமை
நோவென் றோழி கடனமக் கெனவே.

இது தலைவன் நாடோறும் வதுவையயர்ந்து வந்தால் யான் அதற்குப் போறேனுக நீ ஊடலின்றி அவன் வந்தபொழுதே எதிர் கொள்ளுதியென்ற தோழிக்குத் தலைமகள் அதற்குக் காரணங் கூறியது.

இதன் பொருள்.

(க)*நீரார் செறுவி னெய்தலொடு நீடிய
நேரித ழாம்ப னிரையிதழ் †கொண்மார்
சீரார் சேயிழை யொலிப்ப வோடு
மோரை மகளி ரோதை ‡வெரீஇப்பெழுந்
ரு தார லார்கை யஞ்சிறைத் தொழுதி
யுயர்ந்த பொங்க ||ருயர்மர மேறி
யமர்க்கண் மகளி ÷ரலப்பிய வந்நோய்
தமர்க்குரைப் பனபோற் பல்குரல் பயிற்று
முயர்ந்த =போரி னொலிநல் லூரன்

(அ)தரவு தனக்குப் பேரெல்லேயாகிய பன்னிரண்டடியை யிகந்து பதின்மூன்றடியான் வந்ததற்கு, "நீரார்...........தெற்றன" என்னும் இப்பகுதி மேற்கோள்; தொல். செய். சூ. கரு௯. நச். பன்னிரண்டடியின் இகந்தன துள்ளலோசையான் வாராமையின் இலேசினுற் கொண்டானென்பர் பேர்.

(ஆ)"நீர்ச்செறுவி னீணெய்தல்" பட். கக. இந்நூற்பக்கம் ௬கக: ௬-ஆம் குறிப்பும் ௬௨௯: க-ஆம் குறிப்பும் பார்க்க.

(பிரதிபேதம்) *நீரோர் செறுவின், †கொய்ம்மார், ‡வெரீஇயால். || ஊர்மரம், ÷அலேப்பிய,
= போர்விளைவி,

கo புதுவோர்ப் புணர்தல் வெய்ய னாயின்
வதுவை நாளால் வைகலு மஃதியா
னோவென் றோழி நோவாய் நீயென
வெற்பார்த் துறுவோய் கேளினித் தெற்றென

எ - து: நீர் நிறைந்த செய்யில் வளர்ந்த ஒத்த இதழையுடைய நெய்தற் பூவோடேஆம்பலினது*நிரைத்தஇதழையுடையபூக்களைப்பறித்துக்கோடற்குத் தலைமை நிறைந்த சிவந்த சிலம்புமுதலியன ஒலிப்ப ஓடுகின்ற விளையாட்டினை யுடைய மகளிருடைய ஆரவாரத்திற்கு வெருவியெழுந்து ஆரல்மீனையுண்டலை யுடைய அழகிய சிறகினையுடைய பறவைத்திரள் உயர்ந்த மரத்தில் உயர்ந்த கொம்பிலே ஏறியிருந்து போரைச்செய்யுங் கண்ணினையுடைய மகளிர் தம்மை † அலைத்த அந்தநோயை அம்மகளிருடைய சுற்றத்தார்க்குக் கூறுவன போலப் பலகுரலாலே பலகாலுஞ் சொல்லும் உயர்ந்த போர்களால் உண்டாகிய ஆரவாரத்தினையுடைய நல்ல ஊரினையுடையவன் புதிய பரத்தை யரை மணஞ்செய்தலை எக்காலமும்விரும்புவனாயின்;அதற்கேற்ப(க)நாள்களும் வதுவைக்கு உரிய நாளாயிருக்குமாயின், அவ்வொழுக்கத்திற்குத்தோழீ! யான் வருந்துவேன்; நீ அதற்கு ஒருகாலமும் வருந்தாயெனச் சொல்லி என்னைப் பார்த்து வருத்தமுறுகின்றவளே! இனி அவன் செய்தியை நின் நெஞ்சு தெளியும்படியாகக் கேள். எ - று.

உயர்ந்தாரோடு இழிந்தாரையும் தத்தம் மனைகளினின்றுங் கொண்டு போந்து வருந்த விடுதற்கு விறலி முதலிய வாயிலோர் செல்கின்ற ஆரவாரத் தைக் கேட்டு வெருவி அவனை அரிதிற்பெற்றுழி நுகர்ந்து வருந்தியிருக்கின்ற சேரிப்பரத்தையர் பின்பு அவன் செலுத்துகின்ற வாயில்கட்கு எய்தாத இடங் களிலே புலந்திருந்து அவன் வாயில்கள் தம்மை வருத்தின நோவை அவர் சுற்றத்தார்க்குப் பலகாலும் முறைப்பட்டுக்கூறும் ஊரனென உள்ளுறையுவமங் கொள்க.

கச (உ) ‡எல்லினை வருதி யென்றுறித் துனையெனச்
சொல்லா திருப்பே னாயி ||னெல்லென

க. நல்ல நாளில் வதுவை செய்தல் மரபென்பதை, கலி. கூ: கஉ - ச - ஆம் அடிகளின் குறிப்பாலுணர்க.

உ. "இடை நிலைப்பாட்டே தரவகப்பட்ட மரபினது" என்புழி அகப்படு தல் என்பதற்கு அகம்புறமென்றிரு கூறு செய்தவழி முற்கூற்றினுட் படுதல்; முன், காலமுன்னும்; எனவே ஆறடிமுதல் இரண்டடிகாறும் வரப்பெறுமென்று கொள்க.................. ..பன்னீரடி யிகந்த "நீரார் செறுவின்" என்ற தாவிற்கும் "எல்லிவருதி.................மறைப்ப

(பிரதிபேதம்) * நிரைந்தவிதழை. † அலைக்க, ‡ வெள்ளினைவருதி, எல்லியருதி, || எல்லென.

(க)*விரியுளைக் கலிமான் றேரொடு வந்த
(உ)விருந்தெதிர் †கோடலின் மறப்ப லென்றும்

எ - து: வதுவை அயர்ந்த‡பின்பு விளக்கத்தினையுடையையாய் வாராநின்ருய், எம்மை எத்தன்மையாகக் கருதினுயெனப் புலந்துகூறிப் பின்னர் ஒரு மொழியைக் கூருதிருப்பேனுயின் அது||நீங்கப் பரந்த கழுத்தின்மயிரினையும் மனச்செருக்கினையுமுடைய குதிரை பூண்ட தேரிலே ஆரவாரிப்பக் கொண்டு வந்த விருந்தினரை எதிர்கொள்ளுகையினுலே எந்நாளும் புலவியை(௩) + மறப்பேன். எ - று.

கஅ வாடிய பூவொடு வாரலெம் மனையென
ஊடி யிருப்பெ னுயி னீடா

---

லென்றும்" எனத் தரவகப்பட்ட தாழிசை வருதல் கொள்கவென்பர், நச்; தொல். செய். சூ. க௩௪.

க. தனக்கொத்த இல்லறம் இன்னதென்று தலைமகள் மனத்துட்படுதலாகிய "புரையறந் தெளிதல்" என்பதற்கு,"விரியுளை............மறப்ப லென்றும்" என்னும் பகுதியை மேற்கோள் காட்டி, இது அவனுெடு சொல்லாடாது ஊடியிருப்பேனுயின் விருந்து கொண்டு புகுதரும்; அதனுல் ஊடலை மறப்பே னென்றமையிற் புரையறந்தெளிதலாயிற் றென்பர், பேர்; தொல். மெய்ப். சூ. உ௪; இ - வி. நூலாரும் இதனையே எழுதுவர்; இ - வி. சூ. ௫அ0.

உ. "உருவிலாள னொருபெருஞ் சேனை, யிகமல ராட்டி யெதிர்நின்று விலக்கியவ, ரெழுதுவரி கோல முழுமெயு முறீஇ, விருந்தொடு புக்க பெருந்தோட் கணவரொ, டொனுறைவு மரீஇ யொழுக்கொடுபுணர்ந்த, வடமீன் கற்பின் மனையுறை மகளிர், மாதர்வாண் முகத்து மணித்தோட்டுக்குவளைப், போது புறங்கொடுத்துப் போகிய செங்கடை, விருந்திற் றீர்ந்தில தாயின் யாவது, மருந்துந் தருங்கொலிம் மாநில வரைப்பெனக், கையற்று நடுங்கு நல்வினை நடுநாள்" சிலப். ௫: உ௨௪ - உ௩௪.

௩. "மறைப்ப லென்றும்" என்று தொல். செய். சூ. க௩௪. நச். உரை மேற்கோளிற்காணப்படு மூலமும் மறைப்பேனென்று ஒரு பிரதியிற் காணப்படும் உரையு மாகிய பிரதிபேதம், 'விருந்து கண்டொளித்த ஊடல் பள்ளியிடத்து வெளிப்படல்' என்னும் கோவைக்கிளவியை நோக்கப் பொருத்தமுடையதாய்த் தோற்றுகிறது; கலித்தொகை ஏடு எல்லாவற்றின் மூலமும் பலவற்றினுரையும் அவ்வாறு இல்லை.

(பிரதிபேதம்) *விரியுழைக்கலிமான்'றேரொடும் வந்த, † கொண்டலின் மறைப்பல். ‡ பின் விளக்கத்தினை, || நீங்கத்தேரிலே கொண்டுவந்த, + மறைப்பேன் பரந்தகழுத்தின் மயி......கொண்டு வந்தவிருந்து. வாடிய பூவொடு.

(க)தச்சா ருக *வுணரிய வருபவன்
பொய்ச்சூ ளஞ்சிப் புலவே னாகுவல்

எ - து: முயக்கத்தால் வாடிய பூவோடே எம்மனையிடத்து வாராதே கொள்ளென்று கூறி யான் ஊடியிருப்பேனாயின் † நீடியாமல், (உ)தன்பொய்ச் சூளுக்கு நாம் அஞ்சும் அச்சமே தான் ‡ ஊடலுணர்த்தும் வழியாக ஊட லுணர்த்துதற்கு வருபவனுடைய பொய்யாகிய சூளுக்கு அஞ்சிப் புலவேனா யிருப்பேன். எ - று.

"அஞ்சியச்சுறுத்தலும்" (ங)என்றாற்போல (ச)அச்சம் அச்சு என விகார மாய் நின்றது.

உஉ பகலாண் டல்கினை பரத்த வென்றியா
னிகலி யிருப்பே னாயிற் றான்றன்
(ரு)முதல்வன் பெரும்பெயர் ||முறையுளிப் பெற்ற
புதல்வற் புல்லிப் பொய்த்துயி றஞ்சும்

---

க. "தெய்வ மஞ்சல்" என்னும் மெய்ப்பாட்டிற்கு, "அச்சாறாக.......... ஆகுவல்" என்பது மேற்கோள்; தொல். மெய்ப். சூ. உச. பே. இ - வி. சூ. ருஅ௦.

உ. "என்னை யருளி யருண்முருகு சூள்சூளி, னின்னை யருளி லணங்கான் மெய் வேறின்னும், விறல்வெய்யோ னார்மயில் வேனிழ ளேக்கி, யறவ ரடிதொடினு மாங்கவை சூளேல், குறவன் மகளாணை கூறேலா கூறே, லைய சூளி னடிதொடு குன்றோடு, வையைக்குத் தக்க மணற்சீர் சூள் கூறல்." பரி. அ: சுரு - எக.

ங. தொல். கள. சூ. உங. இதனுரையில் இவர் 'அஞ்சுதல் அச்சென்றா யிற்று' என்று எழுதியிருக்கிறார்.

ச. (அ) "அச்சற் றேம மாகி" (பதிற். க௦: உ.) என்புழி, அச்சமென்பது கடைக்குறைந்த தென்று எழுதியிருத்தலும். (ஆ) "நகையச் சாக நல்லமிர்து கலந்த" பரி. ங: ஙங. (இ) "அச்சிடை யிட்டுத் திரியின்" பழ. உககை. என்பவையும் ஈண்டறிதற்பாலன.

ரு. "புதல்வன் பொன்மகுடம் பொறுத்தலான், முதல்வன் பேருவகைக்கு முந்துவா, னுதவும் பூமகள் சேர வொண்மலர்க், கதவஞ்செய்ய கரத்தி னீக்கினான்" கம்ப. அரசியற். உக. என்பதனால் முதல்வனென்பது தகப்பனார் பெயராய் வருதலையும் "அறைதரு மாந்தா தாமுன முயிர்த்தோ ரம்பரீ டன்புரு குச்ச, னெறியுறு புகழ்சார் தருமுசு குந்த னிகழ்த்துமிம் மூவரின் முன்னோன், குறைவறு குணஞ்சாலொருமகவென்னக்குலவி......பிதாமகனுக்கு, முறைமையின் யுவனச் சுவனெனு நாம மூதுல கிற்பெறீஇச் சிறந்தான்" பாக. (பிரதிபேதம்) * புனரிய, † நீட்டியாமல், ‡ ஊடலுணராதலும் வழி. || முறையுளிபெற்ற.

எ - து: *பரத்தைமையையுடையவனே! பகற்பொழுதெல்லாம் பரத்தையர் மனையிலே தங்கினாயென்று கூறி யான் அவனுடனே மாறுபட்டிருப்பேனாயின், தான் தன்னுடையதந்தையுடையபெரியபெயரைப்பெறு(க)முறையாற் பெற்றபுதல்வனைத் தழுவிப்(உ)பொய்யாகியதுயிலைக்கொண்டுவருந்தும். எ-று

துஞ்சுதல் - இறந்துபடுதல். 'பகலாண்டல்கினை' எனவே உண்டிக்காலத்தும் வந்திலையென்றாள்.

†ஆங்க, அசை.

உஎ (ங)விருந்தெதிர் கொள்ளவும் பொய்ச்சூ ளஞ்சவு
மரும்பெறற் புதல்வனை முயங்கக் காணவு
‡மாங்கவிந் தொழியுமென் புலவி தாங்கா
‖தவ்வவ் விடத்தா னவையவை காணப்
பூங்கண் மகளிர் புனைநலஞ் சிதைக்கு
(ச)மாய ÷மகிழ்நன் பரத்தைமை
நோவேன் றோழி (ரு)கடனமக் கெனவே

(க) அரிச்சந்திரன்கதையுரைத்த. க. என்பதனாலும் "எந்தை பெயரனை யாங் கொள்வேம்" கலி. அக: ஙரு. எனப் பின்பு இந்நூலுள்ளே வருதலாலும் ஒருவன் தன்தகப்பனார்பெயரைத் தன்பிள்ளைக்கு இடுதல் மரபென் பதையும் அறிக.

க. உளியென்பது மூன்றும்வேற்றுமைப்பொருள்படுவதோ ரிடைச்சொல்.

உ. (அ) "சிந்தையெய்த் திரு வினைகப், பூவிய லமளி மேலாப் பொய்யுறக் குறங்குவானை" கம்ப. ஊர்தேடு. உகங. (ஆ) "பொலங்கொடி நாணி னேடும் பொய்த்துயில் கூர்ந்தா ளன்றே" நைடத. மணம். சஉ.

ங. கற்பென்னுங் கைகோளில் உணர்தலுக்கு "விருந்தெதிர்.........புலவி" என்னும் இப்பகுதி மேற்கோள். தொல். செய். சூ. கஅஎ. பேர். நச்.

ச. (அ) "அன்புடைக் கணவ ரழிதகச் செயினும், பெண்பிறந் தோர்க்குப் பொறையே பெருமை" பெருங். (ச) கச: கஅ-க. (ஆ) "சிறுமையும் பெருமையுந் தெரிந்தி லாவெனப், பொறுமையொன் றின்றியே பொங்குங் கங்கையை, யறமல குலபினர்க் கன்பர் பாற்செயுந், திறமல சிவமென வருணன் றேற்றுவான்" திருக்கழுக்குன்றப். தீர்த்தச்சருக்கம். உங.

ரு. புரையறந் தெளிதலாவது: தனக்கேற்ற அறம் இன்னதெனத் தெளிதல்; "கடனமக்கெனவே யென்றவழி, 'பரத்தைமைகண்டு புலவாது *அதனைப்பொறுத்தல்[*]இதனைப் பொத்துவது என்றும் பிரதிபேதம்.

(பிரதிபேதம்) * பரத்தையையுடையவனே, † எனவாங்கு ஆங்கு அசை. ... ‡ ஆங் கலந் தொழியும் ‖ அவ்வவிடத்தான், ÷ மகிழ

எ - து: தோழீ! பூப்போலுங் கண்ணையுடைய மகளிருடைய கைசெய்த நலத்தைக் கெடுக்கும் பொய்யைவல்ல மகிழ்நனது*பரத்தைமையாலேவதுவை யயர்ந்து வந்த மனைதோறும் அவர் புலவியாற் செய்த வடுக்களைக் கண்டிருக்க நமக்கு முறைமையாயிற்றென்று கருதி யான் நொந்திருப்பேன்; ஆயின் யான் இங்ஙனமாகவும் விருந்தினரை எதிர்கொள்ளுதலைச் செய்கையினாலும் அவன் பொய்யாகிய சூளால் நமக்கு வருத்தம் வருமென்று அஞ்சுகையினாலும் பெறுதற்கரிய புதல்வனை முயங்கிக்கொண்டு வருந்தக்காண்கையினாலும் என்னெஞ்சு புலவியை முழுக்கத் தாங்காது; † தாங்காதபடியாலே அவ்விடத்துப் புலவி கெட்டுப்போகாநிற்கும்; இதுகாண் யான் உறுகின்ற துன்பமென்றாள். எ - று.

இதனால், பிறர் இகழ்ந்தமைபற்றித் தலைவிக்கு எள்ளல் பிறந்தது.

இது "தரவே தானு நாலடி யிழிபா,யாறிரண்‡டுயர வேறவும் பெறுமே" (க)என்றதனில் ஏறவுமென்ற உம்மையாற் சிறுபான்மை பதின்மூன்றடியும் வருமென்றலிற் பதின்மூன்றடியான் வந்த தரவும் || தாழம்பட்ட ஓசையின்றித்தரவகப்பட்ட இடைநிலைப்பாட்டும்ஆங்கவென்னுந் X தனிச்சொல்லும் ஏழடிச்சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக்கலி. (௪0)

(௭௫.) புனையிழை நோக்கியும் புனலாடப் புறஞ்சூழ்ந்து
மணிவரி தைஇயுநம் மில்வந்து வணங்கியு
நினையுபு வருந்துமிந் நெடுந்தகை திறத்திவ்வூ
ரினையளென் றெடுத்தோதற் கனையையோ நீயென
வினவுதி யாயின் விளங்கிழாய் கேளினி;

௫ செவ்விரல் சிவப்பூரச் சேட்சென்ற் யென்றவன்
பௌவநீர்ச் சாய்க்கொழுதிப் பாவைதந் தனைத்தற்கோ
கௌவைநேர யுற்றவர் காணாது கடுத்தசொல்
லௌவாவென் றுணராய்நீ யொருநிலையே யுரைத்ததை;

௰ ஒடுங்கியாம் புகலொல்லேம் பெயர்தர வவன்கண்டு
நெடுங்கய மலர்வாங்கி நெறித்துத்தந் தனைத்தற்கோ
விடுந்தவர் விரகின்றி யெடுத்தசொற் பொய்யாகக்
கடிந்தது மிலையாய்நீ கழறிய வந்ததை;

---

இல்லுறைமகளிர்க்கு இயல்பென்னும் அறத்தினனே' எனக்கூறிய வாறு கண்டுகொள்க" என்பர், இளம்; தொல். மெய்ப். சூ. உ௪.

க. தொல்: செய். சூ. கங௩. இந்நூற்பக்கம். ௪௪௭: க-ஆம் குறிப்புப் பார்க்க.

(பிரதிபேதம்) * பரத்தமையாலே, † நீங்காத படியாலே, ‡ உயர்பேறபவும் படுமே, உயர் பேறவும்பெறுமே, உயர்வென்றறைபவும் படுமே, || தாழப்பட்ட, X தனிநிலைச்சொல்லும்.

கச வரிதேற்றாய் நீயென வணங்கிறை யவன்பற்றித்
தெரிவேய்த்தோட் கரும்பெழுதித் தொய்யில்செய் தனைத்தற்கோ
புரிபுநம் மாயத்தார் பொய்யாக வெடுத்தசொல்
லுரிதென வுணராய்நீ யுலமந்தாய் போன்றதை;

எனவாங்கு;

கரு அரிதினி யாயிழா யதுதேற்றல் புரிபொருங்
கன்றுநம் வதுவையு ணமர்செய்வ தின்றீங்கே
தானயந் திருந்த திவ்வூ ராயி னெவன்கொலோ
நாஞ்செயற் பால தினி.

இஃது "அச்ச நீடினும்" (க) என்றதனாற் கூட்டமுண்மை உணர்ந்த தோழிக்கு உண்மைகூறுதற்கு அஞ்சிய அச்சம் நீட்டித்துத் தலைவி கூறியது. இது "திணை*மயக் குறுதலுங்கடி நிலையிலவே"என்னும்(உ)சூத்திரவிதியான் மருதத்துக் குறிஞ்சி வந்தது.

இதன் பொருள்.

புனையிழை நோக்கியும் புனலாடப் புறஞ்சூழ்ந்து
மணிவரி தைஇயுநம் மில்வந்து வணங்கியு
நினையுபு வருந்துமிந் நெடுந்தகை திறத்திவ்வூ
ரினையளென் றெடுத்தோதற் கனையையோ நீயென
(ஈ)வினவுதி யாயின் விளங்கிழாய் கேளினி

எ - து: கைசெய்த பூண்களைக் கிடக்கும் முறைமையிலே கிடக்கத் திருத்தியும், நாம் நீரிலே 'விளையாட நமக்கு ஓரேதம் வாராமற் புறத்தே சூழ்ந்து திரிந்தும் அழகிய தொய்யிலெழுதியும் நம்முடைய சிற்றிலிலே வந்து எவற்றொழிலைச் செய்தும் கூட்டத்தை † நினைந்து வருந்துகின்ற இந்தப் பெரிய தகுதிப்பாட்டையுடையவனிடத்தே கூட்டத்தையுடையளென்று இவ் வூரிலுள்ளார் பலகாலுங் கூறுதற்கு நீ அங்ஙனம் ஒருகூட்டத்தையுடையை யோவென்று கேட்கின்றாயாயின், விளங்குகின்ற இழையினையுடையாய்! இப்பொழுது யான் கூறுகின்றதனைக்கேள். எ - று.

---

க. தொல். கள. சூ. உ௦. இச்சூத்திர வுரையிலும் இச்செய்திக்கே இக் குறிப்போடு இச்செய்யுளை இவர் மேற்கோள் காட்டியிருக்கிறார்.

உ. தொல். அகத். சூ. கஉ. இச்சூத்திரத்தின் இவருரையிலும் மருதத்துக் குறிஞ்சி மயங்கியதற்கு இச்செய்யுள் மேற்கோள்.

ஈ. "வினவுதி யாயிற் கேண்மதி" ஆசிரிய. 'ஒளிவிடு'

(பிரதிபேதம்) * மயக்குறுதலும், † நினைந்தும் நின்ற.

௫ (க)செவ்விரல் சிவப்பூரச் சேட்சென்று என்றவன்
பௌவநீர்ச் (உ)சாய்க்கொழுதிப் பாவைதந் தனைத்தற்கோ
*கௌவைநோ யுற்றவர் காணாது கடுத்தசொல்
லொவ்வாவென் றுணராய்நீ யொருநிலையே (ங)யுரைத்ததை

எ - து: அலர்தூற்றுத லில்லாதபொழுது வருத்தமுற்றிருந்த மகளிர் இது தகாதென்று ஆராயாதே ஐயுற்றுக் கூறியசொல் இவட்குப் †பொருந்தாவென்று அறியாயாய் நீயும் அவர்கள் சொன்ன நிலையிலேசொன்னது, சிவந்த விரல் மிகச் சிவப்புப் பரக்கும்படியாக நெடும்பொழுதுநின்று வாங்கினு யென்றுசொல்லி அவன் கடல் நீர் வந்து ஏறின கழியிடத்துத் தண்டான் கோரையைப் பறித்துக் கிழித்துப் பாவையாக்கித் தந்த அச்சிற்றுபகாரத் திற்கோ? எ - று.

நீர், ஆகுபெயர் "ஒன்றேவேறே" (ச) என்பதனுல் வேற்றுநிலமாயிற்று. மருதத்துத் தலைவி நெய்தலில் நேர்பட்டமையின்.

௧0 ஒடுங்கியாம் புகலொல்லேம் பெயர்தர வவன்கண்டு
நெடுங்கய மலர்வாங்கி நெறித்துத்தந் தனைத்தற்கோ
‡விடுந்தவர் விரகின்றி யெடுத்தசொற் பொய்யாகக்
கடிந்ததை யிலையாய்நீ கழறிய (௫)வந்ததை

எ - து: தீயரென்று எல்லாருங் கைவிடப்பட்ட மகளிர் அங்ஙனங் கூறுதல் தீதென்று உணரவல்ல விரகின்றிப் பல்காற் கூறிய சொல் பொய் யாகக் கெடும்படி தவிர்ந்ததுவுமில்லையாய் நீ என்னைக் கோபித்தற்கு வந்தது கூசி யாம் உட்புகுதலைப்பொருந்தேமாய்மீள அவன் அதனைக்கண்டு நெடிய

க. (அ) "ஒவுறழ் நெடுஞ்சுவர் நாள்பல வெழுதிச், செவ்விரல் சிவந்த... ........அரிவையர் பதிற். சுஅ: சஎ-கூ., (ஆ) "சேந்தக ணதிகமுஞ் செவந்து நீருக" கம்ப. மாரீசன்வதை. ௩அ. (இ) "சிவந்த தளிர்க்கை சிவப்பூர" பாக, உருக்குமிணி யூடறீர்த்த. உ.

உ. "சாய்தாட் பிள்ளை தந்து கொடுத்தும்" கலி. கங: உச.

ங. "வளர்ந்ததை" என்பது வினைத்திரி சொல்லென்பதற்கு 'உரைத்ததை' என்பது மேற்கோள்; சீவக. உஉங - உரை.

ச. தொல். களவி. சூ. உ. இச்சூத்திர வுரையில் "செவ்விரல்........... உரைத்ததை" என்னும் பகுதியை மேற்கோள்காட்டி 'இது மருதத்துத் தலைவி களவொழுக்கங் கூறுவாள் பௌவநீர்ச் சாய்ப்பாவை தந்தா னொருவனென நெய்தனிலத்தெதிர்ப் பட்டமைகூறியது' என்பர். நச்.

௫. வந்ததை யென்பது வினைமுற்றாக வருதல். கந்த. தேவகிரி. உஉ.

(பிரதிபேதம்) * கௌவையோவுற்றவர். † பொருந்தாதென்று. ‡ விடுத்தவர்.

கயத்தின் மலரைப் பறித்துப் *புறவிதழையொடித்துத் தந்த அச்சிற்றுபகாரத்திற்கோ ? எ - று.

தந்த, விடுத்த: இவை விகாரம்.

கச வரிதேற்றாய் நீயென வணங்கிறை யவன்பற்றித்
தெரிவேய்த்தோட்கரும்பெழுதித் தொய்யில்செய் தனைத்தற்கோ
புரிபுநம் மாயத்தார் பொய்யாக வெடுத்தசொல்
(க)†வுரிதென வுணராய்நீ ‡(உ)யுலமந்தாய் போன்றதை

எ - து: காவல்புரிந்து காக்கின்ற நம் ஆயத்தார் காவல் ||பொய்யாய்ப் போம்படி இவ்வூரார் பலகாற் கூறிய கூற்றை நீ பொய்யென் றுணராயாய் இவட்கு உரித்தென்றுகருதி ÷அலமந்தாரைப்போலே இருந்தது நீ தொய்யி லெழுத அறியாயென்று கூறி வளைந்த முன்கையை அவன் பிடித்துத் தெரிந்தவேய்போலுந்தோளிலே கரும்பைஎழுதித்தொய்யிற்குழம்பான்(ங)மற் றும் எழுதுதற்கு உரியனவற்றை எழுதின அச்சிற்றுபகாரத்திற்கோ ? எ - று

செய்த, உரித்து: இவை விகாரம்.

∴எனவாங்கு

எ - து: என்று யான் நினக்குக் கூறும்படியாக. எ - று.

ஆங்கு, அசை.

கரு அரிதினி யாயிழா யதுதேற்றல் புரிபொருங்
கன்றாநம் வதுவையு ணமர்செய்வ தின்றீங்கே
தானயந் திருந்த திவ்வூ ராயி னெவன்கொலோ
நாஞ்செயற் பால தினி.

எ - து: ×நின்னெஞ்சிடத்து நிகழ்ந்த இக்காரியம் ஆயிழாய்! இனித் தெளிவித்தல் அரிது; இனி நம்முடைய வதுவையிடத்தே நஞ் சுற்றத்தார் சேரவிரும்பி அன்று செய்யுங் காரியத்தை இன்று இவ்விடத்தே இவ்வூர் விரும்பி யிருந்ததாயின் அதற்கு நாம் + செய்தற்பகுதியையுடைய காரியம் எக்காரியம் ? =எ - று.

---

க. "உரிது" குறிஞ்சி. சுரு; பரி. கங: கங; கஅ: ருரு; கலி. கஉ: எ; அகம். ஙகஉ: உ௦. சிலப். உ: ச௦.

உ. "உலமரல், சுற்றுப்புற நடையாற் கொள்க" என்பர், நச்; தொல். உரி. கு. கங. கலி. அங: உ; ககங: ங; கஙஎ: ரு; கசரு: ச; அகம். கஅ: கங: ஙகரு: க௦. கம்ப. மீட்சி. உஉச.

ங. "கரும்பும் வல்லியும் பெருந்தோ ளெழுதி" சிலப். உ: உக.

(பிரதிபேதம்) * புறவிதழொடித்து, † உரித்தென, ‡உலம்வந்தாய், || பொய்யாம்படி, ÷ உலமந்தாரை, ∴ ஆங்கசை. என அரிதினி, × என்றுயான் நினக்கும் கூறும் படியாக நின் + செய்தற்குப் பகுதியை, = எனத்தலைவி தோழிக்குக்கூறினாள் பண்ணூறு.

இது தலைவி தோழிக்குக் கூறியது.

"பன்னூறு வகையினுந் தன்வயின் வருஉ, நன்னய மருங்கி னாட்டம் வேண்டலிற், றுணைச்சுட்டுக் கிளவி கிழவிய தாகுந், துணையோர் கரும மாக லான" (க) என்பதனுன் வினவுதியாயினென நாட்டம் நிகழ்ந்தவாறும் சரிதகத்துக் கூட்டங் கூறித் துணைச்சுட்டுக் *கிளவி கிழவியதாயவாறுங்காண்க.

இதனால், தலைவிக்கு அச்சம் நிகழ்ந்தது. இதனைத் தோழி கூற்றாக்கி உரைப்பாரும் உளர்.

இஃது † ஆசிரியத்தளையுங் கலித்தளையும் விரவி ஐஞ்சீரடி வந்த வெள்ளைச்சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக்கலி. "வெண்பாவியலினும் பண்புற முடியும்"(உ) என்பதனுல் வெள்ளைச்சுரிதகத்தாலிற்றது. இது "வெண்டளை விரவியு மாசிரியம் விரவியு, மைஞ்சீ ரடியு முளவென மொழிப" (ங)என்பதனுன் ஐஞ்சீரடியும் வந்தது. (கக)

(எஎ.) இணையிரண் டியைந்தொத்த முகைநாப்பட் பிறிதியாதுந்
துணையின்றித் தளைவிட்ட தாமரைத் தனிமலர்
திருமுக மிறைஞ்சினள் வீழ்பவற் கினைபவ
ளரிமதர் மழைக்கண்ணீ ரலர்முலைமேற் றெறிப்பபோற்
௫ றகைமலர்ப் பழனத்த புள்ளொற்ற வொசிந்தொல்கி
மிகநனி சேர்ந்தவம் முகைமிசை யம்மல
ரகவிதழ்த் தண்பனி யுறைத்தரு மூரகேள் ;
அ தண்டளிர்த் தகைபூத்த தாதெழி னலஞ்செலக்
கொண்டுநீ மாறிய கவின்பெறல் வேண்டேன்ம
னுண்டாதல் சாலாவென் னுயிர்சாத லுணர்ந்துநின்
பெண்டெனப் பிறர்கூறும் பழிமாறப் பெறுகற்பின்;
கஉ பொன்னெனப் பசந்தகண் போதெழி னலஞ்செலத்
தொன்னல மிழந்தகண் டுயில்பெறல் வேண்டேன்ம
னின்னணங் குற்றவர் நீசெய்யுங் கொடுமைக
ளென்னுழை வந்துநொந் துரையாமற் பெறுகற்பின்;

---

க. தொல். களா. சூ. ௩உ. இச்சூத்திரத்தின் இவருரையில் "புனையிழை நோக்கியுமென்னும் மருதக்கலியுள் 'வினவுதியாயின்' என நாட்டம் நிகழ்ந்தவாறும் அதன் சுரிதகத்துக் கூட்டமுண்மை கூறுதலின் துணைச்சுட்டுக் கிளவி கிழவியதாயவாறுங் காண்க" என்பது காணப் படுகிறது.

உ. தொல். செய். சூ. எஎ. ௩. தொல். செய். சூ. சு௩.

(பிரதிபேதம்) * கிளவியதாயவாறும், † ஆசிரியத்தளையும் விரவி ஐஞ்சீரடியும்.

கசு மாசற மண்ணுற்ற மணியேசு மிருங்கூந்தல்
வீசேர்ந்து வண்டார்க்குங் கவின்பெறல் வேண்டேன்மன்
ஞெய்சேர்ந்த திறம்பண்ணி நின்பாண னெம்மனை
நீசேர்ந்த வில்லினுப் வாராமற் பெறுகற்பின்;

ஆங்க;

உக கடைஇய நின்மார்பு தோயல மென்னு
மிடையு நிறையு மெளிதோநிற் காணிற்
கடவுபு கைத்தங்கா நெஞ்சென்னுந் தம்மோ
டுடன்வாழ் பகையுடை யார்க்கு.

இது பரத்தையர் *சேரியிற்சென்றுவந்ததலைவனோடு ஊடிய தலைவி ஊடறீர்கின்றாள் கூறியது.

இதன் பொருள்.

(க) இணையிரண் டியைந்தொத்த முகைநாப்பட் பிறிதியாதுந்
துணையின்றித் தளைவிட்ட தாமரைத் தனிமலர்
திருமுக மிறைஞ்சினள் வீழ்பவற் கினைபவ
(உ) ளரிமதர் (ங) மழைக்கணீ ரலர்முலைமேற் றெறிப்பபோற்
று நகைமலர்ப் பழனத்த புள்ளொற்ற வொசிந்தொல்கி
மிகநனி சேர்ந்தவம் முகைமிசை யம்மல
ரகவிதழ்த் தண்பனி யுறைத்தரு மூரகேள்

எ - து: தாமரையிற் றனித்த மலர்கள் இரண்டு தம்மிற் சேர்ந்து ஒப்பொத்த முகைகளுக்கு நடுவே நின்று † வேறொரு பூச் சிறிதுந் தம் அருகு சேர்தலின்றி முறுக்கு ‡அவிழ்ந்தன; தான் விரும்பப்பட்டவனுக்கு அழகினையுடைய முகங் கவிழ்ந்து அழுகின்றவளுடைய செவ்வரியினையுஞ் செருக்கினையுங் குளிர்ச்சியினையுமுடைய கண்ணின் நீர் அடிக்கொண்ட முலைமேல்

க. இவ்வடி இணைமோனைக்கு மேற்கோள்; தொல். செய். சூ கஉ. நச்.

உ. இவ்வடி பொழிப்பு மோனைக்கு மேற்கோள். தொல். செய். சூ. கஉ. நச்.

ங. (அ) "கண்ணீர்நிறுத்தல்செல்லாண், முலைமுக நனைப்ப" புறம். கசங: கங - கச. (ஆ) "முலைமேல், வடிக்கேழ் மலர்நெடுங்கண் வார்புயலுங் காலும்"சீவக. உ௳சகூ.(இ) "வாருங் கண்ணீர் வளர்கொங்கை வலைமே லருவி யெனவீழ" வில்லி. சூதுபோர். உஙக. (ஈ) "மைக்க ணில வாலி சிந்த வைகிய, மங்கை மென்மு லைத்த டத்து" நைடதம். கைக்கிளை. க.

(பிரதிபேதம்) * சேரிச்சென்றுவந்ததலைவனோடு மூடிய, † வேறொரு பூக்கள், ‡ அவிழ்ந்தன வென முற்றுகவுரைக்க. அப்பூக்கள் அழகினை.........ஊரனே.

வீழ்வன * போல, அப்பூக்கள் அழகினையுடைத்தாகிய மலர்களையுடைய பழனத்திடத்தனவாகிய பறவைகள் வந்து தாக்க மிகவுஞ் சாய்ந்து வளைந்து மிகவும் இணைந்த † அந்த முகைகளின்மேலே தம்முடைய உள்ளிதழினின் நீரைத் துளித்தலைத் தருகின்ற ஊரனே! ‡கேள். எ - று.

அம்மலர் புள்ளொற்ற ஒல்கி அம்முகைகளின்மேலே தண்பனி யுறைத் தரும் ஊர என்றதனுற் சேரிப்பரத்தையர் நின்மனைவியரை இகழ்ந்து வந்து அவர்மனை தோறும் நின்னைத் தேடுகையிலுலே அவர் வருந்தி அழுகின்ற ஊரவெனத் தலைவி புலந்து கூறினுள்.

அவிழ்ந்தன என வினைமுற்முக உரைக்க.

அ தண்டளிர்த் தகைபூத்த தாதெழி னலஞ்செலக்
(க)கொண்டுநீ மாறிய கவின்பெறல் வேண்டேன்மன்
னுண்டாதல் சாலாவென் னுயிர்||சாத லுணர்ந்து(உ)நின்
(ஙு)பெண்டெனப் பிறர்கூறும் பழி மாறப் பெறுகற்பின்

எ - து: உண்டென்று கூறுதல் அமையாத என்னுயிர் அந்நிலையினும் நில்லாமற் சாதலை உணர்ந்துவைத்தும் நின் பெண்டென்று பிறர்கூறும் பழி போகப்பெறின், குளிர்ந்த(ச)தளிரிடத்தே வீழ்ந்து அழகுபொலிவுபெற்றதாது

---

க. (அ) "பிறனைக், கொலையொக்குங் கொண்டுகண்மாறல்" நான்மணி. அ. (ஆ) "கொண்டுகண் மாறல் கொடுமையிற் றுவ்வாது" முதுமொழி. ஙஎ.

உ. (அ) "சுட்டுமுதலாகியஅன்னும் ஆனும், அவைமுதலாகிய பெண்டென் கிளவியும்" என்பதன் விசேடவுரையில் என்னை, 'நின், பெண்டெனப் பிறர் கூறும் பழிமாறப் பெறுகற்பின்' எனச் சான்றோர் கூறலின் பெண்டென்பதே பாடமென்றும் அப்பெண்டென்னுஞ் சுட்டு, "கடி சொ வில்லை" என்பதனுல் பெண்டென நின்றது என்றும் கூறுவர் நச்; தொல். பெயரி. சூ. க. (ஆ) தொல்காப்பியர் காலத்தே பெண் டென்னும் சொல் லுண்டென்பது, "வண்டும் பெண்டு மின்னொடு சிவணும்" "பெண்டென் கிளவிக் கன்னும் வரையார்" தொல். குற். சூ. கரு, ககூ. என்பவற்றுல் விளங்குகின்றது. இச்சொல் பிறவற்றிலும் வந்துள்ளதேனும் ஐங்குறுநூற்றில் மிக வந்துள்ளது. (இ)'இன்னன' என்பதனுல் பெண்பாற் பெயர்களுள் பெண்டென்பது மொன்றென்று கூறி அதற்கு, "நின் பெண்டென...........பெறுகற்பின்" என்பதனை மேற்கோள்காட்டுவர், இ - வி. உரைகாரர்; இ - வி. சூ. கஎஅ.

ஙு. ஒரூஉமோனைக்கு இவ்வடி மேற்கோளாகக் காட்டப்பெற்றிருக்கிறது; தொல். செய். சூ. கூஉ. நச். வேறுசிலர் கருத்தின்படி இது கீழ்க் கதுவாய் மோனையாகும்.

ச. இந்நூற்பக்கம், சுருஅ: ஙு - ஆம் குறிப்பில் இவ்விடத்துக்கு ஒத்தன ஒப்புநோக்கற்பாலன.

(பிறதிபேதம்) * போல் அம்மலர் புள்ளொற்ற.........கூறினுள், தண்டளிர்த் † அம்முகை களின் ‡கேளென்க. தான் விரும்பப்பட்ட. || சாய்தலுணர்ந்து.

போலும் எழிலையுடைய மாமையுஞ் சுணங்கும் எம்மிடத்தினின்றும் போம்படியாக வாங்கிக்கொண்டு நீ பின்பு ஒருகாலுந்தாராதுவிட்ட அழகை யான் பெறுதலை விரும்பேன்; அதனாற் பெற்றதென்? பெண்டென்னும் பெயர் போகாதாயிற்றே! எ - று.

(க) பெறுகற்பின், வினைத்திரிசொல். மன், கழிவு.

சாதலுணர்ந்துமென்பது நெடுங்காலங் கைவிட்டமை தோன்ற நின்றது.

கஉ (உ)பொன்னெனப் பசந்தகண் போதெழி னலஞ்செலத்
தொன்னல மிழந்தகண் டுயில்பெறல் வேண்டேன்மன்
(ங)னின்னணங் குற்றவர் நீசெய்யுங் கொடுமைக
ளென் னுழை வந்துநொந்(ச)*துரையாமற் பெறுகற்பின்

எ - து: கண்கள் பூவினது அழகையுடைய நலம்போம்படியாகப் (ரு)பொன்போலப் †பசந்தன; நின்னால் வருத்தமுற்ற பரத்தையர் நீ செய்யுங் கொடுமைகளை என்னிடத்தே வந்து வெறுத்துச்சொல்லாமையை யான் ‡பெறின், இயற்கைநலத்தையும்இழந்தஅக்கண் துயில்பெறுதலைவிரும்பேன்; அதனாற் பெற்றதென்? அங்ஙனம் என்னை இகழ்ந்து கூறுதல் ||தவிராரே! எ - று.

---

க. 'பெறுகற்பின்' என்பதற்குப் பெறின் என்னும் பொருள் இங்கே காணப்படுகின்றது. இதைப்போலத் திருக்குறளிற் 'செல்கற்பின்' என ஒரு வாய்பாடுகாணப்படுகின்றது; அதற்கெழுதியுள்ளபொருளை நோக்க அது 'செல்கிற்பின்' என்றிருக்கவேண்டுமெனத் தோற்றுகிறது. இஃது ஆராய்தற்பாலது.

உ. இந்நூற்பக்கம் சகுக: ங-ஆம் குறிப்புப்பார்க்க.

ங. (அ)பரத்தையர்தாமுற்ற துன்பத்தினைக்கூறக்கேட்டதலைமகள்அதனைப் புலவியின்கண் தலைமகற்குக் கூறியதற்கு "நின்னணங்கு.......... பெறுகற்பின்" என்பது மேற்கோள்; தொல். பொருளி. சூ. ஙக. 'தம்முறு விழுமம்' இளம்.

(ஆ) "நோதக்கா யெனநின்னை நொந்தீவா ரில்வழி" கலி. எங: சு.

ச. (அ) "பிறவாம னல்கு பெரியோய்" கம்ப. நாகபாச. உருஅ. (ஆ) "தற்பழி யாமலுஞ் சந்திர வாணன் றமிழ்த்தஞ்சைநங், கற்பழி யாமலுங் காரணமாக" தஞ்சை. உஉஎ. (இ) "என்சொல் வழு வுறாமல் வேண்டு மென்ன" வில்லி. பதினொன்காம். கஎ. (ஈ) "வினைத் திழுத்துக் குட்டா மலுக்கு" தனிப்பாடல். என்பவற்றாலும் 'மல்' எதிர்மறைத் தொழிற்பெயர் விகுதியாய் வருதல் அறியலாகும்.

ரு. "பூப்போ லுண்கண் பொன்போர்த் தனவே" ஐங். கசு.

(பிரதிபேதம்) * உரையாமை பெறு, † பசந்தனவென முற்றாக்குக, இயற்கை நலத்தை யிழந்த அக்கண்ணெனச்சுட்டாக்கியுரைக்க. நின்னால், ‡ பெறின் அக்கண் றுயில்பெறுதலை. || தவிராரேயென்க. மாசற.

பசந்தனவென முற்றுக்குக. இயற்கை நலத்தையும் இழந்த அக்கண்ணெனச் சுட்டாக்கி உரைக்க.

கக (க)மாசற (உ)மண்ணுற்ற (௩)மணியேசு மிருங்கூந்தல்
(ச)வீசேர்ந்து வண்டார்க்குங் கவின்பெறல் வேண்டேன்மன்
(ரு)நோய்சேர்ந்த திறம்பண்ணி நின்பாண னெம்மனை
நீசேர்ந்த வில்வினாய் வாராமற் பெறுகற்பின்

எ - து: நின்னுடைய பாணன் (கூ)நோவுசேர்ந்த திறப்பண்ணைப்பண்ணி எம்முடைய மனையிடத்தே நீ சென்று சேர்ந்த பரத்தையர் மனையை என்னைக் கேட்டு வாராதிருத்தலை யான் பெறின், மாசறக் கழுவுதலுற்ற நீலமணியை நீ எனக்கு ஒவ்வாயென்று ஏசுங் கரியகூந்தல் பூவணிந்து வண்டுகள் ஆரவாரிக்கும் அழகைப்பெறுதலை யான் விரும்பேன்; அதனாற் பெற்றதென்? அவன் வினவுதலைத் தவிரானே. எ - று.

எம்மனை, *வேண்டேனென்ப, ஒருமைப்பன்மைமயக்கம்.

ஆங்க, அசை.

---

க. "நெய்யொடு துறந்த மையிருங் கூந்தன், மண்ணுறு மணியின் மாசற மண்ணிப், புதுமலர் கஞல" புறம். கசஎ: கூ - அ.

உ. "மண்ணுர் மணியின் வணர்குரல் வண்டார்ப்ப" பரி. கo: அக.

௩. "அணிக்கயிற் றவழ்ந்த மணிக்குரலைம்பால்" "நீல மாமணி நிமிர்த்தியன்றன்ன, கோலங்கொண்ட குறுநெறிக் கூழை" "மணியிருங் கூந்தல்" பெருங். (க) சo: கருஅ; (உ) கரு: கoo - கக. (௩) க: கரு௩.

ச. (அ) "அருந்துய ருழக்குநின் றிருந்திழை யரிவை, கலிமயிற் கலாவங் கால்குவித் தன்ன, வொலிமென் கூந்தற் கமழ்புகை கொளீஇத், தண் கமழ் கோதை புனைய" (ஆ) "புணர்ந்தோர் பூவணி யணிய" புறம். கசகூ: எ-கo; ககூச: ௩. (இ) "பெறுக நின் செவ்வி பெருமகன் வந்தா, னறுமலர்க் கூந்த லுளணி பெறுகென" சிலப். உஎ: உகரு - உகசு. எனவும் (ஈ) "போதில் வறுங் கூந்தல்" கலி. அo: உ௩. (உ) "தன்னவன் றணந்த காலைப், பூமனும் புனைதலின்றி" சீவக. கருகூஅ. எனவும் வருவன இங்கு அறிதற்பாலன.

ரு. "நோய் சேர்ந்த.........பெறுகற்பின்" என்பது கற்பின்கண் மடந்தபவுரைத்தலென்னும் மெய்ப்பாட்டிற்கும் (தொல். மெய்ப். கூ. கக. பேர்.) ஊடலுக்கும் (தொல். செய். கஅஎ. பேர், நச்.) மேற்கோள்.

கூ. பரி. பதின்மூன்றும்பாடலின்பண் நோதிறமென்றிருத்தலும் சிலப். ச: எரு. "பாண்வாய் வண்டு நோதிறம்பாட" என்றிருத்தலும் இங்கு கருதற்பாலன.

(பிரதிபேதம்) * வேண்டேனென்பது.

உக (க)*கடைஇய நின்மார்பு தோயல மென்னு
மிடையு நிறையு மெளிதோநிற் காணிற்
கடவுபு கைத்தங்கா (உ)நெஞ்சென்னுந் தம்மோ
டுடன்வாழ் பகையுடை யார்க்கு.

எ - து: "தம்முறு விழுமம் பரத்தையர் கூறினு, மெய்ம்மையாக வவர்வயி னுணர்ந்து, தலைத்தாட் கழறநம் †மெதிர்பொழு தின்றே, மலிதலு மூடலு மவையலங் கடையே" (ங) என்பதனாற் பரத்தையர் முன்னரான்மையின் மலிதலும் ஊடலும் ‡நிகழ்த்துதலைக்கழறினாள். நின்னைக் காணில் என்னை உன்னிடத்தே செலுத்தித் தானும் நின்னிடத்தே ||தங்கி வருந்துநெஞ் சென்று சொல்லப்படுந் தம்மோடு ஒன்றாய் வாழப்படுகின்ற உட்பகையை யுடையார்க்கு முன்னர் எம்மை நின்மேல் வீழ்வித்த நின் மார்பைக் கூடக் கடவேமல்லேமென்று ┼கருதும் (ச) நிறையென்னுங் குணத்தையும் பெறுத லெளிதோ? அஃது அரிதன்றோ? என ஊடறீர்ந்தாள். எ - று.

இடையும் ÷நெஞ்சென்க. நிறையுமென்னும் உம்மை, சிறப்பு.

இதனால், தலைவிக்குப் புணர்ச்சியுவகை பிறந்தது.

×"அருண்முந் துறுத்த வன்புபொதி கிளவி, பொருள்பட மொழிதல்கிழ வோட்கு முரித்தே." (ரு) என்பதனால் ='வாராமற் பெறுகற்பின்' என்ற தலைவி 'நிற்காணிற் கடவுபு கைத்தங்கா நெஞ்சு' என அவனாற்றாமை கண்டருளி நெஞ்சு எவல் ∴செய்ததென வேறோர் பொருள்பயப்பத் தன் அன்பினைக் கரந்தவாறு காண்க.

இது வெள்ளைச் சுரிதகத்தா லிற்ற ஒத்தாழிசைக்கலி. (கஉ)

---

க. பெயரெச்ச வினைத்திரி சொல்லுக்கு, 'கடைஇய நின் மார்பு' என்பது மேற்கோள்; தொல். எச்ச. சூ. சுக. நச்.

உ. (அ) "அவர்நெஞ் சவர்க்காதல் கண்டு மெவனெஞ்சே, நீயெமக் காகா தது" குறள் கஉகக. என்பதும் (ஆ) "அறைபோகு நெஞ்சுடை யார்க்கு" (கலி. சுஎ: உக) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

ங. தொல். பொருளி. சூ. சக. இச்சூத்திரத்தின் இவருரையில் "பொன் னென........உரையாமற் பெறுகற்பின்" என்பதுமேற்கோளாக 'இது பரத்தையர்முன்னரான்மையின் மலிதலும் ஊடலும் நிகழ்ந்து தலைத் தாட்கழறியது.' என்னும் திருத்தமான குறிப்புக் காணப்படுகின்றது.

ச. இந்நூற் பக்கம் சகக: சு - ஆம் குறிப்புப் பார்க்க.

ரு. தொல். கற்பி. சூ. உ0. இச்சூத்திரத்தின் இவருரையிலும் இப்பாட்டு மேற்கோளாக இக்குறிப்பு, சிறிது வேறுபடக் குறிக்கப்பெற்றுளது.

(பிரதிபேதம் *தடைஇய, †எதிர்ப்பொழுது, ‡நிகழ்த்துதலைக்கழறினன், ||தங்கியிருந்து நெஞ் சென்று ┼கருதுமிடைநிறை, ÷ நெஞ்செனக் கூட்டுக. × அருளொழுந்துறுத்த. =வாராமை பெறுகற்பின். ∴ செய்ததெனவென்றோர்.

(எஅ.) பன்மலர்ப் பழனத்த பாசடைத் தாமரை
யின்மல ரிமிர்பூதுந் துணைபுண ரிருந்தும்பி
யுண்டுறை யுடைந்தபூப் புனல்சாய்ப்பப் புலந்தூடிப்
பண்புடை நன்னாட்டுப் பகைதலை வந்தென
ரு வதுகைவிட் டகன்றொரீஇக் காக்கிற்பான் குடைநீழற்
பதிபடர்ந் திறைகொள்ளுங் குடிபோலப் பிறிதுமொரு
பொய்கைதேர்ந் தலமரும் பொழுதினான் மொய்தப
விறைபகை தணிப்பவக் குடிபதிப் பெயர்ந்தாங்கு
நிறைபுன னீங்கவந் தத்தும்பி யம்மலர்ப்
பறைதவிர் பசைவிடூஉம் பாய்புன னல்லூர ;

கக நீங்குங்கா னிறஞ்சாய்ந்து புணருங்காற் புகழ்பூத்து
நாங்கொண்ட குறிப்பிவ னலமென்னுந் தகையோதா
னெரியிதழ் சோர்ந்துக வேதிலார்ப் புணர்ந்தமை
கரிகூறுங் கண்ணியை யீங்கெம்மில் வருவதை ;

கரு சுடர்நோக்கி மலர்ந்தாங்கே படிற்கூம்பு மலர்போலென்
றொடர்நீப்பிற் றொகுமிவ னலமென்னுந் தகையோதா
னலர்நாணிக் கரந்தநோய் கைம்மிகப் பிறர்கூந்தன்
மலர்நாறு மார்பினை யீங்கெம்மில் வருவதை ;

ககூ பெயினந்தி வறப்பிற் சாம் புலத்திற்குப் பெயல்போல்யான்
செலினந்திச் செறிற்சாம்பு மிவளென்னுந் தகையோதான்
முடியுற்ற கோதைபோல் யாம்வாட வேதிலார்
தொடியுற்ற வடுக்காட்டி யீங்கெம்மில் வருவதை ;

ஆங்க;

உச ஐய வமைந்தன் றனைத்தாகப் புக்கீமோ
வெய்யாரும் வீழ்வாரும் வேறாகக் கையின்
முகைமலர்ந் தன்ன முயக்கிற் றகையின்றே
தண்பனி வைக லெமக்கு.

இது பரத்தையர் *சேரியிற் சென்று வந்த தலைவனோடு ஊடிய காமக்கிழத்தி ஊடறீர்கின்றாள் கூறியது.

இதன் பொருள்.

---

பிரதிபேதம்) * சேரிச்சென்று.

பன்மலர்ப் பழனத்த (௧)பாசடைத் தாமரை
யின்மல ரிமிர்பூதுந் துணைபுணா ரிருந்தும்பி
யுண்டுறை யுடைந்த பூப் புனல்சாய்ப்பப் புலந்தூடிப்
பண்புடை (௨)நன்னாட்டுப் பகைதலை வந்தென
வதுகைவிட் டகன்றொரீஇக் காக்கிற்பான் குடைநீழற்
பதிபடர்ந் திறைகொள்ளுங் குடிபோலப் *பிறிதுமொரு
பொய்கைதேர்ந் †தலமரும் பொழுதினான் மொய்தப
விறைபகை தணிப்பவக் (௩)குடிபதிப் பெயர்ந்தாங்கு
நிறைபுன னீங்கவந் தத்தும்பி யம்மலர்ப்
(௪)பறைதவிர் (௫)பசைவிடூஉம் (௬)பாய்புன னல்லூர

எ - து: பலமலர்களையுடைத்தாகிய மருதநிலத்திடத்தனவாகிய பசிய இலைகளையுடைய தாமரையினது கட்கினிய மலரை ஆரவாரித்துச் சென்று

---

௧. "பாசடைத் தாமரை" கலி. ௭௧: ௭.

௨. ஒரு நாட்டுப் பகைவராற் றுன்பம் வந்துழி ஆங்குள்ள குடிகள் அந்நாட்டைக் கைவிட்டுச் செல்லுதல் மரபு: (அ) "பதியெழ வறியாப் பழங்குடி கெழீஇ" மலைபடு. ௪௭௧. (ஆ) "பதியெழு வறியாப் பழங்குடி கெழீஇய" சிலப். ௧: ௧௫ என்பவையும் 'பதியெழு வறியா-பதியினின்றும் பெயர்தலை யறியாத; எனவே பகையின்மை கூறிற்று' என்று அடியார்க்கு நல்லாரெழுதியிருப்பதும் (இ) "அதிராச்சிறப்பின் மதுரை மூதூர்" (சிலப். பதி. ௩௧) என்புழி 'அதிராச்சிறப்பு' என்பதற்கு, 'பகைவரால் அதிர்ச்சியில்லாத சிறப்பு' என்று அரும்பத வுரையாசிரியரும், 'பகைவரால் நடுக்கமில்லாத சிறப்பு' என்று அடியார்க்கு நல்லாரும் எழுதியிருப்பவையும், (ஈ) "ஆளௌலா மழிந்த தேரு மானையு மாடன் மாவு, நாளௌலா மெண்ணி னாலுந் தொலைவிலா நாதரின்றித், தாளௌலாங் குலைய வோடித் திரிவன தாங்க லாற்றுங், கோளிலா மன்ன னாட்டிற் குடியெனக் குலைவ கண்டான்" கம்ப. பிரமாத்திர. ௧௪௭. என்பதும் ஈண்டு அறிதற்பாலன.

௩. "சூறை யாட்டயர் வார்தொலை வெய்தலும், பாறி னோர்படர்ந் தாங்குப் படுகளை, கோறல் செய்தவர் நீங்கலுங் கொம்மெனச், சேற ருவயற் செறறின புள்ளௌலாம்" தணிகைப். திருநாட்டுப். ௧௧௨.

௪. பறை - பறத்தல்; இஃது ஆகுபெயராய்ப் பறவைக்கும் வரும்.

௫. அசை, முதனிலைத் தொழிற் பெயர்.

௬. (அ) பாய்தலென்பது பரத்தலாகிய குறிப்புணர்த்தி வருதற்கு, 'பாய் புனல்' என்பது மேற்கோள். தொல். உரிச். சூ. ௬௫. சே. சூ. ௫௦.

(பிரதிபேதம்) *பிறிதுமோர், † அலமரும்.

ஊடுதுந் துணையைப்புணர்ந்த கரிய தும்பி பலரும் நீர் உண்ணுந் துறையில் அலர்ந்த பூவைப் பெருகிவந்த நீர்சாயப்பண்ணுகையினாலே அப்பூவிலிருத்தலை வெறுத்து *,அப்புனலுடனே ஊடி நற்குணங்களையுடைய நல்ல நாட்டிற்கு உரிய பகை தம்மிடத்தே வந்ததாக அந்நாட்டை † இருப்பல்லவென்று கை விட்டு நீங்கிப் போய்த் தன்னுடைக் காக்கின்றவனுடைய குடைநிழலி லூர்களை இருப்பாக நினைத்துத் தங்குதல் கொள்ளுங் குடிமக்களைப்போல வேறுமொரு பொய்கையைத் தனக்கு இருப்பாக ஆராய்ந்திருந்து பழைய பொய்கையை நினைத்துச் சுழங்கின்ற காலத்தே ‡அவ்விறைவன் வந்தபகை யின் வலிகெடும்படியாக அப்பகையைப்போக்க அக்குடிமக்கள் பதியிடத்தே மீண்டு சென்றாற்போல அந்நிலத்துள்ளார் போக்க அப்பெரும்புனல் நீங்கு கையினாலே || மீண்டுவந்து அத்தும்பி அந்தத் தாமரைப்பூவிலே பறத்தலைத் தவிர்ந்து இளைப்பாறும் பரந்த புனலையுடைய நல்ல ÷ ஊரனே ! எ - று.

பகைதலைவந்தென இறைகொள்ளுங் குடிபோலத் தும்பி ஊடித்தேர்ந்து அலமரும்பொழுதிலே அவ்விறை பகைதணிப்ப அக்குடி பதிப் × பெயர்ந் தாற்போலே புனனீங்க மீண்டுவந்து அத்தும்பி அம்மலரிலே அசைவிடும் ஊர என்றதனாற் பல பரத்தையரையுடைய பரத்தையர் சேரியிலே சிலநாள் ஒரு பரத்தையை ஆரவாரத்துடனே நீ வதுவையயர அவளை நின் காதற்பரத்தை வந்து கோபித்துத் தீங்கு கூறுகையினாலே வதுவையயர்ந்தவளிடத்துக் கூட்டத்தையும் வெறுத்துக் காதற்பரத்தையொடும் ஊடி வேறோர் பரத்தையர் சேரியிலே சென்றிருந்து நீ வதுவையயர்ந்தவளை நினைத்து + வருந்துகின்ற காலத்தே அவள் சுற்றத்தார் காதற்பரத்தை கோபத்தைநீக்க மீண்டு சென்று அவளிடத்தே தங்குகின்றாயெனக் காமங்கிழத்தி புலந்து கூறினாள். இது வினையுவமப்போலி. எனையுவமமும் வினையுவமம்.

௧௧ (௧)நீங்குங்கா னிறஞ்சாய்ந்து புணருங்கா புகழ்பூத்து
நாங்கொண்ட குறிப்பில னலமென்னுந் தகைபோதா
னெரியிதழ் சோர்ந்துக (௨)வேதிலார்ப் புணர்ந்தமை
கரிகூறுங் கண்ணியை யீங்கெம்மில் வருவதை

'ஞெமர்தலும்' தெய். (ஆ) வினையியலுள் ஓதாமையாற் பெயரெச்ச உம்மை இடைச்சொலென்று கொள்ளப்படும். பாயும் புனலென்பது பாய்புனலெனத் தொக்குழி வேற்றுமைப்பொருட்கண் உருபு பெயர் நிற்பத்தொக்க வாறுபோல வினை நிற்ப உருபு தொகுதலானும் செய்யு மென்பது வினையு முருபுமாகிய இரு நிலைமைத்தென்று கொள்க. என்பர் தெய்; தொல். இடை. சூ. ௭. 'எச்சஞ்'

௧. கலி. ௩௮. இன்தாழிசைகள் ஈண்டு அறிதற்பாலன.

௨. கலி. ௭௧: ௧௭ - ௧௮. அடிகள் ஒப்புநோக்குக.

(பிரதிபேதம்) * அப்புனலுடனே நற்குணங்களை. † விருப்பல்ல, ‡அவ்விறையந்த || மீண்டு வந்தவத்தும்பி. ÷ ஊரவென்க பகை × பெயர்ந்தாய்போலே + வரு கின்றகாலத்தே.

எ - து: எரிபோலும் நிறத்தையுடைய இதழ்கள் வாடி உதிரப் பரத்தையரைப் புணர்ந்தபடியைச் சான்றாய் எமக்குக் கூறுங் கண்ணியையுடையையாய் எம்முடைய இல்லில் யாமிருக்கின்ற இடத்தே வருகின்ற நிலைமை இவளுடைய *நலம் யாம் பிரியுங்காலத்து நிறங்கெட்டுப் புணருங்காலத்துப் பிறர் புகழ்தல் பொலிவுபெற்று நாம் மனத்திற் கொண்ட கருத்தாயிருக்குமென்று நீ குறித்திருக்குந் தகைமைப்பாடோதான். எ - று.

கடு (க)சுடர்நோக்கி மலர்ந்தாங்கே படிற்கூம்பு மலர்போலென்
றொடர்நீப்பிற் றொகுமிவ ணலமென்னுந் தகையோதா
னலர்நாணிக் கரந்தநோய் கைம்மிகப் பிறர்(உ)கூந்தன்
மலர்நாறு மார்பினை யீங்கெம்மில் வருவதை

எ - து: பிறர் கூறும் அலருக்கு நாணி மறைத்த காமநோய் ஒழுக்கத்தெல்லையைக் கடவாநிற்கப் பிறர் கூந்தலின் மணம் நாறுகின்ற மார்பினையுடையையாய் எம்முடைய இல்லிலே †யாமிருக்கின்ற இடத்தே வருகின்ற ‡நிலைமை இவள் நலம் ஆதித்தனைக் கண்டு அலர்ந்ததாமரைப்பூ அந்தஆதித்தன் அடங்குமளவிற் குவிந்தாற்போல ||எனது தொடர்ச்சி நீங்கின் வறிதுபட்டிருக்குமென்னுந் தகைமைப்பாடோதான். எ - று.

கசு (ந)பெயினந்தி வறப்பிற்சாம் புலத்திற்குப் பெயல்போல்யான்
செலினந்திச் செறிற்சாம்பு மிவளென்னுந் தகையோதான்

---

க. (அ)"கொழுநனைக் காணு,........அவன் அடிவெலா நோக்கித், தெள்ளு தெண் டிரைசூழ் பொலங்கிரி முகட்டிற் சேட்டிளம்பரிதிகண்டாங்கே, முள்ளரை முளரி முறுக்கவிழ்ந் தென்ன முகமலர்ந் தகமலர்ந் தனளே" பிரமோத்தர. உமாமகேசுவரபூசாபல. ருஉ. (ஆ) "தணந்த வென் கணவன் வல்லே சார்தர வருளு கென்றுப், பணந்தழை யரவ மாலைப் பகவனைக் கரங்கள் கூப்பு, மணந்தவழ் கமல மென்றாழ் வருதலுந் தழுவி மார்பம், புணர்ந்திடக் கூப்பும் கைகள் பொருக் கென விடுத்து நின்ற" பேநூர்ப். குழகன் குளப்புச் சுவடுற்ற. ருரு.

உ. (அ)"சாந்த நாறு நறியோள், கூந்த றுறுமின் மார்பே தெய்யோ" ஐங். உசுO. (ஆ) "வேந்த, னெரிமணி யார மார்பி னின்றுயில் பொருந்தி ணுளே" நைடதம். மண. சசு.

ந. (அ) "வறனுழக்கும்பைங்கூழ்க்கு வான்சோர்வினிதே" இனியது. கசு. (ஆ) "துளியின்மை ஞாலத்திற் கெற்றற்றே வேந்த, னளியின்மை வாழுமுயிர்க்கு" குறள். ருஎ. என்பவையும்.(இ)"வையெயிற் றெய்யா மகளிர் திறமினிப், பெய்ய வுழக்கு மழைக்காமற் றைய" பரி. க: நந-நச. என்பதும்அதனுள் 'மழைக்கா'என்பதனை விளக்குமிடத்து,

(பிரதிபேதம்) * நலம்பிரியுங் † யானிருக்கின்றவிடத்தே, ‡ நிலைமை ஆதித்தனைக். ||தினது.

(க)முடியுற்ற கோதைபோல் யாம்வாட வேதிலார்
(உ)தொடியுற்ற வடுக்காட்டி யீங்கெம்மில் வருவதை

எ – து: முடியிலே பொருந்தும் மாலைபோல யாம் வாட நின் பரத்தைய ரது தொடியினுலுற்ற வடுவினைக் காட்டி இவ்விடத்து எம் இல்லிலே *யாமிருக்கின்ற இடத்தே வருகின்றநிலைமை இவள் மழைபெய்யிற் செருக்கி அது பெய்யாதொழியிற் புலர்கின்ற நிலத்திற்கு (ங) † அப்பெயல் பெய்து விளைவித்தும் பெய்யாது கெடுத்தும் போமாறுபோல யான் சென்றேனாயிற் செருக்கிச் செல்லாமல் வருத்திற் கெடுமென்று நீ குறித்திருக்குந் தகைமைப் பாடோதான். எ - று.

‡ஆங்க, அசை.

உச ஐய வமைந்தன் றனைத்தாகப் புக்கீமோ
(ச)வெய்யாரும் ||வீழ்வாரும் வேறாகக் கையின்
முகை ×மலர்ந் தன்ன =முயக்கிற் றகையின்றே
தண்பனி வைக லெமக்கு

"காவையொத்தலாவது: கா, தனக்கு இன்றி யமையாத மழையை வருவித்துக்கொள்ள மாட்டாது அது தானேவந்துழிப் பொலிந்து வாராதவழியும் ஆமளவும் ஆற்றி ஆகாதஎல்லைக்கண் இறந்துபடுதல்" என்றெழுதி யிருத்தலும் இங்கே அறிதற்பாலன.

(அ)"சேக்கை யாகி மலர்ந்தசெந் தாமரைப், பூக்கள் பட்டதப் பூவையும் பட்டனள்" (ஆ) "அரக்கர்,....................புறத்திறேடின ரோடிய குருதியேபோல" (இ) "கரைவித்தா னுயிரைக் கண்போல்" கம்ப. மிதிலைக். எக: கும்பகருணப். உஉசு. நாகபாச. உசo. (ஈ) "நின் னிடை யெனத்தா, மெய்வண்ணம்வாடி" தஞ்சை. கஉo. (உ) "மாலை யென வேதுவளுறும்" விநாயக.

"தொடிவடு" கலி. எக: கசு. இன் குறிப்புப் பார்க்க.

"கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே, யெடுப்பதூஉ மெல்லா மழை" குறள். கரு. என்பதும் அதன் பரி உரையும் இங்கே அறிதற்பாலன.

உள்ள துவர்த்த லென்பதற்கு உள்ளதனை 'உவர்த்துக்கூறுதலென்று பொருள் கூறி 'வெய்யாரும்...........லெமக்கு'| என்பதை மேற்கோள் காட்டி இது தலைவன் செய்கின்ற தலையளியை வெறுத்த லென்பர் இளம்; தொல். மெய்ப்பாட். சூ. உஅ.

(பிரதிபேதம்) *யானிருக்கின்றவிடத்தே, † அப்பெயல்கள்பெய்து, ‡ ஆங்கசை. || வீள்வா ரும். × அலர்ந்தன்ன, =முயங்கிற்.

எ - து: நும் பரத்தைமையாற் பலரும் வியக்கத்தக்கனவெல்லாம்நுமக்குப் பொருந்திற்று; (க)நும்மைவிரும்புவாரும் நீர்தாம்விரும்புவாருமாகியபரத்தையரும் உமக்கு வேறுபடும்படியாக ஈண்டு நில்லாதே அவர் மனைக்கண்ணே செல்வீராக; தன் செவ்வியான் அலராது கையினாலே வலிய அலர்த்துதலின் முகையலர்ந்தாற்போல இனிதல்லாத முயக்கத்தில் எமக்குக் குளிர்ந்த பனிக்காலம் அப்படிக் கொடிதாயிருக்க நும்மையின்றித் தங்குதல் தகைமையில்லையோ அது தகைமையுண்டோவென ஊடல்தீர்கின்றாள் *கூறினாள். எ - று.

தண்பனி அனைத்தாகவென்க.

இது கைம்மிகலும் †இழிவுமென்னும் மெய்ப்பாடுகள் உணர்த்திற்று.

இது தரவும் தாழிசையும் ‡அசைநிலையாகிய அடைநிலைக்கிளவியும், வெள்ளைச்சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக்கலி. (கசு)

(எசு.) (உ)புள்ளிமி ழகல்வய லொலிசெந்நெ லிடைப்பூத்த
முள்ளரைத் தாமரை முழுமுதல் சாய்த்ததன்
வள்ளித ழுறநீடி வயங்கிய வொருகதி
ரவைபுக ழரங்கின்மே லாடுவா ளணிநுதல்
வகைபெறச் செரீஇய வயந்தகம் போற்றோன்றுந்
தகைபெறு கழனியந் தண்டுறை யூரகேள்;

எ அணியொடு வந்தீங்கெம் புதல்வனைக் கொள்ளாதி
மணிபுரை செவ்வாய்நின் மார்பகல நனைப்பதாற்
றோய்ந்தாரை யறிகுவேன் யானெனக் கமழுநின்
சாந்தினாற் குறிகொண்டாள் சாய்குவ ளல்லளோ;

கக புல்லலெம் புதல்வனைப் புகலக னின்மார்பிற்
பல்காழ்முத் தணியாரம் பற்றினன் பரிவானுன்
மாணிழை மடநல்லார் முயக்கத்தை நின்மார்பிற்
பூணினாற் குறிகொண்டாள் புலக்குவ ளல்லளோ;

கரு கண்டேயெம் புதல்வனைக் கொள்ளாதி நின்சென்னி
வண்டிமிர் வகையிணர் வாங்கினன் பரிவானு

---

க. "நின்வெய்ய னாயி னவன்வெய்யை நீயாயின்" கலி. கஎ: உக.

உ. ஏனையவாயில்களை மறுத்தவழி இன்னகைப் புதல்வனைத்தழீஇ இழையணிந்து அவன் வாயிலாக வந்ததற்கு இச்செய்யுள் மேற்கோள்; தொல். கற்பி. சூ. கo. இளம்.

(பிரதிபேதம்) * கூறியது தண்பனி † இழவுமென்னும், ‡ இசைநிலையாகிய இடைநிலைக்.

ணண்ணியார்க் காட்டுவ திதுவெனக் கமழுநின்
கண்ணியாற் குறிகொண்டாள் காய்குவ ளல்லளோ;

எனவாங்கு;

பூங்கட் புதல்வனைப் பொய்பல பாராட்டி
நீங்கா யிகவாய் நெடுங்கடை நில்லாதி
யாங்கே யவர்வயிற் சென்றீ யணிசிதைப்பா
னீங்கெம் புதல்வனைத் தந்து.

இது செல்லாக் காலைச்*செல்கெனக்கூறிவிடுத்தது.(௧)அது தலைவன் இனிச் செல்லானென்பது இடமுங் காலமும்பற்றி அறிந்த காலத்து ஊட லுள்ளத்தாற் கூடப் பெறதாள் செல்கெனக் கூறி விடுத்தாற்றுதலாம்.

இதன் பொருள்.

புள்ளிமி ழகல்(௨)வய லொலிசெந்நெ லிடைப்பூத்த
முள்ளரைத் தாமரை முழுமுதல் சாய்த்ததன்
வள்ளித ழுறநீடி வயங்கிய வொருகதி
ரவைபுக ழரங்கின்மே லாடுவா ளணிநுதல்
வகைபெறச் செரீஇய †வயந்தகம் போற்றோன்றுந்
தகைபெறு கழனியந் தண்டுறை யூரகேள்

எ - து: பறவைகள்,ஒலிக்கின்ற அகன்ற வயலிடத்து(௩)ஒலிக்கின்றசெந் நெலிடையிலே பூத்த முள்ளை அரையிலேயுடைய தாமரையை ஒன்றாகிய செந்நென் முதல் ‡சாய்க்கையினாலே அதனுடைய வள்ளிய இதழையுறும்படி வளர்ந்து அப்பூவிலே கிடந்து விளங்கின ஒரு கதிர் அவையினுள்ளார் புகழப் பட்ட அரங்கின்மேலே ஆடுகின்றவளுடைய தலைக்கோலத்தினின்று நுதலிலே

---

௧. தொல். கற்பி. சூ. ௬. இதனுரையில் இளம் பூரணரும் நச்சினார்க் கினியரும்செல்லாக்காலைசெல்கென விடுத்தற்கு, "பூங்கட் புதல்வனை ................தந்து" என்பதனை மேற்கோள் காட்டி யுள்ளார்.

௨. (அ) "செந்தா மரைப்பூ வுறங்கிமிர்ந்த செந்நெலின், பைந்தார்ப் புனல் வாய்ப்பாய்ந் தாவொ-ளந்தார், வயந்தகம்போற் றோன்றும் வயலூரன்" திணைமாலை. ௧௨௮. (ஆ) "கரும்பணி வளவயற் காமர் தாமரை, வரம் பணைந் ததனுதற் கிடந்த வார் செநெ, லாங்கணி நாடக மகளி ராய் நுதற், சுரும்புசூ ழிலம்பகத் தோற்ற மொத்ததே." சீவக. ௧௪௪௨.

௩. ஒலித்தல் - தழைத்தல்.

பிரதிபேதம்) *செல்கென விடுத்தது. † வயந்தகமேபோற்றோன்றும் ‡ சாய்க்கையினாலே யிதனுடைய.

தாழும்படி ஒரு வடமாகச் செருகி வைத்த வயந்தகமென்னும் அணிபோலத் தோன்றும் அழகு பெறுகின்ற கழனியையுடைத்தாகிய அழகினையுடைய குளிர்ந்த துறையினையுடைய ஊரனே! கேள். எ - று.

சாய்த்துவயங்கியவென முடிக்க. அணி - தலைக்கோலம். பரத்தையர் சேரியிற் பரத்தையரிடத்தே பொலிவுபெற்ற நின்னை அவர்கள் தம்வசமாகக் கொள்கையினாலே அவர்களில் ஒருத்தி நின்னிடத்தே விடாமற் றங்கி நினக்கு அணியாய்த் தோன்றுகின்றாளென உள்ளுறையுவமங் கொள்க.

எ அணியொடு வந்தீங்கெம் புதல்வனைக் கொள்ளாதி
(க)மணிபுரை செவ்வாய்நின் (உ)மார்பகல *நனைப்பதாற்
(ங)றேய்ந்தாரை †யறிகுவேன் யானெனக் கமழுநின்
சாந்தினாற் குறிகொண்டாள் சாய்குவ ளல்லளோ

எ - து: பரத்தையரிடத்து அணிந்த அணியுடனே இவ்விடத்தே வந்து எம்புதல்வனைஎடாதேகொள்; அவனுடையமணியை ஒக்கின்ற சிவந்த(ச)வாயினீர் நின் மார்பினுடைய பரப்பையெல்லாம் நனைக்கப்படுவதொன்றாய் இராநின்றது; அஃது அங்ஙனம் நனைத்தால் யான் நின் மார்பின் முயங்கினாரை அறிவேனெனச் சொல்லிக் கமழ்கின்ற நின்னுடைய சந்தனத்தாலே பிறர் முயக்கத்தைத் தான் கருதுதலை மனத்தாற்கொண்டவள் வருந்துவ ளல்லளோ ? எ - று.

கக புல்லலெம் புதல்வனைப் ‡புகலக (ரு)னின்மார்பிற்
பல்காழ்முத் தணியாரம் பற்றினன் பரிவானன்

---

க. (அ) மணிபுரை செவ்வாய்" அகம். ௬௬: க௪. (ஆ)"மணிமருளவ் வாய்" (கலி. அக - க.) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

உ. (அ)"மலைமாதமரும்திருமார்பகலத், தீசன்" தேவாரம். (ஆ) "உற்றவா யம்புதம் பரிசையுங் கருவியும், முருவிமார் பகலமு முருவிவீழ் செருநர்" கலிங்க. ௪அஉ.

ங. நற். ருரு: ங-கஉ.

௪. (அ) "மணித்தகைச் செவ்வாய் மழலையங் கிளவி, புலர்த்தகைச் சாந்தம் புலர்தொறு நனைப்பக், காணு யாகலோ கொடிதே." தொல். கற்பி. சூ. கூ. நச். மேற்கோள். (ஆ) "மைவார் குழன்மட மங்கையர் தங்கள் வதுவை யுன்னிக், கைவார ணங்கட வும்பெரு மானைக் கலுழ்ந்தழைத்துன், செவ்வா யமுத மளைந்து செஞ் சாந்தஞ் சிதையப்புல்லி, யிவ்வாறு செய்ததெல் லாமவர் மேனியி லேறவதே" அம்பிகா. ருOங.

ரு. "நுந்தை வியன்மார்பிற்,.........கோதை பரிபாட" கலி. அO: உ௪-௬.

(பிரதிபேதம்) *நனைப்பயால். †அறிகுவல், ‡புகலலா் நின்.

மாணிழை மடநல்லார் முயக்கத்தை நின்மார்பிற்
(க)பூணினாற் குறிகொண்டாள் புலக்குவ ளல்லளோ

எ - து: எம் புதல்வனை நீ தழுவாதேகொள்; பரத்தையர் கொண்டாடு தலையுடைத்தாகிய நின்னுடைய அகன்ற மார்பிற் கிடக்கின்ற பல வடங்களை யுடைத்தாகிய முத்து அணிந்த ஆரத்தைப் பிடித்து அறுப்பானொருவனாய் இராநின்றான்; அவன் அறுத்தால் மாட்சிமைப்பட்ட இழையினையும் மடப்பத் தினையுமுடைய மகளிர் முயங்கின முயக்கத்தை நின் மார்பிற் கிடக்கின்ற பூணாலே கருதுதலை மனத்தாற்கொண்டவள் புலப்பளல்லளோ? எ - று.

கரு கண்டேயெம் புதல்வனைக் கொள்ளாதி நின்சென்னி
வண்டிமிர் வகையிணர் வாங்கினன் பரிவாறு
(உ)னண்ணியார்க் காட்டுவ திதுவெனக் கமழுநின்
கண்ணியாற் குறிகொண்டாள் காய்குவ ளல்லளோ

எ - து: எம் புதல்வனைத் தேடி எடுத்துக்கொள்ளாமல் அவன் தானேவரக் கண்டு எடாதேகொள்; நின்னுடையத்தலையில்வண்டுகள்ஒலிக்கின்ற கூறுபாட்டை யுடைய பூங்கொத்திற் பூக்களை வாங்கி அம்மாலையை அறுப்பானொருவனாய் இராநின்றான்; அவன் அறுத்தால் நின்னை முயங்கினவர்களை அறிவிப்பது இக்கண்ணியென்று கூறி மணக்கின்ற நின்கண்ணியாலே பிறர்முயக்கத்தைத் தான் கருதுதலை மனத்தாற்கொண்டவள் கோபிப்பளல்லளோ? எ - று.

*எனவாங்கு; அசை.

௨௦ (ங)பூங்கட் புதல்வனைப் பொய்பல பாராட்டி
நீங்கா யிகவாய் நெடுங்கடை நில்லாதி
யாங்கே யவர்வயிற் †சென்றீ யணிசிதைப்பா
னீங்கெம் புதல்வனைத் தந்து

எ - து: பூப்போலுங் கண்ணினையுடைய புதல்வனைப் பல பொய்களைச் சொல்லிப்பாராட்டிப்புதல்வனைவிட்டுப்போகாயாய்ப்பரத்தையர்குறிக்கொண்ட நிலைமையைக் கடவாயாய்ப் பெரிய வாயிலில் நில்லாதேகொள்; நின்றால்

---

க. "ஒளிபூத்த நுதலாரோ டோரணிப் பொலிந்தநின், களிதட்ப" (கலி. ௬௬: ௧௧ - ௨௦.) என்பதும் அதனுரையும் அதன் குறிப்பும் பார்க்க.

உ. கலி. எஅ: ௧௩ - ௧௪.

ங. (அ) வாயிலின் வருஉம் வகைகளுட் புதல்வனைவாயிலாக்கொண்டு சென்றதற்கு, "பூங்கட்......பாராட்டி" என்பது மேற்கோள்; தொல். கற்பி. சூ. ௬. நச்.(ஆ) "பூங்கட் புதல்வனை நோக்கி" அகம். ௬௬: ௧௨. (இ) "பூங்கட் புதல்வன்"ஐந் - யெழு. ௬௭.

(பிரதிபேதம்) * ஆங்கசை பூங்கட், † சென்றி.

அவன் அணியைச் சிதைப்பானொருவனுமிருப்பான்; ஆதலால் எம்புதல்வனை (க)இங்கேதந்து அப்பரத்தையர்சேரியிலே அங்ஙனங்குறிக்கொண்டபரத்தையரிடத்தே செல்வாயாக. எ - று.

'ஈங்கெம் புதல்வனைத் தந்து' என்றது (உ) தலைவனிடத்தினின்றும் புதல்வனைச் சிறைத்தது.

(இதனால்)தலைவற்குக்கைம்மிகலுந் தலைவிக்கு இளிவரலும் பிறந்தது.

*இது தரவும் தாழிசையும் அசைநிலைத் தனிச்சொல்லும் கட்டளையாகிய வெள்ளைச்சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக்கலி. (கச)

(அO.) (ங)நயந்தலை மாறுவார் மாறுக மாறாக்
கயந்தலை மின்னுங் கதிர்விடு முக்காழ்ப்
பயந்தவெங் கண்ணார யாங்காண நல்கித்
திகழொளி முத்தங் கரும்பாகத் தைஇப்
பவழம் புனைந்த பருதி சுமப்பக்
கவழ மறியாநின் கைபுனை வேழம்
புரிபுனை பூங்கயிற்றிற் பைபய வாங்கி
யரிபுனை புட்டிலி னாங்கணீர்த் தீங்கே
வருகவெம் பாக மகன்;

கிளர்மணி யார்ப்பார்ப்பச் சாஅய்ச்சாஅய்ச் செல்லுந்
தளர்நடை காண்ட லினிதுமற் றின்னாதே
யுளமென்னா நுந்தைமாட் டெவ்வ முழப்பார்
வளைநெகிழ் பியாங்காணுங் கால்;

ஐய, காமரு நோக்கினை யத்தத்தா வென்னுநின்
றேமொழி கேட்ட லினிதுமற் றின்னாதே

---

க. இவ்வுரைகாரர் "ஒழிககாம மீங்கென" சீவக. எஉ என்பதன் விசேடவுரையில் "ஈங்கு: தன்மையை உணர்த்துதல், 'செலவினும் வரவினும்' என்னும் (தொல். கிளவி. உஅ) சூத்திரத்துக் கூறினும்" என்று எழுதி யிருத்தலும், அச்சூத்திரத்தின் உரையில், "ஈங்கு முதலியன தன்மைக்கண்ணும் ஆங்குமுதலியன படர்க்கைக்கண்ணும் அடக்கப்பட்டன" என்று எழுதியிருத்தலும் இங்கே அறிதற்பாலன.

உ. தலைவனிடத்தினின்றும் புதல்வனைச் சிறைத்ததற்கு "அணியொடு வந்தீங்கெம்...............புதல்வனைத் தந்து" என்பது மேற்கோள்; தொல். கற்பியல். சூ. சு.

ங. பல்வேறு புதல்வர்க்கண்டு நனியுவந்து கூறினதற்கு இச்செய்யுள் மேற்கோள்; தொல். கற்பி. சூ. க0.

(பிரதிபேதம்) * இது அசைநிலைத்.

யுய்வின்றி நுந்தை நலனுணச் சாஅய்ச்சாஅய்மா
ரெவ்வநோ யாங்காணுங் கால்;

கஅ ஐய, திங்கட் குழவி வருகென யானின்னை
யம்புலி காட்ட லினிதுமற் றின்னுதே
நல்காது நுந்தை புறமாறப் பட்டவ
ரல்குல்வரி யாங்காணுங் கால்;

உஉ ஐயஎங்; காதிற் கனங்குழை வாங்கிப் பெயர்தொறும்
போதில் வறுங்கூந்தற் கொள்வதை நின்னையா
னேதிலார் கண்சாய நுந்தை வியன்மார்பிற்
றுதுதேர் வண்டின் கிளைபாடத் தைஇய
கோதை பரிபாடக் காண்கும்.

இது பரத்தையிற்பிரிந்து வந்த தலைவன் சிறைப்புறத்தானாகத் தலைவி மகனுக்கு உரைத்தது.

இதன் பொருள்.

நயந்தலை மாறுவார் மாறுக மாறுக்
(க)கயந்தலை மின்னுங் கதிர்விடு *முக்காழ்ப்
பயந்தவெங் கண்ணுர யாங்காண நல்கித்
†திகழொளி முத்தங் கரும்பாகத் தைஇப்
ரு (உ)பவழம் ‡புனைந்த பருதி சுமப்பக்
கவழ மறியாநின் (ங)கைபுனை வேழம்
புரிபுனை ||பூங்கயிற்றிற் பைபய வாங்கி

க. (அ) "கைபுனை முக்காழ் கயந்தலை தாழ" கலி. அகூ: உ. (ஆ) "மயிர்ப் புறஞ் சுற்றிய கயிற்கடை முக்காழ், பொலம்பிறைச் சென்னி நலம் பெறத் தாழ" மணி. ங: கஙரு - கஙகூ.

உ. (அ) "கவழக் களியியன்மால் யானைசிற் றுளி, தவழத்தா னில்லாதது போற் - பவழக், கடிகை யிடைமுத்தம் காண்டொறு நில்லா" திணை மாலை. சஉ. (ஆ) "பவழமே யனையன பன்மயிர்ப் பேரெலி, யகழுமிங் குலிகமஞ் சனவரைச் சொரிவன, கவழயா னையினுதற் றவழுங்கச் சொத்தவே" சீவக. கஅகூஅ. (இ) "பவழவரை யன்னதிர டோட்பரவை மார்பன், றவழுமணி யாரமொடு தார்மணி தயங்கக், கவழமனை மேவு களி யானையென வந்தாங்கு" சூளா. துறவுச். கககூ. என்பவற்றால், பவழம் கவழமென்னும் வழக்குண்மை அறியலாகும்.

ங. "கை புனைவேழம்..............வந்தீக" கலி. அகூ: எ - க௦.

(பிரதிபேதம்) *முக்காழ்பயந்த, †திகளொளி; ‡புனைந்து, ||பூங்கையிற்புடையுடையவாங்கி,

யரிபுனை புட்டில் *ஞாங்கணீர்த் தீங்கே
வருகவெம் பாக மகன்

எ - து: நின்னிடத்து அன்பு ஒழிவார் ஒழிந்தேபோக; நின்னைப் பெற்ற எம்முடைய கண்ணிறைய அன்பு மாறாத † யான் நின் வரவைக் காணும்படி அருளி மென்மையையுடைய தலையிடத்தே கிடந்து மின்னும் ஒளிவிடுகின்ற மூன்று வடத்தையுடைய பாகனாகிய மகன்! விளிம்பிடத்தே விளங்குகின்ற ஒளியையுடைய முத்தை அரும்பாக அழுத்திப் பவழத்தாற்செய்த வட்டப் பலகை சுமந்துநிற்ப நின்ற கவழத்தைக் கொள்ளுதலறியாத கையாற் புனைந்த வேழத்தை ‡நின்னுடையகாலிற் கட்டினைஉள்ளிடுமணியாற் புனைந்தகெச்சை யாலே (யாரவாரிப்ப) நீ வளைத்து முப்புரியாக முறுக்கினகயிற்றாலே ||பையப் பைய ஈர்த்து இங்கே வருவாயாக. எ - று.

கயந்தலை, வல்லெழுத்து மிகுவழி மெலிப்பொடுதோன்றியது. (க)மகனென்றது, இயல்புவிளி.

க0 கிளர்மணி யார்ப்பார்ப்பச் சாஅய்ச்சாஅய்ச் செல்லுந்
(உ)தளர்நடை ÷காண்ட லினிதுமற் றின்னாதே
யுளமென்னு நுந்தைமாட் டெவ்வ முழப்பார்
வளை +நெகிழ் பியாங்காணுங் கால்

எ - து: விளங்கின மணிகள் ஆரவாரிப்ப ஆரவாரிப்ப அசைந்தசைந்து நடக்குந் தளர்ந்த நடையைக் கண்டு மகிழ்ந்திருத்தல் எமக்கு இனிது; அஃது தொழிந்துநுந்தையிடத்து எங்கள்உள்ளமென்றுகூறி வளைநெகிழாநின்றவருத் தத்திலே தங்கும் மகளிரை யாங் காணுமிடத்து அக்காட்சி இன்னாது. எ - று.

மற்று, வினைமாற்று. இது(ங)நின் தந்தையாலுற்றவருத்தம் நீங்குதற்கு நின்னைக்கொண்டு பொழுதுபோக்குவேமென்பது போதா நின்றது. மேல் வருவனவும் அன்ன.

---

க. தொல். தொகை. சூ. கரு. கயந்தலை, பண்புத்தொகையென்பது சிலர் கருத்து.

உ. (அ) "தேரோடு, தளர்நடைப் புதல்வனை யுள்ளி" (ஆ) "சிறுதேருருட்டுந் தளர்நடை" ஐங். சுசு, சo௩. (இ) "குழவி தளர்நடையைக் காண்ட லினிதே" இனியது. கரு. (ஈ) "தளர்நடை தாங்காக் கிளர் பூட் புதல்வரை" மணி. ௩: கஅசு.

௩. இந்நூற்பக்கம் சஙசு: ச-ஆம் குறிப்புப்பார்க்க.

(பிரதிபேதம்) * ஆங்கணிந்திங்கே, † யானினி ‡ நின்காலிற், || பெயரவிழுத்து இங்கே ÷ கண்டலினிது, + நெகிழ்ப்பியாம்.

கச ஐய, காமரு நோக்கினை (க)யத்தத்தா வென்னுநின்
றேமொழி கேட்ட லினிதுமற் றின்னாதே
*யுய்வின்றி நுந்தை நலனுணச் சாஅய்ச்சாஅய்மா
ரெவ்வநோ யாங்காணுங் கால்

எ - து: †ஐயனே! விருப்பமருவுகின்ற அழகினையுடையையாய் அத்தா அத்தாவென்று கூறும் (உ)நினது இனிய மொழியைக்கேட்டு மகிழ்ந்திருத்தல் இனிது; அஃதொழிந்து நுந்தை மகளிர் நலஞ் சாய்தற்கு அவர் நலத்தை உண்கையினாலே உய்வின்றிச் சாய்ந்துற்ற எவ்வத்தைத் தரும் நோயை யாங் காணுமிடத்து அக்காட்சி இன்னாது. எ - று.

(ந)‡காமர் கடைக்குறைந்து நின்றது. மருவும் ஈற்றுமிசை உகரம் மெய்யொடுங்கெட்டு மவ்வீறு சந்தியாற் கெட்டது. அத்தா கடைக்குறைந்து நின்றது. சாய்மார், ||மாரீற்றுமுற்று எதிர்காலமுணர்த்திற்று. அது நலனுண வென்னும் வினையோடு முடிந்தது.

---

க. "ஒவா தடுத்தடுத்தத் தத்தாவென் பான்" கலி. அக: கக.

உ. (அ)" யாழொடுங்கொள்ளா பொழுதொடும்புணரா, பொருளறி வாரா வாயினுந் தந்தையர்க், கருள்வந் தனவாற் புதல்வர்தம் மழலை" புறம். கஉ: க - ந. (ஆ) "அவர்மழலை கேட்ட லமிழ்தி னினிதே" இனியது. கடு. (இ) "குழலினி தியாழினி தென்பதம் மக்கண், மழலைச்சொற் கேளா தவர்" குறள். கூகூ. (ஈ) "எழுத்தி னுறழாது வழுத்து பொருளின்றிக், குறிப்பொடு படாது வெறித்த புன்சொல்லே, யாயினும் பயந்ததஞ் சேயவர் சொலுமொழி, குழலினும் யாழினு மழகிதாம்" திருக்கழுமலமும். உஅ: உ - டு. (உ) "குழலும் யாழு மினியவெனக் கூறு வண்ண மென்கனிவாய், மழலை மொழிந்து" பிரபு. மாயையின் டுஉ. (ஊ) "குழலினும் யாழினுங் குழைந்த செவ்வியாய், மழலையஞ் சிறுவர்சொன் மருந்தி லின்பமாம்" தீர்த்தகிரி. கந்ததீர்த்த. உஎ.

ந. காம ரென்பதற்கு, விருப்பமென்ற பொருளே (புறம். ககஅ: அ. மது. உஅஉ.) உரைகளிற் காணப்படுகின்றது; (ஆ)"காமர் கண்டிகை" சிலப். கூ: அக. என்புழி, 'காமம், காமரென விகாரமாயிற்று' என்று அடியார்க்கு நல்லாரும் எழுதியிருக்கிறார். இவ்வுரையாசிரியரோ பல விடத்து (முருகு. எடு. சிறுபாண். எஎ. மது. சஉஉ.) அதற்கு விருப்ப மருவின என்றும் எழுதியிருக்கிறார். அடியார்க்கு நல்லார் (ஆ) "காமரு குவளை" (சிலப். ச: ச௦.) என்புழி, 'காமம்வருமென்பது விகாரத்தாற் காமருவென நின்று கண்டார்க்கு விருப்பம் வருமென்பதாயிற்று' என்று எழுதியிருக்கிறார். இவை ஆராய்தற்பாலன.

(பிரதிபேதம்) * எய்வின்றி, † ஐயெனவிருப்பும், ‡ காம்கடைக்குறைந்து. || மாரீற்று எதிர் காலமுற்றுணர்த்திற்று.

இஃது (௧)ஒப்புவழியுவத்தல்; காமருநோக்கு இனிதென்றலின்.

௩௮ ஐய, திங்கட் குழவி வருகென யானின்னை
(௨)யம்புலி காட்ட லினிதுமற் றின்னாதே
(௩)நல்காது நுந்தை புறமாறப் பட்டவ
*ரல்குல்வரி யாங்காணுங் கால்

எ - து: ஐயனே! திங்களாகிய குழவீ! நீ இவனுடனே விளையாடும்படி வருவாயாகவென்று கூறி அவ்வம்புலிக்கு யான் நின்னைக் காட்டி மகிழ்தல் எமக்கினிது. அஃதொழிந்து நுந்தை அருளாதே தனக்குப் புறஞ்சொல் உண்டாக அருளைக்கைவிடப்பட்ட மகளிருடைய அல்குலிற் பசப்பொழுங்கை யாங் காணுமிடத்து அக்காட்சி இன்னாது. எ - று.

(௪)உயர்திணைமருங்கின் ஒழிந்துஞ்சிறுபான்மைவருமென்றலின் † எவ்வ முழப்பார் நலனுணப்பட்டாரென இரண்டாவது விரியாதுநின்றது.

௨௨ ஐயஎங்!, காதிற் கனங்குழை வாங்கிப் பெயர்தொறும்
(௫)போதில் வறுங்கூந்தற் கொள்வதை நின்னையா
மேதிலார் கண்சாய(௬)நுந்தை வியன்மார்பிற்

௧. (அ) "காமரு நோக்கினை யத்தத்தா வென்னுநின், றேமொழி கேட்ட லினிதுமற் றின்னாதே, என்பது ஒப்புவழி யுவந்தது; என்னை? காமரு நோக்கினை யென்றமையின்" என்ற குறிப்பு தொல். மெய்ப். சூ. ௨௨. பேராசிரிய ருரையிற் காணப்படுகின்றது. (ஆ) இ - வி. நூலாரும் இதனையே பின்பற்றுவர். இ-வி. சூ. ௫௮௦. (இ) "தந்தைய ரொப்பர் மக்கள்" (தொல். கற். சூ. ௬.) (ஈ) "நின்னோ ரன்ன நின் புதல்வர்" புறம். ௧௧௮: ௧௪. என்பவையும், (உ) "புதல்வனை...... ......செத்தனள்பேணி" (அகம். ௧௬: ௫-௮.) என்புழி, 'செத்து, ஒப்பு மாம்; ஒப்பு - தலைவனை யொப்பு' என்று எழுதியிருக்கும் உரையும் இங்கே அறிதற்பாலன.

௨. (அ)நாலாயிரதிவ்யப்ரபந்தம் பெரியாழ்வார் திருமொழி முதற்பத்தில் ௫-ஆவது 'தன்முகத்து' என்னும் தொடக்கத்த பாசுர முதலானவை இங்கே அறிதற்பாலன. (ஆ) "அங்கண் விசும்பி னகனிலாக் காண் பினிதே" இனியது. ௧௦. (இ) "பிள்ளை களைமருட்டுந் தாயர்போ லம் புலிமே, லொள்ளிய காட்டு" பழ. ௩௨௩.

௩. "நல்காள்கண் மாறி விடின்" கலி. ௬௧: ௨௪.

௪. தொல். தொகை. மரபு. சூ. ௧௫. இள. நச். உரைபார்க்க.

௫. இந்நூற்பக்கம் ௪௬௦: ௪-ஆம் குறிப்புப் பார்க்க. "பூவில் வறுந்தலை" குறுந். ௧௯.

௬. "புல்லலெம் புதல்வனைப் புகலக னின்மார்பிற், பல்காழ்முத் தணி யாரம் பற்றினன் பரிவானால்" கலி. ௮௧: ௧௧ - ௧௨.

(பிரதிபேதம்) *அல்குலாயாங், † எவ்வமுழப்பாரை நலனுணப்பட்டாரையென,

### இதன் பொருள்.

(௧)மையற விளங்கிய (௨)மணிமரு (௩)ளவ்வாய்தன்
(௪)மெய்பெறு(௫)மழலையின் விளங்குபூ ணணைத்தரப்
பொலம்பிறை யுட்டாழ்ந்த புனைவினை *யுருள்கல
னலம்பெறு கமழ்†(௬)சென்னி நகையொடு துயல்வர
வுருவெஞ்சா திடைகாட்டு முடைகழ லந்துகி
லரிபொலி (௭)கிண்கிணி யார்ப்போவா வடிதட்பப்

---

௧. மெய்ப்பாடென்னும் செய்யுளுறுப்பிற்கு, "மையற..............என்னுயிர்" என்பது (தொல். செய். சூ. ௨௦௪. நச். உரையிலும்) "மையற...........பூணணைத்தர" என்பது (தொல். செய். சூ. ௨௦௪. பே. இ - வி. சூ. ௫௭௮. உரையிலும்) மேற்கோள்.

௨. (அ) "மணிமருளவ்வாய்......புதல்வனை" அகம் ௧௬: ௩-௫.(ஆ) "மணிமருளவ்வாய்க் கிண்கிணிப்புதல்வர்" புறம். ௧௯௮: ௪ - ௫. (இ) "மணிபுரை செவ்வாய்" கலி. ௭௧: ௮; அகம். ௬௬: ௧௪.

௩. (அ) "மயிர்ப்புறஞ் சுற்றிய கயிற்கடைமுக்காழ், பொலம்பிறைச் சென்னி நலம்பெறத் தாழச், செவ்வாய்க் குதலை மெய்பெறு மழலை, சிந்துபு சின்னீ ரைம்படை நனைப்ப, வற்றங் காவாச் சுற்றுடைப் பூந்துகி, லொடுத்தமணிக் கோவை யுடப்பொடு துயல்வரத், தளர்நடை தாங்காக் கிளர்பூட் புதல்வரைப், பொலந்தேர்மீமிசைப் புகர்முக வேழத், திலங்குதொடி நல்லார் சிலர்நின் றேற்றி, யாலமர் செல்வன் மகன்விழாக் கால்கோள், காண்மி னோவெனக் கண்டுநிற் குநரும்" மணி. ௩: ௧௩௫ - ௧௪௫. (ஆ) "அழகிய வாயி லமுத ஊற றெளிவுறா மழலை முற்றாத விளஞ்சொல்லால்" நாலா: பெரியாழ்வார். (௧) ௫: ௫.

௪. "மெய்பெறு வெழுத்துயிர்க்கு மழலை" சீவக. ௧௮௧.

௫. மழலை - இளஞ்சொல்; (அ) "விளையா மழலையின்" சிலப். ௮: ௯௭. (ஆ) "விளையா மழலை விளைந்து" மணி. ௪: ௯௧.

௬. "மத்தக நித்திலம்" பரி. ௧௬: ௫.

௭. (அ) "செல்வச் சிறாஅர் சீறடிப் பொலிந்த, தவளைவாய பொலஞ்செய் கிண்கிணி" நறுந். ௧௪௮. (ஆ) "காலவை, சுடுபொன் வளைஇய வீரமை சுற்றொடு, பொடியழற் புறந்தந்த செய்வுறு கிண்கிணி" (இ) "கிண்கிணி யார்ப்ப வியலுமென், போர்யானை" கலி: ௮௫: ௧-௨. ௮௬: ௯-௧௦; (ஈ) "கிண்கிணி களைந்தகா லொண்கழ றொட்டு" (உ) "கிண்கிணிப் புதல்வர்" புறம். ௭௭: ௧. ௧௯௮: ௫) (ஊ) "தாளரிச் சதங்கை யார்ப்பத் தவழ்கின்ற பருவந் தன்னில்" கம்ப. இராவணன்

(பிரதிபேதம்) * உருள்கலநலம், † கண்ணிநகையொடு.

(க)பாலொ டலர்ந்த முலைமறந்து முற்றத்துக்
(உ)கால்வரேர் தையி னியக்கி நடை பயிற்றா
(௩)வாலமர் செல்வ னணிசால்(ச)பெருவிறல்
போல வருமென் னுயிர்

எ - து: மாசற விளங்கிய (ரு)மணியை ஒக்கின்ற அழகினையுடைய வாய் தன்னுடைய எழுத்துவடிவு பெருத(சு)மழலைச்சொல்லைக் கூறுதலாற் பிறந்த நீராலே விளங்குகின்ற பூணை நனைத்தலைச்செய்யாநிற்க, நன்மை பெறுகின்ற கமழுந்தலையிற் கிடந்த பொன்னாற்செய்த பிறையுட் சேர்த்த முத்துவடத் தோடே நெற்றியிலே ஞான்ற *புனைந்த வினையினையுடைய உருண்ட சுட்டி விளக்கத்தோடே அசைய, நிறத்தை ஒழியாமல் தன் நடுவே தோற்றுவிக்கும்

சோக. சக. (ஏ) "கிண்கிணிக்கான் மைந்தர்" கூர்ம. தக்கனைச்சபித்த. அ. (ஏ) கிண்கிணிக்காற் புதல்வன்" காசீ. அழுதேசன். எ.

க. "காலத்திற் றோன்றிய கொண்மூப்போ லெம்முலை, பாலொடு வீங்க" கலி. அஉ: உ - ௩.

உ. "வைக, லெண்டேர் செய்யுந் தச்சன், றிங்கள் வலித்த காலன் னோனே" (புறம். அஎ: உ - ச) என்பதும் 'தேர்க்காலோடு உவமை விரைவுந்திண்மையுமாகக்கொள்க' என்னும் அதன்பகுதியின் விசேட வுரையும் இங்கே அறிதற்பாலன.

௩. (அ) சிறப்புச்சொல், உயிர்போற் சிறந்தானை உயிரென்றல் என்பர். சேனாவரையர்; தொல். கிளவி. சூ. ருசு. (ஆ) நச்சினார்க்கினியர் இவ் வாறுகூறி, "ஆலமர்.........உயிர்" என்பதை மேற்கோளும் காட்டுவர். (இ) உயர்திணை அஃறிணையாய்ச் சிறப்பின்கண் திணைமயங்கி வந்த தற்கு இதனை மேற்கோள்காட்டுவர். இ-வி. நூலார்; இ-வி. சூ. உகூகூ. (ஈ) "ஆலமர் செல்வன் மகன்" கலி. அ௩: கச என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

ச. 'பெருவிறல்' விறற்சொல்லென்பர் சேனாவரையரும், நச்சினார்க்கினிய ரும். தொல். கிளவி. சூ. ருசு. ருஎ.

ரு. மணி - பவளம்; மாணிக்கமுமாம்.

சு. (அ) "பொன்னொடு குயின்ற பன்மணித் தாலித், தன்மார்பு நனைப் பதன் நலையு மிஃதோ, மணித்தகைச் செவ்வாய் மழலையங் கிளவி, புலர்த்தகைச் சாந்தம் புலர்தொறு நனைப்ப" தொல். கற். சூ. கூ. நச். மேற்கோள்; (ஆ) "செந்துகிர்வா, யூறு நீர்நனை மார்பினோ டிளமகா ருந்தி, யேறு மின்பமுள் ளதனையே யுடம்பென விசைப்பார்" சீகாளத்தி. கண்ணப்பர். கo.

(பிரதிபேதம்) * புனைந்த விழையினை.

உடுத்துதல் கழன்ற அழகினையுடைய(க) துகில்(உ) உள்ளிடுமணியாற்பொலிந்த சதங்கையொலிக்கும் ஒலிமாறாத அடியைத் தடுக்க, பாலாலே விம்மின முலையைமறந்து முற்றத்தே உருளையோடுதல்(ங) வல்ல(ச) தேரைக் கையாலே செலுத்தி நடத்தலைக் கற்று ஆலின்கீழ் அமர்ந்த இறைவனுடைய அழகமைந்த முருகனைப்போல வரும் என்னுயிரே! எ - று.

கால்வரேறர் வினைத்தொகையாதலின் "மருவின்பாத்திய" வாய் நின்றது. *நனைத்தரத் துயல்வரத் தட்ப மறந்து †இயக்கிப் பயிற்றுப் பெருவிறல்போல வரும் என்னுயிரே! பெருமா! பெருந்தகாய்! யாங் கேட்பச் சில கூறென மேலுறுப்போடுமுடிக்க.

கக (ரு)பெரும, விருந்தொடு கைதூவா வெம்மையு முள்ளாய்
பெருந்தெருவிற் கொண்டாடி (சு)ஞாயர் பயிற்றத்
திருந்துபு நீகற்ற சொற்கள்‡யாங் கேட்ப
மருந்தோவா நெஞ்சிற் கமிழ்த மயின்றற்றாப்
பெருந்தகாய் கூறு சில

||எ - து: பெருமா! பெருந்தகாய்! நினது (எ)மழலைச்சொல்லைக்கேட்டு அவ்வினிமை மாறாத மனத்திற்கு, அமுதத்தை உண்டாற்போல இன்னும் இனிதாக, விருந்தினர் வருதலாற் கையொழியாத எம்மையும் நினையாயாய்த்

க. துகில், சிறந்த உடைவகையுள்ஒன்று; "பட்டுந் துகிலுமுடுத்து" நாலடி. உகூச. "அரையது துகிலே மார்பின தாரம்" ஆசிரிய. "வண்ணத்துகி லுடுப்பின் வாய் விட்டழுவதுபோல் வருந் துமல்குல்" சீவக. உகூஉரு. இது பலவகைப்படுமென்பர் அடியார்க்கு நல்லார்; சிலப். கச: க0அ. விசேடவுரை. கலி. கூரு: ச. அரு: ரு.

உ. அரியென்பதற்கு, தவளையென்று பொருள்கொள்ளலுமாம்; "தேரை வாய்க் கிண்கிணி" கலி. அகூ: கூ. என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

ங. 'கால்வரேறர், வினைத்தொகை' என்பதை நோக்க வல்லினவென்றாவது வல்லுமென்றாவது இருக்கவேண்டுமென்று தோற்றுகிறது.

ச. ஆண்பாற் பிள்ளைத்தமிழ்களில் சிறுதேர்ப்பருவமெனப்படும்.

ரு. தலைவியும் காமக்கிழத்தியைப் போலத் தன்மகனைக்கொண்டு விளையாடியவழி, தலைவிமாட்டுக் கூற்றுநிகழ்ந்ததற்கு, "பெரும, விருந் தொடு கைதூவா..............என்னுமார் வந்தாரே யீங்கு" என்னும் பகுதிகள் மேற்கோள். தொல். கற்பி. சு. கூ. இளம்.

சு. ஞாயர் - நின்றாயர்; என்றது, ஐவகைத்தாயருள் நொடி பயிற்றவானை.

எ. "அவர் மழலை கேட்ட லமிழ்தி னினிதே" இனியது. கரு.

(பிரதிபேதம்) * நனைக்கத், † இயக்கிம் இயற்றிப்பெருவிறல், ‡ யான் கேட்பவருந்தோவா நெஞ்சிற் கமிழ்தயின்றற்றாற், || எ - து: நினதுமழலை.

தாய்மார் பெரிய தெருவிலே நின்னைக் *கொண்டாடிக் கற்பிக்கக் கற்பிக்க நீ அவர்பால் திருந்திக்கற்றசொற்களை யாங் கேட்கும்படி அதிலே சிலவற்றைக் †கூறு. எ - று.

இது புதல்வனை நோக்கிக் கூறியது. மேல் தோழியை நோக்கிச் செய்தி கூறுகின்றாள்.

கசு எல்லிழாய்

எ - து: ஒளியுடைத்தாகிய பூணினையுடையாய்! ‡எ - று.

சேய்நின்று || நாங்கொணர்ந்த பாணன் சிதைந்தாங்கே
வாயோடி யேனாதிப் ÷ பாடிய மென்றற்றா
நோய்நாந் தணிக்கு மருந்தெனப் பாராட்ட
வோவா + தடுத்தடுத்(க)தத் தத்தாவென் பான்மாண
× வேய்மென்றோள் வேய்த்திறஞ் சேர்த்தலு மற்றிவன்
வாயுள்ளிற் போகா னரோ

எ - து: நாம் பழக்கங்கொண்டு போந்த பாணன், நீ இப்பொழுது எவ்விடத்தாயென்று வினவ, பரத்தையர் கூற்றிலே மனந் தங்கி நமக்குச் சேயனாய்நின்று = வாயிற்கூறும் மொழிசிதைந்து ஏனாதிப்பாடியிடத்தேமென்ற தன்மைத்தாக, நாம் நம்முடையநோயைத்தணித்தற்குக்காரணமாகிய மருந்தென்று கருதிப், ∴பாராட்டாநிற்க, மாறாமல் அடுத்தடுத்து அத்தா அத்தாவென்று கூறுகின்றவனை அவன் தவறு பாராது நம்முடைய வேய்போலும் மெல்லிய தோள்களிலே மாட்சிமைப்பட எறட்டுக்கொள்ளுங் கூற்றிலே எறட்டுக்கொண்ட அளவிலும், பின்னையும் இவனுடைய வாயிடத்தினின்றும் போகானாயிராநின்றான்; இதற்குக் காரணமென்னென்றாள். எ - று.

வாய்சிதைந்தென்க. ஏனாதிப்பாடி-(உ)ஏனாதிப்பட்டங் கட்டினானொருவன் ஏற்றிய பரத்தையர்சேரி. தான் இல்லறமே பூண்டு புதல்வனைக்கொண்டு

க. "அத்தத்தாவென்னு நின், றேமொழி" கலி. அ0: கச - கரு.

உ. ராஜ பதத்திற்கு அடுத்தபதம் சேனாபதிபதமென்றும் அது மந்திரி பதத்தினும் சிறந்ததென்றும் தெரிகிறது. ஏனாதி யென்னுஞ் சொல், 'பாண்டியன் ஏனாதி நெடுங்கண்ணனார்' அகம். ௩எ௩. 'ஏனாதி திருக்கிள்ளி', 'மலையமான் சோழியவேனாதி திருக்கண்ணன்', 'சோழிய ஏனாதி திருக்குட்டுவன்' புறம். கசுஎ, கஎச, ௩கூச. என உரை நடையிலும், "சோழிக வேனாதி தன் முக நோக்கி" மணி. உஉ: உ0ரு. எனச் செய்யுணடையிலும் பயின்றுவருகிறது. இதனை ஈறுகுறைந்த சொல்

(பிரதிபேதம்) * கொண்டாடிக்கற்பிக்கநீ, † கூறெனப் புதல்வனை நோக்கிக்கூறினாள் எல்லிழாய். ‡ எனத்தோழியைநோக்கிப் பின்னைச்செய்திகூறினாள் சேய். || தாங்கொணர்ந்த, ÷ பாடியோ மென்றாக, + எடுத்தெடுத்து, × வேயமென்றோளதிறஞ். = வாயாற்கூறுங்கூற்று மொழிந்து, ∴ பாராட்டிநிற்க.

விளையாடுதலே * இனிதென்று இருந்தமை தோன்ற நோய்தணித்தற்குப் பிள்ளையை மருந்தென்றாள். "சிறந்த செய்கை யவ்வழித் தோன்றி, யறம்புரி யுள்ளமொடு தன்வர வறியாமைப், புறஞ்செய்து †பெயர்த்தல் வேண்டிடத் தானும்" (க)என்பதனால், தலைவன் இவள் புதல்வனோடு விளையாடுகின்ற மனை

லென்றும் நன். பத. சூ. க௨. சிறப்புப் பெயரென்றும் நன். பொது. சூ. ௪௨. கூறுவர் மயிலைநாதர். இவனைத் தளவீரருக்கு மேலதிகாரி என்பர் நீலகேசி யுரையாசிரியர். நீலகேசீ. ௩. குண்டல. ௪அ. இவனுக்கு அரசன் தன் பேரவையில் தன்கையினாலே நெற்றிக்கு ஏனாதிப்பட்டமும், விரலுக்கு ஏனாதிமோதிரமும் அணிவது மரபு. இதனை, "போர்க்கட லாற்றும் புரவித்தேர்ப் பல்படைக்குக், கார்க் கடல் பெற்ற கரையன்றோ - போர்க்கெல்லாந், தானாதி யாகிய தார் வேந்தன் மோதிரஞ்சேர், ஏனாதிப் பட்டத் திவன்" என்னும் (தொல். புறத். சூ. அ. மேற்கோள்), செய்யுளும் 'உவகையின் மகிழ்ந்தாண் டுறையுங் காலை, யுயர்பெருந் தொல்சீ ருருமண் ணுவாவிற், கெழுநா டோறு முழுநகர் புகழப், படிவ முத்தீக் கடிகைக் கணனு, மைம் பெருங் குழுவு மத்தி கோசமு, மன்பெருஞ் சிறப்பின் மனைப்பெருஞ் சனமுந், தேனேர் தீஞ்சொற் றேவி மார்களுந், தானையுஞ் சூழத் தானே யணிந்துதன், றம மோதிர நன்றுட்கொண்டு, சேனா பதியவ னாகெனச் செறித்துப், பன்னூறாயிரம் பழுதின்று வருவன, மன்னார் வேண்டுவ மற்றவற் கீத்துக், குதிரையுந் தேருங் கொலைமருப் பியானையு, மெதிரிய சிறப்போ டெனைப்பலநல்கி" பெருங். (௪) க: க-க௪. என்னுஞ் செய்யுட்பகுதியும், "ஆழிதொட்டான்" என்பதற்கு ஏனாதிமோதிரஞ்செறித்த சேனாபதி என்றும்"ஆழ்கடல் வையத்தில்லா வருநிதி யரசு நல்ல, சூழ்மணி யாழி செம்பொற் சூட்டொடு கண்ணி காதற், றோழற்கட் கருளி" என்பதற்கு, 'மன்னவன், காதற்றோழர் கட்கு உலகில் வேறுசிலர்க்கில்லாத பழைய அரசையும் ஏனாதி மோதிரத்தையும் செம்பொனாற் செய்த பட்டத்தையும் கண்ணியை யும் நிதியையும் அருளி' என்றும் எழுதியிருக்கும் உரைகளும். சீவக. உகசுஎ. உ௫சுக. "மன்பட்ட வர்த்தனரு மணிமகுட வர்த்தனரு முறையால்வணங்க வொளிகா, ணன்பட்டமுந்தனது கையா லணிந்து படை நாலுக்கு நாயகமெனா, மின்பட்ட வோடைநுத லிபராசன் வன்பிடரின் மிசைவைத் துகந்தன னரோ, வென்பட்ட தப்பொழுது குருசேனை மெய்ப்புளக மெழவொண்கண் முத்த மெழவே." வில்லி. பதினெட்டாம்போர். சு. என்னுஞ் செய்யுளும் வலியுறுத்தும். கந்த. திருவிளையாட்டுப். க௨0-க௨க - ஆம் செய்யுட்களும் இங்கே அறிதற் பாலன.

க. தொல். கற்பி. சூ. சு. இப்பகுதியினுரையில் இச்செய்திக்கு இச் செய்யுளை மேற்கோள் காட்டினர் நச்சினார்க்கினியர்.

(பிரதிபேதம்) * மருந்தென்று; பெரிதென்று, † பொய்த்தல்.

யறத்திணைக் காணவேண்டி மறைந்து இவள்பின்னேநிற்ப, எதிராக நின்ற தலைவனைக் கண்டு பிள்ளை அத்தா அத்தாவெனவும், எதிர்நின்ற தோழி முதலியோர் தன்னைக் கண்டு (க) ஆசாரஞ்செய்தாற் றலைவி அறிவளென்று அவர்களை ஆசாரஞ்செய்யாமற் கைகவித்தலிற் றோழி ஆசாரஞ்செய்யா திருத்த லின், தலைவன் அவள் பின்னின்றதை உணராமல் தோழியை வினவினன்.

உஉ உள்ளி யுழையே யொருங்கு படைவிடக்
*கள்ளர் படர்தந் ததுபோலத் தாமெம்மை
(உ)யெள்ளுமார் வந்தாரே யீங்கு

எ-து: அங்ஙனம் வினவின தலைவி தோழிகுறிப்பானும் புதல்வன் அத்தா அத்தாவென்றதனானும் தலைவன் வந்தவாறு (ந) கண்டு பகைவரைநினைத்து அவரிடத்தே படைக்கலங்களைச் சேர விடுதற்குக் கள்வர் வருதலைச் செய்தல் போல இவ்விடத்தே தாம் எம்மை இகழ்தற்கே வந்தார்; நம்மேல் அன்பாக வந்தாரல்லரெனத் தலைவன் கேட்பத் தோழியைநோக்கிக் கூறினள். எ - று.

தலைவி துனி போக்குதற்கு, தலைவன் இங்ஙனம் வந்தான்.

உரு ஏதப்பா டெண்ணிப் புரிசை வியலுள்ளோர்
கள்வரைக் காணாது கண்டேமென் பார்போலச்
சேய்நின்று செய்யாத சொல்லிச் சினவ(உ)னின்
றுணை கடக்கிற்பார் யார்

எ - து: அதுகேட்ட தலைவன் மதிலையுடைய ஊரிற் காவலாளர் கள் வரைக் கண்ணுற் காணுதிருக்கவும் அவரால் வருங் குற்றத்தைக்கருதி இங்கே கள்வரைக் கண்டேமென்று கூறுவாரைப்போலே முன் நில்லாது ஒருசிறைப்

---

க. எழுந்து வணங்குதல் முதலிய ஒழுக்க முறை.

உ. மாரீற்று வினைமுற்றுச்சொல் பல்லோர்படக்கையாய்ப் பெயர்கொள் ளாது வினைகொண்டு முடிதற்கு, "எள்ளுமார் வந்தார்" என்பது மேற்கோள்; தொல். வினை. சூ. கo. சேனு. நச்சினார்க்கினியரும் இ - வி. உரையாசிரியரும் இதற்கு இவ்வடியை மேற்கோள் காட்டி, மார் உகரத்தை அடுத்துநின்றது என்பர். தொல். வினை. சூ. கo. இ-வி. சூ. உஙஉ. "சாய்மார்" (கலி. அo: கசு.) என்பதற்கு நச்சினார்க் கினியர் எழுதியிருக்கும் இலக்கணக்குறிப்பும் இங்கே அறிதற்பாலது.

ந. காணல் - விளங்க அறிதல்.

ச. தலைவன் தன்றவறு பெரிதாகிய இடத்துத் தலைவிமுன் பணிந்து கூறுங் கூற்றிற்கு, "நின், றுணை கடக்கிற்பார் யார்" என்பது மேற் கோள்; தொல். கற்பி. சூ. கக. நச்.

பிரதிபேதம்) * கள்வர் படைதந்தது.

போய் நின்று யான் செய்யாத குறைகளைக்கூறிச் சினவாதேகொள்; நின் ஆணைவழி ஒழுகுதலன்றி ஈண்டு நின் ஆணையைத் தப்புவார் யாரென்றான். எ - று.

'சேய்நின்று செய்யாத சொல்லிச் சினவல்' என்றது(க)புலவிபொருளாக அச்சம்பிறந்தது. அது "நின்றுநனி பிரிவி னஞ்சிய பையுளும்" என்னும்(உ) விதியான் உணர்க.

உகூ அதிர்வில் படிறெருக்கி வந்தென் மகன்மேன்
முதிர்பூண் முலைபொருத (௩)வேதிலாண் முச்சி
யுதிர்துக ளுக்கநின் னாடை யொலிப்ப
வெதிர்*வளி நின்றாய்நீ செல்

எ - து: அதுகேட்ட தலைவி நடுக்கமில்லாத வஞ்சனையாலே வருத்தி என் மகன்மேல் வேட்கைநிகழ†நினையாயாய் வந்து, பூணினையுடைய முதிர்ந்த முலைகளால் நின் மார்பொடு பொருத பரத்தைமுடியினின்றும் உதிர்ந்த துகள் சிந்திக்கிடந்த நின்னுடையது துகளை விளக்கக் காற்றின் எதிரே நின்றாய்; இங்ஙனம் நில்லாதே போவென்றாள். எ - று.

படிறெருக்கி - வஞ்சனையைப்போக்கியென்றுமாம். ஆடையெதிர்ப்பவும் பாடம்.

௩௩ இனியெல்லாயாம், (௪)தீதிலே மென்று தெளிப்பவுங் கைந்நீவி
யாதொன்று மெங்கண் மறுத்தர வில்லாயின்

---

க. புலவிபொருளாக அச்சம் பிறந்ததற்கு, "சேய் நின்று......யார்" என்பதை மேற்கோள் காட்டினர், பேராசிரியரும்; தொல். மெய்ப். சூ. அ.

உ. தொல். கற்பி. சூ. ரு. இச்சூத்திரப் பகுதியின் உரையில், "எதப்பா டெண்ணி............கடக்கிற்பார்யார்" என்பதனை மேற்கோள்காட்டி, சேய் நின்று என்றதனால் துனித்து நின்றவாறும் சினவலென்றதனாற் பிரிவுநீட்டித்தவாறும் நின்னாணை கடக்கிற்பார்யா ரென்(றதனால்) அஞ்சியவாறு கூறியவாறுங் காண்க. என்றனர், இவ்வுரைகாரர்.

௩. "ஒரூஉக், கொடியிய ரல்லார் குரனூற்றக் துற்ற, முடியுதிர் பூந்தாது மொய்ம்பின வாகத், தொடிய வெமக்குநீ யாரை" கலி. அஅ: க-௩.

௪. கற்பிடத்துத் தலைவி ஊடியவழித் தலைவன்தேற்றத் தேறுமெல்லை இகந்த பொழுது தலைவன் ஊடுதற்கு, "தீதிலே மென்று...............மறுத்தர வில்லாயின்" என்பது மேற்கோள்; தொல். கற்பி. சூ. கரு. நச்.

(பிரதிபேதம்) * வளியேனின்றாய், † நினையாய்வந்து.

மேதக்க (க)வெந்தை பெயரனை யாங்கொள்வேந்
தாவா (உ)விருப்பொடு கன்றியாத் துழிச்செல்லு
*மாபோற் படர்தக நாம்

எ - து: அது கேட்ட தலைவன், ஏடி! யாம் நீங்குடையேமல்லேமென்று கூறுறவும், அச்சூளுறவைக் கைகடந்து எம்மிடத்துச் சிறிதும் துனித்தநிலைமை மீட்சியில்லையாயின், தன்கன்றைக்கட்டினஇடத்தே கெடாதவிருப்பத்தோடே செல்லும் பசுப்போலத் †தாம் இனி நம்பாற் படர்தல் தகும்படி, மேம்பாடுதக்க எந்தை பெயரனை யாம் எடுத்துக்கொள்ளுவேம். ‡எ - று.

(ங)நாமென்றது இடவழு||வமைதி. தாமென்றும் பாடம். "முறைப்பெயர் மருங்கிற் கெழுதகைப் பொதுச்சொ, லிலைக்குரி மரபி னிருவீற்று முரித்தே" (ச) என்பதனால் எல்லா ÷ வென்றாள். புதல்வனை வாங்கவே துனிதீர்ந்தா

க. "அகன்பெருஞ் சிறப்பிற் றந்தை பெயரன்" ஐங்குறு. ச0ங. என்பதும், கலி. எடு: உச-இன் குறிப்பிலுள்ள பாகவதச்செய்யுளும் ஈண்டு அறிதற்பாலன.

உ. (அ) "கன்றமர் கறவை மான,..............வருமே." (ஆ) "கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே" (இ) "கன்றுகாண் கறவையிற் சென்றவட் பொருந்தி" (ஈ) "தனிக்கன் றுள்ளிய புனிற்றாப் போல, விரைவிற் செல்லும் விருப்பின னாகி" (உ) "கன்றுபிரி கற்றாப்போற் கதறுவித்தி" (ஊ) "கன்றுகாண் கறவை யன்னான்" (எ) "கன்று பிரிந்துழிக், கறவையொப்பக் கரைந்து கலங்கினாள்" (ஏ) "தாயருக் கன்று சார்ந்த கன்றெனுந் தகைய னானான்" (ஐ) "கனைத்ததன் கன்றை நோக்கிக் கரைந்துசெல் புனிற்றாப் போல,... .........எதிரே போந்தான்" என்பவைகளும் (ஒ) "கறவைதம் பதிவயிற், கன்றமர் விருப்பொடு மன்று நிறை புகுதர" (கலி. கககூ: கூ - க0.) (ஓ) "கொடுந்தொழுவி னுட்பட்ட கன்றிற்குச் சூழுங், கடுஞ்சூலா" கலி. கக0: கங-கச. (ஔ) "கன்றுசேர்ந் தார்கட் கதவிற் றாய் சென்றாங்கு, வன்கண்ண ளாய்" (கலி. கககூ.) என்பவைகளும் அவற்றின் குறிப்புக்களும் இங்கே அறிதற்பாலன.

ங. தலைவன், நாமென்றது தலைவியை ஆகலின் இடவழுவமைதியென்றார். "நங்கையிவ ளெனநெருக னடந்தவரோ நாமென்ன" (கம்ப. சூர்ப்ப. ககஅ) என்பது இங்கே அறிதற்பாலது.

ச. தொல். பொருளி. ரு. உகூ. இதனுரையில் இவ்வுரைகாரர், "அதிர்வில்...........நீ செல்; இனியெல்லா" என்ற பகுதிகளை மேற்கோள் காட்டி, தலைவன் தலைவியை எல்லாவெனவிளித்துக்கூறலின் வழுவாயமைந்ததென்பர்.

(பிரதிபேதம்) * ஆபோல் படா, † நாம் இனி, தான் இனி. ‡ என்று புதல்வனை வாங்கவே, || அமைதி முறைப்பெயர். ÷ என்றாள் சென்றுகை,

ளாயிற்று. மறுத்தர வில்லாயி னெனவே இறந்துபடுவெனென்று * துனி தீர்ந்தாள். "கரணத்தி னமைந்து" என்னும் (க) சூத்திரத்தில், "சென்றுகை யிகந்து பெயர்த் துள்ளிய † வழியும்" என்பதனுன் உணர்க.

இதனுல், தலைவிக்கு எள்ளலும் தலைவற்கு அசைவும் பிறந்தது.

இது "வெளிப்பட" (௨)என்றதனுல், இயற்சீர்நிரையொன்றிப் பாவேறு பட்ட தரவும் போக்கும் ஐஞ்சீரடுக்கிவந்த யாட்டும் வந்த கலிவெண்பா. (கசு)

(அ௨.) ஞாலம் வறந்தீரப் பெய்யக் குணக்கேர்பு
காலத்திற் றோன்றிய கொண்மூப்போ லெம்முலை
பாலொடு வீங்கத் தவநெடி தாயினை
புத்தேளிர் கோட்டம் வலஞ்செய் திவளொடு
புக்க வழியெல்லாங் கூறு;
ரு கூறுவென், மேயாயே போல வினவி வழிமுறைக்
காயாமை வேண்டுவல் யான் ;
காயேம்;
க மடக்குறு மாக்களோ டோரை யயரு
மடக்கமில் போழ்தின்கட் டந்தைகா முற்ற
தொடக்கத்துத் தாயுழைப் புக்காற் கவளு
மருப்புப்பூண் கையுறை யாக வணிந்து
பெருமா னகைமுகங் காட்டென்பாள் கண்ணீர்
சொரிமுத்தங் காழ்சோர்வ போன்றன மற்றும்
கரு வழிமுறைத் தாயுழைப் புக்காற் கவளு
மயங்குநோய் தாங்கி மகனெதிர் வந்து
முயங்கினண் முத்தின ளேக்கி நினைந்தே

---

க. தொல். கற்பியல். சூ. ௫. இச்சூத்திரப் பகுதிக்கு, தலைவன் ஆற்று ளைய்த் துனியைத்தீர்த்தற்கு அவளை அணுகச்சென்று, அவன் மெய்க் கட்கிடந்த தவறுகண்டு தலைவி ஆற்றுளாய் நீக்கிநிறுத்தலானே அவன் ஒருவாற்றுன் அவளாற்றுமையைச் சிறிது மீட்கையினுலே அவள் கூடக்கருதிய விடத்தும் தலைவன் கூற்று நிகழும் என்று பொருள் கூறி, "அதிர்வில்..................நாம்" என்ற பகுதிகளை மேற்கோள் காட்டினர்; இவ்வுரைகாரர்.

௨. தொல். செய். சூ. கருரு.

(பிரதிபேதம்) * துனிதீர்ந்தாள் நாமென்றது. † வகையாலுணர்க.

நினைக்கியாம் யாரே மாகுது மென்று
வனப்புறக் கொள்வன நாடி யணிந்தன
ளாங்கே, யரிமத ருண்கண் பசப்பநோய் செய்யும்
பெருமான் பரத்தைமை யொவ்வாதி யென்று
ளவட்கினி தாகி விடுத்தனன் போகித்
தலைக்கொண்டு நம்மொடு காயுமற் றீதோர்
புலத்தகைப் புத்தேளில் புக்கா னலைக்கொரு
கோறு நினைக்கவள் யாராகு மெல்லா
வருந்தியா நோய்கூர நுந்தையை யென்றும்
பருந்தெறிந் தற்றாகக் கொள்ளுங்கொண் டாங்கே
தொடியு முகிரும் படையாக நுந்தை
கடியுடை மார்பிற் சிறுகண்ணு முட்காள்
வடுவுங் குறித்தாங்கே செய்யும் விடுவினி
யன்ன பிறவும் பெருமா னவள்வயிற்
றுன்னுத லோம்பித் திறவதின் முன்னிநீ
யையமில் லாதவ ரில்லொழிய வெம்போலக்
கையா றுடையவ ரில்லல்லாற் செல்ல
லமைந்த தினிநின் றொழில்.

இது புத்தேளிர் கோட்டம் வலஞ்செய்வித்துக்கொண்டு வருதற்குச் சேடியருடன் மகற் போக்கிய தலைமகள் அவன் நீட்டித்து வந்தவழித் "தாயர் கண்ணிய நல்லணிப் புதல்வனை, மாயப் பரத்தை யுள்ளிய வழி" (க)யால், தலைமகன் சிறைப்புறத்தானாகச் சொல்லியது.

இதன் பொருள்.

(உ)ஞாலம் வறந்தீரப் பெய்யக் (௩)குணக்கேர்பு
காலத்திற் றோன்றிய கொண்மூப்போ(௪)லெம்முலை

க. தொல். கற், ரு. சு.

உ. "நாவுவறங் கூரினுமிவ் வோடுவறங் கூராது" மணி. க௪: க௩.

௩. (அ) "குணகடல் கொண்டு......வான்ஞெமிர்ந்து, சிதரற் பெரும்பெயல் சிறத்தலின்" மது. உ௩அ - உ௪௪. (ஆ) "குணகடன் முகந்த கொள்ளை வானம்.............பெருமலை மீமிசை முற்றின வாயின" அகம். உஎஅ: க - சு.

௪. "சென்று, யுளைவிலை, யூட்டலென் றீம்பால் பெருகு மளவெல்லாம், நீட்டித்த காரணமென்" கலி. அ௩: ௪ - சு.

(க)பாலொடு வீங்கத் தவநெடி தாயினை
(உ)புத்தேளிர் கோட்டம் வலஞ்செய் திவனொடு
புக்க வழியெல்லாங் கூறு

எ - து: உலகம் வற்கடம் நீங்கும்படி பெய்தற்குக் கிழக்கே எழுந்து கூதிர்க் காலத்தே தோன்றிய மேகம்போல எம்முடைய முலை பாலாலே விம்மும்படி நீபோனகாலம் மிகவும்நீட்டித்ததெனக் கூறும்நிலையிலே யாயினை; ஆதலால், தேவர்கோயில் வலம்வந்து பின்னர் இவனோடே நீ சென்ற இடங் களையெல்லாம் எமக்குச்சொல்லென்றாள். எ - று.

ஈ கூறுவேன், மேயாயே போல வினவி வழிமுறைக்
காயாமை வேண்டுவல் யான்

எ - து: அது கேட்ட தோழி, யான்கூறுவேன்; கூறுகின்றதனை மேவி னாயேபோலக் கேட்டு அதன்பின்னாகக் கோபியாதிருத்தலை யான் நின் னிடத்தே பெற வேண்டுவே னென்றாள். எ - று.

காயேம்

எ - து: அதுகேட்ட தலைவி, யான் நின்னைக் கோபியேன் நீ கூறுகின்ற வற்றையெல்லாங் கூறென்றாள். எ - று.

கூ மடக்(ங)குறு மாக்களோ (ச)டோரை யயரு
(ரு)மடக்கமில் போழ்தின்கட் டந்தைகா முற்ற

க. "பாலோ டலர்ந்த முலை மறந்து" கலி. அக: எ.

உ. (அ) "காந்தியான் காக்கவுங், கைநில்லா வீங்கிச், சுரந்தவென் மென் முலைப் பால்பழு தாகநீ, நல்வாயிற் போத்தந்த பொழுதினா னெல்லா, கடவுட் கடிநகர்தோ றுமிவனை, வலங் கொளீஇ வாவெனச் சென்றாய் விலங்கினை, யீர மிலாத விவன்றந்தை பெண்டிருள், யாரிற் றவிர்ந்தனை கூறு" கலி. அச: ங - கூ. (ஆ) "குன்றே யனைய கடவுட் குலம்வலங் கொண்டு வ[ந்த, தெ](ரு, கெ)ன்றே விடுதத்திருவினை யேயினி யெங் கையர்பாற், சென்றே வருக மறக்கவின் றேசெம்ம லூரன்செல்வக், கன்றே யுனக்குங் கசந்தன வோவிக் கனதனமே" அம்பிகா. ருoரு.

ங. (அ) "ஒண்குறுமாக்கள்" மது. சகூக. (ஆ) "சிறுகுறுமாக்கள்" நற். உஉo: ச. (இ) "ஊர்க்குறு மாக்கள் வெண்கோடு கழாலின்" (ஈ) "ஊர்க்குறு மாக்க ளாட" (உ) "பல்குறு மாக்கள்" புறம். கூச: க, கoச: உ, கருகூ: எ. (ஊ) "அடர்க்குறு மாக்களொடு" (எ) "ஊர்க்குறு மாக்களும்" மணி. கங: சo; கரு: ருகூ.

ச. "கற்றறிந்தார் கண்ட தடக்கம்"

ரு. "பல்வேறு புதல்வர்க் கண்டு நனி யுவப்பினும்" என்னுஞ் சூத்திரப் பகுதியுரையில், "ஞாலம் வறந்தீர வென்னும் மருதக் கலியுள்,

தொடக்கத்துத் தாயுழைப் புக்காற் கவளு
மருப்புப்பூண் கையுறை யாக வணிந்து
பெருமா னகைமுகங் காட்டென்பாள் (க)கண்ணீர்
சொரி(உ)முத்தங் காழ்சோர்வ போன்றன மற்றும்
வழிமுறைத் தாயுழைப் புக்காற் கவளு
மயங்குநோய் தாங்கி மகனெதிர் வந்து

---

'அடக்கமில் ............போன்றன' என்பது முதிர்ந்தாள் உண்ணயந்து கூறியது. 'மற்றும், வழிமுறை............அணிந்தனள்' இதனுள் நோய் தாங்கின ளென இளமைப்பருவத்து மகிழ்ச்சியும் முதிர்ந்த பருவத்து மறவியுந்தோன்றக் கூறுமை'யினுனும் வழிமுறைத்தாய் என்றமை யானும் இஃது இடை நிலைப்பருவத்தாள் கூற்று. 'அவட்கினிதாகி ............புக்கான்' என்றவழி, புத்தேளென்றதுவும் தலைநின்றொழுகு மிளையோளைக் கூறியது" என்று (தொல். கற்பி. சூ. ௧௦.) நச்சினார்க்கினியரும், "முதலொடு புணர்ந்த" என்பதனுரையில், "ஞாலம்வறந்தீர வென்னு மருதக்கலியுள், 'அடக்கமில்..............புக்கான்' எனவும் 'வழிமுறைத் தாயுழைப் புக்கான்' எனவும் 'புத்தவளில் புக்கான்' எனவும் வருவனவற்றுள், தொடக்கத்துத்தாய், வழிமுறைத்தாய், புத்தவள் இவ்வாறு வருத்துக் கூறக் கேட்கின்ற காமக்கிழத்தி யென மனைவியர் நால்வருளரன்றே! அவரெல்லாரையும் கூறாது மனைக்கிழத்தியர் இருவரென்றதனுற் பயனின்றேயெனின், அவ ரெல்லாரும் இற்கிழத்தி காமக்கிழத்தியென்ற இரண்டுபெகுப்பினுள் அடங்குப என்க" என்றும், (தொல். களவி. சூ. கசு.) "புல்லுதன் மயக்கும்" என்பதனுரையில், 'பிறவும்' என்றதனுல், தலைமகட்குரித்தாகச் சொல்லப்பட்டவற்றுள் ஒப்பன கொள்ளப்படும் என்று கூறி, "ஞாலம் வறந்தீரவென்னு மருதக்கலியுள், 'அடக்கமில்............... புக்கான்' எனவும், 'வழிமுறைத் தாயுழைப் புக்கான்' எனவும் 'தலைக் கொண்டு...............புக்கான்' எனவும் கூறுதலிற் புதல்வனை ஈன்றுள் மூன்றுங் காமக்கிழத்தி யாயினவாறும் இவன் மாட்டுத் தாயர் கண்ணிய நல்லணிப் புதல்வனை, மாயப்பரத்தை யுள்ளிக் கூற்று நிகழ்ந்த வாறும் கண்டுகொள்க" என்றும் (தொல். கற்பி. சூ. ௧௦.) இளம்பூரணரும் எழுதியிருப்பவை இங்கே ஆராய்தற்பாலன.

க. "கலங்காவுள்ளங் கலங்கக் கடைசிவந்து, விலங்கி நிமிர் நெடுங்கண் புலம்புமுத் துறைப்ப" சிலப். அ: எ௦ - எக.

உ. "முத்து நேர்பு புணர்காழ்" பரி. கசு: ரு.

முயங்கினன் *முகத்தினை நோக்கி நினைந்தே
†நினக்கியாம் யாரே மாகுது மென்று
வனப்புறக் கொள்வன நாடி யணிந்தன
ளாங்கே, யரிமத ருண்(௧)கண் பசப்பநோய் செய்யும்
பெருமான் ‡பரத்தைமை யொவ்வாதி யென்று
(௨)ளவட்கினி தாகி விடுத்தனன் போகித்
தலைக்கொண்டு நம்மொடு காயுமற் றீதோ
புலத்தகைப் ||புத்தேளில் புக்கா(௩)னலைக்கொரு
கோரு நினக்கவள் யாராகு மெல்லா
வருந்தியா நோய்கூர னுந்தையை யென்றும்
(௪)பருந்தெறிந் தற்றாகக் கொள்ளுங்கொண் டாங்கே
(௫)தொடியு முகிரும் படையாக நுந்தை
÷கடியுடை மார்பிற் சிறுகண்ணு முட்காள்
வடுவுங் குறித்தாங்கே செய்யும் விடுவினி
யன்ன பிறவும் பெருமா னவள்வயிற்
றுன்னுத லோம்பித் ×திறவதின் முன்னிநீ
யையமில் லாதவ ரில்லொழிய வெம்போலக்
கையா றுடையவ ரில்லல்லாற் செல்ல
(௬)லமைந்த தினிநின் றொழில்.

---

௧. இந்நூற் பக்கம் ௨௭௬: ௪, ௫. ஆம் குறிப்புக்கள் பார்க்க,

௨. தலைவனிலும் தான் புதல்வற்குச் சிறந்தாளாகி அவன் காதலித்த பரத்தையர் மாட்டுச்செல்லாமல் புதல்வனைத் தன்பாற் சிறைசெய்த தற்கு "அவட்கினிதாகி...........நின்றொழில்" என்பது மேற்கோள்; தொல். கற்பியல். ௬. ௬. நச்.

௩. "மகனொடு, தானே புகுதந் தோனே யானது, படுத்தனெ னாகுத லுணி யிடித்திவற், கலக்கினன் போலுமிக் கொடியோ னெனச்சென், றலைக்குங் கோலொடு குறுகத் தலைக்கொண்டு" அகம். ௬௬: ௧௭-௨௧.

௪. "பாருங்கெனப் புகப்பாய்ந்தவ னெடுவில்லினைப் பறித்தான்" கம்ப. அதிகாயன். ௧௬௮.

௫. இந்நூற்பக்கம் ௪௩௦: ௨-ஆம் குறிப்பும் ௪௩௫: ௧-ஆம் குறிப்பும் பார்க்க.

௬. "அமைதல்" என்பது தவிர்தலென்னும் பொருளில் வருதற்கு இவ் வடி மேற்கோள். சீவக. ௬௮௨.

(பிரதிபேதம்) * முகத்தினினோக்கி. † நினக்கிவாரேம், ‡பரத்தமை, || புத்தவனிற் புக்கான்.
÷ [illegible] × [illegible]

எ - து: அதுகேட்டசேடி, மடப்பத்தையுடைய சிறிய(க)அறிவில்லாத மகளிரோடே (உ)ஓரைப்பாவையைக் கொண்டு விளையாடும், வேண்டியவாறு ஒழுகும் பொழுதிலே இவன் தந்தை விரும்பின * பரத்தைமை தொடங்குகின்ற காலத்துள்ளாகிய தாயிடத்தேசென்றவனுக்கு அவளும்(ங)இடப இலச்சினையைக் (ச)கைக்காணியாக இட்டு, பெரியோனே! நினதுசிரிப்பினையுடைய முகத்தை யான் முத்தங்கோடற்குக் காட்டென்று கூறுகின்றவளுடைய சொரிகின்ற கண்ணீர்கள் முத்துவடங்கள் முந்தங் கழன்று விழுவனபோலே இருந்தன; பின்னை அவட்குப் பின்னர்வந்த தாயிடத்தே சென்றவனுக்கு அவளும் மனம் மயங்குதற்குக் காரணமான காமநோயைப் பொறுத்துத் தன் மகனெதிர்வந்து தழுவிக்கொண்டு பின்னர் முத்தங்கொண்டு இவனைப்பார்த்து, தலைவன் தன்னைக் கைவிட்ட தன்மையை நினைந்து நினக்கு யாங்கள் தாயாகின்ற முறைமை எம்மிடத்தின் நீங்கினமையின் இனி எம்முறையே மாவேமென்று கூறி இவனுக்கு அழகு மிகும்படி இவன் வடிவு தாங்கும்படியான(ரு)பிள்ளைப்பணிகளை ஆராய்ந்து அணிந்தபொழுதே, மகளிருடைய செவ்

---

க. (அ) "மாவு மாக்களு மையறி வினவே" "மக்க டாமே யாறறி வுயிரே" தொல். மரபு. சூ. ௩௨, ௩௩. (ஆ) "அவமதிப்பு மான்ற மதிப்புமிரண்டு, மிகைமக்களான்மதிக்கற் பால-நயமுணராக்,கையறியா மாக்களிழிப்பு மெடுத்தேத்தும், வையார் வடித்தநூலார்" நாலடி. கசுங. என்பவையும்(இ)"தவஞ்செய் மாக்க டம்முடம் பிடாஅ, ததன்பயமெய்திய வளவை மான" பொருந. ௯௧ - ௯௨ என்புழி, 'மக்களென்னாது மாக்களென்றார்; வீடுபேறு குறியாது செல்வத்தைக் குறித்தலின்' என்றும் (ஈ) மூவறு பாடைமாக்களால்" சீவக. ௯௩, என்புழி, 'மிலேச்சராதலின், ஐயறிவிற்குரிய மாக்களென்னும் பெயராற் கூறினர்' என்றும், (உ) "கோயின் மாக்கள் மடைதிறந்திட்ட தொத்தார்" சீவக. கஉஎஅ. என்புழி, 'மக்கட்குரிய மனனின்றி அறிவுகெட்டமையின், ஐயறிவுடையாரென்று மாக்களென்றார்' என்றும் இவ்வுரையாளர் எழுதியிருக்கும் விசேடவுரைகளும் (ஊ) 'கையறியா மாக்கட்கன்றி நூலியற்றும் அறிவினையுடைய மக்கட்கு' என்னும் நன். வி. சூ. க௩எ. விசேடவுரையும் இங்கே அறிதற்பாலன.

உ. ஓரை - மகளிர் விளையாட்டு.

௩. "பூண்டவை, எறியா வாளு மெற்று மழுவுஞ், செறியக் கட்டியீரிடைத் தாழ்ந்த, பெய்புல மூதாய்ப் புகர்நிறத் துகிரின், மையற விளங்கிய வானேற் றவிர்பூண்." கலி. அரு: அ - கக.

ச. தெய்வத்துக்கு நேர்ந்த பொருளென்ற பொருளிற் காணிக்கை யென இக்காலத்து வழங்குமொழி, கைக்காணியின் நிலை மாறுதல் போலும்.

ரு. "என்பெறு மென்று பிள்ளைப் பணிகளுங் கவர்ந்தார்" திருவிளை. மாமனுக. உரு.

(பிரதிபேதம்) * பரத்தமை தொடங்கு.

வரியினையும் செருக்கினையுமுடைய மையுண்கண்கள் பசக்கும்படி அவர்க்கு நோவைக் கொடுக்கும் நின் தந்தையுடைய *பரத்தைமைக்குணமொன்றையும் ஒவ்வாதே கொள்ளென்றாள்: அங்ஙனங் கூறினவளுக்கு இனிதாயிருக்கும்படி சில மறுமொழிகளைக் கூறிப் போய்ப் பின்னை நம்மோடு ஒப்பாளாகத் தலைமைப்பாடுகொண்டு நம்மைக் காய்ந்திருக்கும் இந்தப் புலக்குந் தகைமையினையுடைய புதியவள் இல்லிலேசென்றானென்றாள்; அதுகேட்ட தலைவி, ஏடா! யான் வருந்தி நோய்மிக உன் தந்தையை எந்நாளும் தான் குறித்த தொன்றை நினைவறப் பருந்தெடுத்துக் கொண்ட தன்மைத்தாக நினைவறக் கைக்கொண்டுபோம்; கைக்கொண்ட அப்பொழுதே தொடியும் உகிரும் அவைபோல் வனபிறவும் தனக்குப் படைக்கலமாகக் கொண்டு உகிராலே நுந்தையுடைய புதுமையையுடைய †மார்பின் கண்ணும் அனையவற்றாலே ஒழிந்த சிறிய இடங்களிலும் தான் குறித்தபடியிலே வடுக்களையும் அஞ்சாளாய் நிகழ்த்தும்; ஆதலால் நினக்கு அவள் என்ன உறவுடையாள்? இவனை அடித்தற்கு ஒரு கோல் ‡தருவாயாகவென்றாள்; அதற்கு அஞ்சி அவன் அழுதமைகண்டு இனி அழுகையை விடுவாயாகவென்று கூறி, நின் தந்தையுடைய காதற்பரத்தையிடத்து நீ சேர்தலைப் பாதுகாத்து நீ செல்லுதற்குத் ||திறவதாகிய இல்லினும் மனத்தாற் கருதி அவன் நீங்குவனோ நீங்கானோவென்று ஐயப்படாமல் ஒருதலையாக நீங்கானென்று துணிந்த பரத்தையர் இல்லினும் நின் செலவொழிந்தது கிடக்க எம்மைப்போலே கையாற்றையுடையவர் இல்லிற் சேறலன்றி வேறோர் இல்லில் நீ செல்லாதேகொள்; இனி நின்னுடைய புறத்துப் போந் தொழில்தான் முடிந்ததெனக் கூறினாள். எ - று.

(க) ÷தொடக்கத்துத்தாயென்றமையான் அவள் முதிர்ந்தமையும்வழிமுறைத் தாயென்றமையான் அவள் இடைநிலைப்பருவத்தாளானமையும் புத்தேளென்றமையான் அவள் இளமைப்பருவத்தாளானமையுங் கூறினாள். நகைமுகங் காட்டென்பாள் கண்ணீர்வீழ்ந்தது இப்புதல்வனாலுள்ள பயனை நுகர்ந்து இனிமையுறாது பயனில்லாப் புறத்தொழுக்கம் நிகழ்த்துகின்றமைகருதி.

இது பரத்தையரில்லிற் புதல்வன் செல்லாமற் சிறைத்தது.

இதனால், தலைவிக்கு இளிவும் தலைவற்கு அசைவும் பிறந்தது.

இஃது ஐஞ்சீரடுக்கித் தனிச்சொற்பெற்று வந்த கலிவெண்பா. (௧௭)

(அ௩.) பெருந்திரு நிலைஇய வீங்குசோற் றகன்மனைப்
பொருந்துநோன் கதவொற்றிப் புலம்பியா முலமர
விளையவர் தழூஉவாடு மெக்கர்வாய் வியன்றெருவின்
விளையாட்டிக் கொண்டு வரற்கெனச் சென்றா

க. இந்நூற்பக்கம் ௬௮: டு-ஆம் குறிப்புப்பார்க்க.

(பிரதிபேதம்) * பரத்தமை யொன்றையும். † மார்பின்கண்ணே யனைய, ‡ கோலோ வென்றாள். || றவாகிய ÷ தொடக்கத்துத்.

யுளைவிலை, யூட்டலென் றீம்பால் பெருகு மளவெல்லா
நீட்டித்த காரண மென்;

கேட்டீ;

பெருமடற் பெண்ணைப் பிணர்த்தோட்டுப் பைங்குரும்பைக்
குடவாய்க் கொடிப்பின்னல் வாங்கித் தளரும்
பெருமணித் திண்டேர்க் குறுமக்க ளுப்ப
ணகனகர் மீடருவா னாகப் புரிஞெகிழ்பு
நீல நிரைப்போ துறுகாற் குலைவனபோற்
சாலகத் தொல்கிய கண்ண ருயர்சீர்த்தி
யாலமர் செல்வ னணிசான் மகன்விழாக்
கால்கோளென் றாக்கிக் கதுமென நோக்கித்
திருந்தடிநூ புரமார்ப்ப வியலி விருப்பினாற்
கண்ணு நுதலுங் கவுளுங் கவவியார்க்
கொண்மை யெதிரிய வங்கையுந் தண்ணெனச்
செய்வன சிறப்பிற் சிறப்புச்செய் திவ்விரா
வெம்மொடு சேர்ந்துசென் றீவாயாற் செம்மா
னலம்புதி துண்டுள்ளா நாணிலி செய்த
புலம்பெலாந் தீர்க்குவே மன்னென் றிரங்குபு
வேற்றுரைத் தாய ரெதிர்கொள்ள மாற்றாத
கள்வனாற் றங்கிய தல்லாற் கதியாதி
யொள்ளிழா யான்றீ திலேன்;

எள்ளலான், அம்மென் பணைத்தோ ளுமர்வேய்ந்தகண்ணியோ
டெம்மில் வருதியோ வெல்லாநீ தன்மெய்க்க
ணந்தீஞ்சொ னல்லா ரணிந்த கலங்காட்டி
முந்தை யிருந்து மகன்செய்த நோய்த்தலை
வெந்தபுண் வேலெறிந் தற்றால் வடுவொடு
தந்தையும் வந்து நிலை.

இது விளையாட்டிக்கொண்டு வாரந்தச் சேடியரோடு மகற்போக்கிய தலைவி அவன் நீட்டித்துவந்தவழி, "தாயர் கண்ணிய * நல்லணிப் புதல்வனை, மாயப் பரத்தை †யுள்ளிய வகை"(க)சிறைப்புறமாகக் கேட்டு வந்த தலைவனைக் கண்டு அவள் தன்னுள்ளே புலந்தது.

---

க. தொல். கற்பியல். சு. சு.

(பிரதிபேதம்) * நல்லிசை. † உள்ளியவழி, உள்ளியவனை.

இதன் பொருள்.

பெருந்திரு நிலைஇய வீங்குசோற் றகன்மனைப்
பொருந்துநோன் கதவொற்றிப் புலம்பியா முலமர
விளையவர் தழூஉவாடு மெக்கர்வாய் வியன்றெருவின்
விளையாட்டிக் கொண்டு வரற்கெனச் (க)சென்றா
யுளவிலை, யூட்டலென் றீம்பால் பெருகு .வளவெல்லா
நீட்டித்த காரண மென்

எ - து: பெரிய செல்வம் நிலைபெற்ற, மிகுகின்ற சோற்றையுடைய அகன்ற மனையிடத்து இரட்டையாய் வந்து சேரும் பலகைகள் தம்மிற்பொருந்தின கதவைத் தீண்டிநின்று பிள்ளையைக் கைவிட்டுத் தனித்து யாம்வருந்தப் பிள்ளைகள் தம்மிற்கூடி விளையாடும் * இடுமணலை இடத்தேயுடைய அகற்சியையுடைய தெருவிலே பிள்ளையை †விளையாடுவித்துக்கொண்டு வருதற்கென்று போன நீ, இனிய பாலை யான் பிள்ளைக்கு ஊட்டாமல் அப்பால் பெருகச்சுரக்கும் அளவெல்லாம் பிள்ளை பாலுண்ணாதிருத்தற்கு நின்மனத்தில் வருத்தமிலையாய்த் தாழ்த்த காரணம்யாது? அதனைக்கூறு. ‡எ - று.

கேட்டீ,

அ பெருமடற் பெண்ணைப் பிணர்த்தோட்டுப் பைங்குரும்பைக்
குடவாய்க் கொடிப்பின்னல் வாங்கித் தளரும்
பெருமணித் திண்டேர்க் குறுமக்க ளுப்ப
ணகனகர் மீடருவா னுகப் புரிஞெகிழ்பு
நீல ||நிரைப்போ தறுகாற் குலைவன போற்
சாலகத் தொல்கிய கண்ணா ருபர்சேர்த்தி
(உ)யாலமர் செல்வ னணிசான் மகன்விழாக்

---

க. "எம்முலை, பாலொடு வீங்கத் தவநெடி தாயினை, புத்தேளிர் கோட்டம் வலஞ்செய் திவனொடு, புக்கவழியெல்லாங் கூறு" கலி. அஉ: உ - ரு.

உ. (அ) "ஆலமர் செல்வ னணிசால் பெருவிறல், போல வருமென் னுயிர்" கலி. அக: கூ-கo. (ஆ) "புதல்வரைப், பொலந்தேர் மீமிசைப் புகர்முக வேழத், திலங்குதொடி நல்லார் சிலர்நின் றேற்றி, யாலமர் செல்வன் மகன்விழாக் கால்கோள், காண்மி னோவெனக் கண்டுநிற் குநரும்" மணி. ரு: கசக - கசரு. எனவும் (இ) "ஆல்கெழு கடவுட் புதல்வ" முருகு. உருசு. (ஈ) "ஆலமர் செல்வன் புதல்வன்" சிலப். உச. "வேலனார்" எனவும் (உ) "ஆலமர் செல்வற்கு" சிறுபாணா. கஎ. (ஊ) "ஆலமர்கடவுள்" புறம். ககூ: க. எனவும் வருதல் காண்க.

(பிரதிபேதம்: * எண்டுமணலை. † விளையாட்டு வித்து. ‡ என்றான், || நிலைப்போது,

கால்கோளென் றாக்கிக் கதுமென நோக்கித்
(க)திருந்தடி நூ புரமார்ப்ப வியலி விருப்பினுற
கண்ணு நுதலுங் கவுளுங் கவவியார்க்
கொண்மை யெதிரிய வங்கையுந் தண்ணெனச்
(உ)*செய்வன சிறப்பிற் சிறப்புச்செய் திவ்விரா
வெம்மொடு சேர்ந்துசென் றீவாயாற் செம்மா
(ந)னலம்புதி துண்டுள்ளா நாணிலி செய்த
புலம்பெலாந் தீர்க்குவே மன்னென் றிரங்குபு
வேற்றுனுத் தாய ரெதிர்கொள்ள மாற்றாத
கள்வனாற் றங்கிய தல்லாற் கதியாதி
யொள்ளிழா யான்றீ திலேன்

எ - து: அதனைக்கேட்பாய்; பெரிய மடலையுடைத்தாகிய பனையினுடைய குடம்போலத் திரண்ட இடத்தையுடைத்தாகிய சர்ச்சரையையுடைய முகிழையுடைய பசியகுரும்பையைக் கொடியாற் கட்டிப் பின்னின பின்னலை இழுத்து அதனால் இளைக்குஞ் சிறிய பிள்ளைகளுக்குநடுவே பெரிய மணியழுத்தின திண்ணிய தேரிலேயிருந்து அகன்ற மனையை நோக்கி மீளுதலைச் செய்வானாகாநிற்க, நீலத்தினுடைய முறுக்குநெகிழ்ந்து நிரைத்த பூக்கள் மிக்க காற்றுக்கு அசைவனபோலே சாளரங்களிலே ஒதுங்கிப் பார்த்த கண்ணினையுடையார் பரந்த மிக்க புகழையுடைய ஆலின்கீழ் இருந்த இறைவனுடைய மகனாகிய(ச)பிள்ளையார் திருநாளுக்கு அடிக்கொள்ளுகின்ற நாளென்று கருதி, †வாவிலே முயன்று கடுகிவந்து பார்த்து, இவனுதலாற் றிருந்தின அடியிற் சிலம்பொலிப்ப அணுகி, நின் கண்ணாலும்‡நுதலாலும் கதுப்பாலும் நின்னைத் தழுவிய தாயர்க்கு விளக்கத்தைக்கொடுத்தலை ஏற்றுக்கொண்டிருக்கின்ற அழகிய கையினாலும் நின் தந்தைக்குத் ||தண்ணென நீ செய்யுஞ் சிறப்புக்கள் போலே எமக்குஞ் சிறப்புக்கள் செய்து இவ்விராக்காலத்து எம்மோடே தங்கிப்போதலைச் செய்யவேண்டும்; [சிறப்பாலே] தலைவா! எங்கள் நலத்தின்

---

க. இதனை ஐஞ்சீரடியாக்கலுமாம் உரையின் பிரதிபேதத்தால் 'கவுளும்' என்பதை நீக்கி விருப்பினுறவென்பதை அடுத்த அடி ஆக்கலுமாம்.

உ. தலைவன்றமரைக் கண்டவழி உவத்தலாகிற "அவன்றம ருவத்தல்" என்னும் மெய்ப்பாட்டிற்கு 'செய்வன சிறப்பிற்..................தீர்க்குவேமன்' என்பது மேற்கோள்; தொல்; மெய்ப்பாடு. சூ. உஉ. இளம்.

ந. "மாண மறந்துள்ளா நாணிலிக்கு" கலி. அக: கஉ.

ச. பிள்ளையாரென்றது, முருகவேளை; 'பிள்ளையார் அயனைச்சபித்தலின்' 'சித்தனென்பது பிள்ளையாருக்குத் திருநாமம்' 'பிள்ளையார் வேலைத்

(பிரதிபேதம்) * செல்வன. †வாயிலே. ‡ நுதலானு நின்னை, || கண்ணெனநீ.

புதுமையை நுகர்ந்து பின்னர் எம்மை நினையாத நாணில்லாதவன் தந்த தனிமையெல்லாம் மிகவும் போக்குவேமென்று கூறி, இவனிடத்து விருப்பத் தாலே அமையாத வேற்றுத்தாயர் எதிர்கொள்ள, அதனை*மாற்றாத இக்கள்வ னாலே ஆண்டுத் தாழ்க்க நின்றதன்றி, யான் வேறோர் தீதுடையேனல்லேன்; ஒள்ளிழாய்! என்னைக் கோபியாதேகொள்ளென்றாள் சேடி. எ - று.

௨௬ எள்ளலான், அம்மென் பணைத்தோ ளுமர்வேய்ந்த கண்ணியோ
டெம்மில் வருதியோ வெல்லாநீ தன்மெய்க்க
ணாந்தீஞ்சொ(௧)னல்லா ரணிந்த கலங்காட்டி
முந்தை யிருந்து மகன்செய்த நோய்த்தலை
(௨)வெந்தபுண் வேலெறிந் தற்றால் வடுவொடு
தந்தையும் வந்து நிலை

எ - து: அதுகேட்டுப் †புதல்வனை நோக்கி, எடா! அழகையுடைய மெத் தென்ற ‡மூங்கில்போலுந் தோளினையுடைய நம்முடைய தாய்மார் சூடின கண்ணியோடே எம்முடைய இல்லிலே நீ வருவையோவாராயோவென வெறுத் துக்கூறி, தலைவன்வந்தமைகண்டு, முன்னேயிருந்து மகன் எமக்குச் செய்த நோய்க்குமேலே எம்மைமனத்தால் இகழ்ந்திருத்தலாலே தம் மெய்யிடத்துக் கிடந்த அழகிய இனியசொல்லையுடைய நல்ல மகளிர் அணிந்த கலங்களில் வடுவைக்காட்டி ஏனை வடுக்களோடே தந்தையும் வந்து நிற்றல், வெந்ததொரு புண்ணிலே வேலால் எறிந்த தன்மைத்தாயிருந்ததென அவனோடு புலந்து கூறினாள். எ - று.

---

தனக்கு அடையாளமாகக் கொண்டு திரிதலின் வேலனென்றார் 'நகர் - பிள்ளையார் கோயிலென்றுமாம்' புறநா. ௧௬௨, ௧௭௬, ௨௨௨, ௨௫௮; 'பிள்ளையாரால் வந்ததென முற்கூறி' மது. ௬௧௧. என்ப வற்றாலும் இவ்வழக்கு அறியலாகும்.

௧. "ஒளிபூத்த நுதலாரோ டோரணிப் பொலிந்த" கலி. ௬௬: ௧௧ - ௨௦.

௨. (அ) "வெந்தபுண் வேலெறிந்தற்றால்" (ஆ) "வெந்ததோர் புண்ணின்கண் வேல்கொண்டு நுழைப்பான் போல்" கலி. ௮௪: ௨௧. ௧௨௦: ௧௭. (இ) "வெந்துயர்க் கண்ணின் வேலிட்டதுபோல்" (ஈ) "தழலுறு புண்மேற் கருவி பாய்ந்தென" பெருங். (௧) ௫௩: ௧௫; (௪) ௧௩: ௧௩௦. (உ) "புண்செய் நோவில் வேலெறிந்தாற் போலும்" பெரிய. சிறுத்தொண்ட. ௫௦. (ஊ) "தீநுழை புண்ணில் வேல் செறித்த தென்ன" கந்த. குமார. ௪௬. (எ) "வெந்த புண்ணிடை வேல்பட்ட வெம்மையான்" கம்ப. இராவணன்சோக. ௧௦. (ஏ) "வெவ்வே லெறிந்த விழுப்புண்ணின் மீட்டும் வெதுப்பியதோர், செவ்வேனுழைப் பவர் சீலமன்றே" தஞ்சை. ௧௧௩. (ஐ) "புண்ணி னூடெரி, யயி னுழைந் தாலென வலமந் தேங்கினாள்" நைடதம். நகர்நீங்கு. ௮.

(பிரதிபேதம்) * மாறாத, † அப்புதல்வனை, ‡ அணைபோலும் தோளினையுடைய தாய்மா.

இதனுல், தலைவிக்கு இளிவும் தலைவற்குக் கைமிகலும் பிறந்தது.

இது தளைவிரவி ஐஞ்சீரடியும் வந்த வெள்ளைத்தாவும் தனிச்சொல்லும் தளைவிரவின வெண்பாவும் ஐஞ்சீரடுக்கிய வெள்ளைச்சுரிதகமும் பெற்ற கலி வெண்பா. (கஅ)

(அச.) உறாவளி தூக்கு முயர்சினை மாவி
னறுவடி யாரிற் றவைபோ லழியக்
கரந்தியா னரக்கவுங் கைநில்லா வீங்கிச்
சுரந்தவென் மென்முலைப் பால்பழு தாகநீ
நல்வாயிற் போத்தந்த பொழுதினு னெல்லா
கடவுட் கடிநகர் தோறு மிவனை
வலங்கொளீஇ வாவெனச் சென்றுய் விலங்கினை
யீர மிலாத விவன்றந்தை பெண்டிருள்
யாரிற் றவிர்ந்தனை கூறு ;
நீருள், அடைமறை யாயிதழ்ப் போதுபோற் கொண்ட
குடைநிழற் ருேன்றுநின் செம்மலைக் காணூஉ
விவன்மன்ற யானேவ வுள்ளங்கொண் டுள்ளா
மகனல்லான் பெற்ற மகனென் றகனகர்
வாயில் வரையிறந்து போத்தந்து தாயர்
தெருவிற் றவிர்ப்பத் தவிர்ந்தனன் மற்றவர்
தத்தங் கலங்களுட் கையுறை யென்றிவற்
கொத்தவை யாராய்ந் தணிந்தார் பிறன்பெண்டி
ரீத்தவை கொள்வானு மிஃதொத்தன் சீத்தை
செறுதக்கான் மன்ற பெரிது;
சிறுபட்டி, ஏதிலார் கையெம்மை யெள்ளுபு நீதொட்ட
மோதிரம் யாவோயாங் காண்கு ;
அவற்றுள், நறுவிதழ் கண்டன்ன செவ்விரற் கேற்பச்
சுருவே றெழுதிய மோதிரந் தொட்டாள்
குறியறிந்தேன் காமன் கொடியெழுதி யென்றுஞ்
செறியாப் பரத்தை யிவன்றந்தை மார்பிற்
பொறியொற்றிக் கொண்டாள்வ லென்பது தன்னை
யறீஇய செய்த வினை;

*அன்னையோ இஃதொன்று,
உகூ முந்தைய கண்டு மெழுகல்லா தென்முன்னர்
வெந்தபுண் வேலெறிந் தற்றா லிஃதொன்று
தந்தை யிறைத்தொடி மற்றிவன் றன்கைக்கட்
டந்தாரியா ரெல்லாஅ லிது;

ஙங இஃதொன்று, என்னொத்துக் காண்க பிறரு மிவற்கென்னுந்
தன்னலம் பாடுவி தந்தாளா நின்னை
யிதுதொடு கென்றவர் யார் ;

ஙசு அஞ்சாதி, நீயுந் தவறிலை நின்கை யிதுதந்த
பூவெழி லுண்க ணவளுந் தவறிலள்
வேனிற் புனலன்ன நுந்தையை நோவார்யார்
மேனின்று மெள்ளி யிதுவிவன் கைத்தந்தா
டான்யாரோ வென்று வினவிய நோய்ப்பாலேன்
யானே தவறுடை யேன்.

இது கடவுட் கடிநகர்தோறும் வலங்கொளீஇ வாற்தச் சேடியரோடு மகற்போக்கிய தலைவி அவன் நீட்டித்து வந்துழி, "தாயர் கண்ணிய †நல்லணிப் புதல்வனை-மாயப் பரத்தை யுள்ளிய ‡வழி"(க)யின்கண், தந்தை தோடி மகன்கைக்கண்டு புலந்தாள் தன்னுள்ளே அழிந்து கூறியது.

இதன் பொருள்.

---

க. தோல். கற். சூ. சு. இச்சூத்திரப் பகுதிக்கு, 'தாயரைக்கிட்டிய நல்ல அணியையுடைய புதல்வனை மாயப்பரத்தை குறித்த வழியும் கூற்று நிகழும்; புதல்வனைப பரத்தைமை குறித்தலாவது தலைவன் புறப் பெண்டிர் மாட்டுப்போகிய வழி வெகுளுமாறுபோலப் புதல்வனையும் அவரிடைச் சென்றவழி வெகுளல்; கண்ணிய நல்லணி யெனவே அவர்கொடுத்த நல்லணியென்பது பெறுதும்; பரத்தைமை உள்ளாத வழி இவண்மாட்டுக் குறிப்புநிகழாதாம்; மாய மென்பது பரத்தை மைக்குப் பண்பாகி இனஞ் சுட்டாது வந்தது' என்று கூறி, அதற்கு இச்செய்யுளை மேற்கோள் காட்டினர் இளம்பூரணர்; நச்சினார்க்கினிய ரும் இச்சூத்திரப்பகுதியில், "அவருள் (தாயருள்) தனியாலே வருந்திய பரத்தையர் தம் வருத்தத்தினை உணர்த்தியும், தலைவன்றொழுகும் பரத்தையர் தம் சிறப்புணர்த்தியும் அணிவரென்றற்கு, 'கண்ணிய' என்றார்" என விசேடவுரை எழுதி, இச்செய்யுளை இதற்கே மேற் கோள் காட்டியுள்ளார்.

* 'அன்னையோ முந்தையன' என, தொல். கற். சூ. சு' இள. உரையிலுள்ளது. (பிரதிபேதம்) † நல்லிசைப், ‡ வகையின்கண்.

(௧)உறுவளி தூக்கு முயர்சினை (௨)மாவி
னறுவடி யாரிற் றவைபோ லழியக்
கரந்தி*யா(௩)னரக்கவுங் கைநில்லா வீங்கிச்
சுரந்த (௪) வென் மென் † முலைப் பால்பழு தாகநீ
நல்வாயிற் போத்தந்த‡பொழுதினா னெல்லா
கடவுட் கடிநகர் தோறு மிவனை
வலங்கொளீஇ வாவெனச் சென்றாய் விலங்கினை
யீர மிலாத விவன்றந்தை பெண்டிருள்
யாரிற் றவிர்ந்தனை கூறு

எ - து: எடா! நீ நல்||வாயிலினின்றும் போதலைச்செய்த காலத்தின் கண்ணே தெய்வங்களையுடையதாகிய மிகுதிகளையுடைய கோயில்கடோறும் இவனை வலஞ்செய்வித்து வாவென்று யான் கூறச் சென்ற நீ யான் கூறிய கூற்றினைத் தப்பினாய்; இனி மாவினுடைய உயர்ந்த கொம்புகளினின்றமிக்க காற்றால் அசைக்கும் நறிய(௫)வடுக்கள் காம்பு முறிந்தனபோலே பால் மிகக் குதிக்கையினாலே அதனைமறைத்து ÷யான் அங்கையால் அமுக்கித் தேய்க்கவும் அந்தக் கையினெல்லையில் நில்லாவாய் விம்மிச் சுரந்த என்னுடைய மெல்லிய முலையிற் பால் பிள்ளை உண்ணுமற் பாழேபோம்படி அருளில்லாத இவன் தந்தையுடைய பரத்தையர்களுள் யாருடைய இல்லிலே தங்கினாய்; சொல் லென்றாள். எ - று.

---

௧. உறு என்னு முரிச்சொல் மிகுதியென்னும் பண்புணர்த்தி வருதற்கு இவ்வடி மேற்கோள். நன். உரி. சூ. ௧௫. மயிலை; விருத்தி. இரா.

௨. "நறுவடிமாவின்" (கலி. ௪௧: ௧௪) என்பதும் அதன் குறிப்பும்பார்க்க.

௩. "அரக்க நில்லா கண்ண நீர்கள்" நாலாயிர. நாச்சியார். ௩: ௪.

௪. (அ) "எம்முலை, பாலொடுவீங்கத்தவநெடிதாயினை,புத்தேளிர்கோட்டம் வலஞ்செய் திவனொடு, புக்க வழியெல்லாங் கூறு" (ஆ) "சென்று, புனைவிலை, பூட்டலென் றீம்பால் பெருகு ‡மளவெல்லா, நீட்டித்த காரணமென்" கலி. ௮௨: ௧ - ௫. ௮௩: ௪ - ௬.

௫. "முனித்தலைக் கன்னி நெற்றிச் சிறார்முலை முழாலிற் பில்கிப், புனிற்றுப்பால் பிலிற்றித் தேமா வடுவிறுத் தாங்குப் பாய, நுனித்துக் கண் ணரக்கி நோக்கா தொசிந்துநின் றார்க ளன்றே, கனிப் பொறை மலிந்து நின்ற கற்பகப் பூங்கொம் பொத்தார்" சீவக. உ௫௪௧.

(பிரதிபேதம்.) *யான்காக்கவும். †முலைபால் பழுதாக. ‡போழ்தினான், ||வாசலிலே நின்றும். ÷ யாங்கையால்.

நீருள், (க)அடைமறை *யாயிதழ்ப்(உ)போதுபோற் கொண்ட
குடைநிழற் றோன்றுநின் செம்மலைக் காணூஉ
விவன்மன்ற யானோவ வுள்ளங்கொண் டுள்ளா
மகனல்லான் பெற்ற மகனென் றகனகர்
வாயில் வரையிறந்து போத்தந்து தாயர்
தெருவிற் றவிர்ப்பத் தவிர்ந்தனன் மற்றவர்
தத்தங் கலங்களுட் கையுறை யென்றிவற்
கொத்தவை †யாராய்ந் தணிந்தார் பிறன்பெண்டி
ரீத்தவை ‡கொள்வானு (ங)மிஃதொத்தன் (ச)சீத்தை
||செறுதக்கான் மன்ற பெரிது

எ - து: நீரிடத்தே (ரு) இலையின்கீழே மறைந்துநின்ற அழகிய இதழை யுடைய தாமரைப்பூப்போலே எடுத்த பச்சைக்குடையின் நிழலிலே தோன்றுகின்ற நின்பிள்ளையைக்கண்டு தாய்மார் யான் நோம்படி மனத்தைக்கைக் கொண்டு பின்னர் என்னை நினையாத நன்கு மதிக்கும் மகனல்லாதவன் பெற்ற மகன் அறுதியாக இவனென்று கருதி அகன்ற மனையினுடைய ÷வாயிலி னெல்லையைக் கைவிட்டுப்புறப்பட்டுத் தெருவிலேவந்து தடுப்ப அவரிடத்தே

க. இந்நூற்பக்கம் உகூ: க-ஆம் குறிப்புப் பார்க்க.

உ. (அ) "திண்கதிர் மதாணி யொண்குறு மாக்களை, யோம்பினர்த் தழீஇத் தாம்புணர்ந்து முயங்கித், தாதணி தாமரைப் போதுபிடித் தாங்குத், தாமு மவரு மோராங்கு விளங்க" மதுரை. ௪௬௧ - ௪௬௪. (ஆ) "போதவிழ் தாமரை யன்னநின், காதலம்புதல்வன்" ஐங். ௪௨௪. (இ) "வழுவில் பொய்கைப் புண்மலரென வளர்ந்தமை யாடி" சீவக. உ௭௫௯. (ஈ) "இவர்பெரி தளவி லாற்றலைப், பொருந்தின ராயினும் பூவின் மெல்லியர்" கம்ப. தாடகை. ௬௭. எனவும்(உ) "பொய்கைப் பூவினும் நறுந்தண்ணியளே" ஐங். ௯௭. (ஊ) "பதுமப் போதனுள்" கம்ப. மீட்சி. எ௯. எனவும் (எ) "புள்ளிதழ்த் தாமரைப் போதுறழு மூரனை" ஐந்-எழு. ௫௦. எனவும் வருதல்காண்க.

ங. "இஃதொத்தன்" இந்நூற்பக்கம் ௩௮௯: ௩-ஆம் குறிப்புப்பார்க்க.

ச. சீத்தை. கலி. ௯௪: உஉ குறிப்புப்பார்க்க.

ரு. (அ) "தாமரை, தேமரு குடையிலை கவிப்பத் தேவியர், பூமரு மடந்தையர் போன்று தோன்றினர்" சூளா. சுயம்வர. ௧௩௯. (ஆ) "பாசடை கவிகை யாக........ .....பொய்கை சேய்க்கு வளம்பட வொழுகிற் றன்றே" கந்த. திருவவதார. ௧௧௦.

(பிரதிபேதம்) * ஆயிதட்போது. † ஆய்பாய்ந்து, ‡ கொள்வானிஃதொத்தன், || செறுத்தக்கான், ÷ வாசலின்,

தங்கினான்; அதனாலே பின்னை அவர்கள் தம்முடைய தம்முடைய அணிகளில் இவன்வடிவிற்கு ஒத்தவையிற்றை * ஆராய்ந்து (க) கைக்காணியென்று அணிந்தாரென்றாள்சேடி; அதுகேட்டதலைவி தனக்குஅயலாயிருக்கின்ற தந்தையுடையபரத்தையர்கொடுத்தவையிற்றை இவனொருவன் †வாங்குவா (உ)னும், இனி இவன் கைவிடப்படுமேவன் அறுதியாக மிகவும் நம்மாற்கோபித்தல் தக்கானென நெஞ்சொடுகூறினாள். எ - று.

'அடைமறை..............செம்மல்' என்றது: இலையும்பூவும், குடைக்கும் புதல்வர்க்கும் உவமையாய் (ந)விரவிநின்றது. இதுசினைக்கு முதல்வந்தது.

உ௧ (ச)சிறுபட்டி

எ-து: காவலின்றி வேண்டியவாறொழுகுவாய். எ - று.

ஏதிலார் கையெம்மை யெள்ளுபு நீதொட்ட
மோதிரம் யாவோயாங் காண்கு

எ - து: நீ எம்மை இகழ்ந்து இட்ட பரத்தையர் கையின் மோதிரங்கள் யாவை? யாம் அவற்றைக்காண்பேன். எ - று.

யாங் காண்கு, பன்மையொருமை மயக்கம். யானும் ‡பாடம்.

உஉ அவற்றுள், (ரு)நறுவிதழ் கண்டன்ன செவ்விரற் கேற்பச்
(சா)||சுறாவே றெழுதிய (எ)மோதிரந் தொட்டாள்

---

க. இந்நூற்பக்கம் சகக: ச-ஆம் குறிப்புப்பார்க்க.

உ. "ஒருவனை மானுட னேதை மாநகர், வருவானும் விறன்மணி மானொடுஞ்சமர், பொருவனை மவனுயிர் போன்ற வென்றிடர், தருவனும்" வில்லி. மணிமான். அ0: என்பது முதலியவற்றில் ஆமென்பது இவ்வாறே செறற்குறிப்பில் வந்திருத்தல் காண்க.

ந. "அடைமறை.........கானூஉ" என்பது உவமை பலபொருள் விரவி வந்ததற்கும் தோல். உவம. ரு. உ. இளம். முதற்குச் சினையுவமமாய் வந்ததற்கும் மேற்கோள்; தோல். உவம: ரு. சா. இளம்: பேர்; இ - வி. கு. சாசக.

ச. "சிறுபட்டி" கலி. ருக: ச என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

ரு. "நறுஅவவிழ்ந் தன்னவென் மெல்விரற் போது" கலி. ருச: க.

சா. "அவ்வாய் மகரத் தணிகிளர் மோதிரம்"

எ. (அ) "மணிநாம மோதிரந் தொட்டு" சீவக. கO௪௦. (ஆ) மாதிரத்தமரேனையோரையும் வல்லை வென்றுதன் முத்திரை, மோதிரச்சுவடேற்றிறைஞ்ச முடித்து" விநாயக. சிந்தாமணிவிநாயகர். எக.

(பிரதிபேதம்) * ஆய்ந்தாய்ந்து, † வாங்குவானுயினிவன், கைவிடப்படும்இவன் அறுதியாக. ‡ பாடம் நறவிதழ், || சுறவேறெழுதிய.

குறியறிந்தேன் காமன் (க)கொடியெழுதி யென்றுஞ்
செறியாப் பரத்தை யிவன்றந்தை மார்பிற்
பொறியொற்றிக் கொண்டாள்வ லென்பது தன்னை
* யறி இட செய்த வினை

எ - து: அம்மோதிரங்களுள் †நரும்பூவைக் கண்டாற்போன்ற சிவந்த விரலுக்குப் பொருந்தச் சுறவிலேற்றைக் குழித்த மோதிரத்தை இட்டவ ளுடையகருத்தை அறிந்தேன் ; காமன்கொடியாகியமகரத்தை மோதிரத்தே ‡குழித்தாற்போல வேறொன்றிலே அழுத்தி அதனை எந்நாளும் அடங்காத பரத்தைமைக்குணத்தையுடைய இவன் தந்தைமார்பிலே பொறியாக ஒற்றி அடிமைக்கொண்டு ஆண்டுபோதுவேனென்று சொல்கின்ற வார்த்தை தன்னை எனக்கு அறிவித்தற்குச் செய்ததொரு தொழிலெனப் புலந்து அவளொடு கூறினாள். எ - று.

"கடல்வாழ் சுறவு மேறெனப்படுமே"என்றதனாற்(உ)||சுறவேறென்றார். பரத்தைமை பரத்தை யென ÷நின்றது; "தன்னயி னுரிமையு மவன்வயிற் பரத்தையும்" (ங)என்றார் ஆசிரியராகலின்.

அன்னையோ

எ - து: நீயும் அத்தன்மையையோ ! எ - று.

புதல்வனுகிய நீயும் எம்மை இகழுந்தன்மையையோ ×என்றதாம். இது புதல்வனை நோக்கிக்கூறியது.

இஃதொன்று,

எ - து: இவ்விகழ்ச்சியும் நாமே செய்துகொண்டதொன்றென நெஞ்சொடு கூறினாள். எ - று.

உக +முந்தைய கண்டு மெழுகல்லா தென்முன்னர்
(ச)வெந்தபுண் வேலெறிந் தற்று மிஃதொன்று

---

க. (அ) "வில்லா ணிடுகொடி யகலம்" (ஆ) "ஆடுகொடி யணிந்தவுய ரலங்கல்வரை மார்பன்" சீவக. உசஎஎ, உசஅங.

உ. தோல். மரபி. சூ. சO. பேர். ஙஅ. நச். இதனுரையில் சுறவின் ஆண் ஏறெனப்படுதல் மரபென்பதற்கு, "சுறவே றெழுதிய மோதிரந்தொட்டாள்" என்பது மேற்கோள்.

ங. தொல். களவு. சூ. உO.

ச. "வெந்தபுண் வேலெறிந் தற்றால்" (கலி. அங: ஙO) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

(பிரதிபேதம்) *'அறிய, + நாம்பூவை. ‡ குறித்தாற்போல. ||சுறவேறென்றார், ÷ நிற்கும், × என்றதாம் புதல்வனை நோக்கி இஃதொன்று. + முந்தை யனகண் டெழு.

(௧)தந்தை யிறைத்*தொடி மற்றிவன் றன்கைக்கட்
டந்தாரியா ரெல்லா அ விது

எ - து: பின்னை என்முறற்பட்டனவற்றைக்†கண்டும்தலையெடுக்கமாட்டாத என்முன்னே வெந்ததோர் புண்ணிலே வேலாலே எறிந்த ‡தன்மைத்தாக இஃதொன்று இவன்றந்தையுடைய முன்கையிற் றொடியை இவன் கையிடத்தே || இட்டவர் யார்தான்? கூறென்றாள். எ - று.

௯.௯ இஃதொன்று, என்னொத்துக் காண்க பிறரு மிவற்கென்னுந்
தன்னலம் பாடுவி × தந்தாளா நின்னை
யிதுதொடு ╪ கென்றவர் யார்

எ - து: அவன் = கூறுமையின், எடா! இத்தொடி என்னையொழிந்தவர்களும் இத்தலைவற்கு என்னையொழித்த வனப்பை வழிபடும்படியைக் காண்பார்களாக(?)வென்று கூறுந் தன் நலத்தை மிகுத்துப் புகழ்கின்றவளாயிருக்குந் தந்தவள். இவ்விகழ்ச்சியும் நாமே செய்துகொண்டதொன்றென நெஞ்சொடு கூறினாள்; கூறி, புதல்வனை நோக்கி நின்னை இத்தொடியை இடுகவென்று சொன்னவர் யார்தானென்று கூறினாள். எ - று.

௯.௬ அஞ்சாதி, (உ)நீயுந் தவறிலை நின்கை யிதுதந்த
பூவெழி லுண்க ணவளுந் தவறிலள்
(௩)வேனிற் புனலன்ன நுந்தையை நோவார்யார்
மேனின்று மெள்ளி யிதுவிவன் கைத்தந்தா

---

௧. "தந்தை யிறைத்தொடி..............எல்லாவிது" என்பது, 'பல்வேறு புதல்வர்க் கண்டு நனியுவப்பினும்' என்புழி, தாயர்கொடுப்பப்புதல்வன் கொண்டமைக்கு மேற்கோள்; தொல். கற்பி. சூ. ௧௦. நச்.

௨. "நீயுந் தவறிலை நின்னைப் புறங்கடைப், போதர விட்ட நுமருந் தவறிலர், நிறையழி கொல்யானை நீர்க்குவிட் டாங்குப், பறையறைந் தல்லது செல்லற்கவென்னா, விறையே தவறுடையான்" (கலி. ௫௬: ௩௦-௩௪.) என்பதும் அதன் குறிப்பில் இவ்விடத்துக்குப் பொருந்துவனவும் நோக்குக.

௩. வாளாதே யுவமஞ்செய்து உற்றது உணர்த்தாத வழியும் தெளியுமாறு உண்டென்பதற்கு, "வேனிற் புனலன்ன நுந்தையை நோவார் யார்" என்பது மேற்கோள்; தொல். உவம. சூ. ௨௦.

(பிரதிபேதம்) * தொடஇமற்றிஃதிவன், † கண்டுதலை, ‡ தன்மைத்தாக விவன், || இட்டவன் யார் தானெனக் கூறென்றாள், × தந்தாளோநின்னை, ╪ என்றவள்யார். = கூறுமையின் இத்தொடி.

டான்யாரோ வென்று வினவிய நோய்ப்பாலேன்
யானே தவறுடை யேன்.

எ - து: அவன் அதற்கு அஞ்சினமை கண்டு அஞ்சாதேகொள்; இதனைத் தொட்டுவந்த நீயுந் தவறுடையையல்லை; நின் கையிலே இத்தொடியையிட்ட பூவினது அழகையுடைய மையுண்கண்ணையுடைய பரத்தையுந் தவறுடைய ளல்லள்;(க)வேனிற்காலத்துப் புதுப்புனல்போல எல்லார்க்கும்பயன்படுகின்ற நுந்தையை ஈண்டு நோவாரில்லை; நமக்கு மேலாய்நின்றுந் தன்னலம்பாடிப் பின்னரும் நம்மை இகழ்ந்து இத்தொடியை இவன் கையிலிட்டவள் யாரோ வென்றுகேட்ட இந்நோயின் கூற்றேனாகிய யானேயன்றோ தவறுடையே னெனத் தன்னுள்ளே அழிந்து கூறினள். எ - று.

இது, பரத்தை தன் (உ) சிறப்பு உணர்த்தி அணிந்தமைகூறிற்று. 'மேனின்று மெள்ளி' என்றதற்கு, முற்காலந் *தொடங்கி இகழ்ந்தென்றுமாம்.

இதனால், தலைவிக்கு எள்ளல் தோன்றிற்று.

இது தளைவிரவி ஐஞ்சீரடுக்கிவந்த கலிவெண்பா. (கக)

(அரு.) காலவை, சுடுபொன் வளைஇய ஈரமை சுற்றொடு
பொடியழற் புறந்தந்த செய்வுறு கிண்கிணி;
ரு உடுத்தவை கைவினைப் பொலிந்த காசமை பொலங்காழ்மேன்
மையில் செந்துகிர்க் கோவை யவற்றின் மேற்
றைஇய பூந்துகி லைதுகழ லொருதிரை;
சு கையவை, அலவன் கண்பெற வடங்கச் சுற்றிய
பலவுறு கண்ணுட் சிலகோ லவிர்தொடி ;
அ பூண்டவை, எறியா வாளு மெற்று மழுவுஞ்
செறியக் கட்டி யீரிடைத் தாழ்ந்த
பெய்புல மூதாய்ப் புகர்நிறத் துகிரின்
மையற விளங்கிய வானேற் றவிர்பூண்;
கஉ சூடின, இருங்கடன் முத்தமும் பன்மணி பிறவு மாங்
கொருங்குடன் கோத்த உருளமை முக்காழ்மேற்
சுரும்பார் கண்ணிக்குச் சூழ்நூ லாக

---

க. ஆன வேனிலின் மாந்தர்போ லலர்த்தடம் பொழிலுந், தானு மாடுதல் கருதியோ........ ...புனல்பரந் தொழுகியதால்" திருவானைக். ஆரஞ் சாத்து. உ0.

உ. இந்நூற்பக்கம் ௪கஅ: க-ஆம் குறிப்புப்பார்க்க.

(பிரதிபேதம்) * துடங்கி.

வரும்பவிழ் நீலத் தாயிதழ் நாணச்
சுரும்பாற்றுப் படுத்த மணிமருண் மாலே;

கஎ ஆங்க, அவ்வும் பிறவு மணிக்கணி யாகநின்
செல்வுறு திண்டேர்க் கொடுஞ்சினை கைப்பற்றிப்
பையயத் தூங்குநின் மெல்விரற் சீறடி
நோதலு முண்டீங் கென்கை வந்தீ
செம்மானின் பாலுண் ணிய;

உஉ பொய்போர்த்துப், பாண்டலை யிட்ட பலவல் புலையனைத்
தூண்டிலா விட்டுத் துடக்கித்தான் வேண்டியார்
நெஞ்சம் பிணித்த ெருழிலாத் திரிதரு
நுந்தைபா லுண்டி சில;

உசு நுந்தைவாய், மாயச்சூ டேறி மயங்குநோய் கைமிகப்
பூவெழி லுண்கண் பனிபரப்பக் கண்படா
ஞாமர்பா லுண்டி சில;

உகூ அன்னையோ, யாமெம் மகனைப்பா ராட்டக் கதுமெனத்
தாம்வந்தார் தம்பா லவரொடு தம்மை
வருகென்ருர் யார்கொலோ வீங்கு;

௩உ என்பாலல், பாராட் டுவந்தோய் குடியுண் டீத்தையென்
பாராட்டைப் பாலோ சில;

௩௪ செருக்குறித் தாரை யுவகைக்கூத் தாட்டும்
வரிசைப் பெரும்பாட்டொ டெல்லாம் பருகீத்தை
தண்டுவென் ஞாயர்மாட் டைப் பால்.

இது தலைவி தன் மகனைப் பாராட்டிப் பால் கூறிட்டு * ஊட்டுகின்ற வழிச் சிறைப்புறமாகக் கேட்டுப் புக்க தலைவனைக்கண்டு தன்னுள்ளே புலந்து புலவியோடு பின்னும் பாராட்டியது.

இதன் பொருள்.

(க)காலவை, சுடுபொன் வளைஇய வீரமை சுற்றொடு
பொடியழற் புறந்தந்த (உ)†செய்வுறு கிண்கிணி

---

க. இச்செய்யுளின் க, ௩,௬,அ, கஉ. இவ்வடிகளின்முதலிலும். :பரி. உக: க, ௩, அ, க0, கஉ. இவ்வடிகளின்முதலிலும் கூன்வந்திருத்தல் ஒப்பு நோக்கற் பாலது.

உ. "செய்வு" இந்நூற்பக்கம் ௬௯: க-ஆம் குறிப்புப்பார்க்க.

(பிரதிபேதம்) * ஊட்டுவழி, † செய்யுறு,

எ - து: செம்மால்! நின்(க)காலிற் கிடக்கின்றவை, *சுடும்பொன்னாலே வளைத்த இரண்டாய் அமைந்த †காற்சரியோடே பண்ணுதலைத் தான் உறுகின்ற, (உ)பொடி மூடுதழலாலே நிறம் உண்டாகப்பட்ட ‡ சதங்கை. எ - று.

(ங)சுடுபொன், எக்காலமும் பொன்னென (ச) முக்காலத்திற்கும் உரிய பொன்னின் இயல்பு கூறிற்று; சுடுபொன்னென வினைத்தொகையாகாமை உணர்க.

ங. உடுத்தவை,(௫)கைவினைப் பொலிந்த காசமை பொலங்காழ்மேன்
மையில் (சு)செந்துகிர்க் கோவை யவற்றின் மேற்
றைஇய பூந்துகி லைதுகழ ||லொருநிரை

எ - து: (எ)அல்குலிற்கு உடுத்தவை, கைத்தொழிலாலே பொலிவுபெற்ற மணிகள் இடையிடை அமைந்த பொன்மணிகளையுடைய வடம்; அதின் ÷மேலே அழுக்கில்லாத சிவந்த பவளவடம்; அவற்றின்மேலே ×உடுத்தின ஐதாய்க் கழல்கின்ற ஒன்றாகிய திரைத்த பூந்துகில். எ - று.

வடங்கள் தோன்றத் ✢திரைத்தாரென்றார்.

---

க. இந்நூற்பக்கம் சஎஅ: எ - ஆம் குறிப்புப் பார்க்க.

உ. (அ)"நிறம்பெறப், பொடியழற்புறந்தந்த பூவாப்பூம் பொலன்கோதை" கலி. ௯ச: க - உ. (ஆ) "ஒள்ளழற்புரிந்த தாமரை" (இ) "அழல்புரிந்த வடர்தாமரை" புறம். கக: கரு, உக: க.

ங. "சுடுபொன்" ஐங். சஙஉ; பரி. உக: கஅ.

ச. தோல்.

௫. பவழக் காசொடு பன்மணி விரைஇத், திகழக் கோத்த செம்பொற் பாண்டில், கைவினைக் கொளுவிற் செய்துநலங் குயின்ற, வெண்ணாற் காழ்நிரை" பெருங். (உ) கக: கசஉ - கச௫.

சு. (அ) "நுண்டுகி னுழைந்த வல்குற் பவளமொத்து" சீவக. ககஅச. (ஆ) "செந்துகிர்க் கோவை சென்றேந் தல்கு, லந்துகின் மேகலை யசைந் தன வருந்த" (இ) "அந்துகிர்க் கோவை யணியொடு பூண்டு" சிலப். ச: உரு - ங0, கச: கூங. (ஈ) "அனபவள மேகலையோ டப்பாலைக் கப்பாலா னென்கின் றாளால்" தேவாரம்.........(உ)"பவழஞ் சேர்ந்த பல்காழல் குலர்" பெருங். (க) சங: கசசு.

எ. (அ) "கொள்வீ ரல்குலோர் கோவணம்" தே............(ஆ) "துளிக்கு நெய்க் கருங்குழற் றோகைமாருயிர், விளிக்குமென் றல்குலை மறைத்த மேதகு, பளிக்குவெள் ளுடையின்மேற் பசும்பொனம்பரங், களிக்கும் வேன் மன்னவன் கவினச் சுற்றினன்" காஞ்சி. நகரேற்று. உ00.

(பிரதிபேதம்) * சுடுபொன் எக்காலமும்...........உணர்க சுடுபொன்னாலே. † காற்கற்றையோடே, ‡சதங்கைஉடுத்தவை ||ஒருசிறை,÷ மேலேவழுக்கில்லாத, × உடுத்தினவை ஐதாய், ✢ திரைத்தார் கையதை.

௬ கைபதை, அலவன் கண்பெற வடங்கச் சுற்றிய
பலவுறு கண்ணுட் சிலகோ லவிர்தொடி

எ - து: கைபிடத்தது, ஞெண்டின்கண் தன்மைபெற நெருங்கப் பல அருப்புத்தொழில் சூழப்பட்ட சில கோற்றொழில் அவிர்கின்ற இரண்டாய்ச் சேருந் தொடி. எ - று.

(க)கண்ணுள் - தொழில்.

அ பூண்டவை, எறியா வாளு மெற்று மழுவுஞ்
செறியக் கட்டி யீரிடைத் தாழ்ந்த
பெய்புல (௨)மூதாய்ப் புகர்நிறத் துகிரின்
மையற விளங்கிய (௩)வாணேற் றவிர்பூண்

எ - து: பூணப்பட்டவை, வெட்டாத வாளும் வெட்டாத மழுவும் நெருங்கக் கட்டி இரண்டு புறத்தினுந் தங்கின மழைபெய்த *புலத்து ஈயன்

க. (அ) "கண்ணுள் வினைஞர் கைவினை முற்றிய, நுண்வினைக் கொல்லர்" சிலப். கசு: க0௫ - க0௬. (ஆ) "கண்ணு ளாளர் கைபுனை இடுகும்" பெருங். (௫) க: ௩0. எனவருதல்காண்க. (இ)கண்ணுளென்பது சித்திர மெழுதுதலும் கூத்தாடுதலுமாகிய கண்ணுள் நிறுத்தும் தொழிற்சிறத் திற்கும் பெயராம்.

௨. (அ) "தண்பெய லெழிலி, யணிமிகு கானத் தகன்புறம் பரந்த, கடுஞ் செம் மூதாய்" நற். ௩௬௨: ௩ - ௫. (ஆ) "தண்பெயல் பொழிந்த பைதுறு காலைக், குருதியுருவி னொண்செம் மூதாய், பெருவழி மருங் கிற் சிறுபல வரிப்ப" அகம். எச: ௩ - ௫. எனவும் (இ) "அரக்கு நிற வுருவி னீயன் மூதாய்" அகம். க௩௪: க௩. (ஈ)"ஈயலின் மூதாய் பரப்ப வினமரீஇக், கோவல ரூதுங் குழலிரங்கக்-கோவந், தவழக்கார் செய் தன்று" நாற்கவி. ௬. க௭0. மேற்கோள். எனவும் (உ) "அரக்கத் தன்ன செந்நிலப் பெருவழிக், காயாஞ் செம்ம லூஅய்ப் பலவுட, னீயன் மூதாய் வரிப்பப் பவளமொடு, மணிமிடைந் தன்ன குன்றம்" (ஊ) "மணிமிடை பவளம் போல வணிமிகக், காயாஞ் செம்ம லூஅய்ப் பலவுட, னீயன் மூதா யீர்ம்புறம் வரிப்பப், புலனணி கொண்ட காரெதிர் காலை" (எ) "பெயல்பெய்து கழிந்த பூநாறு வைகறைச், செறிமண னிவர்த களர்தோன் றியவிற், குறுமோட்டு மூதாய் குறுகு ரூடி, மணிமண்டு பவழம் போலக் காயா, வணிமிகு செம்ம லொளிப்பன மறையக், கார்கவின் கொண்ட காமர் காலை" அகம். க௪: க - ௪, ௩0௪: க௩ - க௬, ௩௭௪: க0 - க௫. எனவும் வருவன காண்க.

௩. (அ) "மருப்புப்பூண்" (ஆ) "பொலஞ்செய் மழுவொடு வாளணி கொண்ட, நலங்கிள ரொண்பூண்" கலி. அ௨: க௨; அ௬: ௩ - ௪.

(பிரதிபேதம்) * புலத்தின் மூதாயினது.

மூதாயினது புகரையுடைத்தாகிய நிறத்தையுடைய பவளத்தாற் செய்த அழுக் கறவிளங்கிய இடபத்தையுடைய விளங்குகின்ற பூண். எ - று.

கஉ சூடின, இருங்கடன் *முத்தமும் பன்மணி †பிறவு மாங்
கொருங்குடன் கோத்த வுருளமை (க)முக்காழ்மேற்
சுரும்பார் கண்ணிக்குச் சூழ்நூ லாக
வரும்பவிழ் நீலத் தாயிதழ் நாணச்
(உ)சுரும்பாற்றுப் படுத்த மணிமருண் மாலை

எ - து: சூடப்பட்டன, கரிய கடலின் முத்தும் அதனுடனே பல மணிகள் பிறவுஞ் சேரக்கோத்த உருட்சி அமைந்த மூன்றுவடம்; அதின்மேலே கிடக்கும் நூலாற் சூழ்ந்த சுரும்புகள் ஆரும் கண்ணிக்குப்‡பொருந்தும்படியாக நடுவே கிடக்க அரும்புகள் அலர்ந்த சில நீலத்தினது ஆய்ந்த இதழ் நாணும் படியாக நீலமணியாற் பண்ணின சுரும்புகளைப் போக்கின கண்டார் மருளும் மாலை. எ - று.

கஎ ஆங்க, உரையசை.

அவ்வும் பிறவு மணிக்கணி யாகநின்
||செல்வுறு திண்(ந)டேர்க் கொடிஞ்சினை கைப்பற்றிப்
பையயத் தூங்குநின் மெல்விரற் சீறடி
நோதலு÷முண்டீங் கென்கை வந்தீ
செம்மானின் பாலுண் ணிய

எ - து: யான் கூறியவையும் பிறவும் நின்னழகிற்குமேலே ஓர் அழகாகச் செறியும் நின்னுடைய மெல்லிய விரல்களையுடைய சிறிய அடிகள் இங்ஙனந் திரிந்ததற்கு நோதலுமுண்டு; அதனைத் தவிர்ந்து நின்னுடைய உருட்டுதலுறு கின்ற திண்ணிய தேரில் வளைந்த(ச)தாமரைமுகையினைக் கையாலே பிடித்து மெத்தென மெத்தென அசையாநின்று இவ்விடத்து என் கையிடத்தே வருவாய்; நினக்கென்று வைத்த பாலையுண்டற்கு. எ - று.

---

க. (அ) "முக்காழ் கயந்தலைத்தாழ" கலி. அசு: உ. (ஆ) "மயிர்ப்புறஞ் சுற்றிய கயிற்கடை முக்காழ்" மணி. ந: கஙரு.

உ. (அ) "கன்றுாற்றுப் படுத்த புன்றலைச் சிறாஅர்" குறுந். உசக. (ஆ) "கதிராற்றுப் படுத்த முதிராத் துன்பமொடு" மணி. ரு: கஙக.

ங. (அ) "நெடுந்தேர்க் கொடிஞ்சி பற்றி, நின்றோன்" அகம். ககO: உச-ரு. (ஆ) "மணித்தேர்க் கொடிஞ்சி கையாற் பற்றி" மணி. ச: சஅ.

ச. (அ) "பண்டரித னுந்தியயன் வந்தபழ முந்தைப், புண்டரிக மொட் டனைய மொட்டினது" கம்ப. தேரேறு. சஎ. (ஆ) "கோகனக முகை யனைய கொழுங்கனகக் கொடிஞ்சியன" இராமா. சந்திர. அ.

(பிரதிபேதம்) * முத்தும், †பிறவு, மொருங்கு, ‡பொருத்தும்படி. ||செய்வுறு, ÷உண்டிங்கு.

அணியாகத் தாங்கும் நின்னென்க. தேர்க்குத் தாமரை (௧)சினையாதலின் அதனைச் சினையென்றார்.

உஉ பொய்போர்த்துப், பாண்டலை யிட்டபலவல் புலையனைத்
தூண்டிலா விட்டுத் துடக்கித்தான் வேண்டியார்
நெஞ்சம் பிணித்த றொழிலாத் திரிதரு
(உ)நுந்தைபா *லுண்டி சில

எ - து: தலைமேல் ஏறட்டுக்கொண்ட பாண்மையாலே வஞ்சனையை மறைத்து வசீகரித்தற்றொழில் பலவும் வல்ல பாணனைத் தூண்டிலாகப் போகட்டுப் பரத்தையரை அகப்படுத்தித் †தான் விரும்பின பரத்தையருடைய நெஞ்சம்தன்வசமாக்குதல்தனக்குத்தொழிலாகக்கொண்டு திரியும் நுந்தைக்குப் பட்ட சிலகூற்றை உண்பாய். எ - று.

உ௩ நுந்தைவாய், மாயச்சூ டேறி மயங்குநோய் கைமிகப்
பூவெழி லுண்கண் பனிபரப்பக் கண்படா
ஞாயர்பா ‡லுண்டி சில

எ - து: நுந்தை வாயிற் பொய்ச்சூளை மெய்யாகத் தெளிந்து பூவினது அழகையுடைய உண்கண் நீர் பரக்கும்படியாக மயங்குகின்ற நோய் கைகடத்தலாலே அக்கண்கள் துயிலாத நின் தாய்மார்க்குப்பட்ட சில கூற்றை உண்பாய். எ - று.

உ௪ அன்னைபோ,

அன்னையோவென்றது, அம்மையோவென ஒரு வியப்பு.

௧. 'கொடுஞ்சினைக் கைப்பற்றி' என்று ககரவொற்று மிக்கபாடம் காணப்படின், "கொடுஞ்சினத்தேரும்" பெருங்.(க)௪௧. ரு௭. என்புழிப்போல, 'கொடுஞ்சு' என்பதையே தாமரைமொட்டின் பெயராக்கலுமாம். இப்பொருளில் 'கொடிஞ்சி' என்றசொல்லே பெருவழக்கிற்றாயினும், அச்சொல் 'கொடுஞ்சி' என்று (புறம். ௭௭: ரு, ௩௬அ: ௪, சிலப். ௧௪: ௧௬அ; உ௬:௧௩உ, உ௧௩; உ௭: ௩௭; மணி. ௪: ௪அ) இவற்றிற் காணப்படுதலால் இடையிகரம் உகரமாய்த்திரிந்துவழங்குதலும், 'கொடிஞ்சு' என்று (சூளா. அரசியல். ௯0, உ௭௩; கம்ப. கு௧. ரு௧, கரன்வதை. ௧௪௯, தேரேறு. ௪௩) இவற்றில் வந்திருத்தலால் ஈற்றிகரம் குற்றியலுகரமாய்த் திரிந்துவழங்குதலும் உண்டென்பதுவிளங்கும். இத்திரிபுகளோடு பரிதிமுதலியவற்றில் இடையிகரம் உகரமாயும் பஞ்சிமுதலியவற்றில் ஈற்றிகரம் குற்றியலுகரமாயும் திரிந்து வழங்குதலை ஒப்பு நோக்குக. இச்சொல் தேர்த்தட்டுக்கும் பெயராய் வரும்.

உ. இந்நூற் பக்கம். ௩௪௯: உ - ஆம் குறிப்புப்பார்க்க.

(பிரதிபேதம்) * உண்டுசில. † தாம்விரும்பின. ‡ உண்டுசில.

(க)யாமெம் மகனைப்பா ராட்டக் கதுமெனத்
தாம்வந்தார் தம்பா லவரொடு தம்மை
வருகென்றார் யார்கொலோ வீங்கு

எ - து: வாராத தலைவன் வந்தமை கருதி, யாம் எம்முடைய மகனைப் பாராட்டாநிற்கத் தம் பகுதியிலுள்ள பாணன்முதலியோருடனே தாம் கடுக வந்தார்; தம்மை இவ்விடத்து வருகவென்று கூறினார் யார்தானெனத் தன் னெஞ்சொடு கூறினாள்.

மேல், பிள்ளையைநோக்கிக் கூறுகின்றாள்.

௩உ என்பாலல், பாராட் டுவந்தோய் குடியுண் டீத்தை(உ)யென்
பாராட்டைப் பாலோ சில

எ - து: என்னுடைய குடியின்பகுதியிடத்தன அல்லவாகிய பாராட்டுக் கேட்டு மகிழ்ந்தவனே! எனக்குப்பட்ட கூற்றை யுண்பாய்; அப்பால்தான் சிறிது காணென்றாள். எ - று.

(ங)செருக்குறித் தாரை யுவகைக்கூத் தாட்டும்
வரிசைப் பெரும்பாட்டொ டெல்லாம் பருகீத்தை
தண்டுவென் *(ச)ஞாயர்மாட்டைப் பால்

†எ-து: அவன் அதனை உண்ணுமற்போகலிற் கோபிக்கக்கருதின அன்னே, தன் பிள்ளையாட்டால் மனமகிழ்ச்சி செய்தவனை நோக்கிக் கோபிக்கக் கருதினவர்களை உவகையாகிய கூத்தாட்டுவிக்கும் உன்னுடைய தாகத்தாலே

---

க. ஆறும் வேற்றுமைக்கு உரித்தென்றோதிய முறைப் பொருட்கண், உயர்திணைப் பொருள் இரண்டு சேர்ந்த விடத்து நிலைமொழி யீற்றில் உருபு விரிப்புழி, குகரம் வரும்; அதுவன்றி ஆறும் வேற்றுமையை விரிப்புழி, அதுவென் னுருபுகெட அதன் உடைமைப் பொருள் விரியும்; என்று கூறி, "யாமெம்மகனைப் பாராட்ட" என்பதை மேற் கோள் காட்டி, இது உருபு நிலைக்களத்துப் பொருண் மயங்கிற் றென்றும், இதற்கு நான்க னுருபு விரிப்பின் எமக்கு மகனாகியவனை யென ஆக்கங்கொடுத்துக் கூறல் வேண்டுமென்றும் கூறுவர், நச் சினார்க்கினியர்; தொல். வேற்றுமையங்கு. சூ. கக.

உ. "அழுதகண் ணீர்கண் மைந்த னுவிபோழ்ந் திட்ட வன்றே" என் பதன் விசேடவுரையில் நீர்களென்றதனை, "என் பாராட்டைப்பாலோ சில" என்றாற்போலக் கொள்க வென்பர், நச்; சீவக. உOஅஎ.

ங. முன் பதிப்பில் அடிப்பிரிப்பு வேறாகவுள்ளது.

ச. "ஞாயர்" கலி. அக: கஉ; "ஞாயையு மஞ்சுதி" கலி. கOஎ என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

(பிரதிபேதம்) * ஞாயர்பாட்டைப், † எ - து: அஃது அவனை உண்ணுமற்,

இனி யான் பாராட்டும் பெரிய பாட்டுக்களோடு நின் தாய்மாருக்குப்பட்ட கூற்றையுடைய பாலைப்பருகு; இத்தையெல்லாம் நின்னை *ஊட்டல் அமைவே னென்று (க) கூறிட்டு ஊட்டினுள். எ - று.

தண்டுதல் அமைதலென்னும் பொருடருதல், (உ) தண்டாமையென்னும் அதன் மறையால் உணர்க; "தண்டாக்காற் றளரியல்" (ங)"தண்டாவிருப்பி னள்" (ச) எனவரும். †ஞாயரென்றது தன்னைப் பிறர்போற் கூறிற்று.

(இதனுல்) தலைவிக்குத்தலைவனைக்கண்டுபெறுமைபற்றி வியப்புத்தோன்றிற்று. தலைவற்கு ‡ நினைத்தல் பிறந்தது. புதல்வனுல் தலைவிக்குச் செல்வமாகிய உவகை பிறந்தது;(ரு)புதல்வனுஞ் செல்வமாதலின்.

இது "தரவும் போக்கும் பாட்டிடைமிடைந்தும்" என (சு) || இடை நிலைப்பாட்டினை ஈற்றின் வைத்தமையால், (எ) தரவும் போக்குமின்றி இடை நிலைப்பாட்டுக்களே ஐஞ்சீரடுக்கிவந்து கலிவெண்பாவிற் கூறிய உறுப்பொத்து யாப்புவேறுபட்டு வந்த கொச்சகம். (உ0)

(அக.) மைபடு சென்னி மழகளிற் றோடைபோற்
கைபுனை முக்காழ் கயந்தலைத் தாழப்
பொலஞ்செய் மழுவொடு வாளணி கொண்ட
நலங்கிள ரொண்பூ ணனைத்தரு மவ்வாய்
ரு கலந்துகண் ணொக்கரக் காண்பின் றாகிர்மேற்
பொலம்புனை செம்பாகம் போர்கொண் டிமைப்பக்
கடியரணம் பாயாநின் கைபுனை வேழந்
தொடியோர் மணலி னுழக்கி யடியார்ந்த

---

க. "பால்பெய் வள்ளஞ் சால்கை பற்றி, யென்பா டுண்டனை யாயி னொருகா, னுந்தை பாடு முண்ணென் றூட்ட" அகம். உகக: ரு - எ.

உ. இவர் இவ்வாறுகப் பொருள், கொள்ளு முறைமையை, "எய்யாமையே யறியாமையே" (தொல். உரி.சூ. சச) என்பதற்கு இவர்கூறியிருக்கும் விசேடவுரையாலும் அறிக.

ங. ச.

ரு. (அ) "தம்பொரு ளென்பதம் மக்கள்" குறள். சுங. எனவும் (ஆ) "பொன்போற் புதல்வனொடு" ஐங். உசுரு. (இ) "பொன்போற் புதல் வர்ப் பெறூஅ தீரும்" புறம். கூ: ச. எனவும் வருதல் காண்க.

சு. தொல். செய். சூ. கருச.

எ. தரவும் போக்கு-மின்றிக் கொச்சகம் பலதொடர்ந்து இற்றதற்கு, இச் செய்யுளை மேற்கோள்காட்டி உறழ் பொருட்டுஅன்மையிற் கொச்சகக் கலியாயிற் றென்பர். பேராசிரியர் நச்சினார்க்கினியர், இருவரும்; தொல். செய். சூ. கருரு.

(பிரதிபேதம்) *ஊட்டாமல்விடுவேனென்று, † தாயென்றது தன்னைப்பிறன்போற்கூறினுன்; இது தலைவிக்கு ‡நினைதல் பிறந்தது, || இடைநிலைப்பாடனவை யீற்றின்.

தேரைவாய்க் கிண்கிணி யார்ப்ப வியலுமென்
போர்யானை வந்தீக வீங்கு ;

கக செம்மால், வனப்பெலா நுந்தையை யொப்பினு நுந்தை
நிலைப்பாலு ளொத்த குறியென்வாய்க் கேட்டொத்தி
கன்றிய தெவ்வர்க் கடந்து களங்கொள்ளும்
வென்றிமாட் டொத்தி பெருமமற் றெவ்வாதி
யொன்றினேம் யாமென் றுணர்ந்தாரை நுந்தைபோன்
மென்றோ ணெகிழ விடல் ;

கஎ பால்கொள லின்றிப் பகல்போன் முறைகோடாக்
கோல்செம்மை யொத்தி பெருமமற் றெவ்வாதி
கால்பொரு பூவிற் கவின்வாட நுந்தைபோல்
சால்பாய்ந்தார் சாய விடல் ;

உக வீத லறியா விழுப்பொரு ணச்சியார்க்
கீதன்மாட் டொத்தி பெருமமற் றெவ்வாதி
மாதர்மென் னோக்கின் மகளிரை நுந்தைபோ
னோய்கூர நோக்காய் விடல் ;

ஆங்க;

உரு திறனல்ல யாங்கழற யாரை நகுமிம்
மகனல்லான் பெற்ற மகன் ;

உஅ மறைநின்று, தாமன்ற வந்தீத் தனர் ;
ஆயிழாய், தாவாத வெற்குத் தவறுண்டோ காவாதீங்
கீத்தை யிவனையாங் கோடற்குச் சீத்தையாங்
கன்றி யதனைக் கடியவுங் கைநீவிக்
குன்ற விறுவரைக் கோண்மா விவர்ந்தாங்குத்
தந்தை வியன்மார்பிற் பாய்ந்தா னறனில்லா
வன்பிலி பெற்ற மகன்.

இது "தந்தைய ரொப்பர் மக்களென் பதனு, லந்தமில் சிறப்பின் மகப்பழித்து நெருங்கலும்" (க) என்பதனுன் மகனைத் தலைவனை ஒக்க

க. தொல். கற்பி. சூ. சு. இச்சூத்திர வுரையில் "வனப்பெலா............ நெகிழவிடல்"என மகனைக்கொண்டு விளையாடியவழி, அவன் தலைவன் மேல் வீழ்தலில், "தந்தை வியன்மார்பிற்................மகன்" எனத் தன்றிறத்து அன்பிலனெனநெருங்கிக்கூறியவாறுகாண்கவென்பர், நச்.

லாங் துணனும் ஒக்கலாகாக் துணனும் தலைவி கூறுகின்றுழி மறைந்துபுக்க தலைவன் அவள் ஊடலுணர்வன சொல்ல, மகனிவாயிலாக ஊடறீர்வான் தன்னுள்ளே கூறியது.

இதன் பொருள்.

(க)மைபடு சென்னி மழகளிற் றோடைபோற்
கைபுனை (உ)முக்காழ் கயந்தலைத் தாழப்
பொலஞ்செய் மழுவொடு வாளணி கொண்ட
நலங்கிள ரொண்(ங)பூ ணணைத்தரு மவ்வாய்
ரு கலந்துகண் ணுக்காரக் *காண்பின் றுகிர்மேற்
பொலம்புனை (ச)செம்பாகம் போர்கொண் டிமைப்பக்
(ரு)கடியரணம் பாயாநின் கைபுனை வேழந்
தொடியோர் மணலி னுழக்கி யடியார்ந்த

க. (அ) "அஞ்சன மெழுதின..............குஞ்சரம்" (ஆ) "மையணி மத யானை" சீவக. உஉங0, உசஙச. (இ) "மையணி யிரும்பிடி" (ஈ) "மையணி யானை" (உ) "மையணி வேழமும்" (ஊ) "மையணி யுயர் நுத, லிருங்களிற்றியானை" பெருங். (க) சஅ: கஅச, ருரு: கஙச; ருசு: கஙங;(உ) கஉ: ஙஎ; (ங) உஉ: ககக - உ00.(எ)"இழையஞ் சனமால் களிறு" கம்ப. அதிகாயன். உக.

உ. "முக்காழ்" (கலி. அரு: கங) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

ங. "அவ்வாய் தன்,மெய்பெரு மழலையின் விளங்குபூ ணணைத்தர" கலி, அக: க-உ. என்பதும் இந்நூற்பக்கம். சஎக: சு-ஆம் குறிப்பும் பார்க்க.

ச. "செம்பாகம்" குறள். க0கஉ.

ரு. (அ) "நீண்மதி லரணம் பாய்ந்தெனத் தொடிபிளந்து, வைந்நுதி மழுகிய தடங்கோட் டியானை" (ஐங். சசச) (ஆ) "எழூஉப்புறந் தரீஇப் பொன்பிணிப் பலகைக், குழூஉநிலைப் புதவிற் கதவுமெய் காணிற், றேம்பாய் கடாத்தொடு காழ்கை நீவி, வேங்கை வென்ற பொறிகிளர் புகர்நுத, லேந்துகை சுருட்டித் தோட்டி நீவி, மேம்படு வெல்கொடி நுடங்கத், தாங்க லாகா வாங்குநின் களிறே" பதிற். ருங: கரு - உக. என மெய்யாகிய யானையையும் (இ) "கவழ மறியாநின் கைபுனைவேழம்" (கலி. அ0: சு) எனப் பொய்ம்மையானையையும். கூறியிருத்தலும் (ஈ) "கொய்யுஞ் சுவற்பரி யுங்குலப் பாகுமுட் கோலு மில்லா, வையங் கடவு மதகளி றேவருந் தாமலெங்கை, செய்யும் பெருந்தவ 'மேகலந் தாருழைத் தீமையையும், பொய்யுங் கலாதொழி வாய்புன லூரனைப் போலவின்றே" அம்பிகாபதி. ரு0ச. என்பதும் ஈண்டு அறிதற் பாலன.

(பிரதிபேதம்) * காண்மின் றுகின்மேற்.

தேரைவாய்க் கிண்கிணி யார்ப்ப வியலுமென்
போர்(க)யானை (உ)வந்தீக வீங்கு

---

க. (அ) "காதற் சொல் யானையென ஒப்புமை கருதாது காதல் பற்றி வருவது; காதல் பற்றிச் சிறுவனை யானையென்றலும் ஆகுபெயராமன்றோவெனின்;—யாதானுமோ ரியைபுபற்றி ஒன்றன்பெய ரொன்றற்காயது ஆகுபெயராம்; இயைபு கருதாது காதன் முதலாயினவற்றான் யானை யென்றவழி ஆகுபெயருளடங்கா வென்பது. ஒன்றன்பெயர் ஒன்றற்காத லொப்புமையான் ஆகுபெய ரென்பாரு முளர்" என்பர் சேனாவரையர்; (ஆ) நச்சினார்க்கினியர், காதற் சொல் யானை வந்தது என ஒப்பின்றிக் காதல் பற்றி நிற்கும் என்று கூறி, "போர்யானை வந்தீக வீங்கு" என்பதை மேற்கோளும் காட்டுவர்; தொல். கிளவி. சூ. ௫எ. (இ) உயர்திணை அஃறிணையாகி ஒப்புமை கருதாது உவப்பின்கண் திணைமயங்கி வந்ததற்கு, "என்போர் யானை வந்தீக வீங்கு" என்பதை மேற்கோள் காட்டுவர், இ - வி. நூலார்; இ-வி. சூ. உகக. (ஈ) ஒருவனை என் யானை வந்தது என்பது உவப்பினால், திணை மயங்கிற்றென்பர், மயிலைநாதர்; நன். பொது. சூ. உ௮. இவைகளும் (உ) "உயர்ந்ததன் மேற்றே யுள்ளுங் காலை" தொல். உவம. சூ. ௩. என்னுஞ் சூத்திர வுரையில் "உள்ளுங்காலை என்றதனான் முன்னத்தி னுணருங் கிளவியான் உவமங்கோடலும், இழிந்தபொருள் உவமிப்பினும் உயர்ந்த குறிப்புப்படச் செயல்வேண்டுமெனவுங்கொள்க. அவை 'என்யானை' 'என்பாவை' என்றவழி அவை போலும் என்னுங் குறிப்புடையான், பொருள் கூறிற்றிலனாயினும், அவன்குறிப்பினான் அவை வினையுவமையெனவும் மெய்யுவமையெனவும்படும்; இவற்றுக்கு நிலைக்களம்,காதலும் நலனும் வலியு மென்பது சொல்லுதும்; அவைபற்றாது சொல்லுதல் குற்றமாகலின்" என்று காணப்படுங் குறிப்பும் இங்கே அறிதற் பாலன. (ஊ) "மாதர், வருக வென் களிறென்றேத்தி வாங்குபு தழுவிக் கொண்டாள்" சீவக.ககககக. (எ) "இன்றுணை மகளிரோ டொன்றியான் விடுதருஞ், சொல்லொடு படுத்துச் செல்கவென் களிறென" பெருங். (க) ௩௬: ௩௪௬ – எ. (ஏ) "அன்னை, பொருகளிறு வருகவளர் போரேறு வருகவெழிற் பூவை வண்ண, வருகவெனத் துகிரில்வினை மணிமுத்தங் கொண்டனளூண் மகிழ்வு பூத்தாள்"பாக. ௧௦: சகடமுதைத்த. உக. எனவருதலும் காண்க.

உ. (அ)வந்தீக வென்பதனோடு "வினைகலந்து வென்றீக" குறள். ௬௨௬அ. (ஆ) "யார்மேற்றாக் கொள்ளினுங் கொண்டீக" (இ) "என்செய்தே யாயினு முய்ந்தீக" பழ. உ௩க; ௩அச. என்பவை ஒப்புநோக்கற் பாலன.

எ - து: பட்டத்தையுடைய இளையகளிற்றினது கருமை*யுண்டாகின்ற தலையில் நாலுகின்ற மூன்று வடம்போலே கையாற் புனைந்த மூன்று வடம் மென்மையையுடைய தலையிடத்தே தாழ, (க)பொன்னாற் செய்த மழுவோடே வாளம் அணிதலைக்கொண்ட நன்றே விளங்குகின்ற ஒள்ளிய பூணை நனைத் தலைச் செய்யும் அழகிய வாயைக் கண் கலந்த நினை வேட்கைநுகரக் †காட்சி யினிய பவளப் பலகைமேலே(உ)செம்பாதி வடிவு வேற்றோர் யானையை இறக் குத்துகின்ற போர்த்தொழிலைத் தன்னிடத்தே கொண்டு விளங்கும்படியாகப் பொன்னாற் செய்த, காவலையுடைய அரணங்களைக் குத்தாத கையாற் புனைந்த நின் வேழத்தோடே, நின்னடியில் நிறைந்த (ந) தேரையின் வாய்போலும் வாயையுடைய சதங்கை ஆரவாரிப்ப,(ச)தொடியினையுடைய மகளிர் இழைத்த வண்டலின் கண்ணே உழக்கி நடக்கும் என்னுடைய போர்த்தொழிலையுடைய யானை! இவ்விடத்தே வருக. எ - று.

‡ பொலம்புனைவேழமென்க. உழக்கியியலுமென்க.

கக செம்மால், வனப்பெலா நுந்தையை யொப்பினு நுந்தை
நிலைப்பாலு ளொத்த குறியென்வாய்க் கேட்டொத்தி

---

க. இங்கே கூறிய பிள்ளைப்பணி, திருமாலின் ஐம்படைகளின் வடிவ மான தாலியேயன்றி இறைவன் படை வடிவமான தாலிபோலும். "பூண்டவை, எறியாவாளு மெற்று மழுவுஞ், செறியக் கட்டி யீரிடைத் தாழ்ந்த, பெய்புல மூதாய்ப் புகர் நிறத் துகிரின், மையற விளங்கிய வானேற் றவிர்பூண்" கலி. அடி: அ - கக. என முன் வந்திருத்தலும் காண்க.

உ. "சம்பாதி யருச்சிப்பத் தம்பிசடா யுவும்பரவச், செம்பாதி யவள் வணங்கத் திருப்பாத மளித்தனையே" புள்ளிருக்குவேளூர்க்கலம். க.

ந. இது மெய்யுவமம்; வாயென்றது வாயிலொலியைக் குறிப்பதாகக் கொள்ளின் வினையுவமமாம். (அ) "தவளைக் கிண்கிணித் தாமரைச் சீறடி" (ஆ) "தவளைக் கிண்கிணித் தாமம்" சீவக. உசந, நகஉகூ. (இ)"அரிக்குரற் கிண்கிணி யரற்றுஞ் சீறடி".........(ஈ) "அரிப்பொற் கிண்கிணி யார்ப்ப" (உ) "தவளைக் கிண்கிணி ததும்புசீ றடியர்" (ஊ)"தவளையங் கிண்கிணிச் சேவடி" பெருங். (க)சு0: கஅ,சசு: உசசு. (ந) கூ: ககூஎ - அ. (எ) "தவளையங் கிண்கிணித் தாளும்" கூர்ம. கல் யாண. உஅ. (ஏ) "தவளைவாய்ச் சதங்கை" காசி. பஞ்சநதத். ந. (ஐ) "தவளைவாய்ச் செம்பொற் கிண்கிணி" சீகாளத்தி. நான்முக. உசு. என்பவைகளும் இந்நூற்பக்கம் சஎஅ: எ - ஆம் குறிப்பும் இங்கே அறிதற் பாலன.

ச. இந்நூற்பக்கம் கருஅ: உ - ஆம் குறிப்புப்பார்க்க.

(பிரதிபேதம்) *உண்டாகின்ற ஒள்ளியபூணை, †காணும் இனியபவளப் ‡புலம்புனை,

கன்றிய தெவ்வர்க் கடந்து (௧)களங்கொள்ளும்
வென்றிமாட் டொத்தி பெருமமற் றொவ்வாதி
யொன்றினேம் யாமென் றுணர்ந்தாரை நுந்தைபோன்
மென்றோ ளணைகிழ விடல்

எ - து: தலைவா! பெருமா! *நுந்தையை அழகெல்லாம் ஒத்திருப்பினும் நுந்தை நிற்கின்ற நிலைகளின் கூற்றில் உனக்கொத்த குறிக்கப்படுங் குணங்களை யான் கூறக்கேட்டு ஒப்பாய்; அவற்றுள் மாறுபாட்டிற்பட்ட பகைவரை வென்று களத்தைக்கொள்ளும் வெற்றிக்குணத்திடத்து அவனை ஒப்பாய்; மற்றுள்ள குணங்களிலே யாம் இவனோடு ஒருமனமாயினேமென்று உணர்ந்திருந்த மகளிரை நுந்தை மென்றோள் மெலிய விடுமாறுபோல நீயும் அவர் மெல்லியதோள் மெலியும்படி விடுதலாகிய†பரத்தைமையை ஒவ்வாதேகொள். எ - று.

௧௭ (௨)பால்கொள லின்றிப் பகல்போன் ‡முறைக்கொல்காக்
கோல்செம்மை யொத்தி பெருமமற் றொவ்வாதி

---

௧. (அ) "களங்கொள் யானைக் கடுமான் பொறைய" (ஆ) 'அறத்தின் மண்டிய மறப்போர் வேந்தர், தாமாய்ந் தனரே குடைதுளங் கினவே, யுரைசால் சிறப்பின் முரைசொழிந் தனவே, பன்னூ றடுக்கிய வேறு படு பைஞ்ஞில, மிடங்கெட வீண்டிய வியன்கட் பாசறைக், களங் கொளற் குரியோ ரின்றித் தெறுவர, வுடன்வீழ்ந் தன்று லமரே" புறம். ௫௩: ௫; ௬௨: எ - ௧௩.(இ)'அமர்க்கள மரசன தாகத் துறந்து, தவப் பெருங் கோலங் கொண்டோர்' சிலப். ௨௮: ௧௦௪ - ௫. (ஈ) "வென்று களங் கொள்ளுமேல் வேந்து" பெரும்பொருள். (தோல். புறத். சூ. ௫. நச். மேற். (உ) "இருங்களி யானை யினமிரிந் தோடக், கருங்கழலான் கொண்டான் களம்" (ஊ) "வென்று களங் கொண்ட வேல்வேந்தே" பு - வெ. வாகை. ௨௬. பாடாண். ௩௭. (எ) "களங் கோடற் குரியசெருக் கண்ணி யக்கால்" கம்ப. சூர்ப்பணகை. ௩௩. (ஏ) "வென்று வெங்களங்கொண்டு" (ஐ) "இக னெடுங்களம் வென்று கொள்குவம்" (ஒ) "பொரு களங் கொண்டு வாகை புனைந்து" வில்லி. காண்டவதகன. ௫௩. பதின்மூன்றும். ௨௧. பதினைந்தாம். ௧௨. என்பவைகளும் (ஓ)"தேன்மிடைந்த தாரினன் செங்களஞ் சிறந்ததே" (சீவக.௨௭௧) என்புழி, 'இத்துணையும் இவன் வெற்றியாதலின், இவன் களமென்றார்' என்னும் விசேடவுரையும் ஈண்டு அறிதற்பாலன.

௨. "பால்கொள..........ஒவ்வாதி" என்னும் இரண்டடிகளை 'ஒப்புவழி யுவத்தற்கு உதாரணமாகச் சொல்லுப' என்பர் பேராசிரியர்; தொல். மெய்ப். சூ. ௨௨.

(பிரதிபேதம்) * நுந்தை அழகெல்லாம், † பரத்தமை. ‡முறைகோடாக்,

கால்பொரு பூவிற் கவின்வாட நுந்தைபோல்
சால்பாய்ந்தார் சாய விடல்

எ-து: பெருமா!(க)நுகத்துப் பகலாணிபோல் ஒருபக்கத்தைக் கொள்ளுத லின்றி (உ)முறைமைசெய்தற்குச் சாயாத கோல் செவ்விதாக நிகழ்த்துதலில் அவனை ஒப்பாய்; மற்றுள்ள குணங்களில், தன்னுடைய அமைதிக்குணத்தாலே இவன் நம்மைத் தப்பானென்று ஆராய்ந்த மகளிரைக் காற்றுப் பொருகின்ற பூப்போலே அழகுகெடும்படி நுந்தை சாயவிடுமாறுபோலச் சாயவிடுதலாகிய *பரத்தைமையை ஒவ்வாதேகொள். எ - று.

உக (ங)வீத லறியா விழுப்பொரு (ச)ணச்சியார்க்
(ரு)கீதன்மாட் டொத்தி பெருமமற் றெவ்வாதி
(சா)மாதர்மென் னோக்கின் மகளிரை நுந்தைபோ
னோய்கூர நோக்காய் விடல்

எ-து: பெருமா! தன்னையுடையார் கெடுதலன்றித் (எ) தானே கெடுத லறியாத சீரிய பொருளை நச்சினவர்களுக்குக் கொடுத்தலிடத்து அவனை

---

க. (அ) "நெடுநுகத்துப் பகல்போல, நடுவுநின்ற நன்னெஞ்சினோர்" பட். உ0சு - உ0எ; (ஆ) "நுகத்துப் பகலாணி போன்று" பழ. கரு. (இ) "நுகத்திற் பகலனையாய்" தஞ்சை. சஅ.

உ. "ஓர்வுற் றொருதிற மொல்காத நேர்கோ, லறம்புரி நெஞ்சத் தவன்" கலி. சஉ: கச - ரு.

ங. "வீதலறியா...... .....விடல்" என்பது தந்தையரொப்பர் மக்களென்ப தனால் மகப்பழித்து நெருங்கும் தலைவிகூற்றுக்கு மேற்கோள்; தொல். கற்பி. சூ. சா. இளம்.

ச. "நச்சியார்க் கீதலும்" கார். எ.

ரு. "ஈதன்மாட் டொத்தி,பெரும" என்பது இகரவீறு தகரத்தை யூர்ந்து எதிர்காலம்பற்றிவருமென்பதற்கும் (தொல். வினையியல். சூ. உசா. நச்; இ - வி. சூ. உஙஅ) தகரம் சிறுபான்மை எதிர்காலம் காட்டி வருமென்பதற்கும். (இ - வி. சூ. சக) மேற்கோள். ககர தகரங்களை ஊர்ந்துவரும் இகரம் ஏவல்கண்ணியே நிற்குமென்பர்; நச்.

சா. (அ) "மாதர்கொண் மானோக்கின் மடநல்லாய்" (ஆ) "மாதர்கொண் மானோக்கின் மடந்தை" கலி. ருசா: கஎ; சாக; ச.

எ. (அ) "வெள்ள மறவி விறல்வேந்தர் தீத்தாயங், கள்ளரென் றிவ்வாறிற் கைகரப்பத் தீர்ந்தகலும்" செல்வப்பொருளை, வீதலறியா விழுப்பொரு ளென்றதற்கு நச்சினார்க்கினியர் எழுதியிருக்கும் உரை பாராட்டத் தக்கது. (ஆ) "கேடில் விழுப்பொரு டருமார்" குறுந். உகசா.

(பிரதிபேதம்) * பரத்தமை.

ஒப்பாய்; மற்றைக் குணங்களில், காதலையுடைய மெல்லிய நோக்கினையுடைய மகளிரை நுந்தை நோய் கூரா நிற்க நோக்காது விடுமாறுபோல நீயும் அவர்களை நோய்மிகாநிற்கப் பாராது விடுதலாகிய பரத்தைமையை ஒவ்வாதே கொள். எ - று.

(க) *ஆங்க, அசை.

---

என்பது ஒப்புநோக்கற்பாலது. (இ) இலக்கணக் கொத்து நூலாரால் அந்நூலின் அ-ஆம் சூத்திரத்து 'அரும்பொருள்' என்பதன் விசேடவுரையில், "பொருளென்னும் பெயர் பொதுவாயினும், கல்விப் பொருளினை மாத்திரம் அங்ஙனங் கூறாது, நற்பொருள், பெரும் பொருள், அரும்பொருள், குறையாப்பொருள், துணைப்பொருள், நீங்காப்பொருள், கேடில்பொருள், விளக்கும்பொருள், விழுமிய பொருண் முதலாக யாதானு மோரடை கொடுத்தே கூறுவர்; 'கேடில் விழுச் செல்வங் கல்வி' எனச் சிறப்பான்மை பலவுடையும் கொடுத்துக்கூறுவர். அக்கருத்துப் பண்டை நூல்களெல்லா வற்றினுள்ளுங்காண்க. அந்நியமம் மறந்துந் தப் பார்களென்பது தோன்ற அரும்பொருள் பெறுகவென்றும். கலித்தொகையின் ஓர் காரண நோக்கி நிதிப் பொருளைக் கேடில் விழுச் செல்வமென்றார். இவ்வடை கல்விக் குரித்தன்றிப் பிறவற்றிற்கு மூரித்தோ வென்பாரை நோக்கி, வழுவமைத்தார் நச்சினார்க்கினியர்" என்று எழுதப்பெற்றிருப்பது இங்கே ஆராய்தற்பாலது.

க. "ஆங்கத் திறனல்ல............பெற்ற மகன்" என்பதை ஆங்கென்பது அசைநிலையாய் வருதற்கு (நன். இடை. சூ.கஅ) மேற்கோள்காட்டினர், மயிலைநாதர்; ஆங்கு என்னு மசைநிலை 'ஆங்க' என இறுதி விகாரமாய் நின்றதென்று பொருத்தினர் விருத்தியுரைகாரர். "அந்திலாஅங் கசைநிலைக் கிளவியென், றாயிரண் டாகு மியற்கைத் தென்ப" என அந்தில் என்பது ஆங்கு என்னும் இடப்பொருளும் அசைநிலையுமா மென்றதை இவர் அந்திலும் ஆங்கும் இடப்பொருளும் அசைநிலையுமாமெனச் சூத்திரஞ்செய்தார். அது ஆசிரியர் கருத்தன்றென்பதை அவர் சூத்திரத்தாலும் ஆங்கு என்பது இடச்சுட்டுப் பெயர்ச் சொல்லாதலாலும் (அறிக) ஆங்கு அசைநிலை யெனக் கூறி ஆங்க என உதாரணங் காட்டிய[தினுலு](தும்) பொருந்தா தென்க. இனி ஆங்க என்னும்அகரவீற்றிடைச்சொல் அசைநிலையெனக்கொளின் அமையும். என்னெனின் 'ஆங்கவுரையசை' எனக் கூறியதினுலும் 'ஆங்கக்குயிலு மயிலுங்காட்டி' எனவும். 'ஆங்கத் திறனல்ல யாங் கழற' எனவும், பயின்று வருதலாலு மென்க" என்று மறுத்துரைப்பர் இராமாநுச கவிராயர்; இலக்கண விளக்க நூலாரும் இக்கருத்துடையரென்பது இ - வி. உஎஙு - ஆம் சூத்திரத்தால் விளங்கும்.

(பிரதிபேதம்) * ஆங்கசை.

உச (க)திறனல்ல யாங்கழற யாரை நகுமிம்
(உ) மகனல்லான் பெற்ற மகன்

எ - து: பின்வந்துநின்ற தலைவனைக்கண்டு நக்கபுதல்வனைநோக்கி, இந்த நன்குமதிக்கும் மகனல்லாதவன் பெற்ற மகன் நற்குணங்களல்லாதவற்றை *நீ ஒவ்வாதே கொள்ளென்று யாம் கோபிக்க யாரைநோக்கி நகும். எ - று.

† என்று கருதிப் பார்த்துப் பின்னின்ற தலைவனைக் கண்டாள்.

உஅ மறைநின்று, தாமன்ற வந்தீத் தனர்

எ - து: கண்டு, வாராத தாம் பின்னே மறையநின்று பின்னர் நாம் தெளியும்படி முன்னே வந்தா ‡ரென்றாள். எ - று.

உகூ ||ஆயிழாய், தாவாத வெற்குத் தவறுண்டோ காவாதீங்
கீத்தை யிவனையாங் கோடற்குச் (ங)சீத்தையாங்
கன்றி யதனைக் கடியவுங் கைநீவிக்
குன்ற (ச)விறுவரைக் கோண்மா விவர்ந்தாங்குத்
தந்தை வியன்மார்பிற் பாய்ந்தா ÷னறனில்லா
வன்பிலி பெற்ற மகன்.

எ - து: அதுகேட்ட தலைவன், இங்ஙனங் கொடுமைகூறுகின்றாயாயின் அழகிய இழையினையுடையாய்! நின்னிடத்துச் செய்வதோர் வருத்தம் இல்லாத எனக்கும் ஒரு தப்புண்டோ? இவனை யாம் எடுத்துக்கொள்ளுதற்கு நின்னிடத்தே காத்துக்கொள்ளாதே என்னிடத்தே தருவாயென்றான்; அதுகேட்ட புதல்வன் அவன்மேலே வீழ்ந்தவனைத் தலைவி நோக்கிக் கைவிடப்பட்டவனாகிய அன்பிலி பெற்ற பிள்ளை யாம் அவன்மேலே வீழ்தலை மனங்கன்றி விலக்கவும் ×நம்மைக் கைகடந்து மலையிடத்து உறுகின்ற அடி

க. "திறனல்ல...............மகனல்லான் பெற்ற மகன்" என்பது தன் இளமை பொருளாகப்பிறந்த நகைக்கும், (தொல். மெய்ப். சூ. ச. பேர்.) பிரிவின்பாற் படுவதாகிய ஊடலிற் பிறந்த துனிக்கும் (தொல். செய். சூ. கஅஎ. பேர்; நச்) மேற்கோள்.

உ. "மகனல்லான் பெற்ற மகன்" கலி. அச: கங.

ங. "சீத்தை" கலி. கூச: உஉ.

ச. "இறுவரை யிவர்வதோ ரிலங்கெயிற் றரியென" சீவக. கஅஙங. இறுவரை - பெரியமலை. சீவக. கசசுங, கஅஙங, உ௫உஉ; பக்கமலை. கலி. சங: கங.

(பிரதிபேதம் * நீ கொள்ளாதேகொள்ளென்று, † எனக்கருதிப் பின்னின்றதனை, ‡ என்றாள் ஆயிழாய். || ஆயிழையிழாய், ÷ அறனிலா, × நம்மைமக்கடந்து.

வரையிலே சிங்கம் பாய்ந்தாற்போல அறனில்லாத தந்தையுடைய அகன்ற மார்பிலே * பாய்ந்தானென்றாள். எ - று.

இது மகப்பழித்துநெருங்கியது. அன்பிலி பெற்ற மகனென (க)அவன் வயிற் † பிரித்தவாறுங் காண்க. அறனில்லாவென்றது, ஆங்கு நெஞ்சழிதல்.

இதனால், இருவர்க்கும் புணர்ச்சியுவகை பிறந்தது.

இஃது ஆங்கவெனத் தனிச்சொற்பெற்று ஐஞ்சீரடுக்கி வந்த கலி வெண்பா. (உக)

(அள.) ஒரூஉநீ யெங்கூந்தல் கொள்ளல்யா நின்னை
வெரூஉதுங் காணுங் கடை;

ரு தெரியிழாய், செய்தவ றில்வழி யாங்குச் சினவுவாய்
மெய்பிரிந் தன்னவர் மாட்டு;

ரு ஏடா, நினக்குத் தவறுண்டோ நீவீடு பெற்று
யிமைப்பி னிதழ்மறை பாங்கே கெடுதி
நிலைப்பா லறியினு நின்னொடு நின்னைப்
புலப்பா ருடையர் தவறு;

கூ அணைத்தோளாய், தீயாரைப்போலத் திறனின் றுடற்றுதி
காயுந் தவறிலேன் யான்;

கக மானோக்கி நீயழ நீத்தவ னானது
நாணில னாயி னலிதந் தவன்வயி
னூடுத லென்னோ வினி;

கச இனியாது மீக்கூற்றம் யாமில மென்னுந்
தகையது காண்டைப்பாய் நெஞ்சே பனியானாப்
பாடில்கண் பாயல் கொள.

இது பரத்தையர்சேரிச் சென்றமை அறிந்திலளெனத் தலைவிமாட்டுச் சென்றவனோடு அவள் ஊடி உறழ்ந்துகூறித் தோழி வாயிலாக ஊடறீர்வாள் தன் னெஞ்சோடு கூறியது.

இதன் பொருள்.

---

தலைவி தன்னொடு மைந்தனிடை உறவுநீக்கி, அவனைத் தலைவனொடு சார்த்திக் கூறுதலாகிற அவன்வயிற் பிரிப்பு என்பதற்கு "மறைநின்று ...........மகன்" என்னும் பகுதியை மேற்கோள்காட்டி, "அறனில்லா வன்பிலி பெற்ற மகனெனப் பிரித்தவாறு காண்க" என்பர் நச்சினார்க்கினியர்; தொல். கற்பி. சூ. கூ.

(பிரதிபேதம்) * பாய்ந்தானெனமகப்பழித்துநெருங்கியவாறும் அன்பிலி. † பிரிந்தவாறுங்.

(க)ஒரூஉநீ யெங்கூந்தல் கொள்ளல்*யா நின்னை
வெரூஉதுங் காணுங் கடை

எ - து: † யாம் நின்னைக் காணுமிடத்து வெருவுவேம்; ஆதலால் எங் கூந்தலைத் தீண்டாதேகொள்; நீ நீங்கென்ருள் தலைவி. எ - று.

இது வெருவவேண்டாப் பொருட்கட் கடிதிற் பிறந்ததோர் வெறியாதலின், (உ)வெருவுதலென்னும் மெய்ப்பாடு.

௩ தெரியிழாய், செய்தவ றில்வழி யாங்குச் சினவுவாய்
மெய்பிரிந் தன்னவர் மாட்டு

எ - து: அதுகேட்ட தலைவன், தெரிந்த இழையினையுடையாய்! அத் தன்மையாகிய பரத்தையர்மாட்டு உண்மையாகப் பிரிந்து யான் செய்த தவறில்லாத இடத்து நீ எங்ஙனஞ் சினப்பாயென்ருன். எ - று.

அன்னவரென்றது, நீ புலக்குந் தன்மையுடையவரென்றது.

---

க. (அ) தலைவன் முன் தலைவி தன்னைப் புகழ்தல், தலைவன் பரத்தையிற் பிரிந்து வந்தவழி இரத்தலும் தெளித்தலுமாகிய ஈரிடத்து மட்டுமுண்டென்று கூறி, 'ஒரூஉநீ..............காணுங் கடை' என்பதை முதலாவதற்கு மேற்கோள் காட்டி, 'இதில் தன்னை உயர்த்துக் கூறுதலாற் புகழ்ந்தாளாம்; நின்னை வெருவாதார் பிறருளரென்னு முள்ளக்கருத்தினல்' என்றும், தொல். கற்பியல். சூ. ௩௫. 'தற்புகழ் கிளவி' (ஆ) "பரத்தைவாயி னல்வர்க்கு முரித்தே" (தொல். பொருளி. சூ. உக.) என்பதன் விசேடவுரையில், 'நால்வர்க்கு மென்றமையால், நான்கு வருணத்துப் பெண் பாலாரும் அவரோடு ஊடப்பெறுப' என்றுகூறி, இப்பகுதியை (பார்ப்பனியும் அரசியுமொழிந்த) 'ஏனைய வருணத்தார் கூற்று' என்றும் கூறுவர் இளம்பூரணர். (இ) "யாரிவ னெங்கூந்தல் கொள்வா னிதுவுமோ, ரூராண்மைக் கொத்த படிறுடைத்து" கலி. அக: க - உ. (ஈ) "தோடேந்து பூங்கோதை வேண்டேங் கூந்த ஞெடேல்" சீவக. கஉஉக.) என்பவையும் (உ) "கலிமயிற் கலாவத் தன்னவிவ, ளொலிமென் கூந்த லுரியவா நினக்கே" நறுந். உஉ௫. என்பதும் (ஊ) "நாறிருங் கூந்தற் கிழவரைப் படர்ந்தே" (புறம். கக௩: க) என்னு மூலமும் 'மணங்கமழும் கரிய கூந்தலைத் தீண்டுதற் குரியவரை நினைந்து' என்னும் அதனுரையும் ஒப்புநோக்கற்பாலன.

'வெரூஉதலென்பது அச்சம்போல நீடுநில்லாது கதுமெனத் தோன்றி மாய்வதொரு குறிப்பு; அதனைத் துணுக்கென்றலுமாம்' என்று கூறி, அதற்கு, "ஒரூஉநீ...........கடை" என்னும் பகுதியை மேற்கோள் காட்டி, 'இதில்அஞ்சத்தகுவது கண்டஞ்சுதலின்மையும் அஞ்சினுர்க்கு உள்ள வேறுபாடு அதன் பின்னிகழாமையுங் காண்க' என்றும்கூறுவர்.

(பிரதிபேதம்) * யானின்னை, † யானின்னை.

இஃது (க) ஊடல்பற்றிய வெகுளியென்னும் மெய்ப்பாடு.

இனி (உ) ஒருயிராயிருக்க உடம்பிரண்டாயிருப்பாயென்றால், தன்னைப் பிறன்போற் கூறிற்றாகாது; பன்மையாய் நிற்றலின்.

ரு ஏடா, நினக்குத் தவறுண்டோ நீவீடு பெற்று
யிமைப்பி னிதழ்மறை பாங்கே கெடுதி
நிலைப்பா லறியினு நின்னொந்து நின்னைப்
புலப்பா ருடையர் தவறு

எ - து: ஏடா! நின் கண்ணை மறைத்த இமைக்குள்ளே மறைந்த பொழுதே தோன்றாமற் போதி; ஆதலால், நீ கைவிடுதலைப் பெற்றாய்; அந் நிலைமைப் பகுதியை அறிந்திருப்பினும் அறியாதாரைப்போலே நின்னை நொந்து நின்னைப் புலக்கின்றவர் தவறுடையர்; நினக்கு ஒரு தவறு உண்டோ வென்றாள். எ - று.

கூ அணைத்தோளாய், தீயாரைப் போல * திறனின் றுடற்றுதி
காயுந் தவறிலேன் யான்

எ - து: அதுகேட்ட தலைவன், (௩) அணைபோலுந் தோளினையுடையாய்! தீய மக்களை உடற்றுமாறுபோல ஒரு தீய திறனின்றாகவும் உடற்றாநின்றாய்; யான் நீ காய்கைக்குக் காரணமாவதோர் தவறுடையேனல்லே னென்றான். எ - று.

---

இளம்பூரணரும்; தொல். மெய்ப். சூ. கஉ. 'ஆங்கவை, ஒருபால்' (ஆ) இதனை அச்சத்திற்கு மேற்கோள் காட்டி, தலைவனைக் கள்வன்பாற் சார்த்தி உரைத்தமையின் கள்வர் பொருளாக அச்சம் பிறந்த தென்பர் பேராசிரியரும், இ-வி. நூலாரும்; தொல். மெய்ப். சூ. கூ. இ-வி. சூ. ருஎஅ.

க. ஊடற்கண் தலைமகள்வெகுட்சி கூறியதற்கு, "செய்தவ றில்வழி யாங்குச் சினவுவாய்" என்பது மேற்கோள்; தொல். மெய்ப். சூ. க0. பேர்.

உ. (அ) "காகத் திருகண்ணிற் கொன்றே மணிகலந் தர்ங்கிருவ, ராகத்து ளோருயிர் கண்டனம்யாம்" (ஆ) "ஆனந்த வெள்ளத் தழுந்துமொ ரா ருயி ரீருருக்கொண், டானந்த வெள்ளத் திடைத்திளைத்தாலொக்கும்" கோவையார். எக, ௩0எ. (இ) "பாவைநீ புலவியி னீடல் பாவியேற், காவியொன் றிரண்டுடம் பல்லது" சீவக. க0கஎ. (ஈ) "காவிபோற் கண்ணிக்குங் கண்ணியந்தோட் காளைக்கு, மாவிபோ லாடையு மொன் றனதே" நள. கலிதொடர். அச. (உ) "மருங்கிலா நங்கையும் வசையி லையனு, மொருங்கிய விரண்டுடற் குயிரொன் றாயினர்" கம்ப. மிதிலைக். ௩அ. என்பவை ஈண்டு அறிதற்பாலன.

௩. இந்நூற்பக்கம் ௩உஉ: ச; ௩ச௩: ச; ச00: ச-ஆம் குறிப்புப் பார்க்க.

(பிரதிபேதம்) * திறனன் றுடற்றுதி.

கக மாஞேக்கி நீயழ நீத்தவ ளுஅது
நாணில னாயி னலிதந் தவன்வயி
*ஞூடுத லென்ஞே வினி

எ - து: அதுகேட்ட தோழி, மான்போலும் நோக்கினையுடையாய்! நீ அழும்படி நின்னைக் கைவிட்டவன் †பரத்தைமையில் அமையாமல் நாணமற்றிருப்பனாயின், மேல் அவனிடத்தே நவிதலைக்கொடுத்து ஊடுகின்றதன்மை என்னபயன் தருமோவென்றாள். எ - று.

இஃது "உறுதகை யில்லாப் புலவியுண் மூழ்கிய, கிழவோள் பானின்று கெடுத்தற்கண்" (க) தோழி கூறியது.

கச இனியாது மீக்கூற்றம் ‡யாமில மென்னுந்
தகையது காண்டைப்பாய் நெஞ்சே பனியானாப்
பாடில்கண் பாயல் கொள

எ - து: அதுகேட்ட தலைவி, நெஞ்சே! நீர்விழுதல் அமையாத, துயிலுதலில்லாத கண் துயில்கொள்ளும்படியாக நாம் இனிச் சிறிதும் மேலாகக் கூறும் கூற்றையுடையேமல்லே மென்று இவள்கூறுந் தகைமையினையுடைய கூற்றினைக் காரியமென்று நினைத்துப் பார்ப்பாயென நெஞ்சொடு ||கூறி ஊடறீர்ந்தாள். எ - று.

இதனால், ÷தலைவர்க்கும் தலைவிக்கும் உணர்வென்னும் உவகை பிறந்தது.

இது (உ)தரவும்போக்குமின்றி ஐஞ்சீரடுக்கி வந்த உறழ்கலி. (௨௨)

(அஅ.) ஒருஉக், கொடியிய னல்லார் குரனாற்றத் துற்ற
முடியுதிர் பூந்தாது மொய்ம்பின வாகத்
தொடிய வெமக்குநீ யாரை பெரியார்க்
கடியரோ வாற்றா தவர்;

---

க. தொல். கற். சூ. கூ. இச்சூத்திரப்பகுதிக்கு, இவர், 'தலைவன் சென்று சேரும் தகைமை இல்லாமைக்குக் காரணமாகிய புலவியின்கண் அழுந்திய தலைவி பக்கத்தாளாய்நின்று அவள் புலவியைத் தீர்த்தற்கண் (தோழிகூற்றுநிகழும்)'என்று பொருள்கூறி அங்கும், "மாஞேக்கி .........இனி" என்பதை மேற்கோள் காட்டியிருக்கிறார். இஃது இளம்பூரணர் கருத்தைத் தழுவியதே.

உ. இச்செய்யுளை, தரவும் போக்குமின்றி ஐஞ்சீரடுக்கி வந்த உறழ்கலிக்கு மேற்கோள் காட்டினர் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும்; தொல். செய். சூ. கருசு.

(பிரதிபேதம்) * ஊடுவதென்னே. † பரத்தமையில், ‡ நாமிலமென்றகையது, || கூடியூட, ÷ தலைவனும் தலைவியும் உணர்வென்னும் உவகையைப்பெற்றார்.

௫ கடியர்தமக், கியார்சொல்லத் தக்கார் மாற்று;

௬ வினைக்கெட்டு, வாயல்லா வெண்மை யுரையாது கூறுநின்
மாய மருள்வா ரகத்து;

௮ ஆயிழாய், நின்கண் பெறினல்லா லின்னுயிர் வாழ்கல்லா
வென்க ணெவனோ தவறு;

௧௦ இஃதொத்தன், புள்ளிக் களவன் புனல்சேர் பொதுக்கம்போல்
வள்ளுகிர் போழ்ந்தனவும் வாளெயி றூற்றனவு
மொள்ளிதழ் சோர்ந்தநின் கண்ணியு நல்லார்
சிரறுபு சீறச் சிவந்தநின் மார்புந்
தவறுதல் சாலாவோ கூறு;

௧௫ அதுதக்கது, வேற்றுமை யென்கண்ணோ வோராதி தீதின்மை
தேற்றக்கண் டியாய் தெளிக்கு;

௧௭ இனித் தேற்றேம்யாம்;

௧௮ தேர்மயங்கி வந்த தெரிகோதை யந்நல்லார்
தார்மயங்கி வந்த தவறஞ்சிப் போர்மயங்கி
நீயுறும் பொய்ச்சூ ளணங்காகின் மற்றினி
யார்மேல் விளியுமோ கூறு.

இஃது அவ்வாற்றுப் புக்க தலைவனுடன் ஊடியும் உறழ்ந்துஞ்சொல்லிப் பொய்ச்சூளஞ்சி ஊடறீர்ந்தது.

இதன் பொருள்.

(௧)ஒரூஉக், (௨)கொடியிய னல்லார் குரலூழ்த்த துற்ற
முடியுதிர் பூந்தாது மொய்ம்பின வாகத்

---

௧. கற்புக் காலத்துத் தலைமகள் புலவிக்கண் அவளுயர்வும் தலைமகன் றாழ்வு முரியவென்பதற்கு, 'ஒரூஉக் கொடியிய னல்லார்.........தவறு' என்றபகுதிகளை மேற்கோள் காட்டி, 'இதனுள் தலைமகன் பணிவும் தலைவியுயர்வுங் காண்க; இஃதீண்டுக் கூறியது தென்னை? காமக் கடப்பினுட்பணிந்த கிளவி யென மேற் கூறப்பட்ட தாலெனின், ஆண்டுக் கூறியது ஊடல் புலவி துனிஎன்னு மூன்றிற்கும்பொதுப்படநிற்றலின் இது புலவிக்கே யுரித்தென்னுஞ் சிறப்பு நோக்கிக் கூறியவாறு' என்பர். இளம்பூரணர்; தொல். பொருளி. சூ. ௩௪. 'மனைவி யுயர்வும்'

௨. "ஏதிலாண் முச்சி, யுதிர்துக ளுக்கநின் னுடை யொலிப்ப,வெதிர்வளி நின்றாய்நீ செல்" கலி. அ௧: ௩௦ - ௩௨.

*தொடிய வெமக்கு(க)நீ யாரை (உ)†பெரியார்க்
கடியரோ வாற்ரு தவர்

‡எ - து: கொடியினதியல்பையுடைய பரத்தையருடைய புழுகுமுதலிய வற்றிலே அளைந்த மயிர்முடியினின்றும் உதிர்ந்த பூந்தாதுகள் நின் தோட் கட்டிலே கிடவாநிற்க, எம்மை நீ தீண்டுதற்கு எமக்கு நீ யாராந் தன்மையை யுடையை? எம்மைவிட்டு நீ நீங்குவாயாக; பிரிவாற்ருதவர் பிரியவல்ல பெரியோர்க்கு அடியரோ? அன்றே ||யென்ருள். எ - று.

குரல் - மயிர். நாற்றம், ஆகுபெயர்.

இது "சினனே பேதைமை நிம்பிரி நல்குர, வனைநால் வகையுஞ் சிறப்பொடு வருமே" (ங) என்பதனுல்,'தொடிய வெமக்குநீயாரை'எனச்சினம் பற்றி வரினும் அது தன் காதலைச்சிறப்பித்தலின் அமைந்தது.

---

க. (அ) "நம்பிநீ யாரை யென்ருன்" (ஆ) "ஐயநீ யாரை யென்ருற்கு" சீவக. கூடுச, கஎகஅ. (இ) "அய்யநீ யாரை" கம்ப. நாகபாச. உகூஎ. என்பவையும் "யாரைநீ யெம்மில் புகுதர்வாய்" கலி. கூஅ: க; என்ப தும் அதன் குறிப்பும் இங்கே அறிதற்பாலன.

உ. "பரத்தை வாயி ஞல்வர்க்குமுரித்தே" என்பதற்கு, பரத்தையர் மாட்டு வாயில் விடுதல் நான்கு வருணத்தார் (ஆடவர்) க்கும் உரித்தென்று முதலிற் பொருள் கூறிப் பின் நான்கு வருணத்துப் பெண்பாலாரும் அவரோடு ஊடப்பெறுப்வென்றுமாம் என்றுகூறி, "பெரியார்க் கடி யரோ வாற்ருதவர்" என்பதைப் * பார்ப்பனி கூற்றுக்கு (* அரசிகூற் றென்றும் பிரதிபேதம்) மேற்கோள் காட்டுவர், இளம்; தொல். பொருளி. சூ. உஅ.

ங. தொல். பொருளியல். சூ. நிக. (அ) இச்சூத்திரத்தின் இவருரை யிலும் இப்பகுதி இக்குறிப்போடு இச்செய்திக்கு மேற்கோள். (ஆ) இளம்பூரணர் இச்சூத்திரத்திற்கு,"மெய்ப்பாட்டியலுள் (சிலகுணங்கள்) நடுவு ணைந்திணைக்குரிய தலைமக்கட் காகாவென எடுத்தோதுகின்ற ராகலின் அவற்றுள் ஒரு சாரன ஒரோவிடத்து வருமென்பதுணர்த் திற்று; இச்சூத்திரம் எதிரதுநோக்கிற்று; சினமுதலியநான்கும்யாதானு மொருபொருளைச் சிறப்பித்தல் காரணமாக வரும்" என்று உரை வகுத்து, "கொடி யிய னல்லார்.........ஆற்ரு தவர்" என்ற பகுதியை முதலாவதற்கு மேற்கோள்காட்டி,இதனுள் தொடிய வெமக்கு நீயாரை யென்பது சினம்பற்றிவரினும் காமக்குறிப்பினுற் புணர்ந்த தலைமகள் கூறுதலின் அவள் காதலைச் சிறப்பிக்க வந்த தென்றனர்; தொல். பொருளி. சூ. ௫க.

(பிரதிபேதம்) * தொடீஇய. † பெரியோர்க்கு, ‡ எ - து: குரல் - மயிர்...........பெயர் கொடியினியல்பை, ||என்ருள் கடியதமக்கினியார் சொலத்தக்காமற்று,

ரு (க)கடியர்தமக், கியார்சொல்லத் தக்கார் மாற்று

எ - து: அதுகேட்டுக் கடியராயிருப்பார்தமக்கு மாற்றஞ்சொல்லத் தக்கவர் யாவரென்றான். எ - று.

கூ *வினைக்கெட்டு, (௨)வாயல்லா வெண்மை யுரையாது †கூறுநின் மாய மருள்வா ரகத்து

எ - து: அதுகேட்டு நீ போகின்றதொழிலைத் ‡தவிர்த்துநின்று உண்மையல்லாத வெண்மைகளைச் சொல்லாதே நின் பொய்ம்மைகளை மெய்யென்று மயங்குவாரிடத்தே ||சொல்லென்றாள். எ - று.

'வினைக்கேட்டு' பாடமாயின் வினைக்கேடாகிய வாயல்லாவென்க. உரையாதியும் பாடம். வெண்மை, பண்புப்பெயர்.

அ ஆயிழாய், நின்(௩)கண் பெறினல்லா லின்னுயிர் வாழ்கல்லா வென்க ணெவனோ தவறு

எ - து: அதுகேட்ட தலைவன், ஆராய்ந்த இழையினையுடையாய்! நின்னுடைய ÷ கண்ணினில் (௪) அருளோக்கினைப் பெறிலன்றி இனிய உயிர் வாழமாட்டாத என்னிடத்துத் தப்பு யாதுதானென்றான். எ - று.

"காமக் கடப்பினுட் பணிந்த கிளவி, காணுங், காலைக் ╪கிழவோற் குரித்தே"(ரு)என்பதனால், தலைவன் பணிந்து கூறினான்.

---

க. "கடியர் தமக்கு..............மாற்று" என்பது உரைவகைநடை நான்கனுள், பாட்டிடை வைத்த குறிப்பிற்கு மேற்கோள்; தொல். செய். சூ. கசுரு. 'பாட்டிடை' இளம்.

௨. பெருந்திணைக்குரிய மெய்ப்பாடுகளுள் தலைவன்கூற்றைத் தலைவி பொய்யாக் கோடற்கு, "வாயல்லா வெண்மை..................ரகத்து" என்பது மேற்கோள்; தொல். மெய்ப். சூ. ௨௨. 'இன்பத்தை' இளம்.

௩. கண்ணென்பது அருளென்னும் பொருளில் வருதலை, "கண்மாறி விடின்" கலி. ௬க: ௨௪; என்பதனாலும் அதன்குறிப்பாலும் அறிக.

௪. "நின், னருளோக்க மழியினு மவலங்கொண் டழிபவள்" கலி. க௦: கஅ - கக.

ரு. தொல். கற்பி. சூ. கக. (அ)இச்சூத்திரத்தின் இவருரையிலும் தலைவன் தலைவி மாட்டுக் காமங் கையிகந்துழித் தாழ்ந்து கூறியதற்கு, "கடியர் தமக், கியார்சொல்லத் தக்கார்மாற்று" என்பதும் "ஆயிழாய், நின்கண் ..............தவறு" என்பதும் மேற்கோள். (ஆ) இளம்பூரணரும், "பெரியார்க், கடியரோ'வாற்றாதவரெனத் தலைவி கூறியவழி, 'கடியர்

(பிரதிபேதம்) * வினைகெட்டு, † சென்றீநின், ‡ தவிர்த்துநின்று. ||செல்லென்றாள், ÷ கண்ணில் வருளோக்கினைப், ╪கிழவோர்க்கு.

௧௦ (க)இஃதொத்தன்,(உ)புள்ளிக்(ங)களவன் புனல்சேர்பொதுக்கம் [போல்
(ச)வள்ளுகிர் போழ்ந்தனவும் வாளெயி றுற்றனவு
மொள்ளிதழ் சோர்ந்தநின் கண்ணியு (ரு)நல்லார்
சிரறுபு சீறச் சிவந்தநின் மார்புந்
தவறுதல் *சாலாவோ கூறு

எ - து: அதுகேட்ட தலைவி இவனொருத்தனென நெஞ்சொடு வியந்து கூறி, பின்னர், புள்ளியையுடைய (சு) நண்டுகளின் நடையாலுண்டான வடு நீரருகைச் சேர்ந்து கிடந்தாற்போலப் பெரிய உகிராற் பிளந்த வடுக்களும் ஒளியையுடைய எயிறு அழுந்தின வடுக்களும் ஒள்ளிய இதழ்கள் வாடின நின் கண்ணியும் பரத்தையர் நின்னோடு வேறுகிக் கோபித்து அடிக்கச் சிவந்த நின்னுடைய மார்பும் தப்பாதலுக்கு அமையாவோ? அமையாவாயிற் கூறு என்றாள். எ - று.

சேர்பென்னும் எச்சத்திற்கு வினை வருவித்து முடிக்க. ஒதுக்கமென்னுந் தொழிற்பெயர் ஆகுபெயர். "சிரறுசே லாடிய நீர் வாய்ப்பதத்த"(எ)என்றாற்

---

தமக், கியார்சொல்லத் தக்கார் மாற்று' எனத் தலைவன்பணிந்து கூறியது காண்க" என்பர்; தொல். கற்பி. சூ. கஎ. 'காமக்கடப்பின்'.

க. இந்நூற்பக்கம் ௩அகூ: ௩ - ஆம் குறிப்புப்பார்க்க.

உ. (அ)பொறியலவன் (சிலப்.எ: ௩க. முதற்பதிப்பு) என்பதற்கு, 'புள்ளிக் கள்வன்' என்பது மேற்கோள்; (ஆ) "புள்ளிக்கள்வன்" ஐங். உக, உஉ, உச.

௩. (அ) "களவன் மண்ணளைச் செறிய வகல்வயற், கிளைவிரி கரும்பின் கணைக்கால் வான்பூ" அகம். உ௩௫: கக - கஉ. (ஆ) "அலவ னள்ளி குளிர்ஞெண் டார்மதி, களவ னென்றிவை கற்கடகப் பெயரே" சேந்தன் றிவாகரம். (இ) "களவன் குளிர்ஞெண்டு கற்கடம்" உரிச்சொனிகண்டு. க௦. என்பவற்றால் நண்டிற்குக் களவனென்னும் பெயரும் பயின்று வருதலறிக.

ச. கலி. கூஎ: கச - கரு; அடியும், எஉ: கக - கஉ; அடியும், குறிப்பும் பார்க்க.

ரு. "ஊடிக், கொதித்து மேற்றிசை யணங்கலத் தகப்பதங் கொடுமே, லுதைத்த தாமெனச் சிவந்தது வெய்யவ னுடலம்" நைடத. மாலை. உக.

சு. "செய்ச்சேத கத்திற் குளிர்நடந் தாங்குச் செறிந்த வடு, மெய்ச்சே யிழைக்கொடி யன்னார் கடைத்தலை மேயினதால்." திருவேங்கைக் கோவை. ௩அக.

எ. "சிரறுசில வூறிய நீர்வாய்ப் பத்தல்" என்பது பதிற். உஉ: க௩.

(பிரதிபேதம்) * சாலாதோ.

போல, சிரறுதல் சிதறுதன்மேல் நின்றது. "வேட்கை மறுத்துக் கிளந்தாங் *குரைத்தன், மரீஇய மருங்கி னுரித்தென மொழிப" (க)என்பதனுள், "ஒன் றெனமுடித்தலென்பதனான் மரீஇயவாறு ஏனையவற்றிற்கும் கொள்க" என்ற லின், இழிந்தோர் கூற்றை உயர்ந்தோர் கூறுவனவும் அமைத்தாம். அதனான் வள்ளுகிர் போழ்ந்தன முதலியன கொள்க.

௧௫ அதுதக்கது, வேற்றுமை யென்கண்ணோ வோராதி தீதின்மை
தேற்றக்கண் டியாய் தெளிக்கு

எ - து: நீ கூறுகின்ற மெய்வேறுபாட்டையோ என்னிடத்துண்டாக ஓராதேகொள்; அங்ஙனம் ஓராதிருத்தல் நினக்குத்தக்கது; அதற்குக் காரண மென்னெனில் அத்தீது என்கண் இல்லாமையை யான் நினக்குத் தெளிவிக்க நீ காணாய்; யான் இனித்தெளிவிப்பேனென்றான். எ - று.

௧௭ இனித் தேற்றேம்யாம்

எ - து: இக்கற்புக்காலத்து நீ சூளுறுகின்றதனைக்கொண்டு யாம் எந்நெஞ்சைத் தெளிவியேம்; அதற்குக்காரணங்கேள். எ - று.

௧௮ தேர்மயங்கி வந்த தெரிகோதை (௨)யந்நல்லார்
தார்மயங்கி வந்த தவறஞ்சிப் போர்மயங்கி
(௩)†நீயுறும் (௪)‡பொய்ச்சூ ளணங்காகின் மற்றினி
யார்மேல் விளியுமோ கூறு

---

க. தொல். பொருளி. சூ. கஎ. இச்சூத்திரத்தின் இவருரையிலும் இச்செய் திக்கு இக்குறிப்புக்களோடு "புள்ளிக் களவன்............கூறு" என்பது மேற்கோளாகக் காணப்படுகின்றது.

௨. "தார்கொண்டா டலைக்கோதை தடுமாறிப் பூண்டநின், னீரணி" (கலி. ௬௬: ௧௫ - ௧௬.) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

௩. (அ) தலைவி தலைவன் முன் தன்னைப் புகழ்தல் தலைவன் பரத்தையிற் பிரிந்துவந்தவழித் தெளித்தற்கண் வருமென்பதற்கு, "நீயுறும் பொய்ச் ..............கூறு" என்பதை மேற்கோள் காட்டி, 'இதில் பெண்டிர் பல ருளராயினும் அவரெல்லார்மாட்டும் செல்லாது தன்மேல் வரு மெனக் குறித்தாளாதலிற் றன்னைப்புகழ்ந்தாளாம்' என்பர். இளம். தொல். கற்பி. சூ. ௩௧. 'தற்புகழ்' (ஆ) இப்பகுதியையே இவர் அழிவில்கூட்டத்திற்குரிய பொருள்களுள் தெய்வமஞ்சலென்பதற்கும் மேற்கோள்காட்டுவர்; தொல். மெய்ப். சூ. ௨௪. 'தெய்வ' (இ) ஓசை வேற்றுமையால் நகரவுகரம்வியங்கோள்முற்றாயும் நிற்குமென்பதற்கும் இப்பகுதியே மேற்கோள்; தொல். வினை. சூ. ௯. நச்:

௪. (அ)"என்னை யருளி யருண் முருகு சூள்சூளி, னின்னை யருளி லணங் காண்மெய் வேறின்னும், விறல்வெய்யோ னூர்மயில் வேனிழ னோக்கி,

(பிரதிபேதம்) உணர்த்தன்மரீஇய. † நீ கூறும், ‡ பொய்ச்சூ ழணங்காகும்.

எ-து: (௧) தேரேறிவருகின்ற சிறப்பிலேமயங்கி நின் தீங்கைக் கருதாது வந்த தெரிந்த கோதையையுடைய அழகிய பரத்தையருடைய (உ)தாரை நின் தாராக நினைத்து அணிந்துவந்த் தப்பிற்கு அஞ்சி யாம் ஊடிப் பொருத போரிலே கலங்கி இக்கற்புக்காலத்து நீ சூளுறும் மிகப்பொய்யாகிய *சூளுறவு வருத்தத்தைச் செய்யுமாயின், பின்னை அதுதான் எங்கண்மே லன்றி யார் மேல் வரும் ? அங்ஙனம் வாராமற் களவுகாலத்துச் சூளுறவுபோற் கெடுமோ? நீதானே கூறுவாயாகவென ஊடறீர்ந்து கூறினாள். எ - று.

யார்மேல் வருமென ஒருசொல் வருவிக்க. இனி நீயுறுமென்க.

இஃது "இன்னாத்தொல்சூளெடுத்தற்கண்ணும்" (௩)என்பதனாற்கூறிற்று. என்றது, இன்னாங்குப் பயக்குஞ் சூளுறவினைத் தலைவன் சூளுறுவலெனக் கூறுமிடத்துமென்றவாறு. தலைவன், "வந்த குற்றம் வழிகெட வொழுகி"(௪) களவிற் சூளுறவான் வந்த ஏதம் நீக்கி, இக்கற்புக்காலத்துக் கடவுளரையும் குரவரையும் புதல்வனையுஞ் சூளுறுதலின் இன்னாதசூளென்றாள்; இது

---

யறவ ரடிதொடினு மாங்கவை சூளேல், குறவன் மகளாணை கூறேலா கூறே, லைய சூளி னடிதொடு குன்றொடு, வையைக்குத் தக்க மணற் சீர்சூள் கூறல்" பரி: அ: ௬௫ - எக. (ஆ) "பொய்ச் சூளா னென்ப தறியேன்யா னென்றிரந்து, மெய்ச்சூ ளுறுவானை மெல்லியல் பொய்ச் சூளென், றுரலுவ சொல்லா துரைவழுவச் சொல்ல" பரி. கஉ: ௬௩ - ௬௫.

௧. "நேரிழை நல்லாரை நெடுநகர்த் தந்துநின், றேர்பூண்ட நெடு நன் மான் றெண்மணிவந் தெடுப்புமே" கலி. எ௦: க௮ - கக.

உ. தாரென்பது ஆடவர்மார்பின் மாலைக்குவருதலே பெருவழக்கு; மகளிர் மாலைக்கும் அருகி வழங்கும்.

௩. தொல். கற்பி. சூ. ௬. (அ) இச்சூத்திரப்பகுதியினுரையில் "வேற்றுமை .........கூறு" என்ற பகுதிகளை மேற்கோள்காட்டி, தலைவி எம்மேலே இப்பொய்ச்சூளால் வருங்கேடுவருமென மறுத்தவாறுகாண்கவென்பர். நச். (ஆ) இச்சூத்திரத்து, "தன்வயிற் சிறப்பினு மவன்வயிற் பிரிப் பினு, மின்னாத்தொல்சூ ளெடுத்தற் கண்ணும்" எனப்பாடங்கொண்டு, தன் மாட்டு நின்ற மிகுதியானும் அவன் மாட்டு நின்ற வேறுபாட் டானும் இன்னாத பழைய சூளுறவைத் தலைவி யெடுத்தவழியும் கூற்று நிகழும்; தலைமகண் மாட்டு மிகுதியாதோ வெனின், 'மனைவி யுயர்வும் ..............உரிய' என்று ராகலின், அக்காலத்து மிகுதி யுளதாம்" என்று கூறி, "தேர்மயங்கி..............கூறு" என்பதை மேற்கோள் காட்டுவர் இளம்பூரணர்.

௪. தொல். கற். சூ. ரு.

(பிரதிபேதம்) *சூளுறவாயின வருத்தத்தைச்செய்யும் பின்னை.

களவுபோலச் சூளுறுதலின், தொல்சூ ளாயிற்று; இதனுள் (க) இரத்தலும் தெளித்தலும் வந்தவா றுணர்க.

இதனுல், தலைவிக்கு அணங்கால் அச்சம் பிறந்தது; தலைவற்குப் புணர் வாகிய உவகை பிறந்தது.

இஃது(உ)ஒரூஉவென ஒழியசையாகிய சொற்சீரடிவந்து ஐஞ்சீரடுக்கியும் ஆறுமெய்பெற்றும் வந்த கலிவெண்பா. "தரவும் போக்கும் பாட்டிடை மிடைந்தும்"(ந)எனப் பாப் போக்கின்பின் *வைத்ததனுற் 'கடியர்தமக் கியார் சொல்லத் தக்கார் மாற்று' எனப் போக்குட்போல் நாற்சீரான் இறும் பாட்டும் வந்தது. (உந)

(அகூ.) யாரிவ னெங்கூந்தல் கொள்வா னிதுவுமோ
ரூராண்மைக் கொத்த படிறுடைத் தெம்மனை
வாரனீ வந்தாங்கே மாறு;
ச என்னிவை, ஒருயிர்ப் புள்ளி னிருதலை யுள்ளொன்று
போரெதிர்ந் தற்றுப் புலவனீ கூறினென்
ளுருயிர் நிற்குமா றியாது;
எ ஏஎ, தெளிந்தேம்யாங் காயாதி யெல்லாம்வல் லெல்லா
பெருங்காட்டுக் கொற்றிக்குப் பேய்கொடுத் தாங்கு
வருந்தனின் வஞ்ச முரைத்து;
கo மருந்தின்று, மன்னவன் சீறிற் றவறுண்டோ நீநயந்த
வின்னகை தீதோ விலேன்;
கஉ மாண மறந்துள்ளா நாணிலிக் கிப்போர்
புறஞ்சாய்ந்து காண்டைப்பாய் நெஞ்சே யுறழ்ந்திவனைப்
பொய்ப்ப விடேஎ மெனநெருங்கிற் றப்பினே
னென்றடி சேர்தலு முண்டு.

---

க. இரத்தலுந் தெளித்தலும் வந்தமைக்கு; இச்செய்யுள் மேற்கோள்; தொல். அகத். சூ. சச. 'ஒன்றாத் தமரினுந்' இளம். சூ. சக. நச்.

உ. தொல். செய். கஉந-ஆம் சூத்திர வுரையில் (அ) "ஒரூஉ.........தவர்' என்பதை மேற்கோள்காட்டி, 'ஒரூஉ வென நின்ற இயலசைதானே ஒழியசையாய் நின்றது' என்று பேராசிரியரும் (ஆ) "ஒரூஉக் கொடி யிய னல்லார் குரனூற்றத் துற்ற" என்பதை மேற்கோள்காட்டி, 'ஒரூஉ வென நிரையசைதானே ஒழியசையாயிற்று' என்று நச்சினுர்க்கினிய ரும் கூறியுள்ளார்.

ந. தொல். செய். சூ. கருச.

(பிரதிபேதம்) * வைத்ததனுற் சொலத்தக்கார்.

இது தலைவன் "காமத்தின்வலியும்" (க) *என்றதனால் ஆற்றமைவாயிலாக வலிந்துபுக்கு நெருங்கிக் கூடுமிடத்து †அவனுடன் தலைவி ஊடிச் சில ‡சொல்லி, அவன் ஆற்றமை கூறுவது கேட்டு ஊடறீர்ந்தது.

இதன் பொருள்.

(உ)யாரிவ னெங்கூந்தல் கொள்வா (ந)னிதுவுமோ
(ச)ரூராண்மைக் கொத்த படிறுடைத் (ரு)தெம்மனை
வாரனீ (சு)||வந்தாங்கே ÷ மாறு

க. தொல். கற். சூ. ரு.

உ. (அ)"பரத்தை வாயி லுல்வர்க்கு முரித்தே" என்பதற்கு, பரத்தையர் மாட்டு வாயில்விடுதல் நான்கு வருணத்தார்க்கு முரித்தென்று முன்னுரைகூறி, பின்பு நான்குவருணத்துப்பெண்பாலாரும் அவரோடேப் பெறுபவென்ற வாறுமா மென்று கூறி, "யாரிவனெங்............படிறுடைத்து" என்பதை * அரசி கூற்றுக்கு (பார்ப்பனி கூற்றுக்கு என்றும் 'பிரதிபேதம்) மேற்கோள் காட்டினர்; இளம்பூரணர்; தொல். பொருளி. சூ. உஅ. (ஆ) இப்பகுதி, கூறுகின்றாள் தலைவி யென்பதூஉம் கூறப்பட்டான் தலைவ னென்பதூஉம் முன்னத் தானுணரப்படுதற்கு மேற்கோள்; தொல். செய்.சூ. உ0எ. பேர். நச். இ-வி. சூ. ருஎஎ. (இ)தலைவி, தலைவன் குறிப்பறிதல்வேண்டி வேற்றுமைக்கிளவி கூறியதற்கு, "யாரிவ னெங்கூந்தல்கொள்வான்"என்பதுமேற்கோள்; தொல். கற்பியல். சூ. கசு. 'அவன்குறிப்பு' இளம்.
(ஈ)"ஒரூஉநீ யெங்கூந்தல் கொள்ளல்யா நின்னை, வெரூஉதுங் காணுங்கடை" (கலி. அஎ: க - உ) என்பதும் அதன் குறிப்பும்பார்க்க.

ந. தலைவி தலைவ னுண்மையிற் பழிபடக் கூறுதலாகிய மாறிலாண்மையிற் சொல்லிய மொழிக்கு, "இதுவுமோர்.........றுடைத்து"என்பது மேற்கோள்; தொல். பொருளி. சூ. ரு0. நச். இதனை, உள்ளுறைப்பாற் படுவதாகிய அவையன் மொழிக்கு மேற்கோள்காட்டி, இது தீயொழுக்கமொழுகினுயென இடக்கரடக்கி அவையன்மொழியால் ஒழுக்கக்குறைபாடு கூறியவா றென்பர், இளம்; தொல். பொருளி. சூ. சஅ. 'மங்கல'

ச. (அ)"தண்டுறையூர தகுவதோ-வொண்டொடியைப்,பாராய் மனைதுறந் தச்சேரிச் செல்வதனை, யூராண்மை யாக்கிக் கொளல்" ஐந்-எழு. ருச. எனவும் (ஆ) "ஊராண்மை யென்னுஞ் செருக்கு" திரிகடுகம். சு. (இ) "ஊராண்மை மற்றதனெஃகு" குறள். எஎந.எனவும் வருவனகாண்க. (ஈ) ஆண்மை, ஆளுந்தன்மையென்னும் பொருளில் வருதற்கு, "ஊரா.........றுடைத்து" என்பது மேற்கோள்; தொல்.கிளவி. சூ. ருஎ.நச்.

ரு. "யாரைநீ யெம்மில் புகுதர்வாய்" கலி. கஅ: க.

சு. "ஆறு மயங்கினை போறிநீ வந்தாங்கே, மாறினி" கலி. கூரு: ந - ச.

(பிரதிபேதம்) * என்றதனுல் வாயிலாகப்புக்கு, † அவனுடைய தலைவி, ‡ சொல்லிவந்தாறுற்றமை. || வந்ததேனின்று. ÷ மாற்றென்னிலை, மற்றென்னிலை.

எ - து: இவன் யார்? *எங் கூந்தலைத் தொடுதற்கு இவன் என்ன தொடர்புடையனென நெஞ்சொடு கூறி, பின்னர் இங்ஙனங் கூந்தலைப் பிடிக்கின்றஇதுவும் நீபாதுகாத்தலின்றிப்பாதுகாப்பாரைப்போலே†பண்ணிக் கொண்டு ஊரையாளுந் தன்மைக்குப் பொருந்தினதொரு கொடுமையை யுடைத்து; இதனை ஓர்ந்துபார்; இனி நீ எம் மனையிடத்தே வாராதேகொள்; வந்தாற்போலே மீண்டுபோவென்றாள். எ - று.

இது (க)வலிந்துபுக்கது கூறிற்று. வான், வினையெச்சம்.

ச ‡என்னிவை, (உ)ஒருயிர்ப் புள்ளி னிருதலை யுள்ளொன்று
போரெதிர்ந் தற்றுப் ||புலவனீ கூறினென்
னாருயிர் நிற்குமா றியாது

---

க. தலைவன் வலிந்து சென்றதனைத் தலைவி துனியால் மறுத்துக் கூறியதற்கு, "யாரிவன்...........மாறு" என்பது மேற்கோள்; தொல். கற். சூ. ரு. நச்.

உ. (அ) "யாமே, பிரிவின் றியைந்த துவரா நட்பி, னிருதலைப் புள்ளி னோருயி ரம்மே" (ஆ)"ஒரு குடர் படுதர வோரிரை துற்று, மிருதலைப் புள்ளி னோருயிர் போல" (இ) "உள்ளத் துவகை யொருதலைப் பட்ட விருதலைப்பைம், புள்ளொத் தினிய புதுமலர்ப் பாயற் புணர்ந்த வின்ப,,வெள்ளக் கடலிடை வீழ்ந்துட னீந்துவர்" (ஈ) "ஒருயிர்த்தா, யிருதலைப் புள்ளி னியைந்தநுங் கேண்மையை யெண்ணி" (உ) "இருதலைப்புளி னுற்றவோருயி ரென்ன நம்முட னுகியே, மருவு துன்பமு மின்பமும்வழு வாதுதுய்த்திடு மாட்சியேன்" (ஊ) "இருதலைசே ரொருபுள்ளி னேகவுயி ராய்நீவிர், மருவியிட மறியாமே வாழு நாள்" என்பவைகளும்,(எ)"அந்தா மரையன்ன மேனியனை யானகன் றுற்றுவனோ" என்புழி, யானென்பதற்கு, 'இருதலைப் புள்ளி னோருயி ரேனுகிய யான்' என்று (கோவையார். கஉ.) பேராசிரியரும், (ஏ)"யார் பிரிய யார்வர யார்வினவ யார்செப்பு" என்புழி, 'இருதலைப் புள்ளி னோருயிரே முதலாற் பிரிவும் வரவும் வினுவும் செப்பும் நம்மிடை உளவாகா' என்றும். பரி. அ: எஉ. (ஐ) "ஊட லுணர்தல் புணர்த லிவைகாமங், கூடியார் பெற்றபயன்" என்னுங்குறளில், '(இம் மூன்று பயனும்) இருதலைப்புள்ளி னோருயிராய உழுவலன் புடையா எமக்குவேண்டா' என்றும் (குறள். கக0க) பரிமேலழகரும். (ஒ) "காதலாளுட னுள்ளுயிர் கைவிடி, னேதமென்னுயி ரெய்தி யிறக்கும்" என்புழி, 'யாம் இருதலைப் புள்ளி னோருயிரேமாதலிற் காதலா ளுயிர் நீங்கின் என்னுயிரும் ஏதமெய்தி நீங்கும்' என்று (சீவக. கஙஙக.)

(பிரதிபேதம்) *இயனெங் கூந்தலைத்தொடுதற்கு என்ன, † பணிக்கொண்டு, ‡ என்னவை, எனிதை. || புலவனீ கூறினென்

எ - து: அதுகேட்ட தலைவன், உடலும் உயிரும் ஒன்றாய்த் தலை இரண்டாகிய புள்ளினுடைய அவ்விரண்டு தலையில் ஒருதலை மற்றத்தலையோடே *பேரர்செய்தலை மேற்கொண்ட தன்மைத்தாக, நீ இக்கொடுமைகளைக் கூறிப் புலந்தாற் பயனென்? அதனைக் கைவிட்டு இனி என்னுடைய அரிய உயிர் நிற்கும்வழி யாது? அதனைக் கூறுவாயென்றான். எ - று.

இஃது (க)ஆற்றாமைகூறிற்று. புலவல், புலத்தலெனப் படுத்தலோசையாற் பெயராய்நின்றது. இவை கூறிப் †புலவலென்னெனக. கூறு என வருவிக்க.

எ (உ)எஎ, இகழ்ச்சிக்குறிப்பு.

நீங்கின காலமெல்லாம் மறந்து ஈண்டு வந்தால் இறந்து ‡படுவேனெனக் கூறலின், அதனை எஎயென இழித்து நெஞ்சொடுகூறினாள்.

தெளிந்தேம்யாங் காயாதி ||யெல்லாம்வல் ÷லெல்லா
(ந)பெருங்காட்டுக் கொற்றிக்குப் பேய் ×நொடித் தாங்கு
வருந்தனின் வஞ்ச முரைத்து

எ - து: எடா! எல்லாம் உணர்ந்திருக்கும் பெரிய காட்டிடத்திற் கொற்றவைக்கு அவள் அறியாதன சில உண்டாகப் பேய் நொடிசொன்னாற்போல, நின்பொய்களை எனக்குச் சொல்லி வருந்தாதேகொள்; யாம் முன்பே நின் வஞ்சனைகளைத் தெளிந்துவிட்டேமென்றாள். எ - று.

---

நச்சினார்க்கினியரும் எழுதியவுரைகளும் ஈண்டு அறிதற்பாலன. (ஓ) "எட்டுக் காலொடு மிரண்டுவன் றலையொடு மெரிகால், வட்டக் கண்ணொடும் வளைபிறை யெயிற்றொடுந் தழங்கிக், கிட்டிக் கொண்டவச் சிம்புளின் கிளர்ச்சியை யஞ்சி, விட்டுக் கண்ணுதற் குரைத்திட வோடினன் விமலை" (ஔ) "பிரிவரும் புள்ளி னொருமையி னொட்டி" என்பவற்றிற்குறித்த புள்ளும் இஃதென்பாருமுளர்.

க. தலைவன் வலிந்து சென்றதனைத் தலைவி கூறிய வழி, "என்னிவை... ............யாது" என்பது தலைவன் ஆற்றாமை மிகுதியாற் சென்றமை கூறியதற்கு மேற்கோள்; தொல். கற்பியல், சூ. ரு. நச்.

உ. "எஎ தெளிந்தேம்யாம்" என்பதை எ அசைநிலையாய் வருதற்கு மேற்கோள்காட்டினர்,தெய்வச்; தொல். இடை. சூ. உங. 'எயுங் குரையும்'

ங. (அ)"துணங்கையஞ் செல்விக் கணங்குநொடித் தாங்கு"பெரும்பாண். சருக. (ஆ) "அரற்றென்பது அழுகை யன்றிப் பலவுஞ்சொல்லித் தன் குறைகூறுதல்; அது காடுகெழுசெல்விக்குப் பேய்கூறும்அல்லல்போல வழக்கினுள்ளோர் கூறுவன"; தொல். மெய்ப். சூ. கஉ. பேர்.

(பிரதிபேதம்) * போர்தலைமேற்கொண்ட, † புலவலெனனைக கூறியென, புலவலெனக கூறியென, ‡ படுவலெனக்கூறலின், || அல்லாய தெல்லா, எல்லாயெல்லா. ÷ எடா. × நொடிந்தாங்கு.

௧0 மருந்தின்று, (க)மன்னவன் சீறிற் றவறுண்டோ நீநயந்த
வின்னகை தீதோ விலேன்

எ - து: அதுகேட்ட தலைவன், என்னைப் பேயென்று காயாதே *கொள்; எனக்குத் தவறுகளேற்றுதற்கு அலமாராதேகொள்; எனக் கூறி, † பின்னும் இனிய நகையினையுடையாய் ! நீ என்மேல் ஏற்றிச்சொல்ல விரும்பிய தீதோ யான் உடையேனல்லேன்; அரசன் கோபிக்கப்படுகின்றவன்மேல் ஒருதவறு உண்டோ? தவறில்லாயினுங் கோபிப்பனன்றே? அங்ஙனம்கோபிக்குமிடத்து அதற்கொரு (உ)பரிகாரமில்லை யென்றான். எ - று.

௧௨ (௩)‡மாணா மறந்துள்ளா நாணிலிக் கிப்போர்
புறஞ்சாய்ந்து || காண்டைப்பாய் நெஞ்சே ÷ யுறழ்ந்திவனைப்
பொய்ப்ப விடேஎ மெனநெருங்கிற் (ச)றப்பினே
னென்றடி சேர்தலு முண்டு

---

க. 'உற்றொரு தனியே தானே தன்கணே யுலக மெல்லாம், பெற்றவன் முனியப் புக்கா னடுவினிப் பிழைப்ப தெங்கே, குற்றமொன் றிலா தோர் மேலுங் கோள்வரக் குறுகு மென்னு, மற்றைய பூத மெல்லாம் வருணனை வைத மாதோ" கம்ப. வருணனை வழிவேண்டு, கூ௩.

உ. மருந்து - பரிகாரம். புறம். ௩: ௧௨, ௪உ: உ௨.

௩. (அ)"கொடியோர் கொடுமை சுடுமென வொடியாது, நல்லிசை நயந் தோர் சொல்லொடு தொகைஇப், பகுதியி னீங்கிய தகுதிக் கண்ணும்" என்பதற்கு,"கொடியோரதுகொடுமைசுடாநின்றதெனப் புணர்ச்சியை யொடியாது புகழை விரும்பினோர் சொல்லோடே யொருப்பட்டு வேறு படுதலி னீங்கிய தகுதிக் கண்ணும் என்றவாறு; அஃதாவது: அக்காலத்துத் தக்கதறிதல்; புகழை விரும்பினோர் சொல்லுஞ் சொல் லாவது காமம் விரும்பும் பரத்தையரைப் போலாது அறத்தை விரும் புதல்" என்று உரைவகுத்து, "மாண.............உண்டு" என்பதை மேற்கோள் காட்டுவர் இளம்; தொல். கற்பி. சூ. கூ. (ஆ) இப்பகுதி, கற்பென்னுங் கைகோளுள் சிதைவு பிறர்க்கின்மை யென்னு மெய்ப்பாட்டிற்கும் மேற்கோள்; தொல். மெய்ப். சூ. ௧௬. (இ) மாணுமை யென்பது மிகாமை யென்னும் பொருளிலும் வருமென் பதற்கு, "மாண மறந்துள்ளா நாணிலி" என்பது மேற்கோள்; தொல். மெய்ப். சூ. உ௪. 'தெய்வம்' இளம்.

௪. புலவியுள் தலைவியுயர்வும் கிழவோன் பணிவும் உண்டென்பது தலைவி மனத்து நிகழ்தலுண் டென்பதற்கு, "தப்பினே, னென்றடி சேர்தலு முண்டு" என்பது மேற்கோள்; தொல். பொருளி. சூ. ௩௩. நச்.

(பிரதிபேதம்) * கொள்ளொன் றெனக்கு, † பின்னு மின்னகாய் நீ, ‡ மானமறந்துள்ளாத. || கண்டைப்பாய்நெஞ்சே, கண்டெய்ப்பாய் நெஞ்சே ÷ புரந்தவனை.

எ - து: அதுகேட்ட தலைவி,*நெஞ்சே! இவனைப்(க)பொய்சொல்லவிடே மென்று மாறுபட்டுக் கோபிக்கின், தப்பினேனென்று வணக்கஞ்செய்தலும் இவனுக்குப் பரிகாரமுண்டு; ஆதலான் நம்மை மறந்து ஒருகாலமும் நாம் மாட்சிமைப்பட்டிருக்க நினையாத நாணமில்லாதவனுக்கு இவ்வூடற்போரைத் தோற்று அதனுலுள்ள பயனைக் காண்பாயென்று ஊடறீர்ந்தாள்.

இதனுல், தலைவிக்குச் † சூழ்ச்சியும் தலைவற்குப் புணர்வாகிய உவகையும் ‡பிறந்தன.

"ஒருசிறை நெஞ்சமொ டுசாவுங் || காலை, யுரிய தாகலு முண்டென மொழிப" (உ)என்பதனுல், இவன் ÷ஆற்றுனென நெஞ்சுடன் உசாவினுள்.

இஃது ஐஞ்சீரடுக்கிவந்த (௩)கலிவெண்பா. (உ௪)

(௬௦.) கண்டேனின் மாயங் களவாதல் பொய்ந்நகா
மண்டாத சொல்லித் தொடாஅ ஞுடைஇயநின்
பெண்டி ருளர்மன்னோ வீங்கு;
௪ ஒண்டொடிநீ, கண்ட தெவனு தவறு;

---

க. "இற்றதென் னுவி யென்னு வெரிமணி யிமைக்கும் பஞ்சிச், சிற்றடிப் போது புல்லித் திருமகன் கிடப்பச்சேர்ந்து, பொற்றதா மரையிற் போர்ந்து கருமுத்தம் பொழிப வேபோ, லுற்றுமை கலந்து கண்கள் வெம்பனி யுகுத்தவன்றே" என்னும் (சீவக.உ௫0அ) செய்யுளுரையில், 'உற்று' என்பதற்கு, ஊடறீர்தலுற வென்று திரித்துப் பொருள் கொண்டு, "பொய்ப்ப விடேஎ மென.........முண்டு" என்றுராகலின், என இவ்வுரைக்கு மூலமான பகுதியை மேற்கோள் காட்டி, அடியில் வணங்கியபின்னும் ஊடறீரா தழுதாளென்றல் கற்பிற்குப் பொருந்தா தென்பர் நச்சினுர்க்கினியர்.

உ. தொல். பொருளி. சூ. க0. இச்சூத்திரத்தின் இவருரையிலும் நெஞ்சுடன் உசாவுதற்கு, "மாண.......முண்டு" என்னும் பகுதி மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளது.

௩. இளம்பூரணர் இச்செய்யுளை உறழ்கலிக்கு மேற்கோள்காட்டி, "'யாரிவனெங்கூந்தல்.........மாறு' இது தலைமகள் கூற்று; 'என்னிவை...... ........யாது' இது தலைமகன் கூற்று; 'ஏஎ, தெளிந்தேம்........... உரைத்து' இது தலைவி கூற்று; 'மருந்தின்று..............விலேன்' இது தலைமகன் கூற்று; 'மாண மறந்துள்ளா................முண்டு' இது தலைவி கூற்று; "இப்பாட்டுச் சுரிதக மின்றி வந்தவாறு கண்டு கொள்க. எற்றுக்கு? இறுதியின்கண்வந்ததுசுரிதகமாகாதோவெனின், ஆகாது; சுரிதகமாவது ஆதிப் பாட்டினும் இடை நிலைப்பாட்டினு முள்ள பொருளைத்தொகுத்துமுடிப்பது; இஃது அன்னதன்றென்க" என்பர்; தொல். செய். சூ. க௪அ. 'கூற்று மாற்றமும்' இதனுலும்

(பிரதிபேதம்) * விடேனென்று, † சூட்சி, ‡ பிறந்தது, || காலையுமுரியது, ÷ ஆற்றுனுலென.

கண்டது; நோயும் வடுவுங் கரந்து மகிழ்செருக்கிப்
பாடு பெயனின்ற பானா ளிரவிற்
றொடிபொலி தோளு முலையுங் கதுப்பும்
வடிவார் குழையு மிழையும் பொறையா
வொடிவது போலு நுசுப்போ டடிதளரா
வாராக் கவவி னொருத்திவந் தல்கற்றன்
சீரார் ஞெகிழஞ் சிலம்பச் சிவந்துநின்
போரார் கதவ மிதித்த தமையுமோ
வாயிழை யார்க்கு மொலிகேளா வவ்வெதிர்
தாழா தெழுந்துநீ சென்ற தமையுமோ
மாறுள் சினைஇ யவளாங்கேநின் மார்பி
னறிணர்ப் பைந்தார் பரிந்த தமையுமோ
தேறிநீ தீயே னலேனென்று மற்றவள்
சீறடி தோயா விறுத்த தமையுமோ
கூறினிக் காயேமோ யாம்;
தேறிற், பிறவுந் தவறிலேன் யான்
அல்கற், கனவுக்கொ ணீகண் டது;

௨௨ கனைபெயற், றண்டுளி வீசும் பொழிதிற் குறிவந்தாட்
கண்ட கனவெனக் காணாது மாறற்றுப்
பண்டைய வல்லநின் பொய்ச்சூ ணினக்கெல்லா
நின்றாய்நின் புக்கில் பல;

௨௬ மென்றோளாய், நல்குநின் னல்லெழி லுண்கு;

௨௭ ஏடா, குறையுற்று நீயெம் முரையனின் றீமை
பொறையாற்றே மென்றல் பெறுதுமோ யாழ
நிறையாற்றா நெஞ்சுடை யேம்.

இது "புல்லுதன்மயக்கும் புலவிக்கண்ணும்" (க)என்பதனால்தலைவன் புலப்படப்பரத்தையரிடத்து ஒழுகாது மறைந்தொழுகிவந்து*நின்றவனுடன்

---

உறழ்தற்பொருளாலும் இச்செய்யுளைக் கலிவெண்பா என்று கொள்ளாது உறழ்கலியென்று கொள்ளுதலே பொருத்த முடையது.

க. தொல். கற்பியல். சூ. ௧௦. இச்சூத்திரப்பகுதிக்கு இவ்வுரைகாரர் அங்கு, "இரட்டுறமொழிதலென்பதனல், பரத்தையரிடத்துப் புலப்பட

(பிரதிபேதம்) * நின்றிவனுடன்.

காமக்கிழத்தி ஊடிச்சொல்லித் தலைமகன் ஆற்றாமைகண்டு தன் ஆற்றாமை யுஞ்சொல்லி ஊடனீர்ந்தது.

இதன் பொருள்

கண்டேனின் மாயங் களவாதல் பொய்ந்நகா
(௧)*மண்டாத சொல்லித் †தொடாஅ றொடீஇஇயநின்
பெண்டிரு ளர்மன்னோ வீங்கு

எ - து: நின் ‡பரத்தைமை இக்காலத்துக் களவொழுக்கத்தேயாதலைக் கண்டேன்; ஆதலாற் பொய்யாகவே நக்கு, யான் விரும்பாதனவற்றைக் கூறி என்னைத் தீண்டாதேகொள்; நீதீண்டுதற்கு இவ்விடத்து நினக்குப் பெண்டிரா யிருப்பார் உளரோ? இல்லையே என்றாள். எ - று.

மன்னும் (உ)ஓவும் அசை.

ச ஒண்டொடீநீ கண்ட தெவனோ தவறு

எ - து: அதுகேட்ட தலைவன், ஒள்ளிய தொடியினையுடையாய்! நீ என் னுடைய தவறாகக் கண்டது எவனென்றான். எ - று.

ரு (ங)கண்டது, (ச)நோயும் வடுவுங் கரந்து மகிழ்செருக்கிப்

---

ஒழுகாது அவர்புல்லுதலை மறைத்தொழுகுதலாற் காமக்கிழத்தியர்க்குப் பிறக்கும் புலவிக்கண்ணும் அவர்க்குக் கூற்றுநிகழுமெனவும் பொருள் கூறுக" என்று பின்னதாக ஒரு விசேட வுரை யெழுதி, "உதாரணம், 'கண்டேனின் மாயங் களவாதல் பொய்ந்நகா' என்னும் மருதக் கலியுட் காண்க" என்பர்.

க. "மண்டாத கூறி" கலி. ௧௦௮: உக.

உ. ஓவும் அசையென்பதை நோக்க, உளரென்பதற்கே ஓசை வேற்றுமை செய்து உளரோவென்று பொருள்கொண்டாரென்று தோற்றுகிறது.

ங. "தான் முன் கண்ட தவற்றின ளாதலிற், சென்ற வாயிற் கொன்றல ளூடி" பெருங். (க) ௩௭: ௧௬௭ - ௧௬௮.

ச. "முதலொடு..............ஐந்நிலம் பெறுமே" என்னும் சூத்திரத்திற்கு, 'ஐந்நிலம்: களவும் உடன்போக்கும் இற்கிழத்தியும் காமக்கிழத்தியும் காதற்பரத்தையு மெனப்பட்ட ஐவகைக் கூட்டமென்றும், ஐந்நில மென்பதனை முல்லை குறிஞ்சி முதலாயின வென்றா ருளராலெனின், முதலொடு புணர்ந்தவென்பதனான் நிலம் பெறு மாதலான், நில மென்பதற்கு வேறுபொரு ளுரைத்தல்வேண்டுமென்றும், இற்கிழத்தி காமக்கிழத்தி யென்பார் உள்ளப்புணர்ச்சியானுதல் மெய்யுறு புணர்ச்சி யானுதல் வரையப் பட்டா ராக, பொருட்பெண்டி ராகிய காதற்

(பிரதிபேதம்) * வண்டாத. † தொடாஅற்றொடீஇய, ‡ பரத்தமை.

பாடு பெயணின்ற (க)பாணு ளிரவிற்
றொடிபொலி தோளு முலையுங் கதுப்பும்
வடிவார் குழையு மிழையும் பொறையா
வொடிவது போலு நுசுப்போ*டடிதளரா
(உ)வாராக் †கவவி னொருத்திவந் தல்கற்றன்
சீரார் (ங)ஞெகிழஞ் சிலம்பச் சிவந்துநின்
(ச)‡போரார் கதவ மிதித்த தமையுமோ
வாயிழை ||யார்க்கு மொலிகேளா (ரு)வவ்வெதிர்
தாழா தெழுந்துநீ சென்ற தமையுமோ

பரத்தையர்கூட்டம், ஒத்தகாம மாகியவாறு என்னையெனின், அவருப பொருளானுதல் அச்சத்தானுத லன்றி, அன்பினுற்கூடுதலின் அதுவுப கந்திருவத் தின்பாற்படும்; அவ்வாறன்றி அவரைப் பிறிது நெறியாற் கூடுவனுயின், இவன்மாட்டுத்தலைமையின்றும்' என்று உரைவகுத்து "நோயும் வடுவும்.........இறுத்த தமையுமோ" என்பதனை மேற்கோள் காட்டி, 'பரத்தையர் அன்பினுற் * கூடியவாறும், (* கூறியவாறும் என்றும் பிரதிபேதம்) இவர் இற்கிழத்தியும் காமக்கிழத்தியும் அன் மையும் அறிந்துகொள்க' என்பர். இளம்பூரணர். தொல். களவி.கூ.கடு

க. "பாணு, ளிரவினிற் றூது கொண்டோன்" திருவிளை. பாயிரம். உ௦.

உ. "அரிமத ருண்கண்ணு ராராக் கவவின்" கலி. ௯௧: ௧௭.

ங. "அஞ்சிலம் பொடுக்கி யஞ்சினள் வந்து, துஞ்சூர் யாமத்து முயங் கினள் பெயர்வோள்" (அகம். ௧௦: ௧௧.) என நாணு மகளிர்க்குக் கூறுதல் காண்க.

ச. "போர்க்கதவின்" பட். ௪௦. சிலப். ௧௦: எ. உரைபார்க்க; இஃது இரட்டைக்கதவு.

ரு. (அ) 'வடவேங்கடந் தென்குமரி யாயிடை' (தொல். சிறப்புப்) என் புழி, ஆயிடையென்பதற்கு, அவற்றை எல்லையாகவுடைய நிலத் தென்று இளம்பூரணரும், அதற்கு, அவ்விரண்டெல்லைக்குளென்றும். (ஆ)"யார், மாகமே நோக்கி மடவாளே யவ்விருந்தா, ளாகும்" (சீவக ௧௦௩௮) என்புழி, அவ்விருந்தாளென்பதற்கு, அவ்விடத்திருந்தாளென் றும் இவ்வுரைகாரரும் பொருளெழுதியிருத்தலும், இவ்வாறே இகரச் சுட்டையும் (இ) "குகனென்பான் இந்நின்ற குரிசிலென்றான்" (ஈ) "இந்நின்ற, தாணினுமுளன்" (உ) "இம்முதலோர்" (ஊ) "மறக்கண் வெஞ்சின மலையென விந்நின்ற வயவர்" (கம்ப.குகப்.௬௬.இரணியன் வதை. ௧உ௪. நாகபாச. உ௬ங. படைக்காட்சி. உ௧.) எனவும்;

பிரதிபேதம்) * அடித்தளரா. † கவவினொடொருத்தி. ‡ போராகதவம். || ஆக்குமொலி.

கரு மாறாள் சினை இ யவளாங்கே நின்மார்பி
னறிணர்ப் பைந்தார் பரிந்த தமையுமோ
தேறிநீ தீயே னலேனென்று மற்றவள்
சிறடி தோயா விறுத்த தமையுமோ
கூறினிக் காயேமோ யாம்

எ - து: யான்கண்டது, ஒருத்தி தானுற்ற காமநோயையும் அதனாற் பிறந்த அலரையும் பிறர் அறியாமல் மறைத்து மகிழ்ச்சியின்றியிருக்கவும் மகிழ்ச்சியுண்டாக்கிச் செருக்கிச் சொரிகின்ற மழை மாறாமல் நின்ற ஒரு நாளிற் பாதியாகிய இராப்பொழுதிலே தொடி பொலிவுபெற்ற தோளும் முலையும்கூந்தலும்(க) * மகரத்தின்வடிவுநிறைந்த† குழையும் ஏனை அணிகலங் களும் தனக்குச்சுமையாக முறிவதொரு(உ)வஞ்சிக்கொம்புபோலும்இடையைத் தாங்கிக்கொண்டு அமைதி பிறவாத முயக்கத்தாலே அடிதளர்ந்து வந்து தங்கு தலையுடைய தன் தலைமைநிறைந்த சிலம்பொலிப்ப, கோபித்து நின்னுடைய பலகை பொருத நிறைந்த கதவத்தைப் பாய்ந்தது ; அது தவறுதற்கு அமை யுமோ? அந்த ஆராய்ந்த இழையினையுடையவள் ஆரவாரிக்கும் ஆரவாரத்தைக் கேட்டு அவ்வாரவாரத்திற்கெதிரே நீ நீட்டியாது எழுந்திருந்து போனது; அது தவறுதற்கு அமையுமோ? அவள் மாறாளாய்ச் சினந்து அவ்விடத்தே நின் மார்பிற் கிடந்த நாறுகின்ற இதழையுடைய செவ்விமாலையை அறுத்தது ; அது தவறுதற்கு அமையுமோ ? பின்னை அவளுடைய சிறிய அடியைச் செறித்து யான் தீமையையுடையேனல்லேன்; அதனை நீ தெளியென்று கூறி அவளிடத்தே தங்கினது ; அது தவறுதற்கு அமையுமோ ? இனிச்சொல்லு ; யாம் நின்னைக் கோபியேமோ? என்றாள். எ - று.

(ந)பாடுபெயல், பாடெனவிகாரம். நாளிற்பால், பாளுளென மரூஉ. நுசுப் போடென உருபுமயக்கம். கண்டது, மிதித்தது ; அது அமையுமோ ? கண் டது, சென்றது; அது அமையுமோ? கண்டது, பரிந்தது; அது அமையுமோ ? கண்டது, இறுத்தது; அது அமையுமோ? என முடிக்க.

---

(எ) "பரிதியிவ் விருந்த தேவே" (ஏ)"இவ்விருந்த வேந்தல்"(ஐ) "இவ் விருந்த மீளி" (நைடத. சுயம்வர. கஉச, கஙஎ, கஙக.) எனவும் பெரு நூலாசிரியர்கள் அமைத்திருத்தலும் இங்கே அறிதற்பாலன; (ஒ) அகரச்சுட்டு, தனித்துநின்று பொருளுணர்த்தலாற்றாதென்று சிவ ஞானமுனிவர் தொல். பாயிரவிருத்தியில் கூறியிருக்கிறார்.

க. "காதிசையு, மான்மகர வார்குழையாய்" ஏலாதி. சச.

உ. வஞ்சியென்பது, ஒரு கொடிக்கேயன்றி ஒருமரத்திற்கும்பெயர்; இதன் கொம்பும் வஞ்சிக்கொடியும் மகளிரிடைக்கு உவமை கூறப்படும்.

ந. பார்த்தபிரதிகளிலெல்லாம் இவ்வாறேகாணப்படுகின்றது;'படுபெயல், பாடுபெயலென விகாரம்' என்று இருக்கவேண்டியதுபோலும்.

(பிரதிபேதம்) * ஆகத்தின், † மகரக்குழையும்.

௨0 தேறிற், பிறவுந் தவறிலேன் யான்
அல்கற், (௧)*கனவுக்கொ ணீகண் டது

எ - து: அதுகேட்ட தலைவன் யான் தேற்றத் தெளிவையாயின் இக் கேட்பதோர் தவறு யான் உடையே †னல்லேன்; (௨) இராக்காலத்து நீ கண்டதுதான் கனவுபோல இருந்ததென்றான். எ - று.

௨௨ (௩)கனைபெயற், றண்டுளி வீசும்பொழுதிற் குறிவந்தாட்
கண்ட கனவெனக் காணாது மாறாற்றாப்
பண்டைய வல்லநின் பொய்ச்சூ ‡ணினக்கெல்லா
நின்றாய்நின்(௪)புக்கில் பல

---

௧. முற்றியலுகரம் ஒற்றடுத்து உரியசையானதற்கு, "கனவுக்கொ ணீகண் டது" என்பதை மேற்கோள் காட்டி, இங்ஙனம் வருமொழியொற்று மிகினும் நிரைபாமெனவும் நிலைமொழியொற்று நின்றவழிப் புளிமாவா மெனவும் விளக்குவர், பேராசிரியர்; தொல். செய்யுளி. சூ. ௧0.

௨. "இரவு கண்டே னொருகன வதனின், புதுமை கேட்கிற் புரை தீர்ந்தது வெனச், செவ்வாய் வெண்ணகைத் திருந்திழை கண்ட, தெவ்வா றேவென வியம்பினன் கேட்பநின், மனத்துறைப் பெயரா வெனைக் கரந் தெழுந்தனை, தனித்துப் போயோர் தடந்தோண் மடந்தையோ, டாடரங் கேறி யணைந்திருந் தவளோ, டொடியு முணர்ந்துங் கூடிவிளை யாடியுந், தேறினி ராகித் தெளிவுட னிருவிரு, மாறுமா றெழுதிய வாசகங் கூறி, மாதரு நீயு மயலுரைத் தெழுந்து, போதரும் போதையின் மோதிர மருளிப், பெயர்ந்தனை நயனமு மலர்ந்தன வாங்கே, புலர்ந்தது கங்குலும் புரவல வாழ்கென, வண்டலர் கோதாய் மனத்தினு மில்லது, கண்டனை யாதலிற் கலங்கினை மற்றுநின், னுள்ளத் துள்ளே யுறைகுவே னாகவுங், கள்வ னென்று கருதினை யன்றியு, நெறியுடை மகளிர் நினைப்பவுங் காண்பவு, மிவையிவைபோலுங் கணவர்தந் திறத் தெனக், கனவிற் கண்டது பிறரொடு பேசக், குறைபோ மென்றலிற் கூறினே னன்றியும், யாவை காணினுங் காலவற் கன்றிப், பேசுவ தெவரொடு பெரியோ யென்று, மாணார் நோக்கி மனத்தொடு நகையா, வாணு நினைவுட னகற வேந்தன், றேவியை யையந்தெளித்தனமொரு வகை, யாரு மில்லென வினிதிருந் துவப்ப" பெருங். (௪) ௧௩: ௧அ௯ - ௨௧௯.

௩. இந்நூற்பக்கம் ௨எ௩: ௩ - ஆம் குறிப்புப் பார்க்க.

௪. "புக்கில்" குறள். ௩௪0.

(பிரதிபேதம்) * கனவிற்கொல், கனவுகொல். † அல்லேன் நீகண்டதுதான் இராக்காலத்துக் கனவுபோலே. ‡ நினக்கேடா.

எ - து: அதுகேட்ட தலைவி, செறிந்த மழையாகிய தண்ணிய துளியைப் பெய்கின்ற இராக்காலத்தே ஒருவன் செய்த குறியிடத்தே வந்தாளொருத்தியை நீ(க)கண்டதனால் உனக்குநிகழ்ந்த கனவு இதுவெனச்சொல்லி, நீ செய்ததனை நினையாதே அச்செய்தியை மாறுதலுற்று நின்றாய்; அங்ஙனம் நின்றபின்னர் நீ குளுற்ற நின்னுடைய பொய்யாகிய குளுறவு *யாம் நுண்மையாகக் கண்டமையின் நினக்குப் பண்டுபோற் பயன்றருந் தன்மையையுடையவல்ல ; ஆதலால், எடா ! நினக்குப் புகும் இல்லைப்பலவால்; ஆண்டே செல்லென்றாள். எ - று.

கண்ட கனவு, உண்ட எச்சில்போல †நின்றது.

உசு மென்றோளாய், நல்குநின் னலநெறி னுகர்கு

எ - து: அதுகேட்ட தலைவன், மெல்லிய தோளினையுடையாய் ! இனி யான் செய்த குறையைக் கைவிட்டு நின்னுடைய நன்றாகிய அழகை எனக்கு அருள்; அதனை யான் நுகர்வேனென்றான். எ - று.

உஎ எடா, குறையுற்று நீயெம் முரையனின் றீமை
(உ)பொறையாற்றே மென்றல் பெறுதுமோ யாழ
நிறையாற்றா நெஞ்சுடை யேம்.

எ-து: எம் வயத்ததாக நிறுத்தமாட்டாத நெஞ்சையுடைய ‡யாம் நினது தீமையைப் பொறுத்தலை நடத்த மாட்டேமென்று கருதுதலைப் பெறுவேமோ? ||பெறேம்; ஆதலால், இக்காரியத்திலே உற்று எமக்குச் சில குறை கூறாதே கொள்ளென்று உடன்பட்டாள். எ - று.

"பிறவும்" (ங)என்றதனால், சேரிப்பரத்தையாற் புலந்துகூறினான்.

இதனால், தலைவிக்கும் தலைவற்கும் புணர்வாகிய உவகை பிறந்தது.

இஃது ஒண்டொடி நீயெனவும் தேறினெனவும் ÷அல்கலெனவும் தழியதையும் பிறவுந் தவறிலேன்யானெனவும் கனவுக்கொளீகண்டதெனவும்

---

க. "நனவிற்றான் செய்தது மனத்த தாகலிற், கனவிற் கண்டு" (கலி. சுக: ங - சு.) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

உ. "எண்ணியவையெல்லாந், துறைபோதலொல்லுமோ தூவாகாதாங்கே, யறைபோகு நெஞ்சுடையார்க்கு" (கலி. கஎ: கக - உக) என்பதும் இந்நூற்பக்கம் சoஅ: ங-ஆம் குறிப்பும் பார்க்க.

ங. தொல். கற்பி. சூ. கo. இச்சூத்திரப் பகுதியின் இவருரையிலும் "ஆராக் கவவின்.........இறுத்த தமையுமோ" என்னும் இப்பாட்டின் பகுதி, காமக்கிழத்தியர் சேரிப்பரத்தையாற் புலந்து தலைவனோடு கூறியதற்கு மேற்கோள்.

(பிரதிபேதம்) * யாமுண்மையாக, நானுண்மையாக. † நின்றன. ‡ யானினது தீமையை, || பெறேமேயாதலால், ÷ அல்கலெனவும் விளைவும் தவறிலேன்.

வழியசையும் புணர்த்து, கண்ட *தெவனேதவறென முற்றடியின்றிக் குறைவு சீர்த்தாகிய சொற்சீரடியும்பெற்று, கலிவெண்பாவின் வேறுபட்டு, † "பாநிலை வகையே கொச்சகக் கலியென, நூனவில் புலவர் நுவன்றறைந் தனரே" (க)என்னும் விதியாற் கொச்சகக்கலியாயிற்று. (உ௫)

(௬௧.) அரிநீ ரவிழ்நீல மல்லி யனிச்சம்
புரிநெகிழ் முல்லை நறவோ டமைந்த
தெரிமலர்க் கண்ணியுந் தாரு நயந்தார்
பொருமுரண் சீறச் சிதைந்து நெருநையி
னின்றுநன் றென்னை யணி;

௫ அணைமென்றோளாய், செய்யாத சொல்லிச் சினவுவ தீங்கெவ
னையத்தா லென்னைக் கதியாதி தீதின்மை
தெய்வத்தாற் கண்டீ தெளிக்கு;

௯ மற்றது, அறிவல்யா னின்கு எனைத்தாக நல்லார்
செறிதொடி யுற்ற வடுவுங் குறிபொய்த்தார்
கூருகிர் சாடிய மார்புங் குழைந்தநின்
றுருந் ததர்பட்ட சாந்தமுஞ் சேரி
யரிமதர் உண்கண்ணா ராராக் கவவிற்
பரிசழிந் தியாழநின் மேனிகண் டியானுஞ்
செருவொழிந்தேன் சென்றீ யினி;

க௬ தெரியிழாய், தேற்றாய் சிவந்தனை காண்பாய்நீ தீதின்மை
யாற்றி னிறப்பல் பணிந்து;

க௮ அன்னதே லாற்றல்காண்;
வேறுபட் டாங்கே கலுழ்தி யகப்படின்
மாறுபட் டாங்கே மயங்குதி யாதொன்றுங்
கூறி யுணர்த்தலும் வேண்டாது மற்றுநீ
மாறு செயினு மறுத்தாங்கே நின்வயிற்
காணி னெகிழுமென் னெஞ்சாயி னென்னுற்றாய்
பேணாய்நீ பெட்பச் செயல்.

இதுவும் அது.

இதன் பொருள்.

---

க. தொல். செய். சூ. க௫௫.

(பிரதிபேதம்) * எவனென்றவறெனமுட்டடி. † பாநிலைவகையே.

அரிநீ ரவிழ்நீல மல்லி யனிச்சம்
*புரிநெகிழ் முல்லை நறவோ டமைந்த
தெரிமலர்க் கண்ணியுந் தாரு நயந்தார்
பொருமுரண் சீறச் †சிதைந்து நெருநையி
னின்றுநன் றென்னை யணி

எ - து: ‡நரும்பூவோடே அழகிய நீரில் அவிழ்ந்த அல்லியையுடைய நீலப்பூ அனிச்சப்பூ முறுக்கு நெகிழ்ந்த முல்லைப்பூப் || பொருந்தின (க) மார்பின்மாலையும் ஆராய்ந்த நறியமலராற்செய்த கண்ணியும் விரும்பின பரத்தையர் ஊடுகின்ற மாறுபாட்டாலே கோபித்துப் பற்ற நிறங்கெட்டு என்னையுடைய ஒப்பனை நேற்றையில் இன்றுநன்றாயிருந்ததென்றாள். ÷எ-று.

கண்ணி, வகைமாலை.

"அன்னை யென்னை யென்றலு முளவே, தொன்னெறி முறைமை சொல்லினுமெழுத்தினுந், தோன்றா ×மரபின வென்மனார் புலவர்"(உ)என்பதனால், தலைவனை என்னை யென்றாள்.

சு (ங)அணைமென்றோளாய், செய்யாத சொல்லிச் சினவுவ தீங்கெவ
னையத்தா லென்னைக் கதியாதி தீதின்மை
தெய்வத்தாற் கண்டீ தெளிக்கு

எ - து: அதுகேட்ட தலைவன், அணைபோலு மெல்லிதாய தோளினையுடையாய்! இவன் ✝நீங்கிற் பரத்தையரிடத்தல்லது நீங்கானென்று உட்கொண்டு அவ்வையத்தாலே யான் செய்யாதகாரியங்களைச்சொல்லி இவ்விடத்தே சினக்கின்ற குறை யாதுதான்? என்னிடத்துத் தீதில்லாமையைத் தெய்வத்தாலே நினக்குத் தெளிவிப்பேன்; அதனைக் காண்பாய்; இனி என்னைக் கோபியாதே கொள்ளென்றான். எ - று.

எ மற்றது, அறிவல்யா னின்கு ளணைத்தாக நல்லார்
செறி(ச)தொடி யுற்ற வடுவுங் குறிபொய்த்தார்

---

க. "தாருந் தானையும் பற்றி" அகம். உஎசு: கூ.

உ. தோல். பொருளி. சு. ருஉ.

ங. இந்நூற்பக்கம், ஙசங: ச - ஆம் குறிப்பும் சOO: ச - ஆம் குறிப்பும் பார்க்க.

ச. தொடியால் வடு வுறுத்தலை, கலி. எக. கஙு-ம் அடியாலும் அதன்குறிப்பாலும் உகிரால் வடு வுறுத்தலை, கலி. எஉ: கக-ம் அடியாலும் அதன் குறிப்பாலும் அறிக.

(பிரதிபேதம்) * புரிநெகிழ்ந்தமுல்லை, †சிறைந்து. ‡நாரம்பூவோடே அழகினையுடைய நீரிலே அலர்ந்த. || பொருந்தினதலைமாலையும் ஆராய்ந்த..................கண்ணி. இது வகைமாலை கண்ணியும் மார்பின் மாலையும் பின்னை விரும்பின பரத்தையர், ÷எ- று. அன்னையென்னை. ×மரபினென்மனார். ✝நீங்கிப்பரத்தையரிடத்து.

கூருகிர் சாடிய மார்புங் (௧)குழைந்தநின்
றாருந் (௨)ததர்பட்ட சாந்தமுஞ் சேரி
யரிமத ருண்கண்ணா (௩)ராராக் கவவிற்
பரிசழிந் தியாழநின் மேனிகண் டியானுஞ்
செருவொழிந்தேன் சென்றீ யினி

எ-து: அதுகேட்ட தலைவி, *யான் நீ நீங்கியபின்னர் நீசெய்த காரியமும் அறிவேன்; நின்கூளுறவு பொய்யாதலும் அறிவேன்; புதிய பரத்தையருடைய செறிந்த தொடியழுந்தின வடுவையும் அவர் †முயக்கத்தாற் குழைந்த நின் தாரையும் நீ குறியாற் பொய்க்கப்பட்ட பரத்தையர் கோபித்துக் கூரிய உகிரால் தாம் விரும்பியாங்கு வடுச்செய்த மார்பையும் சேரியிலிருந்த செவ்வரியினையுஞ் செருக்கையுமுடைய மையுண் கண்ணினையுடையாருடைய நிறையாதமுயக்கத்தாலே பூசின பாடழிந்த சிதறுதல்பட்ட சந்தனத்தையுமுடைய நின்வடிவைக் கண்டு இதற்குரிய யானும் நின்னோடு ஊடுதலைத் தவிர்ந்தேன்; இனி அப்பரத்தையரிடத்தே செல்வாயென்றாள். எ - று.

௧௬ தெரியிழாய், தேற்றாய் சிவந்தனை காண்பாய்நீ தீதின்மை
யாற்றி னிறுப்பல் பணிந்து

எ - து: அதுகேட்ட தலைவன் தெரிந்த இழையினையுடையாய்! யான் தெளிவித்ததனைக்கொண்டு நின்னெஞ்சைத் தெளிவியாயாய்க் கோபித்தாய்; யான் தீயேனல்லாமையை நின்னைத்தாழ்ந்து நெறியாலே நின்னெஞ்சிடத்தே நிறுத்துவேன்; அதனைக் காண்பாயாகவென்றான். எ - று.

௧௮ ‡அன்னதே லாற்றல்காண்
வேறுபட் டாங்கே கலுழ்தி யகப்படின்
மாறுபட் டாங்கே ||மயங்குதி யாதொன்றுங்
கூறி யுணர்த்தலும் வேண்டாது மற்றுநீ
மாணா செயினு மறுத்தாங்கே நின்வயிற்
காணி னெகிழுமென் னெஞ்சாயி ÷னென்னுற்றாய்
(௪) பேணாய்நீ பெட்பச் செயல்

---

௧. கலி. ௬௮: ௧௪; ௧௧௨: ௨௩. புறம். ௭௩: ௧௪.

௨. (அ) "ஊன்றதர்ந் திழிந்த வுதிர வெம்புனல்" (ஆ) "மிதிதோற் கொல்லன் பொதியுலைச் செந்தீத், ததர்வனபோலச் சிதர்வன சிந்தி" (இ) "ததரிதழ் ஞாழல்" பெருங். (௧) ௫௨: ௧௧௭, ௫௮: ௯ - ௧௦. (௩) ௯: ௨௩.

௩. "ஆராக் கவவி ஞெருத்தி" கலி. ௯௦: ௧௦.

௪. (அ) "பேணாது பெட்டா ருளர்மன்னோ மற்றவர்க், காணா தமைவில கண்" (ஆ) "பேணாது பெட்பவே செய்யினுங் கொண்கனைக், காணா தமையலகண்" குறள். ௧௧௭௮; ௧௨௮௩.

(பிரதிபேதம்) * யானீங்கியபின்னர் நீ செய்தகாரியமுமறியேன்நின். † முயக்கத்தாற்றுழ்ந்த நின், ‡ அன்னதேயாற்றல், || மயக்குதியாதொறும். ÷ என்றுற்றாய்பேணா

எ - து: அதுகேட்ட தலைவி, இவன் கருத்து இன்னும் தீதின்மையே யென்பது நெஞ்சிடத்தே நிறுத்துதலேயாயின், இவன் வலியை நெஞ்சே காண்பாயாகவென நெஞ்சொடு கூறி, அவனைநோக்கி, யான் நின்னோடு வேறுபட்ட *அப்பொழுதே நெஞ்சு கலங்குவை; யான்வேறுபடாமல் நின்கையிலே அகப்படுவேனாயின், அக்கலக்கத்தை மாறபட்டபொழுதே என்னை இகழ்ந்து பரத்தையர்பாற்சேறற்கு மனம் மயங்குவை; ஆதலால், யாதொரு வார்த்தையையுஞ் சொல்லி என்னை ஊடலுணர்த்துதலும் உனக்கு வேண்டாததொரு காரியம்; † இக்குறையையொழிய நீ வேறு மாட்சிமைப்படாத குறைகளைச் ‡செய்யினும்அவற்றைத்தள்ளி, நின்னைக்காணின், அப்பொழுதே என்னெஞ்சு நின்னிடத்தே நெகிழ்ந்துவருமாயின், என்னெஞ்சின்றன்மையை உட்கொள்ளாயாய் நீ யான் விரும்பும்படி என்னெஞ்சைத் தெளிவிக்குஞ் செயல்களை என்ன காரியத்திற்குச் செய்தாயென ஊடறீர்ந்தாள். எ - று.

இதனால், இருவர்க்கும் புணர்ச்சியாகிய உவகை பிறந்தது.

இஃது ஐஞ்சீரடுக்கியும் ஆறுமெய்பெற்றும் வந்து போக்கின்றி உற்ற உறழ்கலி. "கூற்று மாற்றமு மிடையிடை மிடைந்தும், ||போக்கின்றாக லுறழ் கலிக் கியல்பே" (க)என்பது விதி. (உகூ)

(கூஉ.) புனவளர் பூங்கொடி யன்னாய் கழியக்
கனவெனப் பட்டதோர் காரிகை நீர்த்தே
முயங்கிய நல்லார் முலையிடை மூழ்கி
மயங்கிமற் றாண்டுச் சேறலுஞ் செல்லா

---

க. தொல். செய். சூ. கருசு. இச்சூத்திரத்தினுரையில் உறழ்கலிக்கு இச் செய்யுளைமேற்கோள்காட்டி,"'காணினெகிழும்........செயல்'என்பது வெள்ளைச்சுரிதகமாகாதோ வெனின், ஆகாதன்றே? 'போக்கியல் வகையே வைப்பெனப் படும்'என்றஇலக்கணத்தான் முற்கூறியவற்றை யெல்லாந் தொகுத்து இதன்கண் வைத்தில்லாமையி னென்பது; அல்லதூஉம் அவ்வாறு முடிதலே யன்றி இன்னும் ஓர் கொச்சகம் பெய்து சொல்லி உறழ்ந்த வழியும் அஃதேற் பதாகலான், அஃது ஒருதலையாக அமைந்ததெனப்படாது;என்னை? 'அன்னதேயாயினுமாகமற்றாயிழாய், நின்னகை யுண்க முயங்குவாய் நின்னெஞ்ச, மென்னொடு நின்றதெனின்' என்றாற்போலப் பின்னுமொன்று தலைமகன் உரைத்தற்கு இடம் பட்டு நின்றமையின், இது போக்கியல் வகைத்தாகியவைப் பெனப்படா தென்க" என்பர் பேராசிரியர். நச்சினார்க்கினியரும் இதனையே தழுவிச் சுருக்கி யெழுதுவர்.

(பிரதிபேதம்) * அப்பொழுதே' நின்னெஞ்சு கலங்குவையாயின் வேறு, † இக்குறைகளை' ‡ நீசெய்யினும். || போக்கின் றாதலு முறழ்.

ரு துயங்கி யிருந்தார்க் குயர்ந்த பொருளு
மரிதி னறஞ்செய்யா வான்றே ருலகு
முரிதி னொருதலை யெய்தலும் வீழ்வார்ப்
பிரிதலு மாங்கே புணர்தலுந் தம்மிற்
றருத றகையாதான் மற்று;
கO நனவினுற் போலு நறுநுதா லல்கற்
கனவினுற் சென்றேன் கலிகெழு கூடல்
வரையுறழ் நீண்மதில் வாய்சூழ்ந்த வையைக்
கரையணி காவி னகத்து;
கச உரையினி, தண்டாத்தீஞ் சாய னெடுந்தகா யவ்வழிக்
கண்ட தெவன்மற்று நீ;
கசா கண்டது, உடனமர் ஆயமொ டவ்விசும் பாயு
மடநடை மாயின மந்தி யமையத்
திடன்விட் டியங்கா விமையத் தொருபா
லிறைகொண் டிருந்தன்ன நல்லாரைக் கண்டேன்
றுறைகொண் டுயர்மணன் மேல்; ஒன்றி நிறைவதை
உக ஓர்த்த திசைக்கும் பறைபோனின் னெஞ்சத்து
வேட்டதே கண்டாய் கனு;
உரு கேட்டை, விரையநீ மற்று வெகுள்வா யுரையாண்
டிதுவாகு மின்னகை நல்லாய் பொதுவாகத்
தாங்கொடி யன்ன தகையா ரெழுந்ததோர்
பூங்கொடி வாங்கி யிணர்கொய்ய வாங்கே
சினையலர் வேம்பின் பொருப்பன் பொருத
முனையரண் போல வுடைந்தன்றக் காவிற்
றுனைவரி வண்டி னினம்;
௩O மற்றாங்கே, நேரிணர் மூசிய வண்டெல்லா மவ்வழிக்
காரிகை நல்லார் நலங்கவர்ந் துண்பபோ லோராங்கு மூச (க)
அவருள்,
ஒருத்தி, செயலமை கோதை நகை
ஒருத்தி, யியலார் செருவிற் றொடியொடு தட்ப
௩ரு ஒருத்தி, தெரிமுத்தஞ் சேர்ந்த திலகம்
ஒருத்தி, யரிமா ணவிர்குழை யாய்காது வாங்க

---

க. இஃது ஆறுமெய்பெற்றதென்பதனால் இவ்வாறு பிரிக்கப்பட்டது.

ஒருத்தி, வரியா ரகலல்குற் காழகம்
ஒருத்தி, யரியார் நெகிழத் தணிசுருத் தட்ப
ஒருத்தி, புலவியாற் புல்லா திருந்தா ளலவுற்று
வண்டினை மார்ப விடைவிட்டுக் காதலன்
றண்டா ரகலம் புகும்;

௪௨ ஒருத்தி, யடிதாழ் கலிங்கந் தழீஇ யொருகை
முடிதா ழிருங்கூந்தல் பற்றிப்பூ வேய்ந்த
கடிகயம் பாயு மலந்து;

௪௫ ஒருத்தி, கணங்கொண் டவைமூசக் கையாற்றாள் பூண்ட
மணங்கமழ் கோதை பரிபுகொண் டோச்சி
வணங்குகாழ் வங்கம் புகும்;

௪௮ ஒருத்தி, யிறந்த களியா னிதழ்மறைந்த கண்ணள்
பறந்தவை மூசக் கடிவாள் கடியு
மிடந்தேற்றாள் சோர்ந்தனள் கை;

௫௧ ஆங்க, கடிகாவிற் காலொற்ற வொல்கி யொசியாக்
கொடிகொடி தாமிற் பிணங்கி யவைபோற்
றெரியிழை யார்ப்ப மயங்கி யிரிவுற்றார் வண்டிற்கு
வண்டலவர் கண்டே னியான்;

௫௫ நின்னைநின் பெண்டிர் புலந்தனவு நீயவர்
முன்னடி யொல்கி யுணர்த்தினவும் பன்மாண்
கனவின் றலையிட் டுரையல் சினைஇயான்
செய்வதி லென்பதோ கூறு;

௫௯ பொய்கூறேன், அன்ன வகையால்யான் கண்ட கனவுதா
னன்வாயாக் காண்டை நறுநுதால் பன்மாணுங்
கூடிப் புணர்ந்தீர் பிரியன்மி னீடிப்
பிரிந்தீர் புணர்தம்மி னென்பன போல
வரும்பவிழ் பூஞ்சினை தோறு மிருங்குயி
லானா தகவும் பொழுதினான் மேவர

௬௫ நான்மாடக் கூடன் மகளிரு மைந்தருந்
தேனிமிர் காவிற் புணர்ந்திருந் தாடுமா
றானு விருப்போ டணியயர்ப காமற்கு
வேனில் விருந்தெதிர் கொண்டு.

இது பரத்தையிற்பிரிந்து வந்த தலைவன் வாயில்பெறாது ஆற்றாமை வாயிலாகப் புக்கு, தலைவியை நயப்பித்தல் காரணமாகத் தெய்வமகளிர் *பொய்தலையர்வதோர் கனாக்கண்டேன்; அது †நன்வாயாப் பருவம் வந்து இறுத்தது பாராயென ஊடறீர்வது பயனாகத் ‡தலைவிக்குக் கூறியது.

இதன் பொருள்.

|| புனவளர் பூங்கொடி யன்னாய் கழியக்
கனவெனப் பட்டதோர் காரிகை நீர்த்தே
முயங்கிய நல்லார் முலையிடை மூழ்கி
மயங்கிமற் றாண்டாண்டுச் சேறலுஞ் செல்லா
துயங்கி ÷ யிருந்தோர்க் குயர்ந்த பொருளு
மரிதி னறஞ்செய்யா வான்றோ ருலகு
(க)முரிதி னொருதலை யெய்தலும் வீழ்வார்ப்
பிரிதலு மாங்கே புணர்தலுந் தம்மிற்
+ றருத றகையாதான் மற்று

எ - து: புனத்திடத்துவளர்ந்த பூவையுடைய கொடியையொப்பாய்! (உ) ×பொருள்வயிற்சென்று முயலாதே வருந்தியிருந்தவர்களுக்கு அவர்கள் இருந்த இடங்களிலே இடங்களிலே மிக்க பொருளும் தானே செல்லுதலும் **அரிதாயிருத்தலாலே உலகம்தமக்குஉரித்தாக அறத்தைச்செய்யாது இப்படி இருக்கவும் அறஞ்செய்தற்குஅமைந்தோர் அறுதியாகஅவ்வறத்தைச்செய்தலும் கனவிடத்தின்றாய்ப்போகத் தாம் முயங்கிய மகளிருடைய முலையினிடையிலே அழுந்திய இன்பத்தே மயங்கி விரும்புகின்ற கணவரை மகளிர் (௩) ஊடலாற் பிரிதலும் அப்பொழுதே ஊடறீர்ந்து புணர்தலுமாகிய தம்மின் †† மாறான இன்பத்தைக் ‡‡கனவிடத்தே தருதலை விலக்காதாம்; இனி மிகுத்த காதலாற் கனவென்றுசொல்லப்பட்டது ஓர்அழகினையுடைத்தாகியநீர்மையையுடைத்தாயிருந்த தென்றான். எ - று.

---

க. 'உரிது' இந்நூற்பக்கம் சருரு: க-ஆம் குறிப்புப்பார்க்க.

உ. "சென்றோர் முகப்பப் பொருளுங் கிடவாது" (கலி. கஅ:ரு) என்பதும் (ஆ) "மடியிலான் செல்வம்போன் மரனந்த" (கலி.௩ரு: க.) என்பதும் அதன் குறிப்பில் இவ்விடத்துக்குப் பொருந்துவனவும் ஈண்டு ஒப்பு நோக்கற்பாலன.

௩. "ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பங், கூடி முயங்கப் பெறின்" குறள். க௩௩௦.

(பிரதிபேதம்) *பொய்தலைடுவதோர், †னனவாய்ப்பருவம், ‡தலைவன்றலைவிக்கு, ||புனம்வளர், ÷ இருந்தார்க்கு, + தருதற்கேயாதார் மற்று, × பொருள்வையிற் சென்று, **அரிதாகிருத்தலாலே, †† மாற்றான, ‡‡கனவிடத்தே யொருதலை.

என்றது "இன்பமும் பொருளும் அறனும்"(க)என்றுஆசிரியர்கூறியஇலக்கணம்பற்றிச் சிறந்த இன்பத்தையே*தந்து ஏனைஅறனும்பொருளுந் தாராமற் போயிற்று, † இக்கனவு; ஆதலால், அதனை நூர் காரிகைநீர்த்தென்றான்.

‡ பொருளுமென்ற உம்மை, சிறப்பு. மற்று, அசை.

கo நனவிற் போனு நறுநுதா லல்கற்
கனவிற் சென்றேன் (உ)கலிகெழு கூடல்
(ங)வரையுறழ் நீண்மதில் வாய்சூழ்ந்த (ச)வையைக்
கரையணி காவி னகத்து

எ - து: நறிய நுதலினையுடையாய்! ஆரவாரம்பொருந்தின || மதுரையினுடைய வரையை மாறுபடுகின்ற நீண்ட மதிலிடத்தைச்சூழ்ந்த வையையாற்றங்கரையை அழகுபெறுத்தின பொழிலினிடத்தே நனவிடத்தே சென்றாற்போல இராப்பொழுதிலே கனவிடத்தே சென்றேனென்றான். எ - று.

கச உரையினி, (ரு)தண்டாத்தீஞ் சாய னெடுந்தகா யவ்வழிக்
கண்ட தெவன்மற்று நீ

எ - து: அதுகேட்ட தலைவி, அமையாத இனிய மென்மையினையுடைய (சா)நெடுந்தகாய்! பின்னைநீ அவ்விடத்துக்கண்டது எத்தன்மைத்து?÷அதனை இனிச்சொல்லென்றாள். எ - று.

கரு கண்டது, உடனமர் ஆயமொ டவ்விசும் பாயு
மடநடை மாயின மந்தி யமையத்
திடன்விட் டியங்கா விமையத் தொருபா
லிறைகொண் ×டிருந்தன்ன நல்லாரைக் கண்டேன்
றுறைகொண் டுயர்+மணன் மேல், ஒன்றி நிறைவதை

எ - து: அதுகேட்ட தலைவன், யான்கண்டது கேள்; அன்னங்கள் தன்னிடத்தைவிட்டுப்போகாத இமயமலையில்ஒருபக்கத்தே அழகியவிசும்பிலே

க. தொல். களவு. சூ. க.

உ. "கலிகெழு கூடல்" சிலப். ஙo: கசக.

ங. (அ) "கோடுறழ்ந் தெடுத்த கொடுங்க ணிஞ்சி" பதிற். கசு: க. (ஆ) "கிடங்கை நாமவேலை யாமென; மேக மொண்டு கொண்டெழுந்து விண்டொடர்ந்த குன்றமென், றுகநொந்துநின் றுதாரை யம்மதிற்கண் வீசுமே" கம்ப. நகரப். கரு.

ச. இந்நூற்பக்கம் கசுஉ: க-(ஃ) குறிப்புப் பார்க்க.

ரு. "தண்டாத்தீஞ் சாயற் பரத்தை வியன்மார்ப" கலி. சுங: உ:

சா. இந்நூற்பக்கம் சக: க-ஆம் குறிப்புப்பார்க்க.

(பிரதிபேதம்) * தந்தனை யறனும், † கனவாதலால், ‡ பொருளும்உம்மை, || மதுரையினை யுடைய, ÷ அதினைச்சொல், × இருந்தன நல்லாரை, + மணன்மேல். சு-து.

இரைகவர்ந்த இளைப்பால் ஓய்ந்து பறக்கும் மடப்பத்தையுடைத்தாகிய நடையினையுடைய அன்னத்திரள் அந்திக்காலத்தே தங்குதல்கொண்டிருந்த தன்மையவாக, துறை தன்னிடத்தேகொண்டு உயர்ந்த மணற்குன்றிலே நல்லார், தம்முடனே அமர்ந்த ஆயத்தாருடனே பொருந்தி நிறைந்திருக்கின்ற தனைக் கண்டேனென்றான். எ - று.

மா + இனம் மாயினமென மரூஉவான் (க) யகரவுடம்படுமெய் பெற்றது. அன்னவாகவெனவிரிக்க.

உக (உ)ஓர்த்த திசைக்கும் பறைபோனின் (௩)னெஞ்சத்து
வேட்டதே கண்டாய் கனா

எ - து: அதுகேட்ட தலைவி, கொட்டுகின்றவன் தன்மனத்தில் ஓர்த்த இசையைத் தானும் ஒலிக்கும் பறைபோல நின்னுடைய நெஞ்சத்து விரும்பின இன்பத்தையே கனாவாகக் கண்டாயென்றாள். எ - று.

உ௩ கேட்டை, விரையணி மற்று வெருள்வா யுரையாண்
டிதுவாகு மின்னகை நல்லாய் பொதுவாகத்
தாங்கொடி யன்ன தகையா ரெழுந்ததோர்
பூங்கொடி வாங்கி யிணர்கொய்ய வாங்கே
(௪)சினையலர் வேம்பின் பொருப்பன் பொருத
முனையரண் போல வுடைந்தன்றக் காவிற்
றுனைவரி வண்டி னினம்

---

க. 'கோயில்' 'மாயிருஞாலம்' என வருதலையும் நோக்குக.

உ. "ஓர்த்த திசைக்கும் பறை" என்னும் பழமொழியும் "இரட்டுறு முரச மென்ன விசைத்ததே யிசைக்கின் றுயை" என்னும் கம்பர் வாக்கும் ஈண்டு ஒப்புநோக்கற்பாலன.

௩. "வானர மகளிரிற் றுனணி சுடர, முகைநலக் காந்தண் முகிழ்விர லேவத், தகைமலர்ப் பொய்கைத்தண்செங்கழுநீர், சில்லெனப்பிடித்து மெல்லென விழிந்து, நண்ண வருவோள் போலுமென்க,; ஞற்றே னவட னஞ்சாந் தினமுலை, நோற்றே யாயினு நுகர்வல் யானெனத், தெய்வ நல்யாழ் கையமைத் தியற்றிய, வைதேந் தல்கு லவந்திகை வீவு; முறுதுணைத் தோழ னிறுதியு நிலையான், மாசண்ட சூழ்ச்சி மந்திர வமைச்சர், வேண்டுங் கொள்கைய ளாகி நீண்ட, தடம்பெருங் கண்ணி தகைபா ராட்டி, யுறவகை யன்ன றறுகண் பொருந்தலுங், கைவயிற் கொண்ட கழுநீர் நறும்போது, கொய்மலர்க் கண்ணி கொடுப்போள் போலக், கனவிற் றேன்ற" பெருங். (௩) எ: ௬௧ - ௬௫.

௪. "சினையலர் வேம்பன் றேரா னாகி" சிலப். பதிகம். உ௮.

எ - து: அதுகேட்ட தலைவன், நீவிளையாதேகொள்; பின்னைக் கோபிப்பா யென்முன். அதுகேட்ட தலைவி மேல் உரையென்முள். அதுகேட்ட தலைவன் இனிய நகையினையுடைய நல்லாய்! ஆண்டுப் பிறந்தது இதுவாயிருக்கும்; அதனைக்கேள்; கொடியையொத்த அழகினையுடையார் தாம் அக்காவிடத்து எழுந்து நின்றதோர் பூங்கொடியை எல்லார்க்கும் பொதுவாகக் கொண்டு வளைத்து அதிற் கொத்துக்களைப் பறிக்க விரைந்த வரியினையுடைய வண்டினின்றிரள் கொம்புகள் அலர்ந்த வேப்பந்தாரினையுடைய (க) * பொதியிலையுடையவன் பொருத பகைப்புலத்து அரண்போல அவ்விடத்தே உடைந்தது. எ - று.

உடைந்தன்றென்பது, றகரம்ஊர்ந்த குன்றியலுகரவீற்று முற்றுச்சொல்; "வந்தன்று" (உ)என்பதுபோல.

௩.0 மற்றாங்கே, நேரிணர் மூசிய (௩)வண்டெல்லா மவ்வழிக்
காரிகை நல்லார் நலங்கவர்ந் துண்டபோ †லோராங்கு மூச
அவருள்,

---

க. பொருப்பென்பது பொதியின்மலைக்குப் பெயராய் வருதலை இந்நூற் பக்கம் ககூ௫: க - ஆம் குறிப்பாலும் "பொருப்பு நறுஞ்சந் தனஞ்சேறு" (பிரபு. பிரபுதேவர். ௬0.) என்பதனாலும் அறிக.

உ. கலி. உ௬: உ௫; ௩உ: க௮; ௩௩: ௮; ௩௬: க0; க௪௩: ௬க.

௩. (அ) "வண்டு வழிபடரும் வாட்கண்ணாய்" (ஆ) "பூப்பிழைத்து வண்டு புடையாடுங் கண்ணாய்" (இ) "எதிர்நீர் தாவு மிளையோர் திருமுகத், தாழ மிகவா வரிபரந் தகன்ற, மாழை யுண்கண் மலரென மதித்துத், தண்செங் கழுநீர்த் ததைமலர்த் தாது, மொண்செந் தாமரைப் பைம்பொற் றாது, மாராய்ந் துழிதரு மஞ்சிறை வண்டின, மோராங்கு நிலைபெற் றுண்ணெகிழ்ந் தவிழ்ந்த, போர விவையெனப் பேர்தல் செல்லா, மொய்த்தலின் மற்றவை மொய்ப்பினீங்கத், தத்தரிநெடுங் கண் டகைவிரல் புதைஇப், புதுமணமகளிரிற் கதுமெனத் தோன்று, மதுர மழலை மடவோர்க் காண்மின்"(ஈ)"ஆட்டு குங்குமக் கொழுங்களி யளாயசெங் கமலஞ், சேட்டிளங்கதிர் முலையென வொழிந்துவெண் டிங்கள், காட்டு வாணுதற் கன்னிய ரெழுதுசாந் தழிந்த, மோட்டு வெம்முலை முளரியென் றளிகுல மொய்ப்ப" (உ)"விரும்பித் தேனுகர் வீகளை யுந்தொறுங், கரும்பிற்றேமொழிக் காரிகை யார்முலைச், சுரும் புற் றூர்ப்பவித் தோடவிழ் செவ்விய, வரும்பிற் றேனுமுண் பாமெனு மாசையால்" (ஊ)"களையக் கைகளை பற்று தொழுந்தொழி, லுளையப் பூவென் றெளிமுகம் பாய்வன, விளைமட் டேட்டலர் வீத னிறுத்துமத், தெளிவைத் தேறிய போற்சிறை வண்டினம்" என்பவை இங்கே அறிதற்பாலன.

(பிரதிபேதம்) * பொதியினையுடையவன். † லோராங்காங்க மூச வவருள்.

ஒருத்தி, செயலமை கோதை நகை
ஒருத்தி,*யியலார் செருவிற் றொடியொடு தட்ப
ஒருத்தி, தெரிமுத்தஞ் சேர்ந்த (க)†திலகம்
ஒருத்தி, ‡யரிமா ணவிர்குழை யாய்காது வாங்க
ஒருத்தி, வரியா ||ரகலல்குற் காழகம்
ஒருத்தி, யரியார் ஞெகிழத் தணிசுருத் தட்ப
(உ)ஒருத்தி, புலவியாற் புல்லா திருந்தா ளலவுற்று
வண்டின மார்ப்ப ÷விடைவிட்டுக் காதலன்
றண்டா ரகலம் புகும்

எ - து: பின்னை அப்படியே உடைந்த, தம்மிலொத்த இணர்களிலே மொய்த்த வண்டுகளெல்லாம் அவ்விடத்து நின்ற அழகினையுடைய மகளிர் நலத்தைக் கைக்கொண்டு நுகர்வனபோல, ×ஒருபடிப்பட மொய்க்கையினாலே அவ்வண்டின் போரிலே அவர்களில் ஒருத்தியுடைய பூமாலையும் பண்ணுத லமைந்த முத்தமாலையும் வேறொருத்தியுடைய அசைதலார்ந்த தொடியோடே தடுத்துக்கொள்ளாநிற்க, ஒருத்தியுடைய நெற்றியிற் றிலகத்தைச் சேர்ந்த தலையிற் கிடந்த தெரிந்த முத்துவடத்தை வேறொருத்தியுடைய அழகினை யுடைய காதிற்கிடந்த அழகுமாட்சிமைப்பட்ட விளங்குகின்ற மகரக்குழை துடக்கிக்கொள்ளாநிற்க, ஒருத்தியுடைய திதலைநிறைந்த அகன்ற அல்குலிற் றுகிலை வேறொருத்தியுடைய உள்ளிடுமணியமைந்த சிலம்பிடத்திற் கிடந்த சுருவடிவாகியமூட்டுவாயிரும்புகள்(?)தளைத்துக்கொள்ளாநிற்க,ஒருத்திபுலவியாலே கணவனைப் புல்லாதிருந்தவள் வண்டினம் மொய்த்து ஆரவாரிக்கையினாலே +வருத்தமுற்று அப்புலவியை நடுவேகைவிட்டுக் கணவன்வணங்குகையினாலே அவனுடைய குளிர்ந்த மாலையையுடைய மார்பிடத்தே முயங்கும். எ - று.

**செயவெனெச்சங்கள் புகுமென்னும் பிறவினை கொண்டன.

௪௨ ஒருத்தி,அடிதாழ்(உ)கலிங்கந் தழீஇ யொருகை
முடிதாழிருங்கூந்தல் பற்றிப்பூ வேய்ந்த
கடிகயம் ††பாயு மலந்து

க. திலகமென்பது சாந்துமுதலியவற்றைக் குழைத்தணியும்நெற்றிக்குறிக் கன்றியும் ஓரணிகலத்துக்கும் பெயரென்று தோன்றுகிறது; 'ஒண்ணுதல் யாத்த திலக வவிரோடை" கலி. ௯௭: ௧௧. என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

உ. (அ)"அகிலேந்துகூந்தலொருகையிலேந்தியசைந்தொருகை,துகிலேந்தி" (தஞ்சை. உஎ.) என்பதும் (ஆ) "புதல்வரை யொருகையாற் றழீஇப்,

(பிரதிபேதம்) * இகலார், † திலதம், ‡ வரிமாண், || அகலல்குலிற்காழகம். × ஒருபடிப் படிபொய்கையினாலே. + வருத்தமுற்ற புலவியை. **செய்தெனெச்சங்கள், †† பாயுமலர்ந்து.

எ - து: ஒருத்தி, அடியிலே தாழ்ந்த *துகிலை ஒருகையாலே தழுவிக்கொண்டு மற்றைக்கையாலே முடிந்த முடி குலைந்த கரிதாகிய கூந்தலைப் பிடித்துக்கொண்டு அலவுற்று மிகுதியையுடைய பூ வேய்ந்த குளத்திலே பாயாநிற்கும். எ - று.

சரு (க)ஒருத்தி, கணங்கொண் டவைமூசக் கையாற்றாள் பூண்ட
மணங்கமழ் (உ)கோதை பரிபுகொண் டோச்சி
வணங்குகாழ் வங்கம் புகும்

எ - து: ஒருத்தி, திரட்சிகொண்டு வண்டுகள் மொய்க்கையினாலே கையாற் கடியமாட்டாளாய் மணம் நாறுகின்ற மாலையை அறுத்துக்கொண்டு ஓட்டி, அதற்கு(ந) அவை போகாமை கண்டு வளைந்த தண்டுகள் தனக்கு உள் வலியாக உள்ளே பூண்ட ஓடத்தே பாயும். எ - று.

காழ்பூண்டவென்க. பரிபு, † செய்பெனெச்சம்.

சஅ ஒருத்தி; இறந்த களியா னிதழ்மறைந்த கண்ணள்
பறந்தவை மூசக் கடிவாள் (ச)கடியு
மிடந்தேற்றாள் சோர்ந்தனள் கை

பவழஞ் சேர்ந்த பல்காழல்குல, ரவிழ்ந்த பூந்துகி லங்கையி னசைஇ, நகைப்பூங் கோதையொடு நான்ற கூந்தற்கு, மிகைக்கை காணாது...... பொய்கை புக்கனர்" (பெருங். (க)சங:கசரு-கருஉ) என்பதும் காண்க.

க. "பொறிவரி வண்டினம் புல்லுவழி யன்றியு, நறுமலர் மாலையின் வறிதிடங் கடிந்தாங்கு" என்புழி, புல்லுதல் என்பதற்கு, இன மென்று புல்லுத லென்று பொருள் கூறி, "ஒருத்தி கணங் கொண்டவை...... ..... கொண்டோச்சி", "ஒருத்தி, இறந்த...........சோர்ந்தனள் கை" என்பவற்றை மேற்கோள்காட்டினர் அடியார்க்குநல்லார்; சிலப். கச: கஙச - கசரு. உரை.

உ. (அ) "வண்டே வம்மருங்கு ளேமென்று பூமாலை, கொண்டோச்சுங் காதலார்" (ஆ)"கற்பெனு மாலை வீசி நாணெனுங் களிவண் டோப்பிச், சொற்புக ரின்றித் தோழிக்கறத்தினே டரிவை நின்றாள்"சீவக. கஎ00, உ0எங.

ங. (அ) " நதியினுங் குளத்தும் பூவா நளினங்கள் குவளை யோடு, மதிநுதல் வல்லி பூப்ப நோக்கிய மாலைத் தும்பி, யதிசய மெய்திப் புக்கு வீழ்ந்தன வலைக்கப் போகா, புதியன கண்ட போழ்து விடுவரோ புதுமை பார்ப்பார்'' கம்ப. பூக்கொய். க. (ஆ) "கோல நாண்மலர் கொய்பவ ளங்கையி, லோவி டுஞ்சுரும் போச்சவும் போகில, மாலுழந்து மறிந்து விழுவன" நைடத. போதுகொய். கச.

ச. (அ) "நட்பாட றேற்றாதவர்" என்புழி,,தேற்றாமை தன்வினையாய் நிற்றற்கு,"கடியு, மிடந்தேற்றாள் சோர்ந்தனள் கை" என்பதுமேற்கோள்;

(பிரதிபேதம்) * துகிலினை, † செய்தெனெச்சம்.

எ - து: ஒருத்தி அறிவுபோதற்குக் காரணமான (க)*கள்ளின்களிப்பால் இமை கூடுகையினாலே † பார்வை மறைந்த கண்ணையுடையளாய்ப் பறந்த வண்டுகள் மொய்க்க ஓட்டுகின்றவள் தன் களிப்பாலே அவற்றை ஓட்டுமிடம் அறியாளாய்க் கைசோர்ந்தாள். எ - று.

கைசோர்ந்தனள்; சினைவினை, முதலொடு முடிந்தது.

டுக ஆங்க, உரையசை ; அங்ஙனே ‡யெனநின்றது.
(உ)கடிகாவிற் காலொற்ற வொல்கி யொசியாக்
கொடிகொடி தம்மிற் பிணங்கி யவைபோற்
றெரியிழை யார்ப்ப மயங்கி யிரிவுற்றார் வண்டிற்கு
||வண்டலவர் கண்டே னியான்

எ - து: விளையாட்டையுடைய மகளிர், மிகுதியையுடைய பொழிலிலே காற்றடிக்க ஒதுங்கி வளைந்து கொடியுங் கொடியும் தம்மிற் பிணங்கியவை போலத் தெரிந்த அணிகள் ஆரவாரிப்பத் தம்மிலேமயங்கி அவ்வண்டுகளுக்குக் கெடுதலுற்றார்; யான் கனவைக்கண்டேனென்றான். எ - று.

டுடு நின்னைநின் பெண்டிர் புலந்தனவு (ங)நீயவர்
முன்னடி யொல்கி யுணர்த்தினவும் பன்மாண்
கனவின் றலையிட் டுரையல் சினை இயான்
செய்வதி லென்பதோ கூறு

துறள். கஅஎ. பரி. (ஆ) "தேற்றாப் புன்சொ ணோற்றிசிற் பெரும" புறம். உ0உ: கசு.

க. (அ)"அந்தீந் தேறன் மாந்தினர் மயங்கிப், பொறிவரி வண்டினம் புல்லு வழி யன்றியு, நறுமலர் மாலையின் வறிதிடங் கடிந்தாங்கு" சிலப். கச: கஙங - கஙடு. (ஆ) "கூடிய நறைவாயிற் கொண்டன விழிகொள்ளா, மூடிய களிமன்ன முடுகின நெறிகாணா, வாடிய சிறைமாவண் டந்தரி னிசைமுன்னாப், பாடிய பெடைகண்ணா வருவன பலகாணாய்" கம்ப. வனம்புகு. கங.

உ. (அ) கடியென்னும் உரிச்சொல் காப்பு என்னும் பொருளில் வருதற்கு, 'கடிகா' என்பது மேற்கோள்; தோல். உரிச். கூ அஎ. சேனா. (ஆ) "உறுகா லொற்ற வொல்கி" நற். ங00: ங. (இ) "கடிகாவிற் காற்றுற் றெறிய வெடிபட்டு, வீற்றுவீற் றோடு மயிலினம்போ- லாற்றிசையும், கேளி ரிழந்தா ரலமருப" களவழி. உக.

ங. "நீ தீயே னலேனென்று மற்றவள், சீறடி தோயா விறுத்தது" கலி. கூ0; கஎ - கஅ.

(பிரதிபேதம்) * களிப்பால், † பாவை மறைந்த. ‡ எனனென்றது, || வண்டலவாய வாக்கண்டேன்,

எ - து: அதுகேட்ட தலைவி, நின்னை நின்னுடைய பெண்டிர் புலந்தன வற்றையும் நீ அவருடைய அடிமுன்னே வணங்கிப் புலவி தீர்த்தனவற்றையும் (க)பலபடியாகக் கனவின்மேலிட்டுக் கூறுதல், யான் *சினந்து செய்வதொரு படிறின்றென்பதனை உட்கொண்டோ? சொல்லென்றாள். எ - று.

உரையல், படுத்தலோசையாற் றொழிற்பெயராயிற்று.

ருக பொய்கூறேன், †அன்ன வகையால்யான் கண்ட ‡கனவுதா
னன்வாயாக் காண்டை நறுநுதால் பன்மாணுங்
(உ)கூடிப் புணர்ந்தீர் பிரியன்மி ||னீடிப்
பிரிந்தீர் புணர்தம்மி னென்பன போல
வரும்பவிழ் பூஞ்சினை தோறு மிருங்குயி
லானா தகவும் பொழுதினான் மேவர
சுரு நான்மாடக் கூடன் (ங)மகளிரு மைந்தருந்
தேனிமிர் காவிற் புணர்ந்திருந் தாடுமா
ரானா விருப்போ டணியயர்ப காமற்கு
வேனில் விருந்தெதிர் கொண்டு

எ - து: அதுகேட்ட தலைவன், யான் பொய்சொல்லேன்; நறிய நுதலினை யுடையாய்! பல மாட்சிமையும் உண்டாய்ப் புணர்ந்தீர் பிரியாதேகொள்ளும்;

---

க. இந்நூற்பக்கம் உஅஅ: ங - ஆம் குறிப்புப்பார்க்க.

உ. (அ) "புணர்ந்தீர் புணர்மி னோவென விணர்மிசைச், செங்க ணிருங் குயி லெதிர்குரல்பயிற்று, மின்ப வேனிலும்வந்தன்று" (ஆ) "பொதும்பு தோ றல்கும் பூங்க ணிருங்குயில், கவறுபெயர்த் தன்ன நில்லா வாழ்க் கையிட், டகற லோம்புமி னறிவுடை யீரெனக், கையறத் துறப்போர்க் கழறுவ போல, மெய்யுற விருந்து மேவர நுவல" நற். உஉச: ச - சு. உசங: ச - அ. (இ) "ஊடினீ ரெல்லா முருவிலான் றன்னாணை, கூடுமி னென்று குயில்சாற்ற - நீடிய, வேனற்பா ணிக்கலந்தாண் மென்பூந் திருமுகத்தைக், கானற்பா ணிக்கலந்தாய் காண்" சிலப். அ. இறுதி.

ங. (அ) "தேவியருந் திருமாலுஞ் செழுமலர்த்தார்த் தனஞ் சயனுந் தேவி மாரு, மேவியனந்தரம்வேனில் விழவயர்வான்முரசறைந்து வீதிதோறு, மோவியமு முயிர்ப்பெய்தவுபேந்திரனுமிந்திரனுமுவமைசாலப், பூவின முஞ் சுரும்புமெனப் புரமுழுதும் புறப்படவண் பொங்கர் சேர்ந்தார்" வில்லி. வசந்தகாலச்: ச. (ஆ) "விருந்து வேனிலாற் கெதிரிய விரை மலர்க் காவு, முருந்து வாணகை முகிழ்முலை மடைந்தையோ டாடிப், பொருந்த விண்ணிடைப் போகமுண் டுவந்தனர்போன்றான்" நைடதம். அரசாட்சி. கரு. (இ) கலி. உஎ: உச, ஙO: கங - கச, ஙரு: கங-கச.

(பிரதிபேதம்) *சினந்து. †அனவகை, ‡கனவுத்தா, னனவாகக்கண்டை. || நீடிப்புணர்தம்மின்.

புணர்ச்சி நீட்டித்து இடையே பிரிந்தீர்! கூடுதலைத் தருமினென்று கூறுவன் போல, கரியவாகிய குயில்கள் அரும்பு அவிழ்ந்த பூக்களையுடைய கொம்புகடோறும் இருந்து அமையாமற் பெடையை அழைக்கும் இளவேனிற்பொழுதின் கண்ணே காமற்கு விருந்திடுதலை மேவுதல்வர எதிர்கொண்டு கூடலின் மகளிரும் அவர் கணவரும் தேனினம் ஒலிக்குங் காவிலே கூடியிருந்து விளையாட வேண்டி அமையாத விருப்பத்தோடே அணிகளை அணிவார்; ஆதலாற் பிரிதலும் புணர்தலுமாகிய கூற்றாலே யான்கண்ட கனவு நன்றாகிய உண்மையாம்படி நெஞ்சாலே(க)கருதுவாயென்றான். எ - று.

கனவு(உ)செய்யுண்முடிவு. (௩)நான்கு மாடங்கூடலின், நான்மாடக்கூடலென்றாயிற்று; அவை: திருவாலவாய்,திருநள்ளாறு,திருமுடங்கை,திருநடுவூர்.

---

க. காணுதல், கருதுதலென்னும் பொருளிலும் வருதல்: கலி. ௧௦: ௨௩.

௨. தொல். உயிர்மயங்கியல். ௬. ௩௨.

௩. (அ) "நான்மாடக் கூட லெதிர்கொள்ள" பரி. 'வானுரெழிலி' ௩. (ஆ) "தென்னவ, னுன்மாடக் கூட னகர்" பரி: உலகம்: ௩ - ௪. (இ) "உம்பரு நாக ருலகந் தானு மொலிகடல் சூழ்ந்த வுலகத் தோரு, மம்புத நால்களா னீடுங் கூட லாலவா யின்க ணமர்ந்த வாறே" தே. (ஈ) "நன்றறிவார் வீற்றிருக்கு நான்மாடக் கூடல்வள நகரி யாளும், வென்றிபுனைவடிசுடர்வேன்மீனவனை"வில்லி·அருச்சுனன்றீர்த்த.௨க. (உ) "வியந்தநான் மேகக் கூடல் விளங்கு நான் மாடக் கூடல்" (ஊ) "வாடுவோர் தம்மைப் போற்ற வயங் கொளி மாநகர்க்கட், கூடுமேக நான்கு மாடமாக் கூடலாலே, நாடவ ரதிசயிப்ப நான் மாடக் கூட லென்று, பீடுடை நகர்க்கு நாம மெங்கணும் பிறங்கிற்றன்றே" திருவால. திருநகர. ௬. நான்மாடக் கூடலான: க௨. (எ) "முன்னவன் முன்போ னுன்கு முகிலையு நோக்கி யின்ன, தொன்னக ரெல்லை நான்குஞ் சூழ்ந்துநான் மாட மாகி, வின்னெடு மாரியேழும் விலக்குமி னெனவி டுத்தான்", "வந்துநான் மாட மாகி வளைந்துநாற் றிசையுஞ் சூழ்ந்து, சந்துவாய் தெரியா தொன்றித் தாமொரு குடிலாய் மாடப், பந்திகோ புரஞ்செய் குன்றங் கால்கள் போற் பரிப்பப் போர்த்த, விந்துவார் சடையோ னேய வெழிலிமா நகரமெங்கும்", "அன்னநான் மாடத் துள்ளு நகருளா ரமைச்சர் வேந்தன், றன்ன நாற் கருவித் தானை சராசரம் பிறவுந் தாழ்ந்து, முன்னை நா டனினு மின்ப மூழ்கினன் கிருந்தார்" திருவிளை. நான்மாடக் கூடலான. க௪ - க௬. என்பவைகளும் (ஏ) "மாடம் பிறங்கிய மலிபுகழ்க் கூடல்...........மதுரை" (மது. ௪௨௯ - ௬௯௯) என்பதற்கு, 'நான் மாடத்தாலே மலிந்த புகழைக் கூடுதலையுடைய மதுரை' என்று இவர் எழுதியிருக்கும் உரையும் (ஐ) இந்நூற்பக்கம் க௯௪: உ-ஆம் குறிப்பும் இங்கே அறிதற்பாலன.

இனி,(க)கன்னி, கரியமால், காளி, ஆலவாய் என்றுமாம். புணர்தம்மின்: "நல் லெயி லுழந்த *செல்வர்த் தம்மின்" (உ)என்றாற்போலத் திரிசொல்.

இஃது, † "உறலருங் குண்மையி னூடன் ‡ மிகுந்தோளைப், பிறபிற பெண்டிரிற் பெயர்த்தற் கண்ணும்" (ங) என்பதனுற் பிறபிற பெண்பால் காட்டி || ஊடறீர்த்தது. புல்லாதிருந்தாளென்றதனுன் ஊடன்மிகுதி கூறி, மகளிரும்மைந்தரும் விருந்தெதிர்கொண்டுஅணியயர்வர்; நாமும் ÷ அதுசெய்ய வேண்டுமென்றவாறு காண்க.

இதனுல், தலைவற்குக் கனவு மூதற் றோன்றிப் பின்னர் விரைவு தோன் றிற்று. இது "யாறுங் குளனுங் காவு மாடி" என்னுஞ்(ச)சூத்திரத்தாற் காவிற் புணர்ந்திருந்தாட நீயுங் கருதெனத் தலைவிக்குக் + கூறியது.

இஃது ஐஞ்சீரடுக்கியும் ஆறுமெய்பெற்றும் வந்த கலிவெண்பா; ஆசிரியத் தளையும் வந்தது. (உஎ)

(கூ௲.) வண்டூது சாந்தம் வடுக்கொள நீவிய
தண்டாத்தீஞ் சாயற் பரத்தை வியன்மார்ப

---

க. (அ) "வடதிரு வால வாய்திரு நடுவூர்.........கன்னிசெங் கோட்டங் கரியோன் றிருவுறை" கல். சுக. (ஆ) "காய்சின மயிடற் காய்ந்த கன்னிமுன் காக்கு மூதூர்" (இ) "கனகவெண் சங்கச் செங்கைக் கரியமால் காக்கு மூதூர்" (ஈ) "சீருடைக் காளி நாமச் செல்விமுன் காக்கு மூதூர்" (உ) "ஆலவாய்த் தரும மூர்த்தி, யெங்கிலத் தினுமு யர்ந்த திங்கில மென்று தோன்ற, மன்னுமைக் குரைத்து மற்றை மாதிரங் காக்கு மூதூர்" திருவால. திருநகரச்சிறப்பு. கஉ - கரு.

உ. மது. எஙக.

ங. (அ) தொல். கற்பி. சூ. ரு. இதனுரையில், தலைவன் பிறபெண்டிரோது வாக ஊடன்மிக்கவளை ஊடலுணர்த்தியதற்கு, "ஒருத்தி புலவியாற்... .........அகலம்புகும்" என்பதை மேற்கோள் காட்டினர் இளம்; (ஆ) நச்சினார்க்கினியர் இதனோடு "அன்னவகையால்...........கொண்டு" என்பதையுஞ்சேர்த்துக்காட்டி, 'புல்லாதிருந்தாளென்றதனுன்ஊடன் மிகுதி தோன்றுவித்து, மகளிருமைந்தரும் வேனில் விழாச்செய்கின் றார்; நாமும்அதுசெய்யவேண்டுமென்றுகூறியவாறுகாண்க' என்றனர்.

ச. தொல். கற். சூ. ருo. (அ) இச்சூத்திரத்தின் இவருரையில் இச்சரிதகம் காவிற் புணர்ந்திருந்தாட நீயுங் கருதெனத் தலைவன் தலைவிக்குக் கூறியதற்கு மேற்கோள். (ஆ) தொல். புறத். சூ. ஙஉ. இவருரையில், "இதனுள் ஆறுகூறினர்; 'புனவளர் பூங்கொடி' என்னு மருதக் கலியு மது" என்று காணப்படும் பகுதி இங்கே ஆராய்தற்பாலது.

(பிரதிபேதம்). * செல்வர்தம்மின். † உறலருங்குடைமையின், உறலருங்குரைமையின், ‡ மிகுத் தோளை, || ஊடறீர்த்தான், ÷ அதுவேண்டுமென்ற வாற்றாற்காண்க, + கூறி னன் இது முச்சீரடுக்கியும்.

பண்டின்னை யல்லமன் னீங்கெல்லி வந்தியக்
கண்ட தெவன்மற் றுரை;

௫ நன்றாம், தடைஇய மென்றோளாய் கேட்டீவா யாயி
னுடனுறை வாழ்க்கைக் குதவி யுறையுங்
கடவுளர் கட்டங்கி னேன் ;

௮ சோலை, மலர்வேய்ந்த மான்பிணை யன்னார் பலர்நீ
கடவுண்மை கொண்டொழுகு வார்;

௧௦ அவருள், எக்கடவுண் மற்றக் கடவுளைச் செப்பீமன்

முத்தேர் முறுவலாய் நாமணம் புக்கக்கா
லிப்போழ்து போழ்தென் றதுவாய்ப்பக் கூறிய
வக்கடவுண் மற்றக் கடவு ளதுவொக்கும்
நாவு ளழுந்து தலைசாய்த்து நீகூறு
மாயமோ கைப்படுக்கப் பட்டாய்நீ கண்டாரை
வாயாக யாங்கூற வேட்டீவாய் கேளினி ;

௧௭ பெறனசை வேட்கையி னின்குறி வாய்ப்பப்
பறிமுறை நேர்ந்த நகாராகக் கண்டார்க்
கிறுமுறை செய்யு முருவொடு நும்மிற்
செறிமுறை வந்த கடவுளைக் கண்டாயோ ;

௨௧ நறுந்தண் டகரமு நானமு நாறு
நெறிந்த குரற்கூந்த லணிக் கொப்ப
நோக்கிற் பிணிகொள்ளுங் கண்ணொடு மேனணி
பூப்பலி விட்ட கடவுளைக் கண்டாயோ ;

௨௫ ஈரணிக் கேற்ற வொடியாப் படிவத்துச்
சூர்கொன்ற செவ்வேலாற் பாடிப் பலநாளு
மாராக் கணிகாமங் குன்றத்து நின்னொடு
மாரி யிறுத்த கடவுளைக் கண்டாயோ ;

௨௯ கண்ட கடவுளர் தம்முளு நின்னை
வெறிகொள் வியன்மார்பு வேறாகச் செய்து
குறிகொளச் செய்தார்யார் செப்புமற் றியாருஞ்
சிறுவரைத் தங்கின் வெகுள்வர் செறுதக்காய்
தேறினேன் சென்றீநீ செல்லா விடுவாயே
னற்று ரகலத்துக் கோர்சார மேவிய

கெட்டிருங் கூந்தற் கடவுள ரெல்லார்க்கு
முட்டுப்பா டாகலு முண்டு.

இது "காவற் பாங்கி னாங்கோர் பக்கமும்" (க) என்புழி, ஆங்கோர் பக்கமான (உ) கடவுளரைக்கண்டு தங்கினேனென்ற தலைவற்கு நீ கண்ட கடவுளர் இவரெனக் கூறிப் புலந்தது.

இதன் பொருள்.

(ங)வண்டேது சாந்தம் வடுக்கொள நீவிய
(ச)தண்டாத்திஞ் சாயற் பரத்தை வியன்மார்ப
பண்டின்னை யல்லைமன் னீங்கெல்வி வந்தீயக்
கண்ட தெவன்மற் றுரை

எ-து: அமையாத இனிய மென்மையினையும் *பரத்தைமைக் குணத்தையு முடைய, வண்டுகள் ஊதுஞ்சந்தனத்தைக் கை வடுக்கொளப் பூசின அகற்சியை யுடைய மார்பனே ! முன்பு இத்தன்மையையுடையையல்லை; (ரு)அத்தன்மை போயிற்று; இவ்விடத்து இராக்காலத்தேவா நீ புறத்துப்போய்க் கண்ட விநோதம் எத்தன்மைத்து ? பின்னை அதனைக் கூறென்றாள். எ - று.

ரு நன்றும், (சு)தடைஇய மென்றோளாய் கேட்டீவா யாயி
(எ)னுடனுறை †வாழ்க்கைக் குதவி யுறையுங்
கடவுளர் கட்டங்கி னேன்

---

க. தொல். அகத். சூ. சக.

உ. கடவுளர்மாட்டுப் பிரிந்து வந்த தலைமகனைத் தலைவி புணர்ச்சி மறுத்தற்கு இச்செய்யுளை மேற்கோள் காட்டி, இது புணர்ச்சிக்கு உடன்படாது கூறியதென்றும், கலித்தொகையில், கடவுட் பாட்டினுள் உரிப்பொருண்மைபற்றிவரும்பாட்டு மருதநிலத்துத் தலைமகன்பெயர் கூறாது பிறபெயர்படக் கோத்தமையானும் ஊடற்பொருண்மையின் வேறுபாடுண்மை அறிகவென்றும் கூறுவர் இளம்பூரணரும்; தொல். அகத். சூ. சச. 'ஒன்றாத்தமரினும்'

ங. 'வண்டேதுதல்' சீவக. கஎ00; நள. சுயம்: கூக; காஞ்சி. சித்தீசப். க.

ச. "தண்டாத்திஞ் சாய னெடுந்த காய்" கலி. கூஉ: கச.

ரு. "கழிவே........என்ப மன்னைச் சொல்லே" தொல். இடை. சூ. ச.

சு. (அ) "அம்பணைத் தடைஇய மென்றோள்" நெடுநல். கசக. (ஆ) "தடைஇத் திரண்டநின் றோள்" அகம். உகஅ: அ: என்பவையும் (இ) "தடையின திரண்டதோள்" (கலி. சரு: கரு.) என்பதும் அதன் குறிப்பும் ஒப்புநோக்கற்பாலன.

எ. "உடனுறை வாழ்க்கைக்கு நோற்றுடம் படுவர்" மணி. உ: சஎ.

(பிரதிபேதம்) * பரத்தமை, † வாட்கை.

எ-து: அதுகேட்ட தலைவன், (க)பெரிதும் பெருத்த மெல்லிய தோளினை யுடையாய்! யான் கூறுகின்றதனைக் (உ)*கேட்பாயாயிற்கேள்; யாம் இருவரும் போய் உடனே†துறவகத்திருக்கும்வாழ்க்கைக்குஉதவியாயிருக்குங்கடவுளரைக் கண்டு அவரிடத்தே தங்கினேனென்றான். எ - று.

இல்லறம் நிகழ்த்தி வானப்பிரத்தம் நிகழ்த்துங்கால் உடனுறைதலின் உடனுறைவாழ்க்கையென்றான். நூல்களான் உணர்த்துதலே உதவியென்றான். அது, "காமஞ்சான்ற" என்னும்(ங)சூத்திரத்தில், "சிறந்ததுபயிற்றற்‡லிறந்ததன் பயனே" என்பதனு னுணர்க.

அ சோலை, மலர்வேய்ந்த மான்பிணை யன்னார் பலர்நீ
(ச)கடவுண்மை கொண்டொழுகு வார்
கo அவருள், எக்கடவுண் மற்றக் கடவுளைச் செப்பீ மன்

எ - து: அதுகேட்ட தலைவி, கடவுட்டன்மை உண்மையாகக் கொண்டு நடத்துவார், சோலையில் மலரைச் சூடின மான்பிணைபோலும் நோக்கினை யுடைய ||பாத்தையர் பலருளர்; அப்பாத்தையருள் நீ கூறிவந்தகடவுள் எந்தக் கடவுள்? அக்கடவுளைச் சொல்லுவாயென்றாள். எ - று.

மற்று, வினைமாற்று.

(ரு)முத்தேர் முறுவலாய் நா(சு)மணம் ÷புக்கக்கா
+லிப்போழ்து போழ்தென் றதுவாய்ப்பக் கூறிய
×வக்கடவுண் மற்றக் =கடவுள்

---

க. "நன்று பெரிதாகும்" "தடவும்......பெருமை" தொல். உரி. சுரு, உஉ.

உ. இப்பொருளுக்கு மூலமாகிய "கேட்டீவாயாயின்" என்பது வினை யெச்ச வினைத்திரிசொல்லுக்கு மேற்கோள்; தொல். எச்ச. சூ. சுக.நச்.

ங. தொல். கற்பி. சூ. ருக.

ச. கலி. கஅ: கங-ஆம் அடிக்குறிப்பிலுளதாகும். அம்பிகாபதிகோவை. ருகo-ஆம் செய்யுள் இங்கும் அறிதற்பாலது.

ரு. (அ)"தொன்முதுகடவுள்" என்புழி, இருடியைக் கடவுளென்று கூறிய தற்கு, "முத்தேர்...........மற்றக் கடவுள்" என்னும் பகுதியை மேற் கோள்காட்டினர் நச்; மது. சுo - சுஉ. உரை. (ஆ) "முத்தேர் முறுவ லாய்" கலி. சுச: உக; கஎ: சு. இந்நூற்பக்கம் ஙகo: உ - ஆம் குறிப்புப் பார்க்க.

சு. (அ)"நெறியறி செறிகுறி புரிதிரி பறியா வறிவனை முந்துறீஇ......... வந்தனன்" (கலி.ஙக:சுசு-ருo) என்பதும் அதன்உரையும்,(ஆ)"பல்லா

(பிரதிபேதம்) *கேட்பையாயின்யாம். † துறக்கத்து, ‡ இறந்தது, || பாத்தையர் அவருள்நீ, ÷ புக்ககால். + இப்பொழுது பொழுதென், × எக்கடவுள், = கடவுளது வொக்கும், நாவு.........கேளினி. எ - து. பின்னை.........உளவாகலின். அதுகேட்ட.........கூறினள், உள்ளேயமூந்து.

எ - து: பின்னை அந்தக் கடவுள், முத்தையொக்கும் முறுவலையுடையாய்! நாம் மணத்தைச் செய்ய இப் பொழுது *முகுத்த மென்று (க)அம் முகுத்தம் வாய்ப்பச்சொன்ன அந்தக் கடவுள் காணென்றான். எ - று.

புக்கக்கால், காலீற்று வினையெச்சம். முற்கூறிய கடவுடன்னையே இவள் அறியுமாற்றான் மீட்டுங்கூறினான்; அவற்கு எல்லாக் கண்களும் உளவாகலின்.

அதுவொக்கும்

எ - து: அதுகேட்ட தலைவி, நீ கூறியது எனக்கும் ஒக்குமெனத் தன தொவ்வாமை கூறினாள். எ - று.

நாவு ளழுந்து தலைசாய்த்து நீகூறு
மாயமோ கைப்படுக்கப் பட்டாய்நீ கண்டாரை
வாயாக யாங்கூற†வேட்டீவாய் கேளினி

எ - து: ‡உள்ளே அழுந்துநாவுடனே தலையைச்சாய்த்து நீகூறுங்கூற்றே பொய்; ஆகையினாலே நீ எம்மால் அகப்படுக்கப்பட்டாய்; நீ கண்ட கடவுளரை உண்மையாக யாங்கள் சொல்லக் கேட்க விரும்பியவனே! இனி யாங்கள் கூறக்கேளென்றாள். எ - று.

கஎ பெற(உ)னசை வேட்கையி னின்குறி வாய்ப்பப்
(ங)பறிமுறை நேர்ந்த (ச)||நகாராகக் கண்டார்க்

---

ரறியப் பறையறைந்து நாட்கேட்டுக், கல்யாணஞ் செய்து கடிபுக்க - மெல்லியற், காதன் மனையாளும்" நாலடி. அசு. (இ) "நாள் கூட்ட மூர்த்த மவற்றொடு நன்றாய, கோள் கூட்டம் யோகங் குண னுணர்ந்து - தோள் கூட்ட, லுற்றானு மல்லானு மைந்து முணர் வானாற், பெற்றானுட் கொள்க பெரிது" சிறுபஞ்ச. சச. (ஈ) "கணி மொழிந்த நாளிற் கடிமணமுஞ் செய்தார்" நள. சுயம்வர. கசுரு. என்பவைகளும் இங்கே அறிதற்பாலன.

க. (அ) "புள்வாய்ப்புச் சொன்ன கணி" சிலப். கஉ: 'முருந்தேர்' (ஆ) "புள்வாய்ப்பச் சொன்ன புலவர்க்கும்" பு - வெ. வெட்சி. கச.

உ. (அ) "நின்னசை வேட்கையின்" புறம். ங: உச; (ஆ)"நீர்நசை வேட் கையின்" மணி. உங: கக உ.

ங. (அ) "செறிநிரை வெண்பலும் பறிமுறை நிரம்பின" குறுந். ஙஙஎ. (ஆ) "பல்லின், பறிமுறை பாராட்டினையோ" கலி. உஉ: கo - கக.

ச. நகாரென்பது எயிற்றின் பெயராதலை, "மடவோர், நகாஅ ரன்ன நளிநீர் முத்தம்" (சிறுபாண். ருசு - ருஎ) என்பதனாலும் அதன் உரை யாலும் அறிக.

(பிரதிபேதம்) * முகூர்த்தமென்று வாய்ப்ப, † கேட்டீவாய் கேளினி, ‡ உள்ளேயழுந்து, உரையழுந்து. || நகராகக்கண்டார்க்கு, நகையராக்கண்டார்க்கு.

சிறுமுறை செய்யு முருவொடு நும்மிற்
செறிமுறை வந்த கடவுளைக் கண்டாயோ

எ - து: நின்னைப் பெறுதலை நச்சின ஆசையாலே நீசெய்த குறியிடத்தே தப்பாமல் வந்த கடவுள்; கண்டவர்களுக்குஇறந்துபடும்நிலைமையைச் செய்யும் வடிவோடே (க)விழுந்தெழுந்த முறைமை சேர்ந்த எயிற்றினையுடையராய் நும்மனையிடத்தே சேரும் முறைமையோடே வந்தகடவுளரை நீ கண்டாயோ வென்றாள். எ - று.

* நகார், ஆகுபெயர்.

(உ)பொருளதனைப் பெறுதல்நச்சின ஆசையாலே நின்மனத்திற் கருதிய கருத்துக்களெல்லாம் வாய்ப்பப் பறிந்துபோம் முறைமையைச் சேர்ந்த † கடவுள்; மனவேட்கையை அடக்கும் ‡முறைமையை இகழாராய்த் தம்மைக் கண்டவர்களுக்குத் தீவினை இறும் முறைமையைக் கொடுக்கும் வடிவுடனே நும் இல்லிடத்தே வந்த கடவுளரைக் கண்டாயோ || வென வேறுமொரு பொருள் தோன்றியவாறு ÷காண்க.

வாய்ப்பப் பறிமுறையென்றார், வேரோடே பறிதலின். செறிதல்- அடக்கம்; ✢நகை, எள்ளல்.

உக நறுந்தண் டகரமு நானமு நாறு
நெறிந்த குரற்கூந்த ளணிக் கொப்ப
நோக்கிற் பிணிகொள்ளுங் கண்ணொடு மேனாணீ
(ங)× பூப்பலி விட்ட கடவுளைக் கண்டாயோ

---

க. "கூரெயிற்று முகை வெண்பல்" (கலி. ௬அ: ச) என்பதும் அதன் உரையும் அவ்வுரையின் குறிப்பும் இங்கே அறிதற்பாலன.

உ. போருளதனை யென்றும் படிக்கலாம்.

ங. (அ) "பூப்பலி செய்ம்மின்" (ஆ) "ஒண்டொடித் தடக்கையி னொண் மலர்ப் பலிதூஉய்" (இ) "பூப்பலி செய்து" (ஈ) "வெண் மருப் பிரட்டைய வேழ மீமிசைக், கண்மருட் டுறப்பன கமலப் பூப்பலி, விண்மருட் டுறப்பன வேந்தி வேதியர், மண்மருட் டரப்பதோர் வகையின் மன்னினார்" (உ) "பேரொளிப் பீதக வுடையர் பைம்பொனா, லாரொளிதழுவியவலர்செய்பூப்பலி, போரொளியானைமே னிரைத்துப் போந்தனர்" (ஊ) "நிரந்தன பூப்பலி" (எ) "நிரந்து தேனிமிர் பூப் பலி" (ஏ)"சங்கொடு சிலம்பு நூலும் பாதசா லகமுந் தாழப், பொங்கு

(பிரதிபேதம்) *நகராகுபெயர் பொருளதினை, (நகை ஆகுபெயர்நகரென் றும் பாடம்என்பது முன் பதிப்பு,) † கடவுள், வாய்ப்பப்பறியவென்றார் வேரோடே பறிதலின், மனவேட்கை ‡ முறைமையை, || என்று, ÷, காண்க செறிதல். ✢ நகை எள்ளல். × பூப்பலியிட்ட,

எ - து: பார்வையாலே பிணித்தலைக் கொள்ளுங் கண் வருத்துதலாலே நறிய [தென]குளிர்ந்த * மயிர்ச் சாந்தமும் புழுகும் நாறும் அறல்பட்ட (க) பற்றத்தையுடைத்தாகிய மயிர்க்கு நாட்காலத்து அணியும் அணிக்குப் பொருந்த நீ முதனாட் பூவைப்†பலியாகப்போகவிட்ட கடவுளரைக் கண்டாயோ வென்றாள். எ - று.

ஓடு, ஆலாக்குக. மேல், கடவுளென்றதற்கேற்பப் பலியென்றார். அருளுக்கினற் பிணியை வாங்கிக்கொள்ளும் ‡ கண்ணினராகையாலே கூந்தலையுடையாள் நாட்காலத்து அணிதற்கேற்பப் பூப்பலியைக் கைவிட்டு அர்ச்சித்த கடவுளரென்பதூஉம் ஒன்று. கூந்தல், ஆகுபெயர். || பராசத்தியைப் பூவால் அர்ச்சித்த கடவுளரென் றுணர்க. நீ கண்டாயோவென்க.

உரு (உ)சரணிக் கேற்ற வொடியாப் படிவத்துச்
சூர்கொன்ற செவ்வேலாற் பாடிப் பலநாளு
மாராக் கனைகாமங் குன்றத்து நின்னொடு
மாரி யிறுத்த கடவுளைக் கண்டாயோ

எ - து: கெடாத விரதத்தாலே முகங் குதிரைமுகமும் உடல் மக்களுடலுமாகிய இரண்டு அழகுக்குப் பொருந்திய சூரபன்மாவைக் கொன்ற சிவந்த வேலையுடைய முருகனைப் புகழ்ந்து நிறையாத செறிந்த காம வேட்கையாலே திருப்பரங்குன்றினிடத்தே நின்னோடே மாரிக்காலத்தே பலநாளுந் தங்கின கடவுளரைக் கண்டாயோ வென்றாள். எ - று.

இனி, பெண்ணும் ஆணும் ஆகிய இரண்டு× அழகினுக்கும் பொருந்திய செவ்விதாகிய (ங)+ எழுச்சியையுடைய இறைவனை அமையாத செறிந்த வீடுபேற்றில் ஆசையாலே பலநாளும் புகழ்ந்து கொடுந்தொழில்களைக் கொன்ற

பன் முரச மார்ப்ப வில்லுறை தெய்வம் பேணிக், கொங்கலர் கூந்தற் செவ்வா யரம்பையர் பாணி.கொட்டி, மங்கள கீதம் பாட மலர்ப்பலி வகுக்கின்றாரை" என்று பூப்பலி பலநூல்களிலும் கூறப்படுதல்காண்க.

க. பற்றம் - கொத்து; கற்றையென்றும் கூறப்படும்.

உ. (அ) "இருபே ருருவி னொருபே ரியாக்கை.........மாமுத றடிந்த மறுவில்கொற்றத், தெய்யா நல்லிசைச்செவ்வேற் சேஎய்" மூருகு. ௫எ-௬க. (ஆ) "ஈருருவத் தொருபெருஞ்சூர் மருங்கறுத்த விகல்வெய்யோய்" தொல். செய்.சூ. கருஉ. பேர். நச். மேற்கோள்; 'செஞ்சுடர்'

ங. எல் என்பது ஏர் என்பதுபோலவே எழுச்சி யென்னும் பொருளில் வருதலை(அ)'எல்பெற்று' (சீவக. ௩௦உ.) என்றதற்கு, இவர் 'எல்-மனவெழுச்சி' என்று சொற்பொருள் குறித்து உணர்ச்சிபெற்று, என்று கருத்துரைஎழுதியிருப்பதும் (ஆ)"எதிர்மலர்க்குவளையிடுநீர்சொரிந்து,

(பிரதிபேதம்) * மயிர்ச்சந்தனமும், † பலியாகவிட்ட, ‡ கண்ணுடையா ராகையாலே, || பாசத்தியைப், × அழகுக்குப்பொருந்தின. + எழுச்சியுடைய.

கெடாத விரதத்தோடே மலைகளிலே மாரிக்காலத்திலேநின்றேடுஉறவுகொண்டிருந்த தவஞ்செய்த கடவுளரைக்கண்டாயோவென்பதும் ஒன்றுதோன்றிற்று. சத்தியுஞ் சிவனும் ஒன்ருகிய வடிவைப் பாடி என்க. நின்றெடென்ற ஒடு விற்கு உறவு கொண்டிருந்தவென ஒரு வினை வருவிக்க.

உகூ கண்ட கடவுளர் தம்முளு நின்னை
வெறிகொள் வியன்மார்பு வேருகச் செய்து
குறிகொளச் செய்தார்யார் செப்புமற் றியாருஞ்
(க்)சிறுவரைத் தங்கின் வெகுள்வர் *செறுதக்காய்
தேறினேன் சென்றீநீ†செல்லா விடுவாயே
(உ)னற்ரு ரகலத்துக்‡கோர்சார மேவிய
நெட்டிருங் கூந்தற் கடவுள ரெல்லார்க்கு
முட்டுப்பா டாகலு முண்டு.

எ - து: நீ கண்ட கடவுளர் தங்களுள்ளும் நின் மணத்தைத் தன்னிடத்தே கொண்ட அகலத்தையுடைய மார்பைப் பழையதன்மை குலைந்து போம்படி பண்ணிப் பிறர்முயங்காதபடி அடையாளமாக வடுப்படுத்துதலைச் செய்தார் யார் சொல்லு; ||பின்னை அப்பரத்தையர் யாவரும் சிறிதாகியகாலத்தளவு இங்கேதங்குவையாயின் ÷கோபிப்பார்; ஆகையினுலேஎம்மாற்செறுக்கத் தக்கவனே! நின் ✝பொய்மையெல்லாம் உள்ளபடி யான் அறிந்துதெளிந்தேன்; இனி அவர்பாற் செல்லாதொழிவையாயின், நினது நல்ல தாரையுடைய மார்பத்துக்கு ஒரு முட்டுப்பாடு உண்டாமது; நீ சாரும்படி நின்னை முயங்கிய நெடிய ×கரியகூந்தலையுடைய பரத்தையரெல்லார்க்கும் முட்டுப்பாடு உண்டாதலும் உண்டு; ஆதலால் ஆண்டே செல்லெனப் புலந்து கூறினுள். எ - று.

தம்முளுமென்ற உம்மை, சிறப்பும்மை.

இனி, கடவுளர்தம்முளும் வியன்மார்பையுடைய நின்னை மனம் வேருகப் பண்ணி வானப்பிரத்தத்தைக் குறித்தல் கொள்ளும்படி பண்ணின இருடிகள்

---

சீதச் சந்தனந் தாதோ டப்ப, வேஎல் பெற்றெழுந் திருந்தன னுரைத்தென" (பெருங். (உ)கூ: கஙிகூ-கஙிஅ) எனவருவதும் வலியுறுத்தும்.

க. சிறுவரை - சிறிதுநாழிகை. அகம். ௩௩: அ. பு-வே. பெருந். களு. இது, சிறிதுநாழிகைத்தூரமான இடமென்னும்பொருளிலும்வரும்ஐங்.௩.அஅ.

உ. "இல்லது காய்தலென்பது, களவின்கட் போலாது தலைமகற்கு இல்லாததனை உண்டாக்கிக் கொண்டு காய்தல்; அது: 'நற்ருரகலத்து... ......முண்டு' எனவரும்; இது கடவுளரையே கண்டு தங்கினுனெயி

(பிரதிபேதம்) * செறுத்தக்காய். ✝செல்லாய் விடு, ‡ கொருசாரமேவிய.||பின்னையாவரும். ÷அப்பரத்தையர் கோபிப்பார். ✝பொய்மெய்யெல்லாம், × கருங்கூந்தலையுடையரெல்லார்க்கும்,

யார்தான் சொல்லு ; யாவரும் வெகுள்வர்; அவர்பாற் செல்லாதொழிவாயேல், நல்ல ஒழுங்கினையுடைத்தாகிய கடாவின்புறத்தே தோன்றும் விடைகளையுடைய, (க)நீரைப் பலகாலுஞ் சாருதலாலே ஈரம்பொருந்திய நெடிய கரிய சடையினையுடைய இருடிகளெல்லார்க்கும் முட்டுப்பாடு பிறத்தலும் உண்டென்பதும் ஒன்று தோன்றநின்றது. அவர்க்கு முட்டுப்பாடு நினக்குக் கூடும் பொருள்கள்*கூடாமையாலுள்ளமுட்டுப்பாடு.தார்-ஒழுங்கு(உ)அகலமென்றது, பரசமயத்தார் கூறுங் கடாவிற்கு விடையாகக் கூறும் †விகற்பங்களை. "தன்னூன் மருங்கினும் பிறநூன் மருங்கினுந், துன்னிய கடாவின் புறந்தோன்றும் விகற்பம், பன்னிய வகல மென்மனார் புலவர்" "தெள்ளிது" (ந) என்றதனால், நின்னை மார்பை வேறாகச் செய்தென்[றார்](றலுமாம்).

இதனால், தலைவிக்கு இழிவும் தலைவற்கு அசைவும் பிறந்தது.

"மரபுநிலைதிரியா‡மாட்சிய"என்னும்(ச)சூத்திரத்தில், தலைவிகடவுளரைப் பரத்தையராகக் கூறுமென்பது கூறினும்.

இஃது ஐஞ்சீரடுக்கி வெண்பாவாய்வந்து இடைநிலைப்பாட்டுப் பெற்று வருதலிற் கலிவெண்பாவுறுப்பொத்துப் பாவேறுபட்டு வந்த கொச்சகம். (உஅ)

(கூச.) என்னோற் றனைகொல்லோ
நீரு ணிழற்போ னுடங்கிய மென்சாய
லீங்குருச் சுருங்கி
யியலுவாய் நின்னோ டுசாவுவே னின்றீத்தை ;

---

னும், நெட்டிருங் கூந்தற் கடவுளரையே கண்டா யென்று இல்லது சொல்லிக்காயுமாகலின் அப்பெயர்த்தாயிற்று" என்பர். பேர்; தொல். மெய்ப். சூ. உச இ - வி. நூலாரும் இதன் முன் வாக்கியத்தை எழுதி இம்மெய்ப்பாட்டிற்கு இதனை மேற்கோள்காட்டினர்; இ-வி.சூ. ருஅ௦.

க. "நீர் பலகான் மூழ்கி" (பு - வெ. வாகை. கச) "நெடுவரை யருவி யாடி..............புறந்தாழ் புரிசடை புலர்த்து வோனே" (புறம். உருக) என்னும் தாபதவாகைத்துறைச் செய்யுட்கள் இங்கே அறிதற்பாலன.

உ. அகலமென்பது சூத்திரத்துப் பொருளைத் தூய்மைசெய்தற்குக் கடா விடையுள்ளுறுத்து உரைக்கும் உரையென்பர் இறையனாரகப்பொருளுரைகாரரும்.

ந. தொல். வேற்றுமைமயங்கியல். சூ. ரு.

ச. தொல். அகத். சூ. சரு; இச்சூத்திரத்தினுரையில் இவர் இச்செய்யுளை, காவற் பாங்கினங்கோர் பக்கத்தில் தலைவன் கூறியவற்றைக் கற்பியலுள் தலைவன்பகுதியினீங்கிய தகுதிக்கண் தலைவி பரத்தையராகக் கூறியதற்கு மேற்கோளாகக் காட்டியிருக்கிறார்.

(பிரதிபேதம்) * கூருமலாலுள்ள. † விகற்பங்கள், ‡மாட்சிமையென்னுஞ்.

௫ அன்னையோ, காண்டகையில்லாக் குறணுழிப்போழ்தி
ணூண்டலைக் கின்ற பறழ்மகனே நீயெம்மை
வேண்டுவ லென்று விலக்கினை நின்போல்வார்
தீண்டப் பெறுபவோ மற்று ;

௯ மாண்ட, எறித்த படைபோன் முடங்கி மடங்கி
நெறித்துவிட் டன்ன நிறையோரா லென்னைப்
பொறுக்கல்லா நோய்செய்தாய் பொறீஇ நிறுக்கல்லே
னீநல்கி னுண்டென் னுயிர் ;

௧௩ குறிப்புக்காண், வல்லுப் பலகை யெடுத்து நிறுத்தன்ன
கல்லாக் குறள கடும்பகல் வந்தெம்மை
யில்லத்து வாவென மெய்கொளீஇ யெல்லாநின்
பெண்டி ருளர்மன்னோ கூறு ;

௧௭ நல்லாய்கேள், உக்கத்து மேலு நடுவுயர்ந்து வாள்வாய
கொக்குரித் தன்ன கொடுமடாய் நின்னையான்
புக்ககலம் புல்லினெஞ் சூன்றும் புறம்புல்லி
னக்குளுத்துப் புல்லலு மாற்றே னருளீமோ
பக்கத்துப் புல்லச் சிறிது ;

௨௨ போசீத்தை, மக்கண் முரியேநீ மாறினித் தொக்க
மரக்கோட்டஞ்சேர்ந்தெழுந்த பூங்கொடிபோல
நிரப்பமில் யாக்கை தழீஇயினை ரெம்மைப்
புரப்பேமென் பாரும் பலராற் பரத்தையென்
பக்கத்துப் புல்லீயா யென்னுமாற் றொக்க
வுழுந்தினுந் துவ்வாக் குறுவட்டா நின்னி
னிழிந்ததோ கூனின் பிறப்புக் கழிந்தாங்கே
யாம்வீழ்து மென்றுதன் பின்செலவு முற்றீயாக்
கூனிகுழை யுங்குழைவு காண் ;

௩௧ யாமை யெடுத்து நிறுத்தற்றாற் றோளிரண்டும் வீசி
யாம்வேண்டே மென்று விலக்கவு மெம்வீழுங்
காமர் நடக்கு நடைகாண் கவர்கணைச்
சாமனார் தம்முன் செலவு காண்க ;

கூரு ஓலைகாண், நம்மு ணருதற் றொடீஇயர் நம்முறை
முசாவுவங் கோனடிதொட் டேன் ;

கூள ஆங்காக, சாயலின் மார்ப வடங்கினேன் ஏஎ
பேயும் பேயுந் துள்ள லுறுமெனக்
கோயிலுட் கண்டார் நகாமை வேண்டுவ
றண்டாத் தகைநுவ வேறுகக் காவின்கீழ்ப்
போத ரகடாரப் புல்லி முயங்குவேந்
துகடபு காட்சி யவையத்தா ரோலை
முகடுகொப் பியாத்துவிட் டாங்கு.

இஃது "அடியோர் பாங்கினும் * வினைவலர் பாங்கினுங், கடிவரை யிலபுறத்தென்மனார் புலவர்"(க)என்பதனால் அடியோராகிய கூனுங்குறளும் உறழ்ந்து †கூறிக்கூடியது.

இதன் பொருள்.

என்னோற் றனைகொல்லோ
நீரு ணிழற்போ னுடங்கிய மென்‡சாய
||லீங்குருச் சுருங்கி
யியலுவாய் நின்னோ டுசாவுவே னின்றீத்தை

---

க. தொல். அகத். சூ. உரு. (அ) இச்சூத்திரத்தின் உரையில் 'அடித் தொழில் செய்வாரும் வினைசெய்வாரும் அகத்திணைக்குரியரல்லர்; அகத்திணையாவது: அறத்தின் வழாமலும் பொருளின் வழாமலும் இன்பத்தின்வழாமலும் இயலல்வேண்டும். அவையெல்லாம் பிறர்க்குக் குற்றேவல் செய்வார்க்குச் செய்தலரிதாகலானும் அவர் நாணுக் குறைபாடுடையராதலானும் குறிப்பறியாது வேட்கை வழியே சாரக் கருதுவராதலானும் இன்பம் இனிது நடத்துவார் பிறரேவல் செய் யாதாரென்பதனானும் இவர் புறப்பொருட்குரியர்' என்று கூறி, இச் செய்யுளை மேற்கோள்காட்டி, 'இதனுள் ஒருவரையொருவர் இழித்துக் கூறினமையான் அடியாரென்பதூஉம் மிக்க காமத்தின் * வேறுபட்டு (* வேட்டு என்றும் பிரதிபேதம்) வருதலாற் பெருந்திணைப்பாற் படு மென்பதூஉம் கண்டுகொள்க. இதுதானே கைக்கிளைக்கும் உதாரண மாம்' என்றார் இளம்பூரணர்; (ஆ) இழிகுலத்தார்க்கு அகப்புறக் கைக் கிளை உரித்தென்பதற்கு இதனை மேற்கோள் காட்டினர் நாற்கவிராச நம்பியென்பவர்; நாற்கவி. சூ. உசஉ.

(பிரதிபேதம்) *வினைவல பாங்கினும், வினைவர் பாங்கினும், †கூடிக்கூறியது, ‡ சாயலினுஞ் சுருங்கி, ||ஈங்குச் சுருங்கி.

எ - து: கரையில் நின்றதொன்றின் நிழல் நீருக்குள்ளே *நுடங்கினாற் போல நுடங்கிய மெல்லிய மென்மையோடே இவ்விடத்து உடலிலே கூன் † புறப்பட்டு நடக்கின்றவளே ! நின்னோடு ஒருகாரியத்தை உசாவுவேன்; அங்ஙனம் உசாவுதற்கு நீ என்ன நல்வினையைச் செய்தாய்‡காண்? இங்ஙனே நிற்பாயாகவென்றான் குறளன். எ - று.

இயலுவாய்...............நின்றீத்தை, வினைத்திரிசொல்.

ரு அன்னையோ, காண்டகை யில்லாக் ||குறளுழிப் போழ்தினு
(க) ணாண்டலைக் கீன்ற பறழ்மகனே நீயெம்மை
வேண்டுவ லென்று விலக்கினை நின்போல்வார்
தீண்டப் பெறுபவோ மற்று

எ - து: அதுகேட்ட கூனி, அம்மையோவென இகழ்ந்து தன் நெஞ்சிற் கூறி, கண்ணாற் பார்க்குந் தன்மையில்லாத குறளாய்ப்பிறத்தற்கு ஏதுவாகிய நாழிகையின் ÷முகூர்த்தத்தே(உ)ஆண்டலைப்புள்ளுக்குத் தன்பெடையீன்ற பறழாய மகனே! நீ எம்மை விரும்புவேனென்று போகாமற் றடுத்தாய்; நின்னைப் போற் குறளாயிருப்பார் பின்னை என்னைத்தீண்டப்பெறுவார்களோவென்றாள். எ - று.

---

க. தலைமகன் தலைமகளாகிய இருவரும் இளமைப் பருவம் நீங்கியவழி அறத்தின்மேல் மனம்நிகழ்த்தலன்றிக் காமத்தின்மேல் மனம்நிகழ்த்தலாகிய இளமைதீர்திறப் பகுதியில், தலைமகன் இளமைதீர்திறத்திற்கு "ஆண்டலைக்கீன்ற..............மற்று" என்பதும், தலைமகள் இளமைதீர்திறத்திற்கு "உக்கத்து மேலு...........சிறிது" என்பதும் மேற்கோள்; தொல். அகத். சூ. ருச. இளம்.

உ. (அ) ஆண்டலையென்பது பாழ்பட்டவிடத்தே வதியும் ஒரு பறவை; இதுகோட்டில்வதிவதாகப் பெரும்பாலுங்கூறப்படுகின்றது. (ஆ) இஃது "ஊண்டலை துற்றிய வாண்டலைக் குரலும்" (மணி. சு: எஎ) என்பதனாலும் (இ) "ஆண்டலை யடுப்பும்" (சிலப். கரு: உகக) என்பதற்கு, 'ஆண்டலைப்புள் வடிவாகப்பண்ணிப் பறக்கவிட உச்சியைக் கொத்தி மூளையைக் கடிக்கும் பொறி நிரைகளும்' என்று அடியார்க்குநல்லார் எழுதியிருக்கும்உரையாலும் தலைமூளையை உணவாகவுடையதென்றும் (ஈ) "யாமத் தீண்டிவந் தாண்டலை மாண்பிலவழைக்கும்" (நீல. தரும. ங) என்பதனால் நள்ளிரவில் கூட்டமாகவந்து கத்துமியற்கையுடையதென்றும் தெரிகின்றது. (உ) இஃது ஆண்மகன்றலைபோன்ற தலையையும் புள்ளின் உடல்போன்ற உடலையுமுடையது; (ஊ) இஃது, இவ்விடத்தும்திருமுருகாற்றுப்படையுரையிலும் இவரெழுதியகுறிப்பாலும் (எ) "தாண்டருங் கணைபடத் துமிந்து துள்ளிய, தீண்டரு நெடுந்தலை

(பிரதிபேதம்) * நுடக்கினாற், † பிறப்பட்டு, ‡ தான், || குறைநாழிப்போதி ணண்டலைக் கீண்ட, ÷ முகுத்தத்தே.

"பறழெனப் படினு முறழாண் டில்லை" (க)என்பதனால், பறழ் பறவைக் காகாதாயினும் இவனை, 'யாமையெடுத்து நிறுத்தற்றால்' என ஊர்வனவாகக் கூறலிற் பறழென்றார். தலை, ஆண்டலையா யிருத்தல் பற்றி ஆண்டலைக்கு ஈன்ற மகனென்றாள்.

கூ * மாண்ட, எறித்த படைபோன் முடங்கி மடங்கி
நெறித்துவிட் டன்ன † நிறைபோரா லென்னைப்
பொறுக்கல்லா நோய்செய்தாய் ‡ பொறிஇ நிறுக்கல்லே
னீநல்கி னுண்டென் னுயிர்

எ - து: அதுகேட்ட குறளன், மாட்சிமைப்பட்ட கலப்பையிற் றைக்கும் (உ)படைவாள்போலே ஓரிடங் கூனுய்ப் புறப்பட்டு ஓரிடம்முன்னே வளைந்து வலிய முறித்து விட்டாற்போன்ற நிறைந்த அழகாலே என்னைப் பொறுக் கல்லாத காம நோயைச் செய்தாய்; யான் ஆற்றிநிறுக்கமாட்டேன்; நீ அருளு வாயாயின் என்னுயிருண்டு; இனி நின்னினைவைக் ||கூறுவாயென்றான். எ-று.

பொறியும் பாடம்.

கஈ | குறிப்புக்காண்; (ஈ)வல்லுப் பலகை யெடுத்து நிறுத்தன்ன
கல்லாக் ÷ குறள கடும்பகல் வந்தெம்மை

---

தழுவிச் சேர்ந்தன. பூண்டெழு கரதலம் பொறுக்க லாதன, வாண் டலை நிகர்த்தன வொருவை யாடுவ" என்னும் கம்பர்வாக்காலும் அறிய லாகும். (ஏ) இச்சொல்லுக்குப் பொருள் 'யானைமுகன்' 'துடியிடை' என்பவற்றிற்குப் பொருள் கொள்ளுதல்போலக் கொள்க. (ஐ)"நீண்ட பலிபீடத்தி லரிந்துவைத்த நெடுங்குஞ்சிச் சிரத்தைத்தன் னினமென் றெண்ணி, யாண்டலைப்புள் ளருகிருந்து பார்க்கு மாலோ வணைதலு மச் சிரமச்ச முறுத்து மாலோ" என்று சயங்கொண்டார் கூறுதலால், இப்புள்ளே ஆண்மகன் றலைபோன்றதென்று கூறுவாரும் உளர்.

க. தொல். மரபியல். சூ. எ.

உ. இதுகொழுவென்றும்காறென்றும்கூறப்படும்; குற்றியென்பாருமுளர்.

ஈ. (அ)"வல்லென்கிளவி தொழிற்பெய ரியற்றே" "நாயும் பலகையும் வரூஉங் காலை, யாவயி னுகரங் கெடுதலு முரித்தே, யுகரங் கெடுவழி யகர நிலையும்"; (தொல். புள்ளி. சூ. எஅ - எக) என்புழி, கெடுதலு மென்பதில், "உம்மை எதிர்மறை யாகலான் உகரங் கெடாதே நின்று .........'வல்லுப் பலகை' என வருதலுங் கொள்க" என்பர். நச்; (ஆ) "வல்லே தொழிற்பெய ரற்றிரு வழியும், பலகைநாய் வரினும் வேற்றுமைக் கவ்வுமாம்" (நன். மெய்யீற். சூ. உஅ) என்பதனுரையில்

(பிரதிபேதம்) * மாண்டை, † நிறையோரா, ‡ போறிநிறுக்கல்லேன், || கூறென்றாள் ÷ குறளே.

யில்லத்து *வாவென மெய்கொளீஇ யெல்லாநின்
பெண்டி †ருளர்மன்றோ கூறு

எ - து: அதுகேட்ட கூனி, இவன் மனக்குறிப்பைப் பாராயென நெஞ்சொடுகூறி, (க)நெத்தப்பல கையை எடுத்து நிறுத்தினாற்போன்ற, மகளிரைக் கூடும் முறையைக் கல்லாத குறளனே! (உ)மக்கள் இயங்காத உச்சியம்பொழுதிலே வந்து எம்மைக் கையைப்பிடித்து நின்னில்லத்தே வாவென்று சொல்லுதற்கு எடா! மிகவும் நின்னுடைய பெண்டிராயிருப்பார் சிலருளரோ? சொல்லாயென்றாள். எ - று.

கஎ நல்லாய்கேள், உக்கத்து மேனு நடுவுயர்ந்து வாள்வாய
‡கொக்குரித் தன்ன கொடுமடாய் நின்னையான்
புக்ககலம் ||புல்லினெஞ் சூன்றும் புறம்புல்லி
னக்குளுத்துப் புல்லலு மாற்றே னருளீமோ
பக்கத்துப் ÷புல்லச் சிறிது

எ - து: அதுகேட்ட குறளன், ×நல்லாளே! தலைக்குமேலும் நடு வில்லையாய் வாள்போன்ற வாயையுடைய கொக்கை உரித்தாற்போன்ற வளைந்த +மடுப்பையுடையாய்! யான் கூறுகின்றதனைக் கேள்; நின்னை யான் மார்

---

'அவ்வுமென்ற உம்மையான், உகரப்பேறே வலியுடைத்தென்க' என்று மயிலைநாதரும் அவ்வுமென்பது இறந்தது தழுவிய வெச்சவும்மைஎன்றுவிருத்தியுரையாசிரியரும் இராமாநுசகவிராயரும் கூறி, வல்லென்பது பலகை யென்பதனொடு புணர்வுழி வேற்றுமையில் உகரச்சாரியை பெற்று வந்ததற்கு, 'வல்லுப் பலகை' என்பதை மேற்கோள் காட்டினர். இதற்கு வல்லினது அறைவரைந்த பலகை என்று பொருள் கூறுவர்.

க. நெத்தப்பலகையென்பது வல்லினது அறைகீறிய பலகையென்னும் பொருளிலே கன்னடத்தில் இருவகை வழக்கிலும் பண்டும் இன்றும் சிறிது திரிந்துவழங்குகின்றதென்பர்.

உ. கடியென்பது விளக்கமென்னும் பொருளில் வருதற்கு கடும்பகலென்பது, தொல். உரி. சூ. அஎ: சே; அடு. நச். மேற்கோளாகக் காட்டப்பட்டிருக்கிறது; ஆயினும் இவ்விடத்துக்கு அதனினும் வரைவென்னும் பொருள் சிறந்ததென்றுகொண்டு இவ்வாறு கூறினர்போலும். 'இவ்வுரிச்சொல் பெரும்பாலும் திரிந்து நிற்கும்' என நச்சினார்க்கினியர் எழுதியிருத்தலும் இங்கே அறிதற்பாலது.

(பிரதிபேதம்) * வாவென்றெமக்கொழியவெல்லா, † உளமன்றோ, ‡ கொக்கரித்தன்ன, || புல்லினென்னெஞ்சு, ÷ புல்லல் சிறிது, × நல்லோளே, + மடிப்பையுடையாய்.

பிடத்தே சென்று புல்லுவேனாயின் என்னுடைய நெஞ்சிலே அக்கூன் ஊன்றும்; முதுகிலேபுல்லுவேனாயின்முதுகிற் *கூன்(க)அக்குளுக்காட்டுதலை உடைத்து; ஆதலால், கூடுதலேயன்றி முயங்குதலையுஞ் செய்யமாட்டேன்; இனிப் பக்கத்தே சிறிது முயங்கும்படியாக வருவாயாகவென்றான். எ - று.

நடுவுயர்ந்தென்றது "நோன் †'புயர்ந்தது" என்றாற்போல நின்றது.

உஉ (உ) ‡போ(௩)சித்தை .

எ - து: அதுகேட்ட கூனி, சீ ! கெட்டதன்மையையுடையவனே ! நீ எம்மிடத்தினின்றும் போவென்றாள். எ - று.

மக்கண் (௪)முரியேநீ மாறினித் தொக்க
மரக்கோட்டஞ் சேர்ந்தெழுந்த பூங்கொடி போல
நிரப்பமில் யாக்கை ||தழீஇயின ரெம்மைப்
புரப்பேமென் பாரும் பலராற் பரத்தையென்
பக்கத்துப் புல்லீயா யென்னுமாற் றொக்க

---

க. அக்குளுக்காட்டுதல் - கக்கமுதலிய உறுப்பில் தீண்டிக் கூச்சமுண்டாக்குதல்; இஃது, அக்குளுப்பாய்ச்சுதலெனவும் வழங்கும்; இப்பொருளில் இக்காலத்து, கிச்சுக்கிச்சுமூட்டுத லென்னும்சொல், பெருவழக்காக உள்ளது.

உ. உயர்திணை அஃறிணையாய்ச் செறலின்கட் டிணைமயங்கிவந்ததற்கு, 'பொய்ச் சித்தை வந்தது; போயிற்று' என இ - வி. சூ. உகக - இல், ஒருமேற்கோள் காணப்படுகின்றது; செய்யுளின்பத்துக்கும் அதுவே சிறந்ததாக வுள்ளது; அவ்வாறு பிரதிபேதமுமுள்ளது; அந்தப் பிரதியிலுள்ளஉரையும் போசித்தை யென்னுமூலத்திற்கேபொருந்துகின்றது.

௩. (அ) சித்தையென்பதற்கு, இங்குப்போலவே கலி. அ௬: க அ-இல் கைவிடப்படுமெவனென்றும் கலி. அ௯: ௩௦ - இல் கைவிடப்பட்டவனென்றும் ஆண்பாலாகப் பொருள் கூறப்பட்டிருக்கிறது; (ஆ) "குரவன் மேலவனாயினுங் குணமிழி சித்தை, விரவு சீடனாய் விடினவன் கெடுவது மெய்யே" எனப் பிற்காலத்துநூலிலும் ஆண்பாற் பெயராக வந்துள்ளது; கலி. க௯: உக-இல் இச்சொல்லுக்கு, 'சீ கெட்டது' என்று பொருள் கூறப்படுகிறது; இது செறற்சொலென்பது இதற்கு முந்தின குறிப்பால் விளங்கும்.

௪. பிரிதலென்பது பிறிதலென்று வருவதுபோல, முரிதலென்பது முறிதலென்றும் வரும்; இதற்கு முதனிலையாகிய முறியென்பது பாதியென்னும் பொருளில் வருதலை, "இந்து முறி" என்னும் நளவெண்பாவாலும் அறிக.

(பிரதிபேதம்) * கூனனுக்குளுக்காட்டுதலை. † உயர்ந்தென்றாற்போலே, ‡ பொய்ச்சித்தை, || தழீஇயரெம்மைப்புரப்பமென்பாரும்.

(க)வுழுந்தினுந் துவ்வாக் குறுவட்டா நின்னி
னிழிந்ததோ கூனின் பிறப்பு

எ - து: அது*கேட்டு அவன் அஃதுணருதலின், மக்களிற் பாதியானவனே! இனி நீ இந்நிலையைக் கைவிடென்று கூறி, பின்னர்த் திரண்ட மரத்தின் வளைவான இடத்தை விட்டு நீங்காமற் பற்றிவளர்ந்த பூங்கொடிபோலே எம்முடைய கூனல் வடிவொத்தலில்லாத யாக்கையை முயங்கி எம்மைப் பாதுகாப்பேமென்று கூறுவாரும் பலராயிருக்கும்; (உ) இப்பரத்தைதமையையுடையவன் † பக்கத்துப் புல்லுதலைத் தாராயென்று கூறுகிற்குமால்; இங்ஙனங் கூற நமக்கு உண்டாகிய குறை யாதுதானெனை அவன் கேட்பத் தன்னெஞ்சொடுகூறி, குறிய வட்டின்றன்மையையுடையாய்! பலவுங்கூடின உழுத்தம் பணியாரத்தினுங் காட்டில் (௩) துய்க்கப்பட்டிருக்கின்ற கூன்சாதியினுடைய பிறப்பு ‡ நின்னிற் றாழ்ந்ததோவென்றாள். எ - று.

கழிந்தாங்கே
யாம்வீழ்து மென்று|| தன் பின்செலவு உற்றீயாக்
கூனிகுழை யுங்குழைவு காண்

எ - து: அதுகேட்ட குறளன், யாம் நின்னை விரும்புவேமென்று கூறித் தன்பின்னே செல்லுதல் செய்தேயும் அதற்கு மனம்பொருந்தாத கூனி நம் அருகுநின்றும் அவ்விடத்தே போய் நடக்கும் நடக்கத்தை நெஞ்சே பாராயென அவள் கேட்பக் கூறினான். எ - று.

உற்றீயா, பெயரெச்சமறைத்திரிசொல்.

௩௧ யாமை யெடுத்து நிறுத்தற்றாற் றோளிரண்டும் வீசி
யாம்வேண்டே மென்று விலக்கவு மெம்வீழுங்
+காமர் நடக்கு நடைகாண்(௪) கவர்கணைச்
சாமனார் தம்முன் செலவு × காண்க

க. "உழுந்தினும்..........பிறப்பு" என்பது ஒப்பின் வகை பத்தனுள், பிறப்புவகையின் பாற்படுமென்பர் பேர்; தொல். மெய்ப். சூ. ௨௫.

உ. பரத்தை யென்பது பேதை யென்பதுபோல உயர்திணை யொருமை யிரண்டிலும் வரும்போலும். கிடைத்த பிரதிகளிலெல்லாம் 'பரத்தையென்' என்றே உள்ளது.

௩. 'துயக்கப்பட்டிருக்கின்ற' என்றும் படிக்கலாம்; 'இருக்கின்ற' என்பது வருவித்தது போலும்.

௪. (அ) "கடுந்தொடைக் கவர்கணைக்காமன்" சீவக. ௧௨௧௮. (ஆ) "கவர்கணை நோன்சிலைக் காமனிவனெனு, மையலுள்ளமொடு" பெருங். (உ) ௧௫:

(பிரதிபேதம்) *கேட்டதலையுணருதலின், † பக்கத்தைப் புல்லுதலை, ‡ நின்னுற். || தம்பின் செலவு, + காமிநடக்கு நடைகாண்க வார்களை. × காண் என்பது.

எ-து: அதுகேட்ட கூனி, ஊருகின்ற(க)யானையை யெடுத்து *நேரேநிறுத்தினாற்போல நெடியனுய்த் (உ)தோளிரண்டையும் விலாவுக்குள்ளே வீசி, யாம் நின்னை விரும்பேமென்று விலக்காநிற்கவும் எம்மை விரும்பி வருகின்ற காமனுர் நடக்கும் நடையை நெஞ்சே காணென்றாள்; அதுகேட்ட குறளான் ஒருவரை ஒருவர் முயங்குதற்குக் காரணமான கணையினையுடைய(ந)சாமனுர் தமையனாகிய காமனுர் நடையை நீ காணென நடந்து †காட்டினான். எ - று.

௩௫ ஓஒகாண்; ‡நம்மு ளாருகற் றூஉ இயர் நம்முள்
||முசாவுவங் கோனடிதொட் டேன்

எ - து: அதுகேட்ட கூனி, ஓஒ! ÷இவன் நடையைப்பாராயென நெஞ்சொடு கூறினாள்; அதுகேட்ட குறளன் நம்முள்ளே நாங் கூடி மகிழ்தற்கு யான் நின் மெய்யைத் தீண்டுதற்குக் குறியிடம் ┼ இன்ன இன்ன இடமாமென்று நம்முள்ளே நாம் உசாவக்கடவேம்; இனி நின்னை இகழ்ந்து கூறாமைக்கு அரசன் (ச)அடியைத் தொட்டுச் சூளுற்றே ×னென்றான். எ - று.

ஓஒ, இகழ்ச்சிக்குறிப்பு.

---

௬௭-௬௮. (இ) "காமவேள் கவர்கணை" (ஈ) "காமனு, மைதுலாங் கவர்கணை" (உ) "அனங்கனும்மலர்க், கவர்கணை" நூவா. நகர. ௧௮. குமார. ௫; ௧௧. எனப் பலவிடத்தும் வருவன ஒப்புநோக்கற்பாலன. (ஊ) "கவர்வு விருப்பாகும்" என்பது தொல். உரி. சூ. ௬௪.

௧. (அ) "நீலத் தெண்ணீர் நீந்து மாமையிற், கோலக் குறுக்கை வாட் கூட்டுட் கழீஇப், பாலிகை பற்றிய குறள்வழிப் படரவும்" பெருங். (௧) ௩௬: உ௬௧ - உ௬௩. (ஆ) "கொட்டுப் பிடிபோலுங் கூனுங் குறளாமை, விட்டு நடப்பனபோற் சிந்தும்" சீவக. உ௭௧௮.

உ. "வீரம் படக்கையை மெய்வழி வீசித், தேரை நடப்பன போற்குறள் சிந்தினொ, டோரு நடந்தன" (சீவக. ௬௩௧.) என்பதும் அதில், "கையை மெய்வழி வீசி" என்பதற்கு, 'விலாப்புடைக்குள்ளே கையை வீசி' என்று எழுதியிருக்குமுரையும் இங்கே அறிதற் பாலன.

௩. காமனுக்குச் சாமனென்ற தம்பி யொருவனுண்டென்பதை, இந்நூற் பக்கம், ௧௩௪: ௩-ஆம் குறிப்பால் அறிக.

௪. (அ) "ஐய சூளி னடிதொடு குன்றொடு, வையைக்குத் தக்க மணற்சீர் சூள் கூறல்" பரி. ௮. ௭௦ - ௭௧. (ஆ) "நி னடிதொடு கடனிது" (இ) "குமரிநி னடிதொடு படுகட னிது" சிலப். ௧உ: 'சுடரொடு' 'துடியொடு' (ஈ) "மதிவாள் முகத்து மணிமே கலைதனை, யொழியப் போகேனுன்னடி தொட்டேன்" மணி. ௧௮: ௧௭௦ - ௧௭௧.

(பிரதிபேதம்) *நேரநிறுத்தினாற், †காட்டினான் ஓஒஇகழ்ச்சிக்குறிப்புஅதுகேட்ட, ‡நம்முளு மாதற்றூஉஇய, || உசாவுங் கோன், உசாவுக் கோன். ÷ இன்னடையைப், ┼இன்னதென்னவிடமாம், × என்றான் ஆங்காகவுமை சாயலின்,

௩௭ ஆங்காக, (௧)சாயலின் மார்ப *வடங்கினேன் ஏஎ
பேயும் †பேயுந் துள்ள லுறுமெனக்
கோயிலுட் ‡கண்டார் நகாமை வேண்டுவ
||றண்டாத் தகடுருவ வேறாகக் ×காவின்கீழ்ப்
+போத ரகடாரப் புல்லி (௨)=முயங்குவேந்
துகடப்பு காட்சி யவையத்தா ரோலை
முகிழ்**காப் பியாத்துவிட் டாங்கு

எ - து: அதுகேட்ட கூனி, அப்படியேயாகுக ; யானும் மென்மையால் இனிய மார்பனே ! இகழ்ந்து கூறுதலைத் தவிர்ந்தேன்; இனி இக்கோயிலுட் கண்டவர்கள் நம்மை ஏஎயென †† இகழ்ந்து பேயும் பேயுந் தம்மிலே துள்ளுதலை இக்கூனுங் குறளும் உறுகிற்குமெனக் கூறி நகாதிருத்தலை விரும்புவேன்; ஆதலால், அமையாத பொற்றகடுபோலும் உருவத்தினையுடையாய் ! கோயிலுக்கு நீங்கலாகக் காவின்கீழே போதருவாயாக; ‡‡ துகளறுகின்ற அறிவினையுடைய அவையிலுள்ளார் திரட்சிபொருந்தின ஓலையின்றலையைக்கட்டி அதன் தலையிலே (௩) |||அரக்கிலச்சினை யிட்டுவிட்டாற்போல கிரம்பாத உடலின் உள்வாய் முயக்கம் பெற்று நிறையும்படி இறுகப் புல்லிக் கூடக்கடவே ××மென்றாள். எ - று.

---

௧. "இன்சாயன் மார்பன்" கலி. ௬௫: ௫. என்பதும் அதன் குறிப்பும் "சாயலின் மார்பின்" கலி. ௧௧௨: ௨௩ என்பதும் ஒப்புநோக்கற்பாலன.

௨. இங்குள்ள பிரதிபேதத்தை நோக்கின், "கண்டார் நகாமை வேண்டுவெறண்டா" என்பதை ஓரடியாக்கி, பிற்பகுதியைக் ககரவெதுகை நயம் பொருந்தின நான்கடியாகப்பிரிக்கலாம். உரை இடங்கொடுக்கவில்லை.

௩. (அ) "ஓலை, யரக்குப்பொறி யொற்றி யாணையிற் போக்கி" பெருங். (௧) ௩௭. ௨௦௮ - ௨௦௯. (ஆ) "அரக்கிலச் சினையின் வைத்த, வெஞ்சலி லோலை காட்ட" சூளா. தூது. ௮௨. எனவும் (இ) "பொறியுடையோலை" (ஈ) "ஓலைத்தாதிற், பெரும்பொறி யண்ண லரும்பொறியொற்றி" (உ) "பொறியொற் றோலையோ டறியப் போக்கி" பெருங். (௧) ௪௫. ௩௦, ௫௮: ௮௧ - ௮௨, (௫) ௭: ௭௧. எனவும் (ஊ) "புன்புலவழியடைத் தரக்கிலச் சினைசெய்து" நாலாயிர. திருச்சந்த. ௭௯, எனவும் வருவன காண்க.

(பிரதிபேதம்) * வணங்கினேன் ஏஎ, பேயும் பேயந்துள்ள, † பேயுமீந்துள்ளல், ‡ கண்டோர் நகாமல், || கண்டாய்தகடு, × ஞாயிற்கீழ்ப், + போதியகடார, = முயங்குவேன்றோடா துகடீர்ப்பு. **யாப்பியாத்து. †† இகழ்ந்துகூறிப்பேயுக், ‡‡ துகடீர்கின்றவறிவினை, ||| அரக்கிலச்சினை விட்டுவிட்டாற்போல, ×× என்றாள் போதருபோதாறென.

ஆங்கு, அசை. போதரு, போதரெ்ன விகாரமாயிற்று. "தோடே மடலே" என்னும்(க)சூத்திரத்தால் ஓலையென்றார்.

இதனால், இருவர்க்கும் முன்னர் நகைபிறந்தது; பின்னர்ப் புணர்ச்சி யுவகை பிறந்தது.

இதனுள்,(உ)'கோனடிதொட்டேன்' எனவும் 'கோயிலுட்கண்டார் நகாமை வேண்டுவல்' எனவுங் கூறலின், அடியோரென்பதுபெறுதும்.(ங)'கொக்குரித் தன்ன' எனத் தோல்திரைந்தமைகூறலின்,இளமைதீர்திறமாகியபெருந்திணை யாயிற்று. இது "வேட்கைமறுத்து" என்னும் (ச) பொருளியற்சூத்திரத்தால் வேட்கைமறுத்துக் கூறியபெருந்திணை. இஃது (ரு) ஊடற் பகுதியாகலின் மருதத்துக்கோத்தார்.

இஃது 'என்னோற்றனைகொல்லோ' எனவும் 'ஈங்குருச்சுருங்கி' எனவும் மூட்டடியின்றிக் குறைவுசீர்த்தாகிய சொற்சீரடியும் வந்து, இரண்டடியான் இற்றதோர் கொச்சகமும் ஐஞ்சீரடுக்கிவந்த வெண்பா ஐந்தும் ஐஞ்சீரடியான் வந்த, கொச்சகம் ஒன்றும் இரண்டடிக்கொச்சகம் ஒன்றும் ஆசிரியத்தளை விரவின கொச்சகவெண்பாவும் பெற்று வெண்கலிப்பாவின் வேறுபட்டு வந்த கொச்சகக்கலிப்பா. (உக)

---

க. தோல். மரபி. சூ. அகூ. இச்சூத்திரத்தின் பேராசிரிய ருரையிலும் ஓலையென்பது அகக்காழல்லாத ஓரறிவுயிராகிய புல்லின் உறுப்பாய் வருதற்கு,"தாகடபுகாட்சி யவையத்தா ரோலை" என்பது மேற்கோள்.

உ. அடியோர் பாங்கினும் தலைமக்களுண்டென்பதற்கு, "நம்முணருதல் .........தொட்டேன்" "பேயும் பேயுந்.........வேண்டுவல்" என்னும் பகுதிகளை மேற்கோள்காட்டி, இது பெருந்திணைக்கண் அடியோர் தலைவராக வந்தது; என்னை? கோனடி தொட்டேனென்றமையானும் கோயிலென்றமையானும் இவர்கள் குற்றேவன்மாக்களாயிற்று என்ற னர் இவ்வுரைகாரர்; தோல். அகத். சூ. உங.

ங. "உக்கத்து............சிறிது" என்பது கொக்குரித்தன்னவென்பத னால் தோல் திரைந்தமை கூறலின் இளமை தீர்திறமாகிய பெருந் திணையென்பர், நச்; தோல். அகத். சூ. ருக. இந்நூற்பக்கம் ருசூஅ: க-ஆம் குறிப்பும் பார்க்க.

ச. தோல். பொருளி. சூ. கஎ. இச்சூத்திரத்தின் இவ்வுரையிலும் "எறித்த படைபோல்.........னுயிர்" "உழுந்தினுந்.........பிறப்பு" என்பவை அடியோர் தலைவராக வேட்கைமறுத்துணர்த்தியதற்கு மேற்கோள்.

ரு. "உரிப்பொருளல்லன மயங்கவும் பெறுமே" என்னும் தோல். அகத். கங - ஆம் சூத்திரத்தின் இவ்வுரையிலும், கூனுங் குறளும்........... உறழ்ந்து கூறும் பெருந்திணை ஊடற்பகுதியதாதலின் மருதத்துட் கோத்தாரென்னும் குறிப்பு உள்ளது.

(கூரு.) நில்லாங்கு நில்லாங் கிவர்தர லெல்லாநீ
நாறிருங் கூந்தலா ரிற்செல்வா யிவ்வழி
யாறு மயங்கினை போறிநீ வந்தாங்கே
மாறினி நின்றாங்கே நின்சே வடிசிவப்பச்
செறிந்தொளிர் வெண்பல்லா யாம்வே றியைந்த
குறும்பூழ்ப்போர் கண்டே மனைத்தல்ல தியாது
மறிந்ததோ வில்லைநீ வெய்தேற்ப் பது ;

அ குறும்பூழ்ப்போர் கண்டமை கேட்டே னீயென்றும்
புதுவன வீகை வளம்பாடிக் காலிற்
பிரியாக் கவிகைப் புலையன்றன் யாழி
னிகுத்த செவிசாய்த் தினியினிப் பட்டன
வீகைப்போர் கண்டாயும் போறிமெய் யெண்ணிற்
றபுத்த புலர்வில புண் ;

கச ஊரவர் கவ்வை யுளைந்தீயா யல்கினின்
றாரின்வாய்க் கொண்டு முயங்கிப் பிடிமாண்டு
போர்வாய்ப்பக் காணினும் போகாறு கொண்டோடும்
பார்வைப்போர் கண்டாயும் போறிநின் றோண்மேலா
யீரமாய் விட்டன புண் ;

ககூ கொடிற்றாப்புண் செய்யாறு மெய்ம்முழுதுங் கையிற்
றுடைத்துநீ வேண்டினும் வெல்லாது கொண்டோடு
மொட்டியபோர் கண்டாயும் போறி முகந்தானே
கொட்டிக் கொடுக்குங் குறிப்பு ;

உக ஆயி ழையிழா யன்னவை யாணுங் கறியாமை
போற்றிய நின்மெய் தொடுகு ;

உரு அன்னையோ, மெய்யைப்பொய் யென்று மயங்கிய கையொன்
றறிகல்லாய் போறிகா ணீ ;

உஎ நல்லாய், பொய்யெல்லா மேற்றித் தவறு தலைப்பெய்து
கையொடு கண்டாய் பிழைத்தே னருளினி ;

உகூ அருளுகம் யாம்யாரே மெல்லா தெருள
வளித்துநீ பண்ணிய பூழெல்லா மின்னும்
விளித்துநின் பாணனோ டாடி யளித்தி

விடலைநீ நீத்தலி னோய்பெரி தேய்க்கு
நடலைப்பட் டெல்லாநின் பூழ்.

இது "கொடியோர் கொடுமை சுடுமென வொடியாது, நல்லிசை நயந்தோர் *சொல்லொடு தொகைஇப், பகுதியி னீங்கிய தகுதிக்கண்" (௧) தலைவி (௨)பரத்தையரைப் (௩)பூழாக்கிக் கூறியது.

இதன் பொருள்.

நில்லாங்கு நில்லாங் கிவர்தர லெல்லாநீ
நாறிருங் கூந்தலா ரிற்செல்வா (௪)†யிவ்வழி
யாறு மயங்கினை போறிநீ வந்தாங்கே
மாறினி நின்றாங்கே நின்(௫)‡சே வடிசிவப்ப

எ - து: எடா! நீ நாறுகின்ற கரிய கூந்தலையுடைய பரத்தையரில் லின்கட் ||செல்கின்றாயாய் இவ்விடத்துப்போகின்றவழி தப்பிவந்தாய்போலே இருந்தாய்; நீ இவ்விடத்துப் பரந்து பாராதேகொள்; ÷அவ்விடத்தே நில், அவ்விடத்தே நில்; இனி நின்னுடைய பரத்தையர் மனைக்கண்ணே நின் (௬)சிவந்த அடி மிகச் சிவக்கும்படி ×வந்தாற்போலப் போவென்றாள். எ - று.

செறிந்தொளிர் வெண்பல்லா யாம்வே றியைந்த
(௭)✢குறும்பூழ்ப்போர் கண்டே மனைத்தல்ல தியாது
மறிந்ததோ வில்லைநீ வேறோர்ப் பது

---

௧. தொல். கற்பியல். ௬. ௬.

௨. "காவற் பாங்கின் ஆங்கோர் பக்கத்திற் றலைவன் கூறியவற்றைக் கற்பியலுள் தலைவன் பகுதியினீங்கிய தகுதிக்கண், தலைவி பரத்தையராகக் கூறுவனவும் இச்சூத்திரத்தானமைக்க. அவை மருதக்கலியுட் கடவுட்பாட்டு முதலியன. அவற்றை ஆண்டுக்காட்டுதும் கண்டுணர்க" என்பது ஈண்டும் அறியத்தக்கது; தொல். அகத். ௬. ௪௫. நச்.

௩. "கானமர் புள்ளும்..................எங்கையரே" அம்பிகாபதி. ௯௧௦.

௪. "எம்மனை, வாரனீ வந்தாங்கே மாறு" கலி. அ௧: ௨ - ௩.

௫. "கண் சிவந்தில கால்கள் சிவந்தவே" "ஐவர் தூதுசென்று, பாதாம் புயஞ் சிவந்தான்"

௬. "செவ்விரல் சிவப்பூர" (கலி. எ௬: ௬.) என்பதும் அதன் உரையும் குறிப்பும் பார்க்க.

௭. (அ) குறும்பூழ் மருதத்திற்குமுரித்தென்பது, "நாடொறுங், கையுள தாகி விடினுங் குறும்பூழ்க்குச், செய்யுள தாகு மனம்" என்பதனாலும்

(பிரதிபேதம்) * சொல்லொடுந்தொகைஇ, † அவ்வழி, ‡ சீறடி, || செல்கின்ற நீ இவ்விடத்து. ÷ அவ்விடத்தேநில் இனி, × வந்தாப்போலேபோ, ✢ குறும்பூட்போர்.

எ - து: *அதுகேட்ட தலைவன், செறிந்து விளங்குகின்ற வெள்ளிய பல்லினையுடையாய்! யாம் புதிதாக வந்து பொருந்தின † குறும்பூழ்ப்போர் கண்டேம்; அவ்வளவல்லது நீ எனக்குத் தீங்காகக் கருதும் ஒழுக்கஞ் சிறிதும் யான் அறிந்ததோ இல்லையென்றான். எ - று.

ஓகாரம், ஐயம்.

அ குறும்பூழ்ப்போர் கண்டமை ‡கேட்டேனீ யென்றும்
புதுவன வீகை வளம்பாடிக் காலிற்
பிரியாக் கவிகைப் ||புலையன்றன் யாழி
னிருத்த செவிசாய்த் தினியினிப் பட்டன
வீகைப்போர் கண்டாயும் போறிமெய் யெண்ணிற்
றபுத்த புலர்வில புண்

எ - து: அதுகேட்ட தலைவி, நீ எந்நாளுங் குறும்பூழினது போரைக் கண்டபடியை யான் கேட்டேன்; அது கூறக் கேள்; ஒருநாட் + கொடுத்தாற்போலன்றிப் புதிய வாயிருக்கின்ற கொடையினது பெருமையைப் பாடி நின்னிடத்தினின்று நீங்காத, யாழ்வாசித்தலாற் கவிழ்ந்த கையினையுடைய பாணன் தன்னுடைய யாழோசையாலே முன்பு தாழ்க்கப்பட்ட செவிகளை அவன் ÷ கூறுகின்றவற்றைக்கேட்டற்கு அவர்சாய்க்கையிலே இப்பொழுது அக்கூற்றாலே புதிதாக அகப்பட்டனவாகிய பூழினுடைய புதிய போர்களைக் கண்டாயும்போலே இருந்தாய்; அதனை உண்மையாக எண்ணிற் புலர்ச்சியிலவாகிய புண்கள் உன்னைக்கொன்றன; இதனை ஆற்றியவா றென்னென்றாள். எ - று.

---

(ஆ) அது கோழியும் சிவற் (செவ்வல்) காடையும் கவுதாரியும் போலப் போர்த்தொழிலிற் சிறந்த பறவை யென்பது, "கறவொடு மொன்றோ டொன்று காரணமின்றிச் சீறிப், பொறியுடைக் குறும்பூழ் தம்மிற் போர்செயப் பொருத்து மோதை, செறிமயிர்த் தகர்க டம்மிற் றீயெழத் தாக்க ஞேக்கி, யறைகழல் வீர ரார்க்கு மமலையை யவிக்கு மன்றே" என்பதனாலும் (இ) அதன் போர் காணல் ஆடவர்க்குரியமரபென்பது இச்செய்யுளாலும் "கலையின் வென்றியுங் கரிபரி யிரதமே காலாண், மலையும் வென்றியுஞ் சுட்டிடை வாரணங் குறும்பூ, மூலையமோதுவன் கடாப்பிற போரிடை யுறுத்திக், குலவும் வென்றியுங் கொண்டன வாடவர் குழுக்கள்" என்பதனாலும் அறியலாகும். (ஈ) குறும்பூழ் என்பது ஒரு பறவைச்சாதிப் பெயரென்றும் இனஞ்சுட்டியதன்றென்றும்கூறுவர் உரையைகாரர்; தொல். கிளவி. சூ. கஅ. குறும்பூழ், காடையென்று வழங்கப்படும்.

(பிரதிபேதம்) * இதுகேட்ட, † குறும்பூழினதுபோரை, ‡ கேட்டனன். || புலைவன், + கொடுத்தாப்போலன்றி, ÷ கூறுகின்றனவற்றைக்,

இனி நின் மெய்யிற் *புலர்வில்லாப் புண்கள், எண்ணிப்பார்க்கில் அவ்வெண்ணைக் கெடுத்தனவென்றுமாம். இனி என்றும் புதியனவாகிய பூழினது வளப்பத்தை யாழோசைபோலே பாடி அப்பூழ் பொருத்துமிடத்து விட்டு நீங்காத புலையனென்று புலையனுக்கு அடைகூறினாள். யாழோசை கேட்டாரை அகப்படுக்குமாறுபோல இவன் பாட்டும் அகப்படுத்தலின் யாழிற்பாடியென்றாள். †பூழைத் தடவிக் கவிழ்ந்த கையினையுடைய புலையன்-‡ பூழ் பொருத்துமவன்; புலையன்றன்னுடைய இப்பொழுதிப்பொழுது அகப்பட்டனவாகிய பூழ், தத்தஞ் செவிகளைச் சாய்த்து இவன் கூறும் (க)மந்திர முதலியன கேட்கையினாலே அவன் தன்வசமாகத் தாழ்க்கப்பட்ட பூழ்; அப்பூழின்போரைக் கண்டாயும்போறியெனப் பூழிற்கும் எற்பதோர் பொருளுந்தோன்றநின்றது. இனி, யாழின் இருத்த செவிக்கு, யாழைப்போலும் (உ)மந்திரத்தாற் றாழ்ந்த செவியென்பாருமுளர்.

கச (௩)ஊரவர் கவ்வை யுளைந்தீயா யல்கனின்
றாரின்வாய்க் கொண்டு முயங்கிப் பிடிமாண்டு
போர்வாய்ப்பக் காணினும் போகாது ||கொண்டாடும்
பார்வைப்போர் கண்டாயும் போறிநின் றோண்மேலா
வீரமாய் விட்டன புண்

எ - து: ஊரிலுள்ளார் கூறும் அலருக்கு வருந்தாயாய்த் தங்குதலையுடைய நின் மார்பிற் றாரிடத்தே கையாலே அணைத்துக்கொண்டு தழுவி அகப்படுத்துதலாலே மாட்சிமைப்பட்டு வேறுஞ் சிலரை அகப்படுத்திக்கொண்டு ÷வருதற்குப் பார்வையாகப் போகவிட்ட மகளிராலே உண்டான ஊடற்போரை வாய்ப்பக் ×கண்டாராகிலும் அதற்குஊடிப்போகாதேஉன்னைக் கைக்கொண்டு நுகருங் கலவிப்போரைக் கண்டாயும்போலே இருந்தாய்; நின் தோளிற் புண்களெல்லாம் புலராமல் ஈரமாயே கிடந்தனவென்றாள். எ - று.

இனி, ஊரிலுள்ளார்எக்காலமும்பூழ்பொருத்தித் ✝திரிவையென்று கூறும் ஆரவாரத்திற்கு வருந்தாயாய் மார்பிலே அணைத்துக்கொண்டு முயங்கித்

---

க. "சொல்லுஞ் சுவட்டவர் சொல்லுக சொல்லுங்காற், சொல்லும் பலவுள சொன்னபின் - வெல்லும்................பூழ்" என்பதும் 'சொல்லக்கடவ மந்திரம் பலவாவன: தீற்றும் அரிசி ஓது மந்திரமும், பச்சிலை பிசைந்து தடவும்போது சொல்லு மந்திரமும், செவியுள் ளூறுத்து மந்திரமும்' என்று எழுதியிருக்கும் அதன் விசேடவுரையும் ஈண்டு அறிதற்பாலன; பு - வெ. பெருந்திணை. வென்றிப். கூ.

உ. "மந்திரங் கேட்குஞ் செவிய போல" பெருங். (ச) ௩: அஎ.

௩. "ஊரவர் கௌவை" குறள். ககசஎ.

(பிரதிபேதம்) * புலர்விலபுண்கள், † அப்பூழைத்தடவி. ‡ பூழ்ப்பொருத்து. || கொண்டோடும். ÷ வருத்தற்குப்பார்வை, × கண்டார்களாகிலும். ✝ திரிவரென்று

தசை கரையும்படி கையாற் பிடித்தலாலே மாட்சிமைப்பட்டுத் தனக்கு மாறாகிய பூழின் போரை வாய்ப்பக் காணினும் அதற்கு அஞ்சிப் போகாதே போர்செய்தலைத் தன்னிடத்தேகொண்டு * பின்னும் போர்செய்யும் பார்வையாகிய பூழின் போரைக் † கண்டாயும்போறியென வேறுமோர் பொருள் தோன்றி நின்றவாறு காண்க.

௧௯ கொடிற்றுப்புண் செய்யாது மெய்ம்முழுதுங் கையிற்
றுடைத்துநீ வேண்டினும் வெல்லாது ‡ கொண்டாடு
மொட்டியபோர் கண்டாயும் போறி (௧)முகந்தானே
கொட்டிக் கொடுக்குங் குறிப்பு

எ-து: இவட்கு வருத்தமாகவுங்கூடுமென்றுகருதிப் புணர்ச்சிக்காலத்துக் கவுளிடத்துச் செய்யும் வடுக்களையுஞ் செய்யாமல் மெய்ம்முழுதையும் கையாலே எப்பொழுதுந் தடவி நீ விரும்பினும் நீ தன்னை வெல்லாமற் கொண்டு புணரும் ஒட்டுதலையுடையாளது கலவிப்போரைக் கண்டாயும் போலே இருந்தாய்; நின் மனக்குறிப்பை நின் முகந்தானே || காட்டிக் கொடாநிற்குமென்றாள். எ - று.

---

௧. (அ) "முன்னங்காட்டி முகத்தினுரையா" (ஆ) "முன்ன முகத்தினுணர்ந்து" (இ) "ஒருவன், முகனுரைக்கு முண்ணின்ற வேட்கை" (ஈ) "முன்ன, முகம்போல முன்னுரைப்ப தில்" (உ) "அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங், கடுத்தது காட்டுமுகம்" (ஊ) "முகத்தின் முதுக்குறைந்த துண்டோ வுவப்பினுங், காயினுந் தான்முந் துறும்" (எ) "முகநோக்கி நிற்க வமையு மகநோக்கி, யுற்ற துணர்வார்ப் பெறின்" (ஏ) "ஒளிப்பினு முள்ளம், படர்ந்ததே கூறுமுகம்" (ஐ) "நோக்கி யறிகல்லாத் தம்முறுப்புக் கண்ணுடி, நோக்கி யறிப வதுவேபோ-னோக்கி, முகனறிவார் முன்ன மறிப" (ஒ) "முகத்தினாற் பொருண்முடிவு கண்ணினன்" (ஓ) "தூத னின்முகப் பொலிவி னாற் சுடர்க், காது வேலினன் கருமமுற்றுற, வோதி ஞானிபோ லுணர்ந்த பின்" (ஔ) "நோக்கின னவர்முக நோக்க நோக்குடைக், கோக்குமரருமடி குறுக" (ஃ) "அற்றந்தான், மனங்கள் போல முகமு மறைக்குமே" (அஅ) "சிந்தை யுண்ணெடுஞ் சீற்றந் திருமுகந், தந்தளிப்ப" (ஆஆ) "அகத்தியன் முகத்திற் காட்ட" (இஇ) "முழையுறு சீய மன்னன் முகத்தினு லகத்தை நோக்கிக், குழையுறுமெய்யன் பைய வரன்முறை கூற லுற்றான்" (ஈஈ) "உளத்தனவாண் முகத்தனவா யுதிக்குமவை குறிப்பினாற், றெளித்துரைத்தல் சீர்மைத்தே" (உஉ) "உள்ள முகத்திற் சுடர்கிற்ப" (ஊஊ) "அகத்தி னழகு முகத்திற்றெரியும்."

**(பிரதிபேதம்)** * பின்னும்பின்னும்போர். † கண்டாய்போறி. ‡ கொண்டோடும், || கொட்டிக்.

தான் விரும்பிய நீர்விளையாட்டுமுதலியவற்றிலே உன்னை ஒட்டுதலை யுடையாள்.

இனி மருந்திடுதற்குச் செவியின் மயிரைப் பறிக்குங்காற் புண்ணைப் பறியாதே மெத்தெனப் பறித்து மெய்யைமூழுக்கப் பலகாற்றுடைத்து நீ இவ்வாறு *கொண்டாடினுந் தான் எதிர்ந்த பூழினை வெல்லாமல் அப்பூழினைக்கொண்டு போர்செய்யும் (க) இயக்கனாகிய பூழின் போரைக் கண்டாயும் போறியென வேறுமொரு பொருள்தோன்றி நின்றவாறு காண்க.

௨௩. ஆயி னாயிழா யன்னவை யானுங் கறியாமை
†போற்றிய நின்மெய் தொடுகு

எ - து: அதுகேட்ட தலைவன், அப்படியாயின், ஆயிழாய்! நீ கூறுகின்ற அத்தன்மையவான குறிகளை யான் அவ்விடங்களிற் செய்தறியாமையை நின்னெஞ்சிடத்தே போற்றுதற்கு நின் மெய்யைத் தொட்டுச் சூளுறுவேனென்றான். எ - று.

தொடுமென்றும் பாடம்.

௨௫ அன்னையோ

எ - து: அதுகேட்ட தலைவி, ‡அம்மையோவென இகழ்ந்து கூறினாள். எ - று.

மெய்யைப்பொய் யென்று மயங்கிய கையொன்
றறிகல்லாய் போறிகா ணீ

எ - து: அதுகேட்ட ||தலைமகன், யான் கூறுகின்ற மெய்யைப் பொய் யென்று மயங்கிய நீ உலகவொழுக்க மொன்றும் அறியாய்போலே இருந்தாய் காணென்றான். எ - று.

௨எ நல்லாய், (உ)பொய்யெல்லா மேற்றித் தவறு(௩)தலைப்பெய்து
கையொடு ÷கண்டாய் பிழைத்தே னருளினி

க. இயக்கன்-இயக்குபவன்; "இயக்கலி னியக்கி யாகுமே" சீவக. ௧௦௧௫.

உ. (அ)"பொய்யெல்லா மேற்றி......அருளினி" என்பதை இவ்வுரைகாரர் (தொல். கற்பி. சூ. ௫.) மேற்கோள் காட்டி, இது தலைவன் நின்றுநனி பிரிவி னஞ்சிய பையுளில் அடங்குமென்றார். (ஆ) "பரத்தையி னகற்சியிற் பிரிந்தோட்குறுகி, யிரத்தலுந் தெளித்தலும்" என்பதன் உரையில், இப்பகுதியை இரத்தற்கு மேற்கோள்காட்டினர் இளம்பூரணர்; தோல். அகத். சூ. ௪௪. 'ஒன்றாத் தமரினும்'

௩. (அ) "பண்டு மொருகாற் கண்டகத் தடக்கிய, வையப் பரத்தையைக் கையொடு கண்டே, மினிப்பொய் யுண்ணு மேழைய மல்லம்"பெருங்.

(பிரதிபேதம்) * கொண்டாடிற்றுத் தானெதிர் பூழினை வெல்லாமல்பூழினைக். † போற்றியர் நின்மெய். ‡ அம்மேயோவென, || தலைவன் ÷கண்டை.

எ-து: பின்னும் நல்லாளே ! யான் * செய்த தவறுகளை என் தலையிலே †யிட்டு என் பொய்களையெல்லாம் எனக்கு ஏறத் தெளிவித்து என் களவைக் கையோடே பிடித்துக்கொண்டாய்; யானும் நின்னைத் தப்பினேன்; இனி எனக்கு அருளென்றான். எ - று.

௨கூ ‡அருளுகம் யாம்யாரே மெல்லா தெருள
அளித்துநீ பண்ணிய பூழெல்லா மின்னும்
விளித்துநின் பாணனோ டாடி ||யளித்தி
(க)விடலைநீ ÷நீத்தலி னோய்பெரி தேய்க்கு
நடலைப்பட் டெல்லாநின் பூழ்

எ - து: அதுகேட்டு அவள், எடா ! யாம் நீ கூறியவாறே × அருளுவேம்; அங்ஙனம் அருளுதற்கு யாம் யாராந்தன்மையையுடையேம்? விடலாய்! நின் பூழெல்லாம் நீமுன்னர் அளித்துப் பின்னர்க் கைவிடுதலின் ╋நின்னடிப்பிலே அகப்பட்டு நோயைப் பெரிதாகப் பொருந்தும்; அவை வருந்தாதபடி நீ உனக்கு ஆம்படி பண்ணின பூழெல்லாவற்றையும் இன்னும் நின் பாணனாலே அழைத்துவிட்டு அவற்றின்மனந்தெளியும்படி அளித்து **ஆளுவாயாக வென்றாள். எ - று.

எனவே, பரத்தையர்க்கும் பூழிற்கும் ஏற்ப நின்றது.

இதனால், இருவர்க்கும் புணர்வாகிய உவகைபிறந்தது.

"கொடுமை யொழுக்கங் கோடல் வேண்டி, யடிமேல் வீழ்ந்த கிழவனை நெருங்கிக், காத லெங்கையர் காணி னன்றென, மாதர் சான்ற வகையின் கண்ணும்"(௨)என்றதனான் அருளினியென அடிமேல் வீழ்ந்தவாறும், ††அருளுகம் யாம்யாரேமெனக் காதலமைந்தவாறும், அளித்தியெனப் பணிவை நின் பெண்டிர் கொள்வரென்றவாறுங் காண்க.

---

(க) சO: சகூரு - சகூஎ. (ஆ) "தான்முன் கண்ட தவற்றின ளாதலிற், சென்ற வாயிற் கொன்றல ளோடி" பெருங். (க) ௩எ: கசுஎ - கசுஅ.

க. "பரத்தையி னகற்சியிற் பிரிந்தோட் குறுகி, யிரத்தலுந் தெளித்தலும்" என்பதனுரையில் 'விடலை நீ நீத்தலின்..............நின்பூழ்' என்பதை மேற்கோள்காட்டி, இதில் மருதநிலத்திற்றலைமகன் விடலை யெனப்பட்டா னென்பர் இளம்பூரணர்; தொல். அகத். சூ. சச. 'ஒன்றாத்தமரினும்'

௨. தொல். கற்பி. சூ. கூ. இச்சூத்திரப்பகுதியி னுரையில் (அ) 'நல்லாய் ..............பூழ்' என்பதை மேற்கோள்காட்டி, "இதனுட் 'கையொடு கண்டாய் பிழைத்தேனருள்' என அடிமேல்வீழ்ந்தவாறும் 'அருளுகம்

(பிரதிபேதம்) * செய்யாத, † இட்டெனப்பொய்களை. ‡ அருளுக யாம்யாரே யெல்லா, || அளித்துவிடலை, ÷ நீக்கலின், × அருளுகம் அங்ஙனம் ╋ அங்கடிப்பிலே, ** ஆளுவாயாக, †† அருளுகம் யாரெனக்காதலமைந்தவாறும் காண்க.இது

இது பல கொச்சகங்களும் வருதலிற் கலிவெண்பா வுறுப்பின் வேறுபட்டு வந்த கொச்சகக்கலி. (௩௦)

(௯௪.) ஏந்தெழில் மார்ப வெதிரல்ல நின்வாய்ச்சொற்
பாய்ந்தாய்ந்த தானைப் பரிந்தானா மைந்தினை
சாந்தழி வேரை சுவற்றாழ்ந்த கண்ணியை
யாங்குச்சென் றீங்குவந் தீத்தந்தாய் கேளினி

ஏந்தி, எதிரிதழ் நீலம் பிணைந்தன்ன கண்ணாய்
குதிரை வழங்கிவரு வல்;

அறிந்தேன் குதிரைதான்
பால்பிரியா வைங்கூந்தற் பன்மயிர்க் கொய்சுவன்
மேல்விரித் தியாத்த சிகழிகைச் செவ்வுளை
நீல மணிக்கடிகை வல்லிகை யாப்பின்கீழ்
ஞாலியன் மென்காதிற் புல்லிகைச் சாமரை
மத்திகைக் கண்ணுறை யாகக் கவின்பெற்ற
வுத்தி யொருகாழ்நூ லுத்தரியத் திண்பிடி
நேர்மணி நேர்முக்காழ்ப் பல்பல கண்டிகைத்
தார்மணி பூண்ட தமனிய மேகலை
நூபுரப் புட்டி லடியொ டமைத்தியாத்த
வார்பொலங் கிண்கிணி மார்ப்ப வியற்றிநீ
காதலித் தூர்ந்தநின் காமக் குதிரையை
யாய்சுதை மாடத் தணிநிலா முற்றத்து
ளாதிக் கொளீஇய வசையினை யாகுவை
வாதுவன் வாழிய நீ;

---

யாம் யாரேம்' எனக் காதலமைந்த வாறும் நீ நீத்தலின் பூவெழிலாம் நடலைப்பட்டு நோய்பெரிதேய்க்கும், அவற்றைஇன்னும்விளித்து நின் பாணனோடு ஆடியளித்துவிடு என இப்பணிதல் நின் பெண்டிர்க்கு நன்றாமென்றவாறும் கூறியவாறு காண்க. ஈண்டுப்' பூவெழன்றது, குறிப்பினாற் பரத்தையரை" என்பர். இளம்பூரணர்; 'அவனறிவு' (ஆ) நச்சினார்க்கினியர் "மெய்யைப் பொய்யென்று...........பூழ்" என்றபகுதியை மேற்கோளாகக்காட்டி, இங்கே தாமெழுதியிருக்கும் விசேடக் குறிப்பையும் எழுதியிருக்கிறார்.

௨௨ சேகா, கதிர்விரி வைகலிற் கைவாருஉக் கொண்ட
மதுரைப் பெருமுற்றம் போலநின் மெய்க்கட்
குதிரையோ வீறி யது;

௨௫ கூருகிர் மாண்ட குளம்பி னதுநன்றே
கோரமே வாழிகுதி ரை;

௨௭ வெதிருழக்கு நாழியாற் சேதிகைக் குத்திக்
குதிரை யுடலணி போலநின் மெய்க்கட்
குதிரையோ கவ்வி யது;

௩௦ சீத்தை, பயமின்றி யீங்குக் கடித்தது நன்றே
வியமமே வாழிகுதி ரை;

௩௨ மிகநன், றினியறிந்தே னின்றுநீ யூர்ந்த குதிரை
பெருமணம் பண்ணி யறத்தினிற் கொண்ட
பருமக் குதிரையோ வன்று பெருமநின்
னேதில் பெரும்பாணன் றூதாட வாங்கேயோர்
வாதத்தான் வந்த வளிக்குதிரை யாதி
யுருவழிக்கு மக்குதிரை யூரனீ யூரிற் பரத்தை
பரியாக வாதுவனு யென்றுமற் றச்சார்த்
திரிகுதிரை யேறிய செல்.

*இது "கோடியோர் கோடுமை சுடுமேன வோடியாது, நல்லிசை நயந்தோர் சோல்லொடு †தோகைஇப் பகுதியி னீங்கிய தகுதிக்கண்" (க)‡தலைவி பரத்தையரைக் குதிரையாக்கிக் கூறியது.

இதன் பொருள்.

---

க. (அ)தொல். கற்பி. சூ. சு. இச்சூத்திரப் பகுதியினுரையிலும் நச்சினார்க்கினியர் இச்செய்யுளை மேற்கோள் காட்டி, "இதனுள் பாணன் றூதாட வாதத்தால் வந்த குதிரை யென்பதனால், அவன் கூட்டிய புதிய பரத்தையர் என்பதூஉம் அவன் பகுதியினின்று நீங்கியவாறும் குதிரையோ வீறியதென்பது முதலியவற்றாற் கொடுமை நெஞ்சைச் சுடுகின்றவாறும் அதனை நீக்கிய பரத்தையரைக் குதிரையாகக்கூறித் தானதற்குத் தக்குநின்றவாறுங் காண்க" என இதனிறுதியிலுள்ள குறிப்புக்குச் சிறிதுவேறுபட ஒரு குறிப்பும் எழுதியுள்ளார். (ஆ) இந்நூற்பக்கம் ௫௭௭: ௨ - ஆம் குறிப்பு இங்கும் அறியத்தக்கது.

(பிரதிபேதம்) * இது பகுதியினீங்கிய, † தொகைஇயபகுதி, ‡ தலைவிகூறியது.

(க)ஏந்தெழின் மார்ப வெதிரல்ல நின்வாய்ச்சொற்
(உ)பாய்ந்தாய்ந்த தானைப் பரிந்தானா *மைந்தினை
சாந்தழி வேரை சுவற்றூழ்ந்த கண்ணியை
யாங்குச்சென் (ந)றீங்கு†வந் தீத்தந்தாய்

எ - து: உயர்ந்த அழகினையுடைய மார்பனே! நின் வாயிற்சொல் நினக்கு மாறல்ல; நின் தன்மைகண்டு வினவுகின்றேன்; நீ மடிவிரிந்து கரையற்று முசிந்த (ச) ‡புடைவையையுடைய அமையாத வலியினையுடையை; சந்தனம் அழிதற்குக் காரணமான || வேர்வையையுடையை; தோட்கட்டிலே கிடந்து நிறங்குறைந்த கண்ணியையுடையை; ஆகையினாலே எவ்விடத்தே சென்று இவ்விடத்தே வந்தா✛யென்றாள். எ - று.

ச கேளினி
ஏந்தி, (ரு)எதிரிதழ் நீலம் பிணைந்தன்ன கண்ணாய்
குதிரை வழங்கிவரு வல்

×எ - து: அதுகேட்ட தலைவன், யான் கூறுகின்றதனை இப்பொழுது கேள்; உயர்ந்து தன்னில் இணையொத்த நீலப்பூவைத் தொடுத்தாலொத்த கண்ணினையுடையாய்! குதிரையேறி வருவேனென்றான். எ - று.

---

க. "ஏந்தெழின் மிக்கான்"

உ. (அ)ஆய்தலென்பது உள்ளத னுணுக்கமாகிய குறிப்புணர்த்து மென்பதற்கு, இவ்வடி மேற்கோள்; தொல். உரி. சூ. நச. சேனா; சூ. உகு. 'ஓய்தல்' தெய்வச். சூ. நஉ. நச்; நன். உரி. சூ. கஅ. இரா; இ-வி. சூ. உஅக. (ஆ) "பாய்ந்தாய்ந்த மா" பதிற். சுகூ: எ.

ந. "ஈங்குவந் தீத்தந்தாய்" என்பது முன்னிலை முற்று வினைத்திரிசொல்லுக்கு மேற்கோள்; தொல். எச்ச. சூ. சுக. நச்.

ச. புடைவையென்பது ஆண்பாலாருடைக்கும்பெயராய்ப் பண்டுவழங்கிற்றென்பது; முல்லைப். ருகூ. மது. ருகூஅ. பு - வெ. வாகை. கச; பெருங். பெண்பாற். கஅ. உரையாலும், "மெய்தருவா னெறியடைவார் வெண்புடைவைமெய்சூழ்ந்து" என்னும்சேக்கிழார்செய்யுளாலும் அறியலாகும்.

ரு. (அ)"நீலத், தெதிர்மலர்ப் பிணைய லன்னவிவ, ளரிமதர் மழைக்கண்" (ஆ)"நெடு நீர் பயந்த நிரையிதழ்க் குவளை, யெதிர்மல ரிணைப்போ தன்னதன், னரிமதர் மழைக்கண்" எனவும், (இ) "மலர்பிணைத் தன்ன மாயிதழ் மழைக்கண்" (ஈ) "மாத்தாட் குவளை மலர்பிணைத் தன்ன,

(பிரதிபேதம்) * மைந்தினைச் சாந்தழி. † வந்தீத்தாய் கேளினி: எ - து. ‡ புடவை யோடே அமையாத, || வேர்ப்பையுடையை, ✛ என்றாள் பின்னர்த்தலைவன்யான் கூறுகின்றதனை இப்பொழுதுகேள் ஏந்தி, × எ - து: உயர்ந்து தன்னில்,

அறிந்தேன் குதிரை * தான்
பால்பிரியா (௧)வைங்கூந்தற் பன்மயிர்க் கொய்சுவல்
மேல்விரித் தியாத்த சிகழிகைச் செவ்வுளை
நீல மணிக்(௨)கடிகை வல்லிகை யாப்பின்கீழ்
ஞாலியன் மென்காதிற் புல்லிகைச் சாமரை
†மத்திகைக் கண்ணுறை யாகக் கவின்பெற்ற
வுத்தி யொருகாழ்நூ ‡லுத்தரியத் திண்பிடி
நேர்மணி நேர்முக்காழ்ப் பல்பல கண்டிகைத்
தார்மணி பூண்ட தமனிய மேகலை
நூபுரப் புட்டி லடியொ டமைத்தியாத்த
வார்||பொலங் கிண்கிணி யார்ப்ப ÷வியற்றிநீ
காதலித் தூர்ந்தநின் காமக் குதிரையை
யாய்சுதை மாடத் தணிநிலா முற்றத்து
ளாதிக் +கொளீஇ யசையினை யாகுவை
வாதுவன் வாழிய நீ

---

மாயிதழ் மழைக்கண் மாஅ யோளொடு"(௨)"தூமலர்த் தாமரைப் பூவி னங்கண், மாயிதழ்க் குவளை மலர்பிணைத் தன்ன, திருமுகத் தலமரும் பெருமதர் மழைக்கண்"(௩)"குவளையின் பிணையல் செற்று......செவ் வரிபொதிந்த வாட்கண்" (௭) "கொங்கிவரும் கருங்குழலி பெருந் தடங்க ணிருங்குவளைப் பிணையல் போல..........திளைத்த வன்றே" எனவும் (ஏ) "முதுநீர்ப் பழனத்துத் தாமரைத் தாளி, னெதிர்மலர் மற்றவன் கண்ணொக்கும்" (ஐ)"கண்ணே, புகழ்சா லுறுமலை யலரிணைப் பிணையல்" எனவும் வருவனகாண்க.

௧. (அ) "ஐங்கூந்த லுளர" கலி. ௧௦௫: ௫௩. (ஆ) "நாறைங் கூந்தற்... ........மகளிர்க்கு" (இ) "இருளைங் கூந்த லின்றுயில்" (ஈ) "சில் லைங் கூந்தல்" அகம். ௬௫: ௧௮ - ௨௦; ௨௩௩: ௧௫; ௨௯௧: ௩. (உ) "நாறைங் கூந்த லணித்தென" (ஊ) "புயலைங் கூந்தல்" (எ) "நா றைங் கூந்த னடுங்குதுய ரெய்த" சிலப். ௧௦: ௭௩; ௧௧: ௧௦௯, ௧௫: ௯௭.

௨. களிகையென்பது, கடிகையெனத் திரிந்துநின்றது; களிறு கெளி றென்பன கடிறு கெடிறெனத் திரிந்து வருதலுங் காண்க; வட மொழியில் திரிந்துவந்ததென்றலுமாம். "கண்ணார் களிகை" "திருக்

(பிரதிபேதம்) * தான் எ - து: அதுகேட்டதலைவி நீ ஏறின குதிரைதான் யானறிந்தேன் அத னைக்கேள் பால்பிரியா, † மத்திகைகண்ணுறை. ‡ உத்திரியத், || பொலக் கிண்கிணி, ÷ பயிற்றிநீ. + கொளீஇய வசைவினை யாகுவா யாதுவன்.

எ - து: நெஞ்சழிகின்ற நினைவு வருத்துகையினாலே நினதருளை விரும்பிக் கலங்கினவளுடைய பழித்தலறும் ஒளியினையுடைய முகம் பசப்புப் பரப்ப நீ காணுமிடத்து உயிரை உடம்பிடத்தே நின்றும் பேர்க்கும் (௧) கூற்று வனைப்போல, யாவரையும் உலகத்துறையும் எல்லைதனிலே நிறுத்தின கோலாலே முறைமைசெய்வையென்று உலகம் நின்னைக் கூறும் வார்த்தை நினக்குக் கெடாதோதான் ? எ - று.

ஆங்கு, அசை.

௨௦ தொன்னல மிழந்தோளே துணையெனப் புணர்ந்தவ
(௨)ளின்னுறல் வியன்மார்ப வினையையாற் கொடிதென
நின்னையான் கழறுதல் வேண்டுமோ
(௩)*வென்னோர்க ளிடும்பையுங் களைந்தீவாய் நினக்கே

எ - து: † எத்தன்மையுடையோர்களுடைய ‡ வருத்தமுங் களைகின்ற அதனால் இனிய முயக்கத்தையுடைய வியன்மார்பனே ! நீ புணருந் துணையென்று கருதிப் புணர்ந்தவள் தனது இயற்கைநலத்தையும் இழந்தாள் ; நீ இத்தன்மையையாய் இராநின்றாய் ; இது நினக்குக் கொடிதென்று நின்னை யான் கோபித்தல்வேண்டுமோ ? நீயே அளிப்பாயாகவென்றான். எ - று.

||இழந்தோள்: ஆ, ஓவாய்நின்றது.

இதனால், தலைவற்கு அசைவுபிறந்தது.

இஃது ஆறடித்தரவும் நான்கடித்தாழிசையும் தனிச்சொல்லும் நான்கடி யாசிரியச்சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக்கலி. (௩௫)

× மருதக்கலி முற்றும்.



௧. நிறுத்துதலைக் கூற்றின் றொழிலாகப் பொருத்திக் கொள்ளின், "செயிரிற் குறைநாளாற் பின் சென்று சாடி, யுயிருண்ணுங் கூற்ற மும் போன்ம்" கலி. ௧௦௫: ௩௭ - ௩௮. என்பதும் அதன் குறிப்பும் ஒப்பு நோக்கற்பாலன.

௨. "இன்னுறல் வியன் மார்ப" கலி. ௮: ௨௪.

௩. "என்னோர் மருங்கினு மேத்தி" என்புழி என்னோருமென்பதற்கு எல்லோரு மெனப் பொருளெழுதி யிருத்தல் ஈண்டறிதற் பாலன. சீவக. ௨௧௨௮. உரை.

பிரதிபேதம்) * ஒன்னோர்கள், † எத்தன்மையையுடையோர்களுடைய. ‡ வருத்தங்களை கின்ற, || இழந்த தோள், × மருதப்பாட்டு முற்றும், மருதத்துக்கு நச்சினார்க் கினியார் செய்தவுரை முடிந்தது இது ஆசிரியன்பாரத்துவாசிகக. தனிபெறு.

உ

திருமால் துணை.

# கலித்தொகை

## மூலமும்

### நச்சினார்க்கினியருரையும்.

### நான்காவது முல்லைக்கலி.



(கOக.) தளிபெறு தண்புலத்துத் தலைப்பெயற் கரும்பீன்று
முளிமுதற் பொதுளிய முட்புறப் பிடவமுந்
களிபட்டா னிலையேபோற் றடவுபு துடுப்பீன்று
ஞெலிபுட னிரைத்த ஞெகிழிதழ்க் கோடலும்
மணிபுரை யுருவின காயாவும் பிறவு
மணிகொள மலைந்த கண்ணியர் தொகுபுடன்
மாறெதிர் கொண்டதம் மைந்துட னிறுமார்
சீறரு முன்பினோன் கணிச்சிபோற் கோடுசீஇ
யேறுதொழூஉப் புகுத்தன ரியைபுட னொருங்கு;
அவ்வழி, முழக்கென விடியென முன்சமத் தார்ப்ப
வழக்குமாறு கொண்டு வருபுவரு பீண்டி
நறையொடு துகளெழ நல்லவ ரணிநிற்பத்
துறையு மாலமுந் தொல்வலி மராஅமு
முறையுளி பராஅய்ப் பாய்ந்தனர் தொழூஉ;
மேற்பாட் டுலண்டி னிறனொக்கும் புன்குருக்க
ணோக்கஞ்சான் பாய்ந்த பொதுவனைச் சாக்குத்திக்
கோட்டிடைக் கொண்டு குலைப்பதன் றோற்றங்கா

ஞஞ்சீ ரசையியல் கூந்தற்கை நீட்டியா
னெஞ்சம் பிளந்திட்டு நேரார் நடுவட்டன்
வஞ்சினம் வாய்த்தானும் போன்ம்;

௨௧ சுடர்விரிந் தன்ன சுரிநெற்றிக் காரி
விடரியங் கண்ணிப் பொதுவனைச் சாடிக்
குடர்சொரியக் குத்திக் குலைப்பதன் றோற்றங்காண்
படரணி யந்திப் பசுங்கட் கடவு
ளிடரிய வேற்றெருமை நெஞ்சிடந் திட்டுக்
குடர்கூளிக் கார்த்துவான் போன்ம்;

௨௭ செவிமறை நேர்மின்னு நுண்பொறி வெள்ளைக்
கதனஞ்சான் பாய்ந்த பொதுவனைச் சாடி
நுதிநுனைக் கோட்டாற் குலைப்பதன் றோற்றங்கா
ணாரிரு ளென்னா னருங்கங்குல் வந்துதன்
றாளிற் கடந்தட்டுத் தந்தையைக் கொன்றானைத்
தோளிற் றிருகுவான் போன்ம்;

எனவாங்கு;

௩௪ அணிமாலைக் கேள்வற் றரூஉமா ராயர்
மணிமாலை யூதுங் குழல்;

௩௬ கடாஅக் களிற்றினுங் கண்ணஞ்சா வேற்றை
விடாஅதுநீ கொள்குவை யாயிற் படாஅகை
யீன்றன வாயமக டோள்;

௩௯ பகலிடக் கண்ணியன் பைதற் குழலன்
சுவன்மிசைக் கோலசைத்த கைய னயலது
கொல்லேறு சாட விருந்தார்க்கெம் பல்லிருங்
கூந்த லணைகொடுப்பேம் யாம்;

௪௩ கோளாள ரென்னொப்பா ரில்லென நம்மானுட்
டாளாண்மை கூறும் பொதுவ னமக்கொருநாட்
கோளாள னாகாமை யில்லை யவற்கண்டு
வேளாண்மை செய்தன கண்;

சஎ ஆங்கு, ஏறும் வருந்தின வாயரும் புண்கூர்ந்தார்
நாறிருங் கூந்தற் பொதுமகளி ரெல்லாரு
முல்லையந் தண்பொழில் புக்கார் பொதுவரோ
டெல்லாம் புணர்குறிக் கொண்டு.

இஃது "ஆயர் வேட்டுவ ராடூஉத் திணைப்பெய, ராவயின் வருஉங் கிழவரு முளரே" என்னும் (க) சூத்திரத்தில் 'திணைநிலைப்பெயராகிய கிழவருங் கிழத்தியரும் உளர்' என்னும் விதியாற்கொண்ட அத்தலைவிக்கு அவள் தோழி ஆயர் ஏறுதழுவுகின்றமைகாட்டி அவள் அதுகண்டு வருந்தாமல் ஆண்டுப் பெற்ற நன்னிமித்தங் கூறித்தெளிவித்து, *அதனை அவ்விதியாற்கொண்ட தலைவற்குங்கூறி, மீட்டும் அத்தலைவிக்குத் தஞ் சுற்றத்தார் கூறியிருக்குங் கூற்றினையுங் கூறி, தலைவனும் இன்னும் ஒருஞான்று ஏறுதழுவி நம்மை வரைந்துகோள்வனென்று ஆற்றுவித்தது.

இதன் பொருள்.

தளிபெறு தண்புலத்துத் (உ)தலைப்பெயற் கரும்பின்று
முளிமுதற் பொதுளிய (ந) முட்புறப் பிடவமுங்
களிபட்டா னிலேயேபோற் (ச) றடவுப (ரு) துடுப்பீன்று
ஞெலிபுட னிரைத்த †ஞெகிழிதழ்க் (சு)கோடலு

க. தொல். அகத். சூ. உக.

உ. "தலைப்பெய றலைஇய தண்ணறுங் கானத், திருள்படப் பொதுளிய பராரை மராஅத்து" முருகு. சு - கo.

ந. பிடாவென்பதுமுட்காலையுடையதொரு புதல்; மழைக்குத் தளிர்த்து அரும்பிக் குலையாகப் பூப்பது; இதன்பூ நீண்ட காம்பையும் வெண்ணிறத்தையுமுடையது (அ)"முட்பிடவார்சிறுநெறி" (ஆ)"வான்பிசிர்க் கருவியிற் பிடவுமுகை தகையக், கான்பிசிர்கற்பக்கார்தொடங்கின்றே" (இ) "சிறுகரும் பிடவின் வெண்டலைக் குறும்புதல், கண்ணியின் மலருந் தண்ணறும் புறவில்" (ஈ) "குறும்புதற்பிடவி னெடுங்காலலரி" (உ) "நிலவெனத், தொகுமுகை விரிந்த முதுகாற் பிடவின்" எனவருதலும் காண்க. பிடாவென ஒரு மரமும் உண்டென்பர்.

ச. "தடவென் கிளவி கோட்டமுஞ் செய்யும்" தொல். உரி. சூ. உந.

ரு. (அ) "காந்தட் டுடுப்பிற் கமழ்மடல்" மலை. நநசு. என்பதும் (ஆ) கலி. ருக: ந - ச வது அடிக்குறிப்பில் காந்தட்டுடுப்பென வந்திருப்பவையும் ஈண்டு அறிதற்பாலன.

சு. கோடலென்பது பெரும்பாலும் முல்லைநிலத்துக்குரித்தாகக் கூறப்படும்ஒருபூங்கொடி ; இதன்குலைக்குப் பாம்பின் படமெடுத்தநிலையும்

(பிரதிபேதம்) * இதனை, † ஞெகிழதழ்க் கோடலும்.

(௧)மணிபுரை யுருவின காயாவும் பிறவு
மணிகொள மலைந்த கண்ணியர் தொகுபுடன்
மாறெதிர் கொண்டதம் மைந்துட னிறுமார்
சீறரு முன்பினேன் (௨)கணிச்சிபோற் கோடுசீஇ
யேறுதொழூஉப் புகுத்தன ரியைபுட னெருங்கு

எ - து: மழையைப் பெறுகின்ற குளிர்ந்த நிலத்தே நின்ற கார்காலத்து மூற்பட்ட மழைக்கு *அரும்பீனுகின்று முன்புஉலர்ந்த முதலிடத்தே தழைத்த முள்ளைப் புறத்தேயுடைய பிடவம்பூவும், (௩) கள்ளுண்டு†களித்தலுற்றவ ணிலைமைபோல அசைந்து ‡ வளைந்து துடுப்புப்போலும் முகையை முன்னர்

---

இதன்பூவுக்கு விளக்கும் உவமையாகக் கூறப்படுகின்றன; இஃது இடையராற் சூடப்படுவது; இது பெரும்பாலும் வெண் காந்தளுக்கே பெயராய்வருமென்பர்; இங்குச்செங்காந்தட்கு வந்திருப்பது புண்டரீக மென்பது செந்தாமரைக்கு வருவதுபோல அருகியவழக்கு; (அ)“குருவுடையன கொடிமிடைவொடு குலைவிரிவன கோடல்” (ஆ) “வெஞ்சின வரவின் பையணந் தன்ன, தண்கமழ் கோட றுதுபிணி யவிழ” (இ) “அணர்த்தெழு பாம்பின் றலைபோற் புணர்க்கோடல், பூங்குலையீன்ற புறவு” (ஈ) “கோடலங் தீப மேந்தி” (உ) “வரிவெண்கோடல் வாங்குகுலை வான்பூப், பெரிய சூடிய கவர்காற் கோவலர்” என்பவற்றால் இவை விளங்கும்; இதுவும் மகளிர்வளையலும் ஒன்றற்கொன்று உவமையாதல் இந்நூற்பக்கம் ௪௯: ௧-ஆம் குறிப்பால் அறியலாகும். தோன்றி யென்பதும் இதன்வகைபோலும்.

௧. (அ) “மணிக்காயா” பொருந. ௨௦௧. (ஆ) “மணியெனத், தேம்படு காயா மலர்ந்த” ஐங். ௪௨௦.

௨. கணிச்சி, மழுவின் வேறாய தொருபடை; இதனை, “கையது கணிச்சியொடு மழுவே மூவாய், வேலு முண்டத் தோலாதோற்கே” என்பது வலியுறுத்தும்.

௩. (அ)“நாளா தந்து நறவுநொடை தொலைச்சி, யில்லடு கள்ளின் றோப்பி பருகி..........தோளோச்சி வலன் வளையூஉப், பகன்மகிழ் தூங்குந் தூங்கா விருக்கை” பெரும்பாண். ௧௪௧ - ௧௪௯. (ஆ) “தசும்பு துளங்கிருக்கையென்றது தன் களிப்புமிகுதியால் தன்னை யுண்டாருடல்போல அத்தசும்பிருந்து ஆடும்படியான இருப்பென்றவாறு; இச்சிறப்பான், இதற்கு, ‘தசும்புதுளங்கிருக்கை’ என்றுபெயராயிற்று” பதிற். ௪௨: ௧௧.உரை.(இ) “துழந்தடு கள்ளின் றோப்பியுண் டயர்ந்து, பழஞ்செருக் குற்ற வனந்தர்ப் பாணியும்” மணி. ௭: ௭௧ - ௭௨. (ஈ) “அரிய லார்ந்த வனந்தர்” தணிகை. திருநாட்டு. ௧௦௦.

(பிரதிபேதம்) * அரும்பியீனு நின்ற, † களித்தலுற்றவணிலைமை ‡ வளைந்ததுடுப்பு.

ஈன்று, பின்னர்த்(க)தீயைக் கடைந்து, அதிற்பிறந்த நெருப்பைச்சேரநிரைத் தாற்போன்ற அலர்ந்த இதழினையுடைய செங்காந்தட்பூவும், நீலமணியை யொக்கும் நிறத்தினையுடையவாகிய(உ)*காயாம்பூக்களும் பிறவும் அழகுகொள் ளும்படி சூடிய கண்ணியையுடையவர் சேரத்தொக்கு ஏறுதழுவுவாரோடே மாறுபடுதலை ஏறட்டுக்கொண்ட தம் மைந்தினைச் சேரநிறுத்துதற்கு மகட் கொடை நேர்ந்த ஆயர் சேரக்கூடி, பிறராற் சீறுதற்கரிய வலியினையுடைய இறைவனுடைய குந்தாலிப்படைபோலே கூரிதாகக் கொம்புகளைச் சீவி, ஏறு களைச் சேரத் தொழுவிடத்தே புகுதவிட்டார். எ - று.

தண்புலத்துநின்ற பிடவும் காந்தளும் காயாவும் பிறவுமென்க. இவை (ங)முதற்பொருட்கேற்ற அடையடுத்துநின்ற ஆகுபெயர். ஈன்றென்பதுநிகழ் காலமுணர்த்துஞ் செய்தெனெச்சம். (ச) ஞெகிழியுடனென்றது ஞெலிபுட னென எச்சமாகக்கூறுதலின் இவ்வாறு பொருள் †கூறினும். "ஞெலிகோற் கொண்ட பெருவிறன் ஞெகிழி" (ரு)என்பதனானும் இது வினைச்சொல்லாம்.

அவ்வழி, முழக்கென விடியென முன்சமத் தார்ப்ப
வழக்குமாறு கொண்டு வருபுவரு பீண்டி
நறையொடு துகளெழ நல்லவ ரணிநிற்பத்
(சு)துறையு மாலமுந் தொல்வலி மராஅமு
முறையுளி பராஅய்ப் பாய்ந்தனர் தொழூஉ

எ - து: அவ்விடத்து ஏறுகளைத் தழுவிப்‡போக்கும்படியை உட்கொண்டு வந்து வந்து திரண்டு மழைமுழக்கென்ன இடியென்ன நடுவானநிலத்தின்

---

க. "தீயி னன்ன வொண்செங் காந்தட்,..................நெருப்பி னன்ன பல்லிதழ்" மலை. கசரு-கசக.

உ. "காயாம்பூங் கண்ணிக் கருந்துவராடையை" கலி. க0அ: க0.

ங. "தளிபெறு..................பிடவமும்" என்பது பூங்குமிழென்பது முதலாகிய தன் பொருட்கேற்ற அடையடுத்து நின்றதோராகுபெய ரென்பதற்கும் (கோவையார். க: பேர்.) செய்தென்னும் வினை யெச்சத்திற்கு நிகழ்கால வாய்பாடும் சிறுபான்மையுண்டென்பதற்கும் (தொல். வினை. சூ. ஙக. நச்.) உகரவீறுசிறுபான்மை நிகழ்காலம் பற்றி வருமென்பதற்கும் (இ - வி. சூ. உசசு.) மேற்கோள்.

ச. "சொடு மழைக் காற்று தங்கட் குளிர்பெயன் மாறவெண்ணி, நெடு மலை யெடுத்துக் காட்டு நெட்டிதழ்க் காந்தட் கொள்ளி"

ரு. பெரும்பாண். களஅ.

சு. (அ)"யாறுங்குளனும் வேறுபல் வைப்புஞ், சதுக்கமுஞ் சந்தியும் புதுப் பூங் கடம்பும்" முருகு. உஉச-உஉரு. (ஆ) "ஆலமுங் கடம்பு நல்யாற்று நடுவும், கால்வழக் கறுநிலைக் குன்றமும்பிறவு, மவ்வவை மேய வேறு

(பிரதிபேதம்) * காயாம் பூக்களுமழகுகொள்ளும்படி, † கூறிற்று. ஞெலிகோற், ‡ போகும் படியை யுரைகொண்டு வந்து வந்து.

முன்னே ஆரவாரமெழப் புகையொடு துகள் எழ ஏறுதழுவினார்க்குக் கொடுத்தற்கு நல்லமகளிர் திரண்டுநிற்ப * நீர்த்துறையிலும் (௧) ஆலமரத்தின்கீழும் பழையவலியினையுடையமராமரத்தின்கீழும் உறையுந்தெய்வங்கட்குச் செய்யும் முறைமைகளைப் பரவித் தொழுவிலே பாய்ந்தார். எ - று.

"வளிவழக் கறுத்த வங்கம்" (௨) என்றாற்போல வழக்குப் போக்குதன் மேல்நின்றது.(௩) இடி ஏற்றின் இடிப்பிற்கு உவமம். அவர்பாய்ந்த அளவிலே தோழி தலைவியை அழைத்துக்காட்டுகின்றாளாக மேற்கூறுக.

௧௫ மேற்பாட் டுலண்டி னிறனொக்கும் புன்குருக்க
ணோக்கஞ்சான் பாய்ந்த பொதுவனைச் சாக்குத்திக்
கோட்டிடைக் கொண்டு குலைப்பதன் றோற்றங்கா
ணஞ்சீ ரசையியல் கூந்தற்கை நீட்டியா
(௪)னெஞ்சம் பிளந்திட்டு நேரார் நடுவட்டன்
வஞ்சினம் வாய்த்தானும் போன்ம்

எ - து: உயர்ந்த கொம்பிடத்தே வைத்த(௫)உலண்டினது நிறத்தை யொக்கும் புல்லியநிறத்தைத் தன்னிடத்தேயுடைய எருத்தினது நோக்கை அஞ்சானாய் அதின்மேலே பாய்ந்த இடையனைச் சாவக்குத்திக் கொம்பிடத்தே எடுத்துக்கொண்டுஉடலைக்குலைக்கின்றதனுடையதோற்றரவைக்காணாய்;அழகிய

வேறு பெயரோ, யெவ்வயி னோயு நீயே" பரி ௪: ௬௭ - ௭0. (இ) "துறைமிசை நினதிரு திருவடி தொடுநர்"சிலப். ௨௪. 'குறமகள்'

௧. (அ) "ஆலுங் கடம்பு மணிமார் விலங்கிட்ட" கலி. ௧0௬: ௨௬. (ஆ) "கடவுளாலத்து" நற். ௩௪௩: ௪; புறம். ௧௯௯: ௧.

௨. புறம். ௩௬௮: ௯.

௩. "உருமி னதிருங் குரல்போற் பொருமுரா, ணல்லேறு" கலி. ௧௧௩: ௨௪ - ௨௫. என்பதும் அதன் குறிப்பும் இங்கே நோக்கற்பாலன.

௪. "நெஞ்சம் பிளந்திட்டு நேரார் நடுவட்டன், வஞ்சினம் வாய்த்தானும் போன்ம்" என்பது 'இட்டு' என்னு மிடைச்சொல் அசைநிலையாய் வருதற்கு மேற்கோள். நன். இடை. சூ. ௨௨. மயிலை; விருத்தி; இரா. இ - வி. சூ. ௨௭௭.

௫. உலண்டென்பது தான் வெளிப்படுதற்கு வழியின்றித் தன்னுடம்பைத் தானாற்கு நூலாற் சுற்றிக் கூடாக்கிக் கொண்டு அதனுள்ளிருந்திறக்கும் இயற்கையையுடையதொரு புழு; அந்நூலியற்ற அதுவே வல்லது. அது காட்டிலமிர்தென்று சிறப்பிக்கப்படுவது; அதனாலால் சிறந்த ஆடை நெய்தலுண்டு; இவை (அ) "வரியுடல் சூழக்குடம்பை நூ றெற்றிப், போக்குவழி படையா துள்ளுயிர் விடுத்தலி, னறிவுபுறம் போய வுலண்டது போல" (ஆ) "போக்குவழி கண்டிடை

(பிரதிபேதம்) * நீர்த்துறையும் ஆலத்தின் கீழும்.

தலைமையினையுடைய மனமசைந்த இயல்பினையுடையளாகிய துரோபதையது தூய்ய கூந்தலிலே கையை நீட்டிய* துச்சாசனனுடையநெஞ்சைப் பிளந்து போகட்டுப் பகைவர்நடுவே தான்சொன்ன வஞ்சினத்தை வாய்க்கச்செய்த வீமசேனனைப்போலும். எ - று.

போலும் போன்மெனத் திரிந்தது. † "னகாரை முன்னர் மகாரங் குறுகும்" (க)என்பதனுன் மகரங் கான்மாத்திரையாய் நின்றது. புன்குருக்கண், ஆகுபெயர். சாவக்குத்தியென்பது "சாவ வென்னுஞ் ‡செயவெனெச்சத் திறுதி வகரங் கெடுதலு முரித்தே" (உ) என்பதனுல் வகரங்கெட்டது.

உக (௩)சுடர்விரிந் தன்ன சுரிநெற்றிக் காரி
விடரியங் கண்ணிப் பொதுவனைச் சாடிக்
குடர்சொரியக் குத்திக் குலைப்பதன் றோற்றங்காண்
படரணி யந்திப் பசுங்கட் கடவு
ளிடரிய(ச)வேற்றெருமை நெஞ்சிடந் திட்டுக்
குடர் || கூளிக் கார்த்துவான் போன்ம்

---

புகாது று முலண்ட, மாக்கியிடு கூடநனை யாத்திடுதல் போல" (இ) "குடம்பையுளுலண்டுபோலக்கோட்படும்வினையன்"(ஈ) "வாலுலண்டு கோற்றருத, றேன்புரிந்தி யார்க்குஞ் செயலாகா" (உ) "அரக்குலண்டு செந்தே னணிமயிற்பீலி, திருத்தகு நாவியோடைந்து" (ஊ) "நூலினு முலண்டினு நாரினு மியன்றன" என்பவற்றுல் அறியப்படுகின்றன; இங்கே அதனிறம் புற்கென்றநிறமென்று சொல்லப்படுகிறது. இவ்வகை ஆராய்ச்சியால் இது பட்டுப்பூச்சி யென்பது விளங்கும்.

க. தொல். மொழிமரபு. சூ. கக.

உ. சாவ வென்னும் எச்சத்து இறுதிக்கணின்ற வகரஉயிர்மெய் கெட்டு நிற்றற்கு, "கோட்டிடைச் சாக்குத்தினன்" என்பது (தொல். உயிர் மயங்கு. சூ. எ. நச்; இ - வி. சூ. அடு) இவற்றிலும், 'சாக்குத்தினன்' என்பது (தொல். உயிர்மயங்கு. சூ. எ. இளம். நன். உயிரீற்று. சூ. கக. மயிலை. விருத்தி. இரா); இவற்றிலும் மேற்கோளாகக் காணப்படுகின்றன. 'சாக்குத்தினன்' என்பதனை முதனிலைவினை வினைமாத்திரையாய் நில்லாது வினையெச்சப் பொருட்டாய் நின்றதென்பர் பிரயோக விவேக நூலார். பிரயோக. ௩டு.

௩. "வள்ளுருணேமியான் வாய்வைத்த வளைபோலத், தெள்ளிதின் விளங்குஞ் சுரிநெற்றிக் காரியும்" கலி. ௧0௫: ௬-௧0.

ச. (அ)"எற்றெருமைநெஞ்சம் வடிம்பினிடந்திட்டு" கலி.௧0௩: சஉ. எனவும் (ஆ) "எற்றெருமை யுகைத்தடரு மிருணிறத்த வெரிகுஞ்சிக்,

(பிரதிபேதம்) *துச்சுவாசனுடைய, † 'னகர முன்னர் மகரங்குறுகும்' ‡ செய்தெனெச்சத் திறுதி, || கூளிக் காத்துவான்.

எ - து: மதிவிரிந்தாற்போன்ற சுட்டியை நெற்றியிலேயுடைய கரிய எருது முழைஞ்சினையுடைய மலையிற்பூவாற்செய்தஅழகையுடையகண்ணியை யுடைய பொதுவனைத் * துகைத்துக் குடர்சரியும்படி குத்திக் கோட்டிடைக் கொண்டு குலைப்பதனுடைய தோற்றரவைக் காணாய்; பல்லுயிரும் வருத்தத்தை அணிகின்ற ஊழிமுடிவிலே (க)பசியநிறத்தைத் தன்பாகத்தேயுடைய உருத்திரன் வருத்தத்தைச்செய்த ஏறுகிய எருமையையேறுகின்ற(உ)கூற்றுவனுடையநெஞ்சைப் பிளந்துபோகட்டு அவன் குடரைக் கூளிக்கிட்டு அவற்றின் வயிற்றை நிறைவிக்கின்றவனைப்போலும். எ - று.

எருமை, † ஆகுபெயராய்க் கூற்றுவனை உணர்த்திற்று.

உஎ (ங)செவிமறை நேர்மின்னு நுண்பொறி வெள்ளைக்
கதனஞ்சான் பாய்ந்த பொதுவனைச் சாடி
நுதிநுனைக் கோட்டாற் குலைப்பதன் றோற்றங்கா
ணாிருளென்னு னருங்கங்குல் வந்துதன்
றுளிற் கடந்தட்டுத் தந்தையைக் கொன்றானைத்
தோளிற் றிருகுவான் போன்ம்

எ - து: செவிமறுவாயிருக்கின்ற விளங்கும் நுண்ணிய சிவந்த பொறிகளையுடைய ஆயர் நேர்ந்துவிட்ட வெள்ளை யெருத்தினது கோபத்தை ‡அஞ்சாதாய் அதன்மேலே பாய்ந்த பொதுவனை நுதியைத் துகைத்து முனையினையுடைய கோட்டாலெடுத்துக் குலைப்பதனுடைய தோற்றரவைக் காணாய்; வருதற்கரிய கங்குலிலே அரிய இருளென்று கருதாதாய் வந்து துரோணாசாரியனைக் கொன்ற (சு)சிகண்டியைத் தன்முயற்சியாலே வென்று கொன்று தன் தோளால், தலையைத் திருகும் || அச்சுவத்தாமாவைப்போலும். எ - று.

---

கூற்றம்" நைடத. போர்புரி. கூரு. (இ)"கூற்றினெருமை யேறணிந்த கண்டையொலி" காசீ. மணிகன்னிகை.கஅ. எனவும் வருதல் காண்க.

க. பசிய நிறமென்றது அந்நிறத்தையுடைய உமாதேவியாரை.

உ. "சுடர்பொதி மூவிலை வேலுடைக் காலனைத் துண்டமதா, வுடறிய சேவடி யான்" தேவாரம்.

ங. (அ)"செம்மறு வெள்ளை" (ஆ) "சில்லைச் செவிமறை கொண்டவன்" கலி. கoங: கஉ, கoஎ: கூ. (இ) "நுண்பொறி வெள்ளை யடர்த்தாற்கே", "பொற்பொறிவெள்ளை யடர்த்தாற்கே", "தூநிறவெள்ளை யடர்த்தாற்கு" சிலப். கஎ: சு, ரு, எ.

சு. துரோணரைக்கொன்றவன் திட்டத்துய்மனும்வீடுமரைக்கொன்றவன் சிகண்டியுமாதலால் இங்கே சிகண்டியை யென்பது திட்டத்துய்மனை

(பிரதிபேதம்) * தொகைத்து. † ஆகுப்பெயராய்க், ‡ 'அஞ்சாதாய்த் தன்மேலே பாய்ந்த பொதுவனைத் துகைத்து முள்ளினது நுனிபோலும் முனையினையுடைய'என்பது முந்திய பதிப்பு. || அசுவத்தாமாவைப்போலும்.

நேர்வெள்ளையென்க. நுதியென்றது முனை ; எனவே, தலை யென்பது தோன்றிற்று. *"நுதிக்கோலஞ்செய்து"(க) என்றாற்போல.

எனவாங்கு அசை.

இங்ஙனம் தோழி காட்டக்கண்டு நங்கணவற்கும் இங்ஙன மாகுமோ வென்று அஞ்சின தலைவியது அச்சத்தை ஆண்டுப்பெற்ற நன்னிமித்தங்கண்டு தோழி †போக்குவாளாக மேற்கூறுகின்றாள்.

௩௪ அணிமாலைக் கேள்வற் றரூஉமா (உ)‡ராயர்
மணிமாலை யூதுங் குழல்

யென்றிருக்க வேண்டியதென்று தோற்றுகிறது. வியாஸபாரதத்தில் அசுவத்தாமா திட்டத்துய்மனை அவனுறங்குகையில் காலாலுதைத்து நிலத்தில்தேய்த்துத் தன்வில்லின் நாண்கயிற்றினால் அவன் கழுத்தைக் கட்டி இழுத்து அவனை மிதித்து வருத்தாநிற்க, அவன் வலியற்று, 'குரவன் காதலா! யான் புண்ணிய வுலகடையுமாறு என்னைப் படைக் கலத்தால் விரைந்து கொல்' என்று வேண்டவும், 'குரவனைக்கொன்ற பாவிகட்கு நல்லுலகங்கள்கிடையா; ஆதலால் நீ படைக்கலத்தால் கொல்லத் தக்காயல்லை' என்று மறுத்து மீட்டும் தன்கால்களால் உயிர் நிலைகளில் உதைத்துக் கொன்றான்" என்று காணப்படுஞ் செய்தியும் பின்பு, "வீடுமனைக்கொன்ற சிகண்டி எதிர்த்துப் புருவங்களுக்கிடையே வில்லால் அடிக்க, அவனைக் கத்தியால் இருதுணியாகத் துணித்தா னென்று காணப்படுஞ் செய்தியும் இங்கே அறிதற்பாலன. வில்லிபுத் தூரரும், "பருவரலகற்றி யிருவர்வீரரையும் பாசறை வாயிலினிறுத்தி, மருவருங் கமல மாலையான்கடப்ப மாலையானெனமனங் களித்துப், பொருவரு முனைக்குக் குரிசிலா யெல்லாப் யோரினும் புறமிடா தடர்த்த, துருபதன் மதலை வரிசிலைத் திட்டத் துய்மனை மணித்தலை துணித்தான்", "கயில்புரி கழற்காற் றந்தையைச் செற்ற காளையைப் பாளையத் திடையே, துயில்புரி யமையத் திமைக்குமுன் சென்னி துணித்தனன் சுதனெனக் கலங்கி, வெயில்புரி வதன்முன் வல்லிரு ளிடையே யுணர்ந்தவர் வெருவுட னரற்றப், பயில்புரி சிலைக்கைச் சிகண்டியை முதலோர் பலரும்வந் தனர்கள்பாஞ் சாலர்", "உத்தமோ சாவு முதாமனு முதலிட் டுள்ளவர் யாவரும் பிறருந், தத்த மோ கையினல் வந்தெதிர் மலைந்தோர் தலைகளாற் பலமலையாக்கி" என்று கூறியிருக்கிறார்; வில்லி. பதினெட்டாம். ௨௧௩ - ௨௩௫.

க. கோவையார். ௨௬௦.

உ. "அழல்போலு மாலைக்குத் தூதாகி யாயன், குழல்போலுங் கொல்லும் படை" குறள். ௧௨௨௮.

(பிரதிபேதம்) * நுதிக்கோலஞ் செய்ததென்றாற்போல. † போக்கினளாக மேற்கூறுக. அணிமாலைக். ‡ ஆயன்.

எ - து: ஆயர் ஈண்டு ஊதுகின்ற குழல் நீலமணிபோலுங் காயாம்பூவாற் செய்த மாலையினை அணியும் இயல்பினையுடைய கேள்வனை நமக்குத் தருதற்கு நன்னிமித்தமாக இசைத்தது காண்; நீ அஞ்சாதேகொள்ளென்றாள். எ - று.

அது, மங்கலமான பண்ணைத் தருதலின் நிமித்தமாயிற்று.

௩௪ கடாஅக் களிற்றினுங் கண்ணஞ்சா வேற்றை
விடாஅதுநீ *கொள்குவை யாயிற் படாஅகை
யீன்றன †வாயமக ளோள்

எ - து: தோழி, தலைவனிடத்தே சென்று ஆண்டுச்செய்த நிமித்தத்தை ஆராய்ந்துபார்க்கில், மதத்தையுடைய களிற்றினுங்காட்டிற் றறுகண்மையை யுடைய ஏற்றை நீ கைநெகிழவிடாது கொள்வை; இப்பொழுது இவ்வாய மகள்‡தோள் ஏனைமகளிர் தோள்களிற்காட்டில்||வெற்றிக்கொடியை உண்டாக்கினவாமென்றாள். எ - று.

௩௫ பகலிடக் கண்ணியன் பைதற் குழலன்
சுவன்மிசைக் கோலசைத்த கைய னயலது
கொல்லேறு சாட விருந்தார்க்கெம் பல்லிருங்
கூந்த லணைகொடுப்பேம் யாம்

எ - து: பின்னர்த் தலைவியிடத்தே வந்து எம்முடைய பலவான கரிய கூந்தலினையுடையவளை யாம் கூடுதற்குக் கொடுப்பேம்; கொல்லேற்றைச் சாடுதற்குச்சமைந்திருந்தவர்களுக்கென்று÷நமர்கூறி, கூற்றும் தலைவனையொழிந்த பகற்பொழுதிலேஅலர்ந்த கண்ணியையுடையவன் வருத்தத்தையுடைத்தாகிய குழலினையுடையவன் ×சுவலின்மேலே கோலைவைத்தகையையுடையவனாகிய வினைவலபாங்கினோர்க்கு அயலதாயிருக்குங்காணென்றாள். எ - று.

அயலதென்றது ஏறு தழுவுதற்கு அரிதென்னும்+பொருட்டு. இம்மூன்று பெயரும் ஏறுதழுவினவர்களை நோக்கிக் கூறிற்று.

௪௩ (க)கோளாள ரென்னொப்பா **ரில்லென நம்மானுட்
டாளாண்மை கூறும் பொதுவ னமக்கொருநாட்

---

க. "தாளாள னென்பான் கடன்படா வாழ்பவன், வேளாள னென்பான் விருந்திருக்க வுண்ணாதான், கோளாள னென்பான் மறவாதா னிம் மூவர்,கேளாக வாழ்த லினிது" (திரிகடுகம்.௧௨.) என்னுஞ் செய்யுளி லும் இப்பகுதியிலுமுள்ள எதுகைச்சொற்கள் ஒப்பு நோக்கற்பாலன.

(பிரதிபேதம்) * கொள்ளுவையாயிற், † ஆயர்மகள், ‡ தோளேமகளிர், தோள்வீரமகளிர். || வெற்றிக்கொம்பையுண்டாக்கின, ÷ நமர்கூடிக்கூறுந்தலைவனை· × சுவன் மேலேகோலைவைத்த கையையுடையவனு:யொழிந்தவினைவல, + பொருட்டா யிற்று. இம்மூன்று, ** இல்லே நம்மானுட்.

*கேளாள னாகாமை யில்லை யவற்கண்டு
வேளாண்மை செய்தன கண்

எ - து: யான் முற்கூறிய நிமித்தமேயன்றித் தலைவனைக் கண்டு என் கண்கள் உபகாரத்தைச் செய்கையினாலே ஏறுகொள்ளவல்லார் என்னை யொப்பார் பிறரில்லை யென்று நம்முடைய பசுத்திரளிலே நின்று தனது தாளாண்மையைக் கூறுந் தலைவன் பின்பு ஒருநாளிலேயாயினும் ஏறுதழுவி †நம்மைத் தனக்குக் கேளாக ஆளுந் தன்மையையுடையனாகாமை இல்லை யென்றாள். எ - று.

தாளாண்மை - முயற்சியை.........ஆண்டு ‡ போதுவன். நம்மை, நமக்கு; உருபுமயக்கம். கண் வேளாண்மை செய்தலாவது, (க) இடக்கண் துடித்தல்; வலக்கண் || துடிக்கலாதிருத்தலும் நன்னிமித்தமாதலிற் செய்தனவெனப் பன்மையாற் கூறினன்.

சஎ ×ஆங்கு, ஏறும் வருந்தின வாயரும் புண்கூர்ந்தார்
(உ)நாறிருங் கூந்தற் பொதுமகளி ரெல்லாரு
(ங)முல்லையந் தண்பொழில் புக்கார் பொதுவரோ
டெல்லாம் புணர்குறிக் கொண்டு

எ - து: அவ்விடத்தில் ஏறுகளும் வருந்தின; இடையரும் புண்மிக்கா ரென்று எல்லாம் (விலக்குகையினாலே) தம்மைக் கொள்ளுதற்கு நின்ற

க. (அ) "கண்ணகி கருங்கணு மாதவி செங்கணு, முன்னிறை கரந்தகத் தொளித்துநீ ருகுத்தன, வெண்ணுமுறை யிடத்தினும் வலத்தினுந் துடித்தன" சிலப். ரு: உஙஎ - உஙக. (ஆ) "போக மகளிர் வலக் கண்க டுடித்த" சீவக. உகஎங. (இ) "நலந்துடிக் கின்றதோ நான் செய் தீவினைச், சலந்துடித் தின்னமுந் தருவ துண்மையோ, பொலந் துடி மருங்குலாய் புருவங் கண்முதல், வலந்துடிக் கின்றில வருவ தோர் கிலேன்" (ஈ) "நஞ்சனை யான்வனத் திழைக்கு நாளிடை, வஞ்சனை யால்வலந் துடித்த வாய்மையா, லெஞ்சல வீண்டுதா மிடந் துடித்ததா, லஞ்சலென் றிரங்குதற் கடுப்ப தியாதென்றாள்" கம்ப. காட்சிப். ஙஉ, ஙரு. என்பவைகளும் (உ) கலி. ௧௧: கக - உஉ. அடிக் குறிப்பில் இடந்துடித்தல் நன்மைக்குறியென்பதை யறிவிக்கும் மேற் கோள்களும் ஈண்டு அறிதற்பாலன.

உ. (அ) "நரந்தநா றிருங்கூந்தல்" (ஆ) "நாறிருங் கூந்தலார்" கலி. ருச: ரு, கரு: உ.

ங. "முல்லையந் தண்பொழில்" நாற். சூ. சு. மேற்கோள்.

(பிரதிபேதம்) *கோளாளனாகாமை, † நம்மைக்கொள்ளுதலையாளுந், ‡ பொதுவன்தன்மை நமக்கு, || துடித்தலாயிருத்தலும், ×ஆங்க.

பொதுவரோடே தாம் புணர்தற்கு வேண்டும் நிமித்தங்களைப் பெற்று நாறு கின்ற கரிய கூந்தலையுடைய பொதுமகளிரெல்லாரும் முல்லையையுடைய குளிர்ந்த பொழிலிடத்தே விளையாடுதற்குப் புக்கார்; நாமும் பொழிலிடத்தே விளையாடுதற்குப் போதுவாயாகவென்றாள். எ - று.

அச்சூத்திரத்துட் பொதுவனென்னும் பெயர் முதலியனவும் அச் சாதியிற் றலைவற்கு வருதலுங் கொண்டவாறுணர்க. "புறத்திணை மருங்கிற் பொருந்தி னல்ல, தகத்திணை மருங்கி னளவுத லிலவே" என்னும் (க) சூத்திரத்திற் கைக்கிளை பெருந்திணைக்கும் தலைவருந் தலைவியரும் பலராய் வருவரென்றலின், இதன் கணிதகத்துத் தலைவருந் தலைவியரும் பலராகக் கூறினார். இது சிறப்பில்லா ஆசுரமாகிய கைக்கிளை.

இதனால், தலைவிக்கு * நினைதல் பிறந்தது.

இது கொச்சகம் இரண்டும் வந்தமையிற் கலிவெண்பாவின் †வேறுபட்டு வந்த கொச்சகக்கலி. (க)

(க0௨.) கண்ணக னிருவிசும்பிற் கதழ்பெயல் கலந்தேற்ற
தண்ணறும் பிடவமுந் தவழ்கொடித் தளவமும்
வண்ணவண் டோன்றியும் வயங்கிணர்க் கொன்றையு
மன்னவை பிறவும் பன்மலர் துதையத்
௫ தழையுங் கோதையு மிழையு மென்றிவை
தைஇனர் மகிழ்ந்து திளைஇ விளையாடு
மடமொழி யாயத் தவரு ளிவள்யா
ருடம்போ டென்னுயிர் புக்கவ ளின்று;

௯ ஓஒ இவள், பொருபுக னல்லேறு கொள்பவ ரல்லாற்
றிருமாமெய் தீண்டல ரென்று கருமமா
வெல்லாருங் கேட்ப வறைந்தறைந் தெப்பொழுதுஞ்
சொல்லாற் றரப்பட் டவள்;

க௩ சொல்லுக, பாணியே மென்றா ரறைகென்றார் பாரித்தார்
மாணிழை யாறாகச் சாறு;

---

க. தொல். அகத். சூ. ௫௫. இச்சூத்திர வுரையிலும் அகப்புறமாகிய கைக்கிளை பெருந்திணைக்குச் சிறுபான்மை தலைவரும் தலைவியரும் பலராகவருவ ரென்று கூறி, "ஏறும் வருந்தின........" 'புணர்குறிக் கொண்டு" என்பதை மேற்கோள் காட்டினர்; நச்.

(பிரதிபேதம்) *நினைத்தல். † வேறுபாட்டுவந்த.

௧௫ சாற்றுள், பெடையன்னார் கண்பூத்து நோக்கும்வா யெல்லா
மிடைபெறி னோராத் தகைத்து ;

௧௭ தகைவகை மிசைமிசைப் பாயிய ராா்த்துட
னெதிரெதிர் சென்றார் பலர் ;

௧௯ கொலைமலி சிலைசெறி செயிரயர் சினஞ்சிறந்
துருத்தெழுந் தோடின்று மேல் ;

௨௧ எழுந்தது துக
ளேற்றனர் மார்பு
கவிழ்ந்தன மருப்புக்
கலங்கினர் பலர் ;

௨௫ அவருள், மலர்மலி புகலெழ வலர்மலிர் மணிபுரை நிமிர்தோள்
பிணை இ
யெருத்தோ டிமிலிடைத் தோன்றினன் றோன்றி
வருத்தினான் மன்றவவ் வேறு ;

௨௮ ஏறெவ்வங் காணு வெழுந்தா ரெவன்கொலோ
வேறுடை நல்லார் பகை ;

௩௦ மடவரே நல்லாயர் மக்க ணெருந
லடலேற் றெருத்திறுத்தார்க் கண்டுமேற் றின்று
முடலேறு கோட்சாற்று வார் ;

௩௩ ஆங்கினி,

தண்ணுமைப் பாணி தளரா தெழூஉக
பண்ணமை யின்சீர்க் குரவையுட் டெண்கண்ணித்
திண்டோட் டிறலொளி மாயப்போர் மாமேணி
யந்துவ ராடைப் பொதுவனோ டாய்ந்த
முறுவலாண் மென்றோள்பா ராட்டிச் சிறுகுடி
மன்றம் பரந்த துரை.

*இஃது ஆயன் தலைவனுய் ஏறுதழுவினமை †சுற்றத்தார் கண்டுநின்று கூறியது.

இதன் பொருள்.

(பிரதிபேதம்) * இது, † சுற்றத்தார்க்கண்டு.

கண்(௧)ணக னிருவிசும்பிற் கதழ்(௨)பெயல் *கலந்தேற்ற
தண்ணறும் (௩)பிடவமுந் தவழ்(௪)கொடித் தளவமும்
வண்ணவண் டோன்றியும் (௫)வயங்கிணர்க் கொன்றையு
† மன்னவை பிறவும் பன்மலர் துதையத்
தழையுங் கோதையு மிழையு மென்றிவை
தைஇனர் மகிழ்ந்து ‡திளைஇ விளையாடு
மடமொழி யாயத் தவரு ளிவள்யா
||ருடம்போ டென்னுயிர் புக்கவ ளின்று

எ - து: இடமகன்ற பெரிய விசும்பிலே விரைந்துவருகின்ற மழை தன்னிடத்தே கலக்கையினாலே அதனை ஏற்றுநின்ற ✝தண்ணிய நறிய பிடவமும் படர்கின்ற கொடியினையுடைய முல்லையும் நிறத்தினையுடைய வளவிய (௬) தோன்றியும் விளங்குகின்ற கொத்தினையுடைய கொன்றையும் இவை

௧. (அ) "அகலிரு விசும்பில்" பெரும்பாண். ௧. (ஆ) "அகலிருவானத்து" மது. ௨௬௭; மணி. ௧௧: ௯௧.

௨. "தண்டுளிக் கேற்ற பைங்கொடி முல்லை, முகைதலை திறந்த நாற்றம் புதன் மிசைப், பூமலர் தளவமொடு தேங்கமழ்பு" குறுந். ௩௮௨.

௩. "தளிபெறு தண்புலத்துத் தலைப்பெயற் கரும்பீன்று, முளிமுதற் பொதுளிய முட்புறப் பிடவமும்" கலி. ௧0௧: ௧-௨.

௪. "கொடித்தளவமே" சீவக. ௧௬௫௧.

௫. "கொன்றை யொள்ளிணர்", "நீடுசுரி யிணர சுடர்வீக் கொன்றை" நற். ௨௨௧: ௪; ௩0௨: ௨.

௬. தோன்றி, ஒருபூங்கொடி. மழைக்குத்தளிர்க்கு மியற்கையையுடையது; அதன் மலர் செந்நிறமானது. அம்மலருக்கு விளக்கும் பவழமும், கோழிச்சேவலின்றலைக்கு அம்மலரும் உவமையாகக்கூறப்படுகின்றன. இவற்றை, (அ) "விடுகொடிப் பிறந்த மென்றகைத் தோன்றி, பவழத் தன்ன செம்பூத் தாஅய்" (ஆ) "கார்க்கேற், றெரிவனப் புற்றன தோன்றி" (இ) "நலமிகு கார்த்திகை நாட்டவ ரிட்ட, தலைநாள் விளக்கிற் றகையுடைய வாகிப், புலமெலாம் பூத்தன தோன்றி" (ஈ) "வான்றோன்றி, வில்விளக்கே பூக்கும் விதர்ப்பநாடு" (உ) "மரகதத் தண்டிற் றோன்றி விளக்கெடுப்ப" (ஊ) "தோன்றி தோன்றுபுபுதல் விளக்குறூஉ" (எ) "ஒண்சுடர்த் தோன்றி" (ஏ) "தோன்றி யொண் பூவன்ன, தொகுசெந் நெற்றிக் கணங்கொள் சேவல்" என வருவன வற்றால் அறிக.

(பிரதிபேதம்) * கலந்தெற்றத் தண்ணறும், † இன்னவும் பிறவும், ‡ திளைவிளையாடு, || உடம் போடின்னுயிர், ✝ கண்ணிய.

போல்வனபிறவும் பூத்த பலமலர்கள் நெருங்கும்படி (க)தழையும் கோதையும் இழையுமென்று சொல்லுகின்ற இவற்றைக் கட்டினராய் அணிந்துமகிழ்ந்து திளைத்து விளையாடும்,மடப்பத்தையுடைத்தாகிய மொழியினையுடைய, ஆயத்தாருள்ளே * இன்று உடம்போடே என்னுயிர்க்குள்ளே புக்கவளாகிய இவள் யார்தானென்றான் தலைவன். எ - று.

இழை, பூண்வடிவாகக் கட்டினது.

சு †ஓஒ இவள், (உ)‡பொருபுக னல்லேறு கொள்பவ ரல்லாற்

றிருமாமெய் தீண்டல ரென்று கருமமா

வெல்லாருங் கேட்ப வறைந்தறைந் ||தெப்பொழுதுஞ்

சொல்லாற் றரப்பட் டவள்

எ - து: அதுகேட்ட பாங்கன், ÷ஓஒவென வியந்து இவள் பொருகின்ற ×புகற்சியையுடையநல்ல ஏற்றைத் தழுவுமவரல்லது அழகினையுடைய மாந்தளிர்போலும் =நிறத்தையுடைய மெய்யைச் சேராரென்று எல்லாருங் கேட்டிருப்ப இதுகாரியமாகப் பலகாலுஞ் சாற்றிச் சாற்றி எப்பொழுதுஞ் சொல்லிய சொல்லாலே ✝அடிப்படக் கொண்டுவரப்பட்டவளென்றான். எ - று.

கரு. சொல்லுக

எ - து: அது கேட்ட தலைவன், அச்சுற்றத்தைநோக்கி இவன் ஏறுதழுவி இவளைக் கொள்வனென்று அவர்க்குக் கூறுகவென்றான். எ - று.

பாணியே மென்று ரறைகென்றார் பாரித்தார்

மாணிழை யாறாகச் சாறு

---

க. தழை, பலவகையான தளிர் அரும்பு பூ முதலியவற்றாற் செய்து ஓரங்களை ஒழுங்காகக் கத்தரித்து இளைய மகளிர் உடுக்கும் உடை விசேடம்; "முடித்த குல்லை யிலையுடை நறும்பூச், செங்கான் மராஅத்த வாலிணரிடையிடுபு, சுரும்புணத் தொடுத்த பெருந்தண் மாத்தழை, திருந்துகாழல்கு றிளைப்ப வுடீஇ" முருகு. உ0௧-உ0௪. "அளிய தாமே சிறுவெள்ளாம்ப, லிளைய மாகத் தழையா யினவே", "அணித்தழை நுடங்கவோடி மணிப்பொறிக், குரலங் குன்றி கொள்ளு மிளையோள்", "அம்பூந் தொடலை யணித்தழை யல்குற், செம்பொறிச் சிலம்பி னிளையோள்" புறம். உ௪அ: க-உ, ௩௪0: க-உ, ௩௪௧: உ-௩. என வருதல் காண்க.

உ. "கொல்லேற்றுக் கோடஞ்சு வானை மறுமையும், புல்லாளே யாய மகள்" கலி. க0௩: சுஉ-சு௩.

(பிரதிபேதம்) * கின்றுடம்போடே, † ஓஒவியவள், ‡ பொருபுகழினல்லேறு, பொருபுகழ் நல்லேறு, || எப்போதும், ÷ ஓவெனவியந்து, × புகழ்ச்சியை, = நிறத்தினையுடைய, ✝ படிபட்க்.

எ - து: அவரும் ஆண்டுச்சென்று தழுவுதற்கு யாங்கள் * தாழ்த்திரே மென்றார்; அதுகேட்டு அவள் சுற்றத்தார் மாட்சிமைப்பட்ட இழையினையுடையாள் வழியாக நிகழ்த்தும் ஏறுவிடுகின்ற விழவைப் பரக்கச்செலுத்தி இவனையன்றி மற்றும் ஏறுதழுவுவார் உளராயினும் வருகவென்று பறையறைகவென்றார். எ - று.

கங † சாற்றுள், பெடையன்னார் கண்பூத்து ‡நோக்கும்வா யெல்லா
(க)மிடைபெறி னேராத் தகைத்து

எ - து. இந்தவிழவினைப் || பெடையையொப்பார் தங்கண்கள் பொலிவு பெற்று இவ்வழகைப் பார்க்குமிடமெல்லாம் நின்று பார்க்கும் பரணைப் பெறுவார்களாகில் அது தகைமையையுடைத்தென்றார். எ - று.

இதற்குமுன் உள்ளனவும் மேல்வருகின்றனவும் கண்டசுற்றத்தார் கூறியதாகப் பொருளுரைக்க.

கஎ தகைவகை மிசைமிசைப் = பாயிய ரார்த்துட
× னெதிரெதிர் சென்றார் பலர்

எ - து: அழகினையுடைத்தாகிய வகுப்பையுடைய அவ்வேறுகளின்மேலே பாய்கைக்குச் ┼சேர ஆர்ப்பரித்து ஏறுகளினெதிரேயெதிரே பலருஞ்சென்றார். எ - று.

கஅ கொலைமலி சிலைசெறி **செயிரயர் சினஞ் †† சிறந்
துருத்தெழுந் தோடின்று மேல்

எ-து: அப்பொழுது அவ்வேறுகள் கொலைத்தொழின்மிக்க ‡‡சிலைசெறிந்த குற்றத்தைச்செய்யுஞ் சினமிக்கு வெவ்விதாயெழுந்து அவர்மேலே ஓடிற்று. எ - று.

உக எழுந்தது துகள்

எ - து: அப்பொழுது துகள் எழுந்தது. எ - று.

|| ||ஏற்றனர் மார்பு
கவிழ்ந்தன மருப்புக்
கலங்கினர் பலர்

எ - து: அவர்களும் மார்புகளை எதிரே கொடுத்தார்; அவற்றின் கொம்புகளுங் கவிழ்ந்து குத்தின; அதனால், தழுவினவர்கள் பலரும் கலங்கிப்போனார். எ - று.

---

க. மிடை - பரண்.

பிரதிபேதம்) * தாழ்த்திரென்றார், † சாற்றுவள், ‡ நோக்குவாயெல்லா, || பெடையொப்பார், =பாயப்பார், பாய்மார், × எதிர்சென்றார், ┼ சேர வாரவாரித்து. ** செயிரசினஞ், †† சினந்து, செறிந்து, ‡‡ சிலைச்செறிந்த, || || ஏற்றனமார்பு.

முன்னர்ப் பலரும் வருகவென்று சாற்றுதலிற் பல ஏறுகளும் விடப் பலருந் தழுவித் தோற்று *ரென்றார்.

உ௯ அவருள்,(க)மலர்மலி †புகலெழ வலர்மலிர்மணிபுரைநிமிர்தோள் ‡பிணைஇ

$யெருத்தோ டிமிலிடைத் தோன்றினன் றோன்றி

வருத்தினான் மன்ற||வவ் வேறு

எ - து: அங்ஙனம் ஏறுதழுவ ÷ வந்தவர்களுட் பார்த்தல் மிக்க விருப்பம் எழுதலாலே பூமலிந்த நீலமணியையொக்கும் நிறத்தையுடைய நெடிய தோள் களாலே ஏற்றின் கழுத்தை இறுகத் தழுவிக் கழுத்தோடேகூடக் கிடக்கின்ற (உ)குட்டேற்றிடத்தே தோன்றினான்; அங்ஙனம் ∴தோன்றிப் பின்னர் அறுதி யாக அவ்வேற்றை வருத்தினானென்றார். எ - று.

உ௮ =ஏறெவ்வங் காணா வெழுந்தா ரெவன்கொலோ

×வேறுடை நல்லார் பகை

எ-து: ஏற்றையுடைய நல்லவர்கள் தங்கள் ஏற்றினுடைய வருத்தத்தைக் கண்டு எழுந்திருந்தார்; அவன் தழுவினவாற்றிற்கு மகிழ்வதன்றிப் ┼ பகை யாதல் என்னபயன் தருமென்றார். எ - று.

கொல்லும் ஓவும், அசை.

௩0 மடவரே நல்லாயர் மக்க **ணெருந

லடலேற் றெருத்திறுத்தார்க் ††கண்டுமேற் றின்று

முடலேறு கோட்சாற்று வார்

எ - து: முன்னைநாளிலே கொல்லுதலையுடைய ஏற்றின் கழுத்திலே தங்கினவர்களைக் கண்டு வைத்தும்‡‡ இன்றும் உடலுகின்ற ஏற்றைத் தழுவச் சாற்றுவாராகிய நல்ல ஆயர் மக்கள் அறியாதவர்களேயென்றார். எ - று.

௩௧ ||||ஆங்கினி

தண்ணுமைப் பாணி தளரா ┼┼தெழூஉக

பண்ணமை யின்சீர்க் குரவையுட் டெண்கண்ணித்

---

க. அறுசீரடி முடுகி வந்ததற்கு "மலர்மலி புகலெழ வலர்மலிர் மணிபுரை நிமிர்தோள் பிணைஇ" என்பது மேற். தொல். செய். சூ. ௬௬. பேர்.

உ. குட்டேறு-ஏற்றின்முதுகில் புறக்கழுத்தையடுத்துத் திரண்டு உயர்ந்து தோன்றும் ஒருறுப்பு; இச்சொல் இவ்வுரைநடையில் பயின்று வரும்.

(பிரதிபேதம்) *என்றாள், † புகழெழ அலர்மலி மணிபுரை நிரைதோள், ‡ பிணைஇ, விணைஇ. $ எருத்தோட்டிமில், || இவ்வேறு, ÷ வந்தவர்கள் பார்த்தன்மிக்க, ∴தோன் றிய பின்னரறுதியாகவேற்றை, = ஏற்றெவ்வம், × ஏற்றுடை நல்லார்ப்பகை, ┼பகையாதலால்என்ன,**நெருநேயடல்,நெருநையடல்,††கண்டுமேற்றின்று முடலேற்றுக்கோட்,‡‡ மீண்டுமுடலு.|||| ஆங்கு தண். ┼┼எழுவுகப்பண்.

திண்டோட் டிறலொளி மாயப்போர் * மாமேனி
(க்)யந்துவ ராடைப் பொதுவனோ டாய்ந்த
†முறுவலாண் மென்றோள்பா ராட்டிச் சிறுகுடி
மன்றம் பரந்த துரை

எ - து: இப்பொழுது அவ்விடத்துச் சிறுகுடியின் மன்றத்தில் ஆடுகின்ற பண்ணமைந்த இனிய தாளத்தையுடைய ‡ குரவைக்கூத்தினுள்ளே விளங்கிய கண்ணியையும் திண்ணிய தோளினையும் திறலினது விளக்கத்தினையும் மாயத்தையுடைய போர்த்தொழிலினையும் கரியமேனியினையும் அழகிய துவருட்டின ஆடையினையுமுடைய பொதுவன் தோளையும் ஆராய்ந்த முறுவலாளுடைய மென்றோளையுங் கொண்டாடி எறுதழுவின புகழ் பரந்தது; இனி மணஞ் செய்தற்குத் தண்ணுமையில் தாளந்தளராமல் எழுப்புவார்களாகவெனக் கண்ட சுற்றத்தார் ||கூறினர். எ - று.

பொதுவன் தோளிற்கு அவள் தோள் நிகர் ஒக்குமென்று பாராட்டி. இனிப் பொதுவனோடே மென்றோளையுடைய முறுவலாளையும் பாராட்டி யென்றலும் ஒன்று. இதுவும் சிறப்பில்லா ஆசுரமாகிய கைக்கிளை. ÷"பாங்க னிமித்தம் பன்னிரண் டென்ப"(௨)என்றதனான் ஆசுரத்திற்கும் பாங்கி நிமித்த மாயினள்.

இதனால், இருவர்க்கும் × நினைதல் பிறந்தது.

✝இஃது "ஆசிரிய மருங்கினும் வெண்பாமருங்கினு,மூவகை யடியு முன்னுதலிலவே" என்னும்(௩)சூத்திரத்திற் கொண்ட நாற்சீரடி ** முடுகியலோடு தொடர்ந்த "தகைவகைமிசைமிசை","கொலைமலி††சிலைசெறி"என்னும்வெண்

௧. "ஆயர்களுக்குத் துவராடையுடை கூறப்படுதலை, (அ) "கருந்துவ ராடையை" கலி. ௧௦௮: ௧௦. (ஆ) "செந்துவ ராடையாயர்" சீவக. ௪௮௫. (இ) "அலங்கு செந்துவ ராடையர்" பாக. (௧௦) கஞ்சனைக் கொன்ற. ௬. என்பவற்றாலும் அறிக.

௨. தொல். களா. சூ. ௧௩.

௩. தொல். செய். சூ. ௬௭. இச்சூத்திரவுரையிலும்தகைவகை மிசைமிசைப் ............சென்றார் பலர் என்னும் பகுதியை நாற் சீரடி முடுகியலோ டொன்றாய் வந்த வெண்பாவுக்கும்,"மலர்மலி புகலெழ.................. வருத்தினன் மன்றவவ் வேறு" என்னும் பகுதியை அறுசீரடி முடிகிய லோடொன்றாய் வந்த வெண்பாவுக்கும்,மேற்கோள் காட்டினர் நச்.

(பிரதிபேதம்) * மாமணி, † முறுவலாய்மென்றோள், பாராட்டச், ‡குரவைக் கூத்தினுள்ளே பொதுவன்றோளையும், ||கூறினார். விளங்கியகண்ணியையுந்.........ஆடையினையுமுடையபொதுவனெனக. பொதுவன் தோளிற்கு,÷பாங்கினிமித்தம், × நினைத்தல்பிறந்தது, ✝இது ஆசிரிய. ** முடுகியலுந் தொடர்ந்த, ††நிலைசெறி.

பாக்களும் "மலர்மலி புகலெழ * வலர்மலிர் மணிபுரை நிமிர்தோள் பிணைஇ" என அறுசீரடி முடுகியலோடு தொடர்ந்த வெண்பாவும் இருசீர்ச்சின்னமும் பெற்றுக் கலிவெண்பாவுறுப்பில் வேறுபட்டு வந்த (௧)கொச்சகக்கலி. (உ)

(௧௦௩.) மெல்லிணர்க் கொன்றையு மென்மலர்க் காயாவும்
புல்லிலை வெட்சியும் பிடவுந் தளவுங்
குல்லையுங் குருந்துங் கோடலும் பாங்கருங்
கல்லவுங் கடத்தவுங் கமழ்கண்ணி மலைந்தனர்
பல்லான் பொதுவர் கதழ்விடை கோட்காண்மார்
முல்லை முகையு முருந்து நிரைத்தன்ன
பல்லர் பெருமழைக் கண்ணர் மடஞ்சேர்ந்த
சொல்லர் சுடருங் கனங்குழைக் காதினர்
நல்லவர் கொண்டார் மிடை ;
அவர்மிடைகொள ;
மணிவரை மருங்கி னருவி போல
வணிவரம் பறுத்த வெண்காற் காரியு
மீன்பூத் தவிர்வரு மந்திவான் விசும்புபோல்
வான்பொறி பரந்த புள்ளி வெள்ளையுங்
கொலைவன் சூடிய குழவித் திங்கள்போல்
வளையுபு மலிந்த கோடணி சேயும்
பொருமுரண் முன்பிற் புகலேறு பலபெய்
தரிமாவும் பரிமாவுங் களிறுங் கராமும்
பெருமலை விடரகத் தொருங்குடன் குழீஇப்

---

௧. இச்செய்யுளை அம்போதரங்கஒருபோகென்று கூறி, "கண்ணகன்..............ளின்று" இது தரவு. "ஓஒஇவள்............தகைத்து" இவை கொச்சகம். "தகைவகை............மேல்" இவை அராகம். "எழுந்தது............பலர்" இவை சிற்றெண். "அவருள்............வேறு" இது முடுகியலடிவந்த கொச்சகம். "ஏறெவ்வம்..........சாற்றுவார்" இவையுங் கொச்சகம். "ஆங்கு" தனிச்சொல். "தண்ணுமை.....................துரை" இது சுரிதகம்." என்று பிரித்துக்காட்டி, தரவு, கொச்சகம், அராகம், சிற்றெண், சுரிதகமென்னும் ஐந்துறுப்பும் முறையானே வருதலின்றிச் சில மீள வந்தன என்பர், இளம்பூரணர்; தொல். செய். சூ. ௧௫௫. 'எருத்தே கொச்சகம்'.

(பிரதிபேதம்)*அலர்மலி மணிபுரை நிமிர்தோள் பிணைடுமென அறுசீரடி.

௨௦ படுமழை யாடும் வரையகம் போலுங்
கொடிநறை சூழ்ந்த தொழூஉ ;

௨௨ தொழூவினுள், புரிபு புரிபு புக்க பொதுவரைத்
தெரிபு தெரிபு குத்தின வேறு ;

௨௪ ஏற்றின், அரிபரி பறுப்பன சுற்றி
யெரிதிகழ் கணிச்சியோன் சூடிய பிறைக்க
ணுருவ மாலை போலக்
குருதிக் கோட்டொடு குடர் வலந்தன ;

௨௮ கோட்டொடு சுற்றிக் குடர்வலந்த வேற்றின்முன்
னுடிநின் றக்குடர் வாங்குவான் பீடுகாண்
செந்நூற் கழியொருவன் கைப்பற்ற வந்நூலை
முந்நூலாக் கொள்வானும் போன்ம் ;

௩௨ இகுளை யிஃதொன் று கண்டை யிஃதொத்தன்
கோட்டினத் தாயர் மகனன்றே மீட்டொரான்
போர்புக லேற்றுப் பிணரெருத்திற் றத்துபு
தார்போற் றழீஇ யவன் ;

௩௬ இகுளை யிஃதொன் று கண்டை யிஃதொத்தன்
கோவினத் தாயர் மகனன்றே யோவான்
மறையேற்றின் மேலிருந் தாடித் துறையம்பி
யூர்வான்போற் றோன் று மவன் ;

௪௦ தொழீஇஇ, காற்றுப்போல் வந்த கதழ்விடைக்காரியை
யூற்றுக் களத்தே யடங்கக்கொண் டட்டதன்
மேற்றோன் றி நின்ற பொதுவன் றகைகண்டை
யேற்றெருமை நெஞ்சம் வடிம்பி னிடந்திட்டுச்
சீற்றமோ டாருயிர் கொண்டஞான் றின்னன்கொல்
கூற்றென வுட்கிற்றென் னெஞ்சு ;

௪௬ இகுளை யிஃதொன் று கண்டை யிஃதொத்தன்
புல்லினத் தாயர் மகனன்றே புள்ளி
வெறுத்த வயவெள்ளேற் றம்புடைத் திங்கண்
மறுப்போற் பொருந்தி யவன் ;

௫0 ஓவா வேகமோ டுருத்துத்தன் மேற்சென்ற
சேஎச் செவிமுதற் கொண்டு பெயர்த்தொற்றுங்
காயாம் பூங்கண்ணிப் பொதுவன் றகைகண்டை
மேவார் விடுத்தந்த கூந்தற் குதிரையை
வாய்பகுத் திட்டுப் புடைத்தஞான் றின்னன்கொன்
மாயோனென் றுட்கிற்றென் னெஞ்சு ;

௫௬ ஆங்கு, இரும்புலித் தொழுதியும் பெருங்களிற் றினமும்
மாறுமா றுழக்கியாங் குழக்கிப் பொதுவரு
மேறுகொண் டொருங்குதொழூஉ விட்டனர் விட்டாங்கே
மயிலெருத் துறழணி மணிநிலத்துப் பிறழப்
பயிலிதழ் மலருண்கண்
மாதர் மகளிரு மைந்தரு மைந்துற்றுத்
தாதெரு மன்றத் தயர்வர் தழூஉ ;

௬௩ கொல்லேற்றுக் கோடஞ்சு வானை மறுமையும்
புல்லாளே யாய மகள் ;

௬௫ அஞ்சார் கொலையேறு கொள்பவ ரல்லதை
நெஞ்சிலார் தோய்தற் கரிய வுயிர்துறந்து
நைவாரா வாயமக டோள் ;

௬௮ வளியா வறியா வுயிர்காவல் கொண்டு
நளிவாய் மருப்பஞ்சு நெஞ்சினார் தோய்தற்
கெளியவோ வாயமக டோள் ;

௭௧ விலைவேண்டா ரெம்மினத் தாயர் மகளிர்
கொலையேற்றுக் கோட்டிடைத் தாம்வீழ்வார் மார்பின்
முலையிடைப் போலப் புகின் ;

௭௪ ஆங்கு;
குரவை தழீஇயா மரபுளி பாடித்
தேயா விழுப்புகழ்த் தெய்வம் பரவுது
மாசில்வான் முந்நீர்ப் பரந்த தொன்னில
மாளுங் கிழமையொடு புணர்ந்த
வெங்கோ வாழியரிம் மலர்தலை யுலகே.

*இஃது ஆயர் ஏறுதழுவிநின்றமையைத் †தோழி தலைவிக்குத் தனித் தனியே காட்டிப் பின்னர் அவர் ஏறுதழுவிவிட்டுக் குரவையாடுகின்றமையுங் கூறி ஆண்டு யாழுஞ்சென்று நின்னை ஏறுதழுவிக் ‡கோடற்கு நிற்கின்ற தலைவன் கேட்டு ஏறுதழுவிக்கொள்ளுமாறு நமக்குச் சுற்றத்தார் கூறிக் கிடக்கின்ற முறைமையைப் பாட்டிலே தோன்றப் பாடிக் குரவையாடி வழுதிவாழ்கவென்று தெய்வம்பராவுதும்; நீயும் அங்ஙனம் பாடுதற்குப் போதுவாயாகவெனக் கூறியது.

**இதன் பொருள்.**

(க)மெல்லிணர்க் (உ)கொன்றையு மென்மலர்க் காயாவும்
புல்லிலை வெட்சியும்(ங)பிடவுந் தளவுங்
குல்லையுங் ||குருந்துங் (ச)கோடலும் (ரு)பாங்கருங்
கல்லவுங் கடத்தவுங் கமழ்கண்ணி மலைந்தனர்
பல்லான் ┼பொதுவர் கதழ்விடை கோட்காண்மார்
(சு)முல்லை முகையு முருந்து நிரைத்தன்ன
பல்லர் பெருமழைக் கண்ணர் மடஞ்சேர்ந்த

---

க. தரவு ஈற்றடி குறைந்து வருதலையு முடைத்தென்பதற்கு "மெல்லிணர்க்.........மிடை" என்பது மேற். தொல். செய். சூ. கககூ. நச்.

உ. "அவிழ்தளவி னகன்றோன்றி, நகுமுல்லை யுகுதேறுவீப், பொற் கொன்றை மணிக்காயா, நற்புறவி னடைமுனையின்" பொருந. கசுக - உ0உ. என்பதனாலும் முல்லைநிலத்துவாழ்வார் பலமலர் சூடு மியல்பினர் என்பது அறியலாகும்.

ங. "பிடாவுந் தளாவும்" தொல். உயிர்மயங்கு. சூ. உஎ.

ச. இந்நூற் பக்கம் சுககூ: சு-ஆம் குறிப்புப் பார்க்க.

ரு. (அ) "பாங்கரு, முல்லையுந் தாய பாட்டங்கால்" (கலி. ககக: ங - ச.) என்பதனால் பாங்கர், ஒரு பூங்கொடியென்று தோற்றுகிறது. (ஆ) "வண்டு பாடு பாங்கரோடு" சூளா. சீயவதைப். உககூ. (இ) "குருந்து பொற் கூவிளம் குல்லை பாங்கரும்" காஞ்சிப். கழுவாய்ப். கருங. (ஈ) "வகுள ஞெமையரை பாங்கர்" திருவானைக்காப். சம்புமுனி. க. (உ) "சூத நாகம்வழை பாங்கர் குருந்து" விநாயக. கெசானனர் திருவவ. ருகூ. என இது பயின்றுவருதலுங்காண்க. பாங்கரென்பதை ஓமையென்பாருமுளர். அஃது ஒரு மரமென்று தெரிகிறது.

சு. (அ) "முல்லை முகையு முருந்து நிரைத்தன்ன, பல்லும்" கலி. க0அ: கரு-கசு. (ஆ) "முருந்தொடு முல்லைசாய்த்த முகிழ்நகை யாயர்மாதர்" பாக. (க0) வேய்ங்குழல். கக. (இ) "முல்லையு முருந்து நிரைத்தன

(பிரதிபேதம்) * இது ஆயர், † தோழியொரு தலைவிக்கு, ‡ கொண்டற்கு, || குருந்துகோடலும், ┼ பொதுவாததழ விடைக்கோட் காண்குவார்.

சொல்லர் சூடருங் (க)கனங்குழைக் காதினர்
நல்லவர் கொண்டார் மிடை

எ - து: பலபசுவையுடைய பொதுவர் கல்லிடத்தனவுங் காட்டிடத்தனவு மாகிய மெல்லியகொத்தினையுடைய (உ)கொன்றைப்பூவாலும் மெல்லியமலரை யுடைய காயாம்பூவாலும் புல்லியஇலையையுடைய வெட்சிப்பூவாலும் பிடவம் பூவாலும் முல்லைப்பூவாலும் (ந) கஞ்சங்குல்லைப் பூவாலும் குருந்தம்பூவாலும் கோடற்பூவாலும் *பாங்கர்ப்பூவாலுஞ்செய்த கமழுங்கண்ணியைச் சூடினராய் விரைந்தஏற்றைத்தழுவுதலைக்காணவேண்டிமுல்லைமுகையும்(ச)பீலிமுருந்தும் நிரைத்தாலொத்த பல்லினையுடையாராய்ப் பெரிய குளிர்ச்சியையுடைத்தாகிய கண்ணினையுடையாராய் மடப்பம் பொருந்தின சொல்லினையுடையாராய் விளங் கும் பொன்னாற்செய்த மகரக்குழையையணிந்த காதினராய் ஆயர்மகளிர் வந்து பரணைக் கைக்கொண்டார். எ - று.

மிடை - பரண்.

அவர்மிடைகொள,
(ரு)மணிவரை மருங்கி னருவி போல
வணிவரம் பறுத்த வெண்காற் காரியு
மீன்பூத் தவிர்வரு மந்திவான் விசும்புபோல்
வான்பொறி பரந்த புள்ளி வெள்ளையுங்

---

போன்று..............நகைக்குமென் னகையாள்” சீறு. நபுவ்வத்துக். தசைக்கட்டியை. உந.

க. இந்நூற்பக்கம் ௪0உ: க-ஆம் குறிப்புப் பார்க்க.

உ. (அ) “மன்றலங் கொன்றை மலர்மலைந்து ஃஃஃ, என்று திரியு மிடை மகனே” எனவும், (ஆ) “மணிநிரை யோம்பி நேரும் வல்விடை தழுவித் தோய்ந்த, வணிநிரை மகளிர் கூந்த லலங்கலங் கொன்றை சூட்டிப், பிணிதபு மாயர்செய்கை” எனவும், (இ) “வென்றி மழவிடை யூர்ந்தாற் குரியளிக், கொன்றையம் பூங்குழ லாள்” எனவும் வருஞ் செய்யுட்களை நோக்குக.

ந. கஞ்சங் குல்லை - கஞ்சா; இச்சொல், கஞ்சம், குல்லையென இரண் டாகவும் கொள்ளப்படும்.

ச. பீலிமுருந்து - மயிலிறகின் அடி.

ரு. (அ) “மணிவரை யிழிதரு மணிகிள ரருவி” தோல். செய். சூ. எ௮. பேர். மேற்கோள். (ஆ) மணிவரை யென்பதற்கு, இங்கே எழுதியிருக் கும் பொருளோடு “மணிதிகழ் விறன்மலை” (கலி. உ0: ரு.) என்பதும் இந்நூற் பக்கம் உசசு: ச - ஆம் குறிப்பில் பொருந்துவனவும் ஒப்பு நோக்கற்பாலன.

பிரதிபேதம்) * பாங்கற்பூவாலும்.

(க)கொலைவன் சூடிய (உ)குழவித் திங்கள்போல்
*வளையுபு மலிந்த கோடணி சேயும்
பொருமுரண் முன்பிற் (ங) புகலேறு பலபெய்
தரிமாவும் பரிமாவுங் களிறுங் கராமும்
(ச)பெருமலை விடரகத் தொருங்குடன் குழீஇப்
(ரு)படு(சா)மழை யாடும் வரையகம் போலுங்
கொடிநறை சூழ்ந்த தொழூஉ

எ-து: அவர் தத்தமிடையைக் கைக்கொள்ள ஆயர்(எ)மணிகளையுடைய (அ)மலையிடத்தினின்றும் வீழ்கின்ற அருவிகள்போல அழகினது எல்லையைப்

க. "ஏற்றுவல னுயரிய வெரிமரு ளவிர்சடை, மாற்றருங் கணிச்சி மணி மிடற்றோனும்......... ..நால்வ ருள்ளுங், கூற்றொத் தீயே மாற்றருஞ் சீற்றம்" புறம். ருசா: க- கக. என்புழி 'மணிமிடற்றோனைக் கூற்றமென் றது அழித்தற்றொழிலுடைமையான்' என்னும்விசேடவுரைப் பொரு ளாட்சியும், "கொலைவன் 'யார்கொலோ கொலைவன்மற்றிவன்" புறம். கருஉ: அ. "கொலைவனல்லையோ 'கொற்றவ ளையினை" மணி. உரு. கஎச. என்னும் சொல்லாட்சியும் ஈண்டு அறிதற் பாலன.

உ. குழவி யென்பது சூத்திரத்துக் கூறப்படாத பிறிதின்மேலும் வரு மென்பதற்கு, "குழவித் திங்கள்" என்பது மேற்கோள்; தொல். மர. சூ. உச.பேர்; மயிலைநாதர் குழவியென்பது மதிக்கும் உரித்தாய்வரு மரபிற்றென்று எழுதியிருத்தலும் இங்கே அறிதற்பாலது; நன். பொது. சூ. ஙஎ.

ங. "போர்புக லேற்றுப் பிணரெருத்தில்" கலி. க0ங: ஙச.

ச. (அ) "பெருமலை விடரகத்து" (ஆ) "பெருமலை விடரகத் தருமிசை" புறம். ஙஎ: ச; ககக: அ.

ரு. படுதல் என்பது பெய்தல் என்னும் பொருளில் வருதல், (அ) "படுமழை யடுக்கத்த" (ஆ) "பாடுபெயல்" கலி. சஅ: ச; கூ0: சா. என்பவற்றாலும்'பாட்டம்' என இருவகைவழக்கினும்வழங்கும் சொல் லாலும் அறியலாகும்.

சா. "ஊர்பெழு கிளர்புளர் புயர்மங்குலி னறைபொங்க" கலி. க0ரு: உரு.

எ. மணிவரை என்பதற்கு நீலமணி போன்றமலை யெனப் பொருள் கொள்ளினும் பொருந்தும்.

அ. (அ) "அயமிழி யருவிய வணிமலை" (ஆ) "இலங்குதா ழருவியோ டணிகொண்ட நின்மலை" (இ) "ஆமிழி யணிமலை" (ஈ) "அயனந்தி யணிபெற வருவியார்த் திழிதரும், பயமழை தலைஇய பாடுசால் விறல்

(பிரதிபேதம்) * வளைபுமலிந்த.

*போக்கின வெள்ளிய கால்களையுடைய காரியாகிய எற்றினையும் மீன் பொலிவு பெற்று விளங்குதல்வரும் அந்திக்காலத்து மேகத்தையுடைய சிவந்த ஆகாயம்போலே அழகிய ஒளிபரந்த புள்ளிகள் வெள்ளையாயிருக்கின்ற சிவந்த எற்றையும் கொலைத் தொழிலையுடைய இறைவன் சூடிய இளையதாகிய திங்களைப்போல வளைந்து நிறைந்த கொம்பை அணிந்த சிவந்த எற்றையும் பொருகின்ற†மாறுபாட்டினையும் வலியினையுமுடைய கொண்டாடுகின்ற பிற ஏறுகள் பலவற்றையும் தொழுவினுள்ளே விடுகையினாலே ஒழுங்குபட்ட புகைசூழ்ந்த அத்தொழு, சிங்கமாகிய மாவும் குதிரையாகிய மாவும் களிறுகளும் (க)முதலையிலொருசாதியாகிய கராமும் பெரிய மலையின் முழையிடத்திலே சேரத் திரளப்பட்டுப் பெய்கின்ற மழை ஒருங்குதிரியும் மலையிடத்தையொக்கும். எ - று.

௨௨ தொழுவினுள், (௨)புரிபு புரிபு புக்க பொதுவரைத்
(௩)தெரிபு தெரிபு குத்தின வேறு

எ - து: அத்தொழுவினுள்ளே அவ்வேறுகளைத் தழுவுதற்கு விரும்பி விரும்பிக் குதித்த பொதுவரைத் தெரிந்து தெரிந்து அவ்வேறுகள் குத்தின. எ - று.

௨௪ ஏற்றின், (௪)அரிபரி பறுப்பன சுற்றி
யெரிதிகழ் கணிச்சியோன் சூடிய பிறைக்க

---

வெற்ப" (கலி. ௪௬: ௧. ௨௫; ௪௮: ௧; ௫௩: ௬ - ௭.) என்பவற்றால் மலையை அருவி அழகுறுத்துவதாகக் கூறுதல்அறியப்படும்.

௧. (அ) "ஓடுங்கிருங் குட்டத் தருஞ்சுழி வழங்கும், கொடுந்தாண் முதலையு மிடங்கருங் கராமும்" (குறிஞ்சி. ௨௫௬ - ௨௫௭.) என்பதனால், கராம் முதலைச்சாதி விசேடமென்பது அறியலாகும்.

௨. "எழுசீ ரடியே முடுகிய நடக்கும்" என்பதன் பின்னுள்ள 'முடுகியல் வரையார் முதலீ ரடிக்கும்' என்னும் (தொல். செய். ௬௬) சூத்திரத்தினுரையில் முதலீரடிக்குமென்ற வும்மை எச்சவும்மை யாதலால், நாற்சீரடியும் இத்துணைப் பயிலாது முடுகுமென்று கூறி, "புரிபு புரிபு புக்க பொதுவரைத், தெரிபு தெரிபு குத்தின வேறு" என்பதை மேற்கோள் காட்டுவர். பேர்.

௩. 'செய்பு' என்னும் வாய்பாட்டு வினையெச்சம் தன் வினைமுதல் வினை கொண்டு முடிந்ததற்கு, "தெரிபுதெரிபு குத்தினவேறு" என்பது மேற்கோள்; நன்.வினை. சூ. ௨௫. மயிலை. விருத்தி: இரா. இ-வி. சூ. ௨௪௬.

௪. கலிப்பாவுறுப்பில் முதலடி முடுகியலாயும் முதலடியும் மூன்றாமடியும் முச்சீராயும் வந்ததற்கு, "அரிபரிபு..........குடர்வலந்தன" என்பது மேற்கோள்; தொல். செய். சூ. ௭௦. நச்.

(பிரதிபேதம்) * போக்கினவொள்ளிய. † மாறுபாட்டினையுமுடைய.

ணுருவ மாலை போலக்
குருதிக் கோட்டொடு குடர் வலந்தன

எ-து: அவை குத்தினபொழுது, எரி சுற்றிவிளங்குகின்ற (௧)கணிச்சிப் படையையுடைய இறைவன்சூடிய (௨) பிறையிடத்துக்கிடந்த (௩) சிவந்த நிறத்தையுடைய *மாலைபோலப் பகையான ஏறுகளை விரும்பிப் போக்குவன வாகிய†ஏற்றினங்களின் குருதிதோய்ந்த கொம்புகளுடனே குடர்கள் சுற்றிப் பிணித்தன. எ - று.

௨௮ ‡கோட்டொரீ சுற்றிக் குடர்வலந்த வேற்றின்முன்
ஞாடிநின் (௪)றக்குடர் வாங்குவான் பீடுகாண்
(௫)செந்நூற் கழியொருவன் கைப்பற்ற (௬)வந்நூலை
||முந்நூலாக் கொள்வானும் போன்ம்

எ - து: அங்ஙனங் கொம்புகளோடே சுற்றிக் குடர்கள் பிணித்த ஏற்றின் முன்னே நின்று ஆடி அக்குடரை இரண்டுகையாலும் வாங்கி வயிற்றிலே

௧, கணிச்சியென் — — பின் வேறுயதொரு படைக்கலத்துக்கும் பெய ராயினும் 'எரிதிகழ்' என்னும் அடைமொழியை நோக்க இங்கே மழு வென்னும் பொருளில் வந்ததென்றே தோற்றுகிறது.

௨. இச்செய்யுள் ௧௫ - ௧௯. அடிகளிலும் ஏற்றின் கொம்புக்குப் பிறை உவமையாய் வந்திருத்தல் காண்க.

௩. "கணவிர மாலை கைக்கொண்டென்ன, நிணநீடு பெருங்குடர் கையகத் தேந்தி" மணி: ௫: ௪௮-௪௯.

௪. "மாயா தவர்தலை வாவரங் காவட மாமதுரை, மாயா தவரண்டர் வந் தடைந் தான்மழு வாளிபிர, மாயா தவர்செய்வர் முந்நூல்செந் நூல் கொண்ட வண்ணமொப்ப, மாயா தவரத் தனைக்குடல் கோத்ததுன் வாணகமே" திருவரங்கத். ௮௭.

௫. லகரந்திரிந்த னகரத்தின்முன் மகரம் தன்மாத்திரையிற் குறைந்து வருமென்பதற்கு, "செந்நூற்கழி...........போன்ம்" என்பது மேற். கோள்; இ - வி. சூ. ௨௨.

௬. செய்யுட்கண் போலுமென்னுஞ் சொல்லின் இறுதியில் னகாரம் மகாரம் வந்து ஈரொற்றுட னிலையாய் நிற்குமென்பதற்கு, "அந்நூலை முந்நூலாக் கொள்வானும் போன்ம்" என்பது மேற்கோள்; தொல். மொழி. சூ. ௧௮. நச்.

(பிரதிபேதம்) * மாலையாறபகையான, † ஏற்றினங்களினுடைய குருதி, ‡ கோடொடு, || முன்னூலாற் கொள்வானும்.

டுகின்றவன், சிவந்த நூற்கழியை ஒருவன் இரண்டுகையிலுங் கோத்துப் பிடித்திருக்க அந்நூலை மூன்று நூலாகக் கொள்கின்றவனையும் ஒக்கும்; இவனுடைய பெருமையைப் பாராயென்று தோழி தலைவிக்குக் காட்டினாள். எ-று.

௩௨ (௧) இகுளை (௨)யிஃதொன்று கண்டை யிஃதொத்தன்
கோட்டினத் *தாயர் மகனன்றே மீட்டொரான்
போர்புக லேற்றுப் பிணரெருத்திற் றத்துபு
தார்போற் றழீஇ யவன்

எ-து: போரைக்கொண்டாடுகின்ற ஏற்றினது †சர்ச்சரையையுடைய கழுத்திலே பாய்ந்து அதற்கு இட்ட மாலைபோலே அதனைத் தழுவினவன் எருமைத்திரளையுடைய ஆயர்மகனல்லவோ? ஆதலான் இனி அதன்வலியை மீளப்பண்ணி அதனை நீங்கான்; இளையோளே! இஃதொரு வலியைப் பாராய்; இவனொருத்தன்காணென்று காட்டினாள். எ-று.

இவனொருத்தனென்றது, ‡வியந்தது.

௩௩ (௩)இகுளை யிஃதொன்று கண்டை யிஃதொத்தன்
கோவினத் தாயர் மகனன்றே யோவான்
மறையேற்றின் மேலிருந்தாடித் துறை(௪)யம்பி
யூர்வான்போற் றோன்று மவன்

எ-து: (௫)மறுவினையுடைய ஏற்றின்மேலேயிருந்து ஆடிவிட்டுப் பின்னர் நீர்த்துறையிடத்துத் தெப்பத்தின்மேற் கிடந்து அதனைத் தள்ளுகின்றவனைப்

௧. "தையலோ டின்னன பெண்பாற் பெயரே" என்புழி, இன்னன வென்பதனாலே இகுளை யென்பது உயர்திணைப் பெண்பாற் சொல் லென்று நன். பெயரி. சூ. ௨௦. மயிலை. விருத்தி, இரா. இ-வி. சூ. ௧எ௮. உரைகளிலும், தோழியை இகுளை என்பது மலாடார் சொல் லென்று (நன். பெயரி. சூ. ௧௬) மயிலை.உரையிலும், சீதநாட்டார்சொல் லென்று விருத்தி. இரா. உரைகளிலும் காணப்படுபவை இங்கே அறிதற் பாலன.

௨. இந்நூற்பக்கம் ௩௮௬: ௩-ஆங் குறிப்புப்பார்க்க,

௩. இச்செய்யுளில் ௩௨, ௪௬-ஆம்அடிகளும் இப்படியே அமைந்துள்ளன.

௪. "தங்கார் பொதுவர் கடலுட் பரதவ, ரம்பியூர்ந் தாங்கூர்ந்தா ரேறு" கலி. ௧௦௬: ௨௨ - ௨௩.

௫. மறை யென்பது மறுவென்னும் பொருளில் வருதல், "செவிமறை நேர்மின்னு நுண்பொறி வெள்ளை" (கலி. ௧௦௧: ௨எ) என்புழி 'மறை' என்பதற்கு எழுதியிருக்கும் உரையாலும் அறியலாகும்

(பிரதிபேதம்) * ஆய மகனென்றே விட்டொரான். † சாசரையுடைய, ‡ வியந்து இகுளை.

போலே தோன்றுகின்றவன் பசுத்திரளையுடைய ஆயர்மகனல்லவோ? ஆதலால், இவன் இங்ஙனம் செலுத்துந் தொழிலை ஒழியான்; இளையோளே! இஃதொரு வலியைப் பாராய்; இவனொருத்தன் காணென்று காட்டினள். எ - று.

௪0 *தொழீஇ

எ - து: காண்டற்றொழிலை யுடையவளே. எ-று.
இஃது "அளபெடை மிகூஉ மிகரவிறுபெயர்". (௧)

(௨)காற்றுப்போல் வந்த †கதழ்விடைக் காரியை
யூற்றுக் களத்தே யடங்கக்கொண் டட்டதன்
மேற்றோன்றி நின்ற பொதுவன் றகைகண்டை
(௩)யேற்றெருமை நெஞ்சம் வடிம்பி னிடந்திட்டுச்

௧. தொல்· விளி. சூ. அ. இச்சூத்திர வுரையில் 'இவ்வளபெடைப் பெயர் விளியேற்கும்போது தன்னியல்பு மாத்திரையின் மிக்கு நான்கும் ஐந்தும் மாத்திரைபெற்று நிற்கும்; என்றது ழகர வீகாரத்தின் பின் இரண்டு இகரவுயிரும் மூன்று இகரவுயிரு மெழுதப்படவேண்டுமென்பதை' என்றுகூறுவர், சே. கல். நச். இச்சொல்லுக்குத் தொழில் செய்கின்றவளேயெனப் பொருளும் எழுதுவர் நச்சினார்க்கினியரும் இ-வி. உரையாசிரியரும். இ - வி சூ. ௨0௭. இச்சூத்திரத்தினுரையும் மேற்கோளும் எழுதுவோராலும் அவற்றை ஊன்றிப்பாராது அச்சிடுவோராலும் எளிதின் உண்மையறிய இயலாதவாறிருக்கின்றன. இச்சூத்திர வுரையில் "தொழீஇ என்பது பெயர்; விளியு மஃதே யெனக்கொள்க. இஃதியல்பு. இயற்கைய வென்று பன்மை கூறிய வதனான், இவ்வள பெடை மூன்று மாத்திரையின் நிமிர்ந்து நிற்கு மென்பது கொள்ளப் படும். செயற்கையவென்றதனான் இவ்வளபெடைப்பெயர் எழுதும்வழி ஐந்தெழுத்திட்டும் எழுதுப" என்பர் கல்லாடர். ஏனைய உரைகள் அச்சிடப் பட்டுள்ளன. "தொழீஇ" கலி. ௧0௪: ௬அ. "தொழீஇ யுடனுண்ணார்"சிறுபஞ்ச. ௩அ. என இச்சொல் பிறவிடத்து வருதலும் காண்க.

௨. "ஏற்று மருப்பு மிலங்கிழையாகத் திபமருப்புங், கூற்று மருப்பெழுங் கோலந்தந் தாட்கொரு கோடிசுரும், பாற்று மருப்பொலி தாரண்ண லார்முன் னணிந்து விட்டார், காற்று நெருப்புங் கலந்த தென் றுவ ருங் காரிகைத்தே" அம்பிகா. ௨௫௭.

௩. (அ)எருமைச்சாதியின் ஆண் ஏறெனப்படுமென்பதற்கு "ஏற்றெருமை நெஞ்சம் வடிம்பி னிடந்திட்டு" என்பதுமேற்கோள்; தொல். மரபு. சூ ௩௧. பேர். சூ· ௩அ. நச். (ஆ) இந்நூற்பக்கம் ௬௨௩: ௬-ஆங் குறிப்புப் பார்க்க.

(பிரதிபேதம்) * தொழிலீஇ, (என்பது முன்பதிப்பு), † கழுவிடை.

சீற்றமோ டாருயிர் கொண்டஞான் றின்னன்கொல்
கூற்றென வுட்கிற்றென் னெஞ்சு

எ - து: எருகிய எருமையையேறுகின்ற கூற்றுவனுடைய நெஞ்சை (க) வடிம்பாலே பிளந்துபோகட்டுச் சினத்தோடே அரிய உயிரை வாங்கின அஞ்ஞான்றை, இறைவன் இத்தன்மையையுடையவன்கொலென்று கூறும் படியாகக் காற்றின் விசைபோல ஓடிவந்த விரைந்த எருகிய காரியதனைப் பலரும்வந்து சேர்தலையுடைய களத்தே வலியடங்கத் தழுவி வருத்தி அதன்மேலே தோன்றிநின்ற பொதுவனது அழகைப் பாராய்; அதனைக் கண்டு என் நெஞ்சு உட்கிற்றுக்காணென்றாள். எ - று.

சகூ இருளை *யிஃதொன்று கண்டை யிஃதொத்தன்
(உ)புல்லினத் தாயர் மகனன்றே புள்ளி
வெறுத்த வயவெள்ளேற் றம்புடைத் திங்கண்
மறுப்போற் பொருந்தி யவன்

எ - து: மற்றைப் புள்ளிகள் செறிந்த†வலியையுடைய வெள்ளேற்றினது அழகையுடைய பக்கத்தே திங்களிற் கிடக்கின்ற மறுப்போலே பொருந்திக் கிடந்தவன் ஆட்டினத்தையுடைய ஆயர்மகனல்லவோ? ஆதலால் இவ னொருத்தன்காண்; இளையோளே! ‡ இஃதொரு வலியைப் பாராயெனக் காட்டினாள். எ - று.

ருO ஓவா வேகமோ டுருத்துத்தன் மேற்சென்ற
||சேளச் செவிமுதற் கொண்டு பெயர்த்தொற்றுங்
(ரு)காயாம்பூங் கண்ணிப் பொதுவன் றகைகண்டை
மேவார் விடுத்தந்த(ச)கூந்தற் குதிரையை

---

க. வடிம்பு - கால் விளிம்பு; (அ) "மா வுடற்றிய வடிம்பு," (ஆ) கடுமா கடைஇய விடுபரி வடிம்பின்" (இ) "ஆழி வடிம்பலம்ப நின்றானும்" (ஈ) "வேலைவடிம்பலம்ப நின்றான்" (உ) "கடல்வடிம்பலம்ப நின்ற கைதவன்" என வருவனநோக்குக.

உ. (அ) "புல்லினத் தார்க்கும்" (ஆ) "புல்லினத் தாயர் மகளிரோடு" (இ) "புல்லினத் தாயர் மகனேன்" (ஈ) "புல்லினத் தாயனை" கலி. கOஎ: உ; ககக: ரு; ககங: எ, அ.

ங. "காயாம்பூங் கண்ணிக் கருந்துவ ராடையை" கலி. கOஅ: கO.

ச. "கூந்த லென்னும் பெயரொடு கூந்த, லெரிசினங் கொன்றோய்" (பரி. ங: ஙக-ஙஉ.) என்பதும் 'கூந்தன்மா என்றுகண்டார்சொல்லும் வடிவொடு வந்த கேசியது கனல்கின்ற சினத்தை யழித்தோய்;

பிரதிபேதம்) *இருதொன்று, †வலியையுடையவேற்றினதழகை, ‡இஃகுதொரு. ||சேளசெவி.

வாய்பகுத் திட்டுப் புடைத்தஞான் *றின்னன்கொன்
மாயோனென் றுட்கிற்றென் னெஞ்சு

எ - து: கஞ்சன்முதலியோர் வரவிட்ட கழுத்தின்மயிரினையுடைய குதிரையை வாயைப் பிளந்துபோகட்டுக் கையால் † அடித்த அஞ்ஞான்றைக் கண்ணன் இத்தன்மையன்கொல்லென்று கூறும்படியாக ஒழியாத கோபத்தோடே வெவ்விதாய்த் தன்மேலே சென்ற சிவந்த ஏற்றைச் செவியடியிற் கொம்புகளைப் பிடித்துக்கொண்டு அதன்வலியை மீட்டுத் தழுவும், காயாம்பூவாற் செய்த கண்ணியையுடைய பொதுவன் அழகைப்பாராய்; ‡அவனைக் கண்டு என்னெஞ்சு உட்கிற்றுக்காணென்றாள். எ - று.

௫௬ ஆங்கு, (௧)இரும்புலித் தொழுதியும் (௨)பெருங்களிற் றினமு
மாறுமா றுழக்கியாங் குழக்கிப் பொதுவரு
மேறுகொண் டொருங்குதொழூஉ விட்டனர் விட்டாங்கே
மயிலெருத் துறழணி மணிநிலத்துப் பிறழப்
பயிலிதழ் மலருண்கண்
மாதர் மகளிரு மைந்தரு மைந்துற்றுத்
(௩)தாதெரு மன்றத் தயர்வர் (௪)தழூஉ
௬௩ (௫)கொல்லேற்றுக் கோடஞ்சு வானை மறுமையும்
புல்லாளே ||யாய மகள்

---

கூந்தலையுடைய மாவைக் கூந்தலென்றும் பெயரினையுடையவடிவைப் பெயரென்றுங்கூறினர்; ஆகுபெயரான். கேசி-குதிரையாய்வந்துபொருதாஞெரசுரன், இப்பெயர் கேசமென்னும் வடமொழி முதனிலையாக முடிந்தமையின் அதன்பொருண்மைபற்றிக் கூந்தலென்றார்' என்னும் அதனுரையும்; "கூந்தன்மா கொன்று குடமாடிக் கோவலனாய்" (மூத்தோள்.) "கூந்தல்வாய் கீண்டானை" (நாலாயிர. இயற்பா. உ-ஆம் திருவந்தாதி. ௬௩.) என்பவைகளும் ஈண்டு அறிதற் பாலன.

௧. சிறுத்தைப்புலியும்உண்மையின்வேங்கைப்புலியை இரும்புலியென்றார்.
௨. பன்றியும் களிறெனப்படுமாதலின் யானையைப் பெருங்களிறென்றார்.
௩. "தாதெருமன் றத்தாடுங் குரவையோ தகவுடைத்தே" சிலப். ௧௭. 'மாயவன்றன்'
௪. "தழூஉப் பிணையூஉ, மன்றுதொறு நின்ற குரவை" மது. ௬௧௪-௬௧௫. என்பவாதலால், குரவைக்குத் தழூஉவென்று ஒரு பெயரிட்டார்.
௫. "கொல்லேற்று..............ஆயமகள்", "எளியா வறியா............ மகடோள்" என்னும் பகுதிகள் ஏறுதழுவினற்கு உரியளிவளெனவகைக்கிளைகட்கு மேற்கோள்; தொல். அகத். ௫. ௧௩. நச்.

(பிரதிபேதம்) * இன்னகொன், † அடித்தவன்றைஞான்றை. ‡ அதனை, || ஆயர்மகள்.

௬௫ அஞ்சார் கொலையே று கொள்பவ ரல்லதை
நெஞ்சிலார் தோய்தற் கரிய வுயிர்துறந்து
நைவாரா வாயமக டோள்

௬௬ வலியா வறியா வுயிர்காவல் கொண்டு
நலிவாய் மருப்பஞ்சு நெஞ்சினர் தோய்தற்
கெளியவோ வாயமக டோள்

௭௧ விலை*வேண்டா ரெம்மினத் தாயர் மகளிர்
கொலையேற்றுக் கோட்டிடைத் தாம்வீழ்வார் மார்பின்
முலையிடைப் போலப் புகின்

௭௪ ஆங்கு

(க)குரவை தழீஇயா மரபுளி பாடித்
†தேயா(உ)விழுப்புகழ்த் தெய்வம் பரவுது
மாசில்வான் முந்நீர் பரந்த தொன்னில
மாளுங் கிழமையொடு புணர்ந்த
வெங்கோ வாழியரிம் மலர்தலை யுலகே.

எ - து: அவ்விடத்தே அப்படிக்காட்டி (௩)மயிலினதுகழுத்தை மாறுபடு கின்ற அணியப்பட்ட காயாம்பூவாற் செய்த கண்ணிகள் பவளம்போலும் நிறத்தையுடைய சிவந்தநிலத்தே மாறுபட்டுக்கிடக்கும் பொதுவரும் பெரிய புலித்திரளும் பெரிய களிற்றுத்திரளும் தம்முண் மாறுமாறாய்ப் பொருதாற்

---

க. "முல்லை நிலத்துக் கோவலர், பல்லா பயன்றருதற்கு மாயோன் ஆகுதிபயக்கும் ஆபல காக்கவெனக் குரவை தழீஇ மடைபல கொடுத் தலின் ஆண்டு அவன் வெளிப்படுமென்றார்" (தொல். அகத். ரு. ரு. நச்.) என்பது ஈண்டு அறிதற் பாலது.

உ. (அ) "புகழொத் தீயே யிகழுந ரடுநனை" (ஆ) "புகழ்த லுற்றோர்க்கு மாயோ னன்ன, வுரைசால் சிறப்பிற் புகழ்சால் மாற" புறம். ருசு: க௩, ருஎ:உ-௩;(இ)உரைசால் சிறப்பி னெடியோன்" சிலப். உஉ:சுO.

௩. (அ) "கருநனைக் காயா கணமயி லவிழவும்" சிறுபாண். க௬ரு. (ஆ) "புல்லென் காயாப் பூக்கெழு பெருஞ்சினை, மென்மயி லெருத்திற் றோன்றும்" குறுந். கஅ௩. (இ) "கலவ மாமயி லெருத்திற் கடிமல ரவிழ்ந்தன காயா" சீவக. கருருஅ. எனவும், (ஈ) "பூவை மலர்புரை யெருத்து மஞ்ஞை" காஞ்சிப். கழுவாய்ப். கஅரு.(உ) "பறவாப்பூவை (பிரதிபேதம்) * வேண்டாரெம்மினதாயர், † தொய்யாவிழுப்புகழ்.

போலப் பொருது ஏற்றைத் தழுவிக்கொண்டு சோத் தொழுவை விட்டுப் போனர்; அவர் போன அப்பொழுதே நெருங்கிய இதழ்களையுடைய மலர்போலும் உண்கண்ணினையுடைய காதலையுடைய மகளிரும் அவர் கணவரும் வலியுற்றுத் தாதாகிய எருவையுடைய மன்றத்திலே குரவைக் கூத்தை ஆடுவார்கள்; ஆண்டு யாமுஞ் சென்று அக்குரவைக்கூத்தின் கண்ணே கூடிக் கொல்லுகின்ற ஏற்றினுடைய கோட்டிற்கு அஞ்சும் பொதுவினை மறுபிறப்பினும் ஆயர்மகள் தழுவாளென்றும், ஆயர்மகள் தோள், அஞ்சாராய் உயிரைத் துறந்து கொலைத்தொழிலையுடைய ஏற்றைக்கொள்பவர் *செறியுமவையல்லது வருந்துதல்வந்து தழுவுதற்கு நெஞ்சில்லாதவர்கள் செறிதற்கரியவென்றும், உயிராவது ஒரு காற்றாக உணராதே அதனைக் காவல்கொண்டு †அதனுடனே ஒரு செறிவாயேற்றின் மருப்பினை அஞ்சும் நெஞ்சினையுடையார் செறிதற்கு ஆயர்மகளிருடைய தோள் எளியவாயிருக்குமோவென்றும், கொலைத் தொழிலையுடைய ஏற்றினது கொம்பினிடையிலே தாம்விரும்பும் மகளிருடைய மார்பின் முலையிடையிலே விழுமாறுபோல வீழில், எம்முடைய இனத்தில் ஆயர் தத்தம் மகளிர்க்கு ‡முலைவிலை வேண்டாரென்றும், யாம் சுற்றத்தார்கூறும் முறைமையைப் பாடிக் குரவைக் ||கூத்தாடி அவ்விடத்துக் குற்றமில்லாத அழகையுடைய கடலிடத்தே பரந்து கிடக்கின்ற பழைய நிலத்தையாளும் உரிமையோடே பொருந்தின எம்முடைய பாண்டியன் இந்த அகன்ற இடத்தையுடைய உலகின்கண்ணே வாழ்வானாகவென்று அவ்விடத்துக் ÷கெடாத சீரிய புகழையுடைய தெய்வத்தைப் பரவுவேம்; நீயும் அங்ஙனம் பாடுதற்குப் போதுவாயாகவென்றாள்.எ-று.

"மரபுநிலைதிரியா"என்னும் (க)சூத்திரத்து "விரவும்பொருளும் விரவும்" என்றதனால், குரவையாடல் ஏறுகோடற்கைக்கிளையுள் விராய்வருமென்றும தெய்வத்தையன்றி அரசரை வாழ்த்திய வாழ்த்தும் விராய்வருமென்றுங் ✝கூறலின் இங்ஙனங்கூறினர். இவ்விதிஇவ்வாறே மேல் ×வருவனவற்றிற்குங் கொள்க.

இதனால், தலைவிக்கு ** நினைதல் பிறந்தது.

இது "குட்ட மெருத்தடி††யுடைத்து மாகும்"(உ)என்பதனாற்குட்டம்பட்டதாவும் 'புரிபுபுரிபு .............வேறு' என இரண்டடி முடுகியலும், 'அரிபரி மலர்ந்தனைய பசியகழுத்து மயில்" உத்தரகோச. தீர்த்தசசிறப்பு. ௩௧ எனவும் வருவன இங்கே நோக்கற்பாலன.

க. தொல். அகத். சூ. ௫௰. இச்சூத்திரத்தின் இவருரையில் இக்குறிப்பினுள்ள செய்திகளோடு 'விரவும் பொருள் விரவும்' எனவே ஆய்ச்சியர் குரவைக்கூத் தல்லது வேட்டுவவரிக்குரிய வெறியாட்டு விராவாதென் றுணர்க' என்னுஞ் செய்தியும் காணப்படுகின்றது.

உ. தொல். செய். சூ. ௧௧௬.

(பிரதிபேதம்)* செய்யுமதல்லது, † அத்துடனே. ‡முலையிலே வேண்டார், || கூத்தையாடியவ்விடத்து. ÷ கொடாத சீரிய, × கூறலிங்ஙனங் கூறினர், ✝ வருவவற்றிற்கும், **நினைத்தல். †† உடைத்துமென்றதனால், குட்டம் தரவும்.

பறுப்பனசுற்றி' எனவும் 'உருவமாலைபோல' எனவும் முச்சீரான்வந்த சொற்சீரடிபெற்ற கொச்சகமும், ஓரடியான்வந்த அம்போதரங்கங்களும் *'பயிலிதழ் மலருண்கண்' எனச் சொற்சீரடிபெற்ற கொச்சகமும் வந்து கலிவெண்பாவுறுப்பின் வேறுபட்டு வந்த கொச்சகக்கலி. "முச்சீர் முரற்கையு ணிறையவு நிற்கும்" (க)என்பதனான் முச்சீரடியும் வந்தன. (௬)

(கO௪.) மலிதிரை யூர்ந்துதன் மண்கடல் வௌவலின்
மெலிவின்றி மேற்சென்று மேவார்நா டிடம்படப்
புலியொடு வின்னீக்கிப் புகழ்பொறித்த கிளர்கெண்டை
வலியினான் வணக்கிய வாடாச்சீர்த் தென்னவன்
றொல்லிசை நட்ட குடியொடு தோன்றிய
நல்லினத் தாய ரொருங்குதொக் கெல்லாரும்
வானுற வோங்கிய வயங்கொளிர் பனைக்கொடிப்
பானிற வண்ணன்போற் பழிதீர்ந்த வெள்ளையும்
பொருமுரண் மேம்பட்ட பொலம்புனை புகழ்நேமித்
திருமறு மார்பன்போற் றிறல்சான்ற காரியு
மிக்கொளிர் தாழ்சடை மேவரும் பிறைநுதன்
முக்கண்ணா னுருவேபோன் முரண்மிகு குராலு
மாகடல் கலக்குற மாகொன்ற மடங்காப்போர்
வேல்வல்லா னிறனேபோல் வெருவந்த சேயு மாங்கப்
பொருவரும் பண்பி னவ்வையும் பிறவு
முருவப்பல் கொண்மூக் குழீஇயவை போலப்
புரிபு புரிபு புகுத்தனர் தொழூஉ;

அவ்வழி, முள்ளெயிற் றேஎ ரிவளைப் பெறுமிதோர்
வெள்ளேற் றெருத்தடங்கு வான்;

ஒள்ளிழை, வாருறு கூந்தற் றுயில்பெறும் வைமருப்பிற்
காரி கதனஞ்சான் கொள்பவ னீரரி
வெரூஉப்பிணை மானோக்கி னல்லாட் பெறூஉமிக்
குரூஉக்கட் கொலையேறு கொள்வான் வரிக்குழை

க. தொல். செய். சூ. ௭O.

பிரதிபேதம்) * பயினிதழமருண்கண்.

வேயுறழ் மென்றோட் டுயில்பெறும் வெந்துப்பிற்
௨௫ சேஎய் சினனஞ்சான் சார்பவ னென்றுங்
கறைவனர் நல்லாரை யாயர் முறையினு
னுண்மீன்வாய் சூழ்ந்த மதிபோன் மிடைமிசைப்
பேணி நிறுத்தா ரணி ;

௨௯ அவ்வழிப், பறையெழுந் திசைப்பப் பல்லவ ரார்ப்பக்
குறையா மைந்தர் கோளெதி ரெடுத்த
நறைவலஞ் செயவிடா விறுத்தன வேறு;

௩௨ அவ்வேற்றின்,
மேனிலை மிகலிகலின் மிடைகழி பிழிபு மேற்சென்று
வேனுதி புரைவிறற் றிறனுதி மருப்பின் மாறஞ்சான்
பானிற வெள்ளை யெருத்தத்துப் பாய்ந்தானை
நோனாது குத்து மிளங்காரித் தோற்றங்காண்
பான்மதி சேர்ந்த வரவினைக் கோள்விடுக்கு
நீனிற வண்ணனும் போன்ம் ;

௩௯ இரிபெழு பதிர்பதிர் பிகந்துடன் பலர்நீங்க
வரிபரி பிறுபிறுபு குடர்சோரக் குத்தித்தன்
கோட்டழியக் கொண்டானை யாட்டித் திரிபுழக்கும்
வாடில் வெகுளி யெழிலேறு கண்டை யிஃதொன்று
வெருவரு தூம மெடுப்ப வெகுண்டு
திரிதருங் கொல்களிறும் போன்ம் ;

௪௫ தாளெழு துணிபிணி யிசைதவிர் பின்றித் தலைச்சென்று
தோள்வலி துணிபிணி துறந்திறந் தெய்தி மெய்சாய்ந்து
கோள்வழுக்கித் தன்முன்னர் வீழ்ந்தான்மேற் செல்லாது
மீளும் புகரேற்றுத் தோற்றங்காண் மண்டமருள்
வாளகப் பட்டானை யொவ்வா னெனப்பெயரு
மீளி மறவனும் போன்ம் ;

௫௧ ஆங்க, செறுத்தறுத் துழக்கி யேற்றெதிர் நிற்ப
மறுத்து மறுத்து மைந்தர் சாரத்
தடிகுறை யிறுபிறுபு தாயின கிடப்ப
விடியுற ழிசையி னியமெழுந் தார்ப்ப

௫௫ பாடேற்றுக் கொள்பவர் பாய்ந்துமே லூர்பவர்
கோடிடை நுழைபவர் கோட்சாற்று பவரொடு
புரிபுமேற் சென்ற நூற்றுவர் மடங்க
வரிபுனை வல்வி லைவ ரட்ட
பொருகளம் போலுந் தொழூஉ ;

சுo தொழுவினுள், கொண்டவே றெல்லாம் புலம்புகத் தண்டாச்சீர்
வாங்கெழி னல்லாரு மைந்தரு மல்லலூ
ராங்க ணயர்வர் தழூஉ ;

சுரு பாடுகம் வம்மின் பொதுவன் கொலையேற்றுக்
கோடு குறிசெய்த மார்பு ;

சுரு நெற்றிச் சிவலை நிறையழித்தா னீண்மார்பிற்
செற்றார்கண் சாயயான் சாரா தமைகல்லேன்
பெற்றத்தார் கவ்வை யெடுப்ப வதுபெரி
துற்றீயா ளாயர் மகள் ;

சுசு தொழீஇஇ, ஒருக்குநா மாடுங் குரவையு ணம்மை ம
யருக்கினன் போனோக்கி யல்லனோப் செய்தல்
குரூஉக்கட் கொலையேறு கொண்டேன்யா னென்னுந்
தருக்கன்றோ வாயர் மகன் ;

எரு நேரிழாய், கோளரி தாக நிறுத்த கொலையேற்றுக்
காரி கதனஞ்சான் பாய்ந்த பொதுவற்கே
யார்வுற் றெமர்கொடை நேர்ந்தா ரலரெடுத்த
வூராரை யுச்சி மிதித்து ;

எஎ ஆங்கு;
தொல்கதிர்த் திகிரியாற் பரவுது மொல்கா
வுருமுறழ் முரசிற் றென்னவற்
கொருமொழி கொள்கவிவ் வுலகுட னெனவே.

இது "நாடகவழக்கினும்" என்னும் (க)சூத்திரத்துப் "பாடலுளமை யாத" என்றதனுல் ஏறுதழுவியவாற்றைத் தோழி தலைவிக்குக் காட்டிக்

க. தொல். அகத்.சூ. ருரு. இச்சூத்திரத்தின் இவருரையினும் இச்செய்யுள் மேற்கோளாக இக்குறிப்பு, சிறிதுவேறுபாட்டோடுவிளக்கமாக உளது.

கூறி, இத்தூரவையுள் அவனைப் பாடுகம் வாவென்றழைத்து, அவன் உடம்பாட்டினுள், தான் அலரச்சம் நீங்கினமையும் அவன் தன்னை வருத்தினமையுங் கூறிப் பாடி, பின்னர்த் தோழி நமர் அவற்கு நின்னைக்கொடைநேர்ந்தாரெனக்கூறியது.

இதன் பொருள்.

(௧)மலிதிரை யூர்ந்துதன் (௨)மண்கடல் வௌவலின்
மெலிவின்றி மேற்சென்று மேவார்நா டிடம்படப்
(௩) *புலியொடு வின்னீக்கிப் புகழ்பொறித்த கிளர்கெண்டை
வலியினான் வணக்கிய (௪)வாடாச்சீர்த் (௫)தென்னவன்
றொல்லிசை நட்ட குடியொடு தோன்றிய
நல்லினத் தாய ரொருங்குதொக் கெல்லாரும்
(௬)வானுற வோங்கிய வயங்கொளிர் (௭)பனைக்கொடிப்
பானிற வண்ணன்போற் பழிதீர்ந்த வெள்ளையும்

---

௧. தரவு ஈற்றடிகுறைந்தும்வருமென்பதற்கு "மலிதிரை.........தொழூஉ" என்னும் பகுதி மேற்கோள். தொல். செய். சூ. ௧௧௩. நச்.

௨. "அடியிற் றன்னள வரசர்க் குணர்த்தி, வடிவே லெறிந்த வான்பகை பொறாது, பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக், குமரிக்கோடுங் கொடுங்கடல் கொள்ள, வடதிசைக் கங்கையு மிமயமுங் கொண்டு, தென்றிசை யாண்ட தென்னவன்" சிலப். ௧௧: ௧௭ - ௨௨. என்பதும் 'அங்ஙனமாகிய நிலக்குறைக்கு சோழநாட்டெல்லையிலே முத்தூர்க் கூற்றமும் சேரமானாட்டுக்குண்டூர்க் கூற்றமுமென்னுமிவற்றை இழந்த நாட்டிற்காக ஆண்டதென்னவன்' என்றெழுதிய உரையிலுள்ள செய்தியும் ஈண்டு அறிதற்பாலன.

௩. அரசர் பிறவரசரிடம் வலியாற்கொண்ட நாட்டைத் தமதென அறிவித்தற்காக அங்கே தம் கொடியைப் பலருமறியப் பொறித்தல் மரபு; இதனை, 'கோண்மாக் குயின்ற சேண்விளங்கு தொடுபொறி, நெடுநீர்க் கெண்டையொடு பொறித்த, குடுமிய வாகபிறர் குன்றுகெழு நாடே" (புறம். ௯௮: ௩௦ - ௩௨) என்பதனாலும் அறிக.

௪. "வாட்டருஞ்சீர்" சிலப். ௧: ௪௧.

௫. "வீவில் குடிப்பி னிருங்குடி யாயரும்" கலி. ௧௦௫: ௭.

௬. "தேம்படுபனையின்றிரள்பழத்தொருவிதை, வானுறவோங்கி"வெற்றி.

௭. பனைமுன் கொடிவரின் ஐகாரங் கெடாது நிற்றற்கு, "பனைக்கொடி" என்பது மேற்கோள்; தொல். உயிர். சூ. அ௩. இளம். நச்.

(பிரதிபேதம்) * புலியொடு.

பொருமுரண் மேம்பட்ட *பொலம்புனை புகழ்நேமித்
(௧)திருமறு மார்பன்போற் றிறல்சான்ற காரியு
(௨)மிக்கொளிர் தாழ்சடை மேவரும் பிறைநுதன்
முக்கண்ணா னுருவேபோன் முரண்மிகு குராலு
மா(௩)கடல் கலக்குற மாகொன்ற மடங்காப்போர்
வேல்வல்லா னிறனேபோல் வெருவந்த †சேயு மாங்கப்
பொருவரும் பண்பி னவ்வையும் பிறவு
முருவப்பல் கொண்மூக் குழீஇயவை போலப்
புரிபு புரிபு புகுத்தனர் தொழூஉ

---

௧. "திருமறு மார்பநீ யருளல் வேண்டும்" பரி. ௧: ௩௬. திருமறு—ஸ்ரீவத்ஸம்.

௨. "உமையொடு புணர்ந்த விமையா நாட்டத்துக், கண்ணணங் கவிரொளிக் கடவுள்" பெருங். (௧) ௫௩: ௧௫ - ௧௬.

௩. (அ) "பார்முதிர் பனிக்கடல் கலங்கவுள் புக்குச், சூர்முத றடிந்த சுடரிலை நெடுவேல்" திருமுரு. ௪௫ - ௪௬. (ஆ) "பாயிரும் பனிக்கடல் பார்துகள் படப்புக்குச், சேயுயர்பிணிமுக மூர்ந்தம ருழக்கித், தீயழ றுவைப்பத் திரியவிட் டெறிந்து, நோயுடை நுடங்குசூர் மாமுத றடிந்து, வென்றியின் மக்களு ளொருமையொடு பெயரிய, கொன்றுண லஞ்சாக் கொடுவினைக் கொஃறகை, மாய வவுணர் மருங்கறத் தபுத்தவேல்" பரி. ௫: ௧-௭. (இ) "கட்டளைச் சூருடல் காமங்கொண்டு, பற்றியுட் புகுந்து பசுங்கடல் கண்டு, மாவொடுங் கொன்ற மணிநெடுந் திருவேற், சேவலங் கொடியோன்" (ஈ) "விண்ணுடைத் துண்ணும் கண்ணிலா வொருத்தன், மறிதிரைக் கடலுண் மாவெனக் கவிழ்ந்த, களவுடல் பிளந்த வொளிகெழு திருவேற், பணிப்பகை யூர்தி" (உ) "மேல்கடற் கவிழ்முகப் பொரியுடன் மாவு, நெடுங்கடற் பரப்பு மடுந்தொழி லரக்கரு, மென்னுளத் திருளு மிடைபுகுந் துடைத்த, மந்திரத் திருவேன் மறங்கெழு மயிலோன்" (ஊ) "கடுவினை யங்குரங் காட்டியுள் ளழுக்கா, றெண்டிசைச் சாகைகொண் டிருண்மனம் பொதுளிக், கொடுங்கொலை வகுத்துக் கடும்பழிச் சடையலைந், திரண்டைஞ்ஞூறு திரண்டவக்காவதஞ், சுற்றுடல்பெற்றுத் துணைப்பதினுயிர, மற்றதி னீண்டு மண்டியுடற் போகி, யைம்பது நூறுட னகன்றுசுற் றொழுக்கிப், பெருங்கவி ழிணர்தந் தவைகீழ்க் குலவிய, வடன்மாக் கொன்ற நெடுவேற் குளவன்" கல். ௧௧: ௪ - ௭; ௬௧: ௨௭ - ௩௦; ௭௩: ௨ - ௫; ௮௬: ௧ - ௬. என்பவைகளும் (எ) "ஙளியிரும் பரப்பின் மாக்

(பிரதிபேதம்) * புலம்புனை, † சேவுமாங்க.

எ - து: தன் நாட்டைக் கடலினுடைய மிக்க திரையேறிக் கைக் கொண்டுவிடுகையினாலே தனக்கு நாடு இடமுண்டாம்படியாக மனத்தின் இளைப்பின்றாய்ப் பகைவரைத் தன் வலியினாலே தாழ்க்கவேண்டி அவர்மேலே சென்று அவருடைய புலிப்பொறியையும் விற்பொறியையும் அவர் நாட்டினின்றும் போக்கி விளங்குகின்ற கயலை அவ்விடத்தே பொறித்த புகழையுடைய கெடாத தலைமையினையுடைய பாண்டியனுடைய பழைய புகழை நிலைபெறுத்தின குடியோடு ஒக்கத் தோன்றின பசுவினத்தில் ஆயரெல்லாரும் சேரத் திரண்டு விளங்குகின்ற வானிலேயுறும்படி *ஓங்கிய ஒளிபெருகுகின்ற (௧)பனைக்கொடியினையுடைய(௨)பாலினதுநிறத்தையுடைத்தாகிய நிறத்தினை

கடன் முன்னி, யணங்குடை யவுண ரேயம் புணர்க்குஞ், சூருடை முழுமுத றடிந்த பேரிசைக், கடுஞ்சினவிறல்வேள்" (பதிற். ௧௧: ௩-௬) என்பதும் அதில் சூருடை முழுமுதலென்பதற்கு, "சூரவன்மா, தனக்கு அரணாகவுடைய மாவின்முதலென்றவாறு; இனி, சூரவன்மா, தான் ஒருமாவாய் நின்றானென்று புராணமுண்டாயிற் சூரனாதற் றன்மையையுடைய மாவின் முதலென்றவாறாம்' என்று எழுதியிருக்கும் உரைப்பகுதியும் (ஏ) "போரெதிர்ந் தேற்றார் மதுகை மதந்தபக், காரெதிர்ந் தேற்ற கமஞ்சூ லெழிலியோ, னீர்நிரந் தேற்ற நிலந்தாங் கழுவத்துச், சூர்நிரந்து சுற்றிய மாதபுத்த வேலோய்" (பரி. ௧௮: ௧-௪) என்பதும் அதன் உரையும், (ஐ) "கவிழிணர், மாமுத றடிந்த மறுவில் கொற்றத், தெய்யா நல்லிசைச் செவ்வேற் சேஎய்" திருமுரு. ௫௯ - ௬௧. என்புழி, "மாமுத றடிந்த" என்பதற்கு 'அவுணரெல்லாரும் தம்முடனே எதிர்ந்தார் வலியிலே பாதி தங்கள் வலியிலே கூடும்படி மந்திரங்கொண்டிருந்து சாதித்ததொரு மாவை வெட்டினான்' என்று எழுதியிருக்கும் விசேடவுரையும் ஈண்டு அறிதற்பாலன.

௧. (அ) "அடல்வெந் நாஞ்சிற் பனைக்கொடி யோனும்" புறம். ௫௬: ௪. (ஆ) "பொற்பனை வெள்ளையைப் போற்றாதொழுகின்ற" இன்னா. ௧. (இ) "மடற்பனை யுயர்த்த மதிநிறப் பெருமனுக்கு" (ஈ) "கார், வெண் டோட்டிளம் பனைமீமிசை யுயர்த்தோனென விளர்த்த"(உ)"வானுற்ற தண்பனை யுயர்த்தவன்" (ஊ) "கள்ளவிழும் வெண்டோட்டுக் கரும் பனைமீ மிசையுயர்த்த, வெள்ளிவரை யனையானும்" (எ) "போந்தை மீதுயர்த்த வென்றிப் புரவலன்" பாகவத. (௯) சையாதி, ௨௪. (௧0) வேய்ங்குழல். ௧௧. உருக்குமிணி மண. ௧. பிரத்துமனன் மணம். ௧௪. சுபத்திரை மணம். ௧௮.

௨. (அ) "பானிற வண்ணனேக்கிற் பழியுடைத்து" சீவக. ௨0௬. (ஆ) "பான்மேனியான்" பழ. ௧௩.

(பிரதிபேதம்) * ஓங்கிய பனைக்கொடி.

யுடையவனைப்போலே பழித்தலற்ற வெள்ளையேற்றையும் பொருகின்ற மாறு பாட்டினாலே அனையவற்றின்மேலான பொன்னாற்புனைந்தபுகழையுடைத்தாகிய சக்கரப்படையையுடைய திருவாகிய மறுவையுடைத்தாகிய மார்பனைப் போலே அமைந்த கரிய ஏற்றையும் மிக்குவிளங்குகின்ற தாழ்ந்த (க) சடையினையும்ஒரு*பாகத்திலேமேவுதல்வரும்பிறைபோன்றநுதலினையுடையாளையு முடைய மூன்றுகண்ணையுடையானுடைய நிறம்போலே மாறுபாடு மிக்க குராலேற்றையும்பெருமையையுடையகடல் கலக்கமுறும்படி உள்ளேசென்று மாமரத்தைவெட்டின மீளாத †போரையுடைய வேலை ஏந்திய (உ)முருகனது நிறம்போல அச்சம்வந்த சிவந்த ஏற்றையும் அவ்வொப்புவருங் குணத்தினை யுடைய வற்றையும் ஒப்பில்லாத பிறவற்றையும் வடிவையுடையவாகியபல மேகங்கள் திரண்டவைபோல முழங்கும்படி விரும்பி விரும்பித் தொழுவிலே புகுதவிட்டார். எ - று.

௧௮ அவ்வழி, (ஙு)முள்ளெயிற் றேஎ (௪)ரிவளைப் பெறுமிதோர்
வெள்ளேற் றெருத்தடங்கு வான்

எ - து: ‡அவ்விடத்து இந்த ஒப்பில்லாத வெள்ளிய ஏற்றின் கழுத்திலே கிடக்குமவன் கூரிய எயிற்றினையும் அழகினையுமுடைய இவளைக்கூடும். எ-று.

௧. (அ)"பிறைநுதல் வண்ணமாகின்று" (ஆ) "கறைமிடற்றண்ணல் காமர் சென்னிப், பிறைநுதல் விளங்கு மொருகண்போல" (இ) "பால்புரை பிறைநுதற் பொலிந்தசென்னி, நீல மணிமிடற்றொருவன்" புறம். ௧:௧௦. ௫௫: ௪ - ௫. ௯௧: ௫ - ௬. (ஈ) "பிறைநெற்றியோடுற்ற முக்கண்ணி னார்" (உ) "பிறைதாங்கு நெற்றியர்" (ஊ) "பிறைசேர் நுதலிடைக் கண்ணமர்ந் தவனே" (எ)"திங்க டிலகம் பதித்த நுதலர்" தேவாரம். என வருதலால், பிறைநுதலென்பதற்கு, பிறையணிந்த நுதலென்று பொருள்கொண்டு 'சடைமேவரும்'என்பதற்கு அதற்கேற்பப்பொருள் கொள்ளினும் அமையும்.

௨. முருகவேள் செந்நிறமுடையவரென்பதை, 'செவ்வேள்' 'சேய்' என வழங்கும், பெயர்களும் வலியுறுத்தும். "உருவு முருவத்தீ யொத்தி" என்பது பரி. ௧௧: ௬௬.

௩. (அ) ,ஏறுதழுவினானுக் குரியளிவளெனவந்த கைக்கிளைக்கு, "முள் ளெயிற்றேஎர்...........கொள்பவன்" என்னும் பகுதி மேற்கோள். தொல். அகத். சூ. ௫௩. நச். (ஆ) முள்ளெயிறு இந்நூற்பக்கம் ௩௩: ௧-ஆம் குறிப்புப் பார்க்க.

௪. "இவளைப் பெறுமிதோர்...........சார்பவன்" இவ்வடிகளோடு "காரி கதனஞ்சான் பாய்ந்தானைக் காமுறுமிவ், வேரி மலர்க்கோதை யாள்...

(பிரதிபேதம்) * பாகத்தேமேவுதல், † போரையுடைய முருகனது,‡ அவ்விடத்து ஈல்லாய ரிந்த வொப்பில்லாத.

௨௦ ஒள்ளிழை, வாருறு(௧)கூந்தற் றுயில்பெறும் வைமருப்பிற்
(௨)காரி கதனஞ்சான் கொள்பவன்

எ - து: கூரிய கொம்பையுடைய கரிய ஏற்றினது கோபத்தை அஞ்சாது அதனைத் தழுவுமவன் இந்த ஒள்ளிய இழையினையுடையாளுடைய வாருதலுற்ற கூந்தலிலே துயிலுதலைப் பெறும். எ - று.

௨௧ ஈரரி
*வெரூஉப்பிணை (௩)மானோக்கி னல்லாட் பெறூஉமிக்
(௪)குரூஉக்கட் கொலையேறு கொள்வான்

எ - து: குரால் †நிறத்தவாகிய கண்ணினையுடைய கொலைத்தொழிலையுடைய ஏற்றைத் தழுவுமவன், வெருவுதலையுடைய பிணையாகிய மானோக்குப் போலும் நோக்கினையுடைய இரண்டாகியகண்களையுடைய இந்த ‡நல்லாளைக் கூடும். எ - று.

(௫)அரி, ஆகுபெயர்.

௨௨ வரிக்குழை,
வேயுறழ் (௬)மென்றோட் டுயில்பெறும் வெந்துப்பிற்
||சேஎய் சினனஞ்சான் சார்பவன்

---

........பூவைப் புதுமல ராள்" (சிலப்.௧௪: கொளு, ௧ - ௭.) என்னும் பகுதிகள் ஒப்புநோக்கற் பாலன.

௧. (அ) "மகளிர், விரிமென் கூந்தன் மெல்லணை வதிந்து" பதிற். ௫௦: ௧௮ - ௧௯. (ஆ) "இருளேங் கூந்த லின் றுயில்" (இ) "கூந்தன் மெல்லணைத் துஞ்சி" அகம். ௨௩௩: ௧௫, ௩௦௮: ௧௩. (ஈ) "இருண்மென் கூந்த லேமுறு துயிலே"

௨. "காரி கதனஞ்சான்" கலி. ௧௦௪: ௭௪.

௩. "மான்பிணை யன்ன மகிழ்மட நோக்கே"

௪. "குரூஉக்கட் கொலையேறு" கலி. ௧௦௪: ௭௧.

௫. அரி, செவ்வரி கருவரி; இச்சொல் இங்கே அவற்றையுடைய கண்ணை உணர்த்தி நிற்றலான் ஆகுபெய ரென்றார்.

௬. ஆடவர் தம்மனைவியர்தோளிற் றுயில்வதாகக் கூறல் மரபு: (அ) "அரிவை தோளிணைத் துஞ்சிக், கழிந்த நாளிவண் வாழு நாளே" குறுந். ௩௨௩. (ஆ) "தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொ, றாமரைக் கண்ணா னுலகு" குறள். ௧௧௦௩.

(பிரதிபேதம்) * வெருப்பிணை, † நிறத்தையுடையனவாகிய, ‡ நல்லோளை கூடும்வரிக்குழை.
|| சேஎசினனஞ்சான்.

எ - து: வெய்ய வலியினையுடைய சிவந்த ஏற்றினது சினத்தை அஞ் சானாய் அதனைத் தழுவுமவன், வரியினையுடைத்தாகிய குழையினையுடையா ளுடையமூங்கிலையொக்கும் மெல்லியதோளிலே* துயிலுதலைப் பெறும். எ-று.

வரி - (க)அருப்புத்தொழில்.

உடுௗ என்றுங்

கறைவனர் நல்லாரை யாயர் முறையினா
ளுண்மீன்வாய் சூழ்ந்த மதிபோன் மிடைமிசைப்
பேணி நிறுத்தா ரணி

எ - து: †என்று நல்லாயர் தமக்குரிய முறைமையாலே‡சுற்றுவனவாகிய நாளாகிய மீன்கள் தன்னிடத்தைச் சூழப்பட்டமதிபோலே அவ்விடத்திலிட்ட பரண்களின்மேலே தத்தம் மகளிரைத் திரளாக ஒப்பித்து நிறுத்தினார்.எ - று.

(உ)மீனும் மதியும், ஆயத்திற்கும் மகளிர்க்கும் ||உவமை.

உகூ அவ்வழிப், பறையெழுந் திசைப்பப் பல்லவ ரார்ப்பக்
குறையா மைந்தர் கோளெதி ரெடுத்த
நறைவலஞ் செயவிடா விறுத்தன வேறு

எ - து: அவ்விடத்துப் புகை வலம்வர விடப்பட்டு நிறுத்தப்பட்டன வாகிய ஏறுகள், பறை மிக்கொலிக்கையினாலும் பலரும் ஆரவாரிக்கையினாலும் வலிகுறையாத ஆயர்கோடற்றொழிற்கு எதிரே என்றன. எ - று.

௩உ அவ்வேற்றின்

(௩)மேனிலை மிகலிகலின் மிடைகழி பிழிபு மேற்சென்று
வேனுதி புரைவிறற் றிறனுதி மருப்பின் மாறஞ்சான்

---

க. அருப்புத்தொழில் என்றது ஆபரணங்களில் நுண்ணிதாகச் செய்யும் சிறிய அரும்புபோன்ற வேலைகளை. "தாள் களங்கொலக் கழல்பறைந் தன" (புறம். ச: ௩) என்புழி 'கழல்பறைந்தன' என்பதற்கு, 'வீரக்கழ அருப்புத்தொழில் பறைந்தவை' என்று எழுதியிருக்கும் உரை ஈண்டு அறிதற்பாலது.

உ. "தாரகையோடு ஆயத்தார்க்கு ஒத்த பண்பு, பன்மையும் ஒன்றற்குச் சுற்றமாய் அதனிற் றாழ்ந்து நிற்றலும்.........மதியோடு தலைமகட்கு ஒத்த பண்பு, கட்கினிமையும் சுற்றத்திடை அதனின் மிக்குப் பொலிதலும்" என்று (கோவையார். கஉச) பேராசிரியர் எழுதியிருக் கும் விசேடவுரை இங்கே அறிதற்பாலது.

௩. "ஐஞ்சீரடி முடுகியலோடொன்றாய் வந்த வெண்பா,கலிக்கு உறுப்பாய் வருதற்கு, "மேனிலை மிகலிகலின்...........வண்ணனும் போன்ம்" என்னும் பகுதி மேற்கோள்; தொல். செய். சூ. கூஙூ, நச்.

(பிரதிபேதம்) * துயிலைப்பெறும் என்றுங் கறைவன நல்லாரை, † என்று தமக்குரிய, ‡ சுற்றுவனராகிய, || உவமைஅரியாகுபெயர்.வரி அருப்புத்தொழில்.அவ்வழி.

பானிற வெள்ளை யெருத்தத்துப் *பாய்ந்தானை
நோனாது குத்து மிளங்காரித் தோற்றங்காண்
பான்(௧)மதி சேர்ந்த வரவினைக் கோள்விடுக்கு
நீனிற வண்ணனும் போன்ம்

எ - து: அந்த ஏறுகளின்மேலே நிலைபெறும் மிகுதலையுடைத்தாகிய மாறுபாட்டினாலே மிடைமிசையினின்றும் இழிந்து அதனைவிட்டுச்சென்று வேலினது முனையையொக்கும் †முனையையுடைய கொம்பினது விறலாகிய திறத்தினையுடைய மாறுபாட்டிற்கு அஞ்சானாகிப் பானிறம்போலும் வெள்ளிய ஏற்றினது கழுத்திலே ‡பாய்ந்தானைப்பொறாதே மேற்சென்று குத்தும் இளைய காரிய ஏற்றினது தோற்றரவு, பால்போலும் மதியைச் சேர்ந்து மறைத்த பாம்பினை அது மறைத்ததன்மையை விடுவிக்கும் நீலநிறம்போலும் || நிறத்தை யுடையவனையும் ஒக்கும்; அதனைப் பாராயென்றாள். எ - று.

வண்ணன், மாயோன்.

௩௪ (௨)இரிபெழு பதிர்பதிர் பிகந்துடன் பலர்நீங்க
வரிபரி பிறுபிறுபு குடர் சோரக் குத்தித்தன்
கோடழியக் கொண்டானை யாட்டித் திரிபுழக்கும்
(௩)÷வாடில் வெகுளி யெழிலேறு கண்டை +யிஃதொன்று

---

௧. (அ) "மாமதிகோண், முன்னம் விடுத்த முகில்வண்ணன்" பெரிய திரு மடல். ௬௬. (ஆ) "தேம்பலிளந்திங்கட் சிறைவிடுத் தைவாய்ப், பாம்பி னணைப் பள்ளிகொண்டாய்" பெரியதிருமொழி. (௧௧) அ: எ.(இ)"கோள் வாய் மதிய நெடியான்விடுத் தாங்கு" சீவக. ௨௫௪. (ஈ) "பான்மதி விடுத்தனை" யா - வி. மேற்.

௨. நாற்சீரடியும் ஐஞ்சீரடியும் முடுகியலடியாக வந்ததற்கு (அ) "இரி பெழு..........தலைச்சென்று" என்னும் அடிகள் தொல். செய். சூ. ௧௫௫. பேர். உரையிலும் (ஆ) "இரிபெழு..............கண்டை யிஃ தொன்று என்னும் அடிகள் தொல். செய். சூ. ௬௬. பேர். உரையிலும் முடுகுவண்ணத்திற்கு (இ) " இரிபெழு பதிர்பதிர் பிகந்து " என்பது தொல். செய். சூ. ௨௩௩. நச். உரையிலும் மேற்கோள்.

௩. வாடுதல் குறைதலென்னும் பொருளில் வருதலை "வாடற்க வையை நினக்கு" (பரி. ௬: ௧0௬) என்பதன் உரையாலும் அறிக.

(பிரதிபேதம்) * பாய்ந்தானைக் கோணாது குத்து, † முனையுடைய கொம்பினது விறலாற் றுதலையுடைய, ‡ பாய்ந்தவனைப், || நிறததையுடையவனையும், ÷ வாடா வெகுளி, + இஃகுதொன்று, அஃதொன்று.

வெருவரு (௧)தூம மெடுப்ப வெகுண்டு
திரிதருங் கொல்களிறும் போன்ம்

எ - து: பலரும் எழுந்திருந்து சென்று அதிர்ந்து அதிர்ந்து கெட்டு அவ்விடத்தைக் கடந்து சேர நீங்கும்படியாக *எலும்பு முறிந்து குடர்களற்றுக் கவிழும்படி குத்திவிட்ட பின்பு தன் கொம்பின் †வலியழியத் தழுவினவனை அலைத்துக்கொண்டு திரிந்து துகைக்குங் குறையாத கோபத்தினையுடைய அழகினையுடைய ஏறு, வெருவுதல் வருதற்குக் காரணமான மருந்தினுற் புகைக்க அதற்கு வெகுண்டு திரிதருங் கொல்கின்ற களிற்றையும் ஒக்கும்; இஃதொன்றைப் பாராயென்றாள். எ - று.

௪௫ தாளெழு துணிபிணி யிசை‡தவிர் பின்றித் தலைச்சென்று
தோள்வலி துணிபிணி துறந்திறந் தெய்தி மெய்சாய்ந்து
கோள்வழுக்கித் தன்முன்னர் வீழ்ந்தான்மேற் செல்லாது
மீளும் புகரேற்றுத் தோற்றங்காண் மண்டமருள்
(௨)வாளகப் பட்டானை யொவ்வா னெனப்பெயரு
மீளி மறவனும் போன்ம்

---

௧. தூமமெடுத்தலால் களிறு வெகுளுமென்பது உதயணன் சரித்திரத்து, யூகி பிரச்சோதனன் நகரைக்கலக்குதற்கு யானைக்குத் தூமமூட்டிய செய்தியைக்கூறும் "ஆனைதன் னிலைகண் டெய்தி யகிலிடும் புகையுமூட்டிச், சேனைமன் னகர ழித்துச் சிறைவீடுன் கடனே யென்று, மானநல் யூகி யானைச் செவியின்மந் திரத்தைச் செப்ப, யானைதன் மதக்கம் பத்தி லருந்தளை யுதறிற்றன்றே" என்னும் (உதயணகுமார (௧) உஞ்சைக்காண்டம். அ௫ - ஆம்) செய்யுளாலும் அறியலாகும்.

௨. (அ) "வடுவாழ் மார்பி, னம்புசே ருடம்பினர்ச் சேர்ந்தோ ரல்லது, தும்பை சூடாது மலைந்த மாட்சி யன்னூர் பெரும" (ஆ) "ஒன்னூர் மெலிவிடத்தும்...........செல்லாமை தான்றலையே" (இ) "மங்கை மகிழ வுறையேனேல் வாளமருட், பங்கப்பட் டார்மேற் படை தினைந் தேனுகென்றான்" (ஈ) "கைப்படை யொன்று மின்றிக் கைகொட்டிக் குமர ரார்ப்ப, மெய்ப்படை வீழ்த்த நாணி வேழமு மெறிதல் செல்லான், மைப்படை நெடுங்கண்மாலை மகளிர்தம் வனப்பிற்சூழ்ந்து, கைப்படு பொருளிலாதான் காமம்போற் காளைமீண்டான்" (உ) "கைத்துயிர் குடிப்ப னென்னு வெற்றிவு னிடதுகையான், மெய்த்தலைச் சூலமோச்சான் வெறுங்கையா னென்று வெள்கி" (ஊ) "சென்றவன் றன்னைநோக்கிச் சிரித்துநீ சிறியை யுன்னை, வென்றவை முழுமையெல்லாம் விளிப்பெனோ" (எ) "எனக் காற்ற லார்மேன், மாகால் வரிவெஞ்சிலையோடும் வளைத்த போது, சேகாகும்" என்பவை, ஈண்டு அறிதற்பாலன.

(பிரதிபேதம்) * எலும்பு மெலும்பு முறிந்து, † வலிகெடத் தழுவினவனை ‡ தவிர்வின்றி.

எ - து: தோள்வலியாலே துணிந்த ஏறுதழுவுதல் எக்காலமும் மனத்தைச் செலுத்துதலின் அம்மனம் பிணித்த முயற்சியாலே எழுந்து துணிந்த இசை தவிர்தலன்றி அதனிடத்தே சென்று மற்றுள்ளார் தழுவுமாற்றைக் கடந்து சேர்ந்து மெய்யைத்தழுவித் தான்கொள்ளும் நிலையைத்தப்பித் தன் முன்னே வீழ்ந்தவன்மேலே செல்லாமல் *மீளுகின்ற புகர் நிறத்தையுடைய ஏற்றினது தோற்றரவு, மிக்குச்செல்லும் போருள் தன்கையில் வாளோடே அகப்பட்டவனை எனக்கு ஒவ்வானென்று வெட்டாமல் மீளும், கூற்றுவனை யொத்த மறவனையும் ஒக்கும்; இதனைப் பாராயென்றாள். எ - று.

௫௧ ஆங்க, செறுத்தறுத் துழக்கி †யேறெதிர் நிற்ப
மறுத்து மறுத்து மைந்தர் சாரத்
தடிகுறை யிறுபிறுபு தாயின கிடப்ப
விடியுற ழிசையி னியமெழுந் தார்ப்பப்
௫௫ பாடேற்றுக் கொள்பவர் பாய்ந்துமே லூர்பவர்
‡கோடிடை நுழைபவர் கோட்சாற்று பவரொடு
புரிபுமேற் சென்ற நூற்றுவர் மடங்க
(௧)வரிபுனை (௨)வல்வி லைவ ரட்ட
பொருகளம் போலுந் தொழூஉ

எ - து: அங்ஙனம் கொம்பு மார்பிற்படுதலை மார்புகொடுத்து ஏற்றுக் கொள்பவரோடும் மேலே பாய்ந்து ||ஏறுபவரோடும்கோட்டிடையிலே சென்று புகுவாரோடும் ஏறுகொள்ள வல்லேனென்று சாற்றுவாரோடும் ஏறுகள் பொருது பின்பு பொருவாரை அறுத்துச் செறுத்து எதிரேநிற்க அதனைப் பொறாமல் மைந்தர் விலக்குமவரை ╫மறுத்துமறுத்துச்.சென்று தழுவுகையினாலே என்புகள் முறிந்து முறிந்து தசைகளற்றுப் பரந்தனவாய்க் கிடக்க (௩) இடியோடே மாறுபடுகின்ற ஏற்றினது முழக்கோடே வாச்சியங்கள் மிக்கு ஆரவாரிக்க அத்தொழு, போரைவிரும்பி மேலேசென்ற துரியோதனாதிகள் படும்படி வரிந்து புனைந்த வலிய வில்லையுடைய தருமன் முதலியோர் கொன்ற பொருகின்ற களத்தையொக்கும். எ - று.

---

௧. "வரிப்புனை பந்தொடு" முருகு. ௬௮.

௨. (அ)"வல்வி லோரி கொல்லிக் குடவரை" குறுந். ௧00.(ஆ) "கொல்லி யாண்ட வல்வி லோரியும்" புறம். ௧௫௮: ௫. (இ) "வல்வி லிராமன்" நாலா. பெரியதிருமொழி. (௫) ௧: ௭.

௩. "உருமி னதிருங் குரல்போற் பொருமுரா, ணல்லேறு" (கலி. ௧௧௩: ௨௬ - ௨௭.) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

(பிரதிபேதம்) * மீளுகின்ற நிறத்தை, † ஏற்றெதிர், ‡ கோட்டிடை, || ஏறுமவரோடு, மறுத்துச் சென்று.

௬௦ தொழுவினுள், கொண்டவே றெல்லாம் புலம்புகத் தண்டாச்சீர்
வாங்கெழி னல்லாரு மைந்தரு மல்லலூ
ராங்க ணயர்வர் தழூஉ

எ - து: அத்தொழுவிடத்துத் தழுவிக்கொண்ட ஏறுகளெல்லாம் மேயும் நிலத்தேபோக அமையாத சீரினையும் நோக்கினார் கண்ணை வாங்கிக்கொள்ளும் *அழகினையுமுடைய ஆய்ச்சியரும் ஆயரும் வளப்பத்தையுடைய ஊரிடத்தே குரவையாடுவரெனத் தோழி தலைவிக்குக் காட்டிக் கூறினாள். எ - று.

௬௩ பாடுகம் வம்மின் பொதுவன் கொலையேற்றுக்
கோடு குறிசெய்த மார்பு

எ-து: கூறி, பொதுவனுடைய கொலைத்தொழிலையுடைய ஏற்றினுடைய கொம்புகள் குறியிட்டுவிட்ட மார்பைப் பாடுவேமாக வாருங்கோளெனத் தலைவியையும் ஆயத்தையும் நோக்கிக் கூறினாள். எ - று.

௬௫ நெற்றிச் சிவலை †நிறையழித்தா னீண்மார்பிற்
செற்றார்கண் சாயயான் சாரா தமைகல்லேன்
பெற்றாத்தார் கவ்வை யெடுப்ப வதுபெறி
துற்றீயா ளாயர் மகள்

எ - து: அதுகேட்ட தலைவி, நெற்றியிலே சிவந்த சுட்டியினையுடைய ஏற்றைவிரவி நிறைதலைக்கெடுத்தவனுடைய நீண்ட மார்பிலே பகைத்து அலர் கூறுகின்ற மகளிர் நம்மை இகழ்ந்து பார்க்கும் கண்கள் இகழ்ந்து பாராதிருக்கும்படியாக யான் சாராமல் அமைந்திரேன்; இனி, பசுவையுடைய ஆய்ச்சியர் அலர்கூறுவதற்குப் பெரிதும் வருத்தமுறேன் யானென்றாள். எ - று.

ஆயர்மகளென்று தன்னைப் பிறர்போற் கூறினாள்.

௬௯ (௧)தொழீஇ இ

எ - து: தொழில்செய்கின்றவளே. எ - று.

(௨)ஒருக்குநா மாடுங் குரவையு ளம்மை
(௩)யருக்கினன் போனோக்கி யல்லனோய் செய்தல்

---

௧. இந்நூற்பக்கம் ௬௪௪: ௧-ஆம் குறிப்புப் பார்க்க.

௨. புகுமுகம்புரிதல் கைக்கிளைக்கண் வந்ததற்கு, "ஒருக்குநாம்........... மகன்" என்னும் பகுதி மேற்கோள்; தொல். மெய்ப். சூ. ௧௧. பேர் இ - வி. சூ. ௫௪௦.

௩. "அருக்கு மங்கையர் மலரடி" திருப்புகழ்.

(பிரதிபேதம்) * அழகினையுடைய, † நிறையழித்த நீண்மார்பிற் சென்றார்.

(௧)குரூஉக்கட் கொலையேறு கொண்டேன்யா னென்னுந்
தருக்கன்றோ வாயர் மகன்

எ - து: ஆயர்மகன் ஆயத்தோடே நாம் ஆடுங் குரவைக்கூத்திலே நம்மை அருமைசெய்தான்போலே நோக்கி நமக்கு வருத்தத்தைத் தரும் நோயைச் செய்தல் *நிறத்தையுடைய கண்ணையுடைய கொலையேற்றையான்கொண்டே னென்னும் மனச்செருக்கன்றோ? அது வேறொன்றல்லவே என்றாள். எ - று:

௭௩ நேரிழாய், †கோளரி தாக நிறுத்த கொலையேற்றுக்
காரி கதனஞ்சான் பாய்ந்த பொதுவற்கே
யார்வுற் றெமர்கொடை நேர்ந்தா ரலரெடுத்த
வூரரை (௨)யுச்சி மிதித்து

எ - து: அதுகேட்ட தோழி, ஒத்த இழையினையுடையாய்! கொள்ளுத லரிதாக நஞ்சுற்றத்தார் நிறுத்தின கொலைத்தொழிலையுடைய ஏறுகிய காரியி னது கோபத்திற்கு அஞ்சானாய்த் தழுவின பொதுவனுக்கே எம்முடைய சுற்றத்தார் ‡மகிழ்ச்சிநிறைதலுற்று அலரை மிகக் கூறிய ஊரிலுள்ளாரைத் தலையிலே மிதித்துக் கொடுத்தலைப்பொருந்தினார்; இனி வருந்தாதே கொள் ளென்றாள். எ - று.

||எமரென்றாள்;"தாயத்தினடையா" என்னும்(௩)சூத்திரவிதியால். அவர் அலர் கூறிய அவர்க்கே கொடுத்தலின், அவர் உச்சியிலே மிதித்த தன்மைத் தென்றாள்.

௭௭ ஆங்கு
தொல்கதிர்த் திகிரியாற் பரவுதுமொல்கா
வுருமுறழ் (௪)முரசிற் றென்னவற்
(௫)கொருமொழி கொள்கவிவ் வுலகுட ÷னெனவே

௧. "குரூஉக்கட் கொலையேறு" கலி. ௧௦௪: ௨௩.

௨. உச்சியிலே மிதித்தலென்றது இழிவுபடுத்துதலை: "மதித்திறப் பாரு மிறக்க மதியா, மிதித்திறப்பாரு மிறக்க" என்பது; நாலடி. ௬௪.

௩. தொல். பொருளி. ௬. ௨௭.

௪. பாண்டியற்கு முரசாற் சிறப்புக் கூறுதலை. "முரசுமூன் றாள்பவர்" (கலி. ௧௩௨: ௪) என்பனுலும் அதன் குறிப்பாலும் அறிக.

௫. "குமரியொடு வடவிமயத், தொருமொழிவைத் துலகாண்ட சேரலா தற்கு" சிலப். ௨௧.

(பிரதிபேதம்) * நிறத்தையுடைத்தாகிய, † கோளரியாக, ‡ மகிட்சி. || எமரென்றாள் தாய் தாயத்தி, ÷ என்னவே.

எ - து: கெடாத (க)உருமேற்றை மாறுபடுகின்ற முரசினையுடைய அவ் விடத்திற் பாண்டியனுக்கு இவ்வுலகுசேர அவனுடையஒருமொழியைக்கேட்ப தாகவென்றுகூறிப் பழைதாகிய கதிரையுடைய சக்கரப்படையையுடையானை *வாழ்த்துதும்; அதற்கு நீயும் வருகவென்றாள். எ - று.

ஒருமொழி, ஆணை. தென்னவற்கென்னும் நான்காவது இவ்வுலகம் நடப்பதாகவென்று போந்த பொருளொடு முடியும்.

இதனால், தலைவிக்குப் புணர்ச்சியுவகை பிறந்தது.

"ஆயர் வேட்டுவர்" என்னும்(உ)சூத்திரத்தில்†ஆயரினுங்கிழவருங்கிழத்தி யரும் உளரென்று‡ஆதலான், இவர்க்குங் களவொழுக்கம் நிகழு||மென்பதாம். "நாடகவழக்கினும்" என்னும் (௩)சூத்திரத்திற் பாடலுள் அமையாதனவாய்க் களவொழுக்கம் நிகழ்ந்து ஏறு ÷தழுவி வரைவுடன் பட்டாராகக் கூறினர். மேலும் இங்ஙனம் களவு நிகழ்ந்து ஏறுதழுவி வரைகின்றதாகக் கூறும் ╪பாட்டுக்களுக்கெல்லாம் இதுவே விதியாகக் கொள்க.

இது தரவும் ஐஞ்சீரடிப்பெற்ற குறுவெண்பாட்டும் ஐஞ்சீரடிப்பெற்ற நெடுவெண்பாட்டும் ஐஞ்சீரடிப்பெற்ற கொச்சகமும் ×வழியசைபுணர்த்த சொற்சீரடியும் முடுகியலோடு தொடர்ந்த கொச்சக வெண்பாவும் நாற்சீரடி முடுகியலோடு தொடர்ந்து ஐஞ்சீரடியும் வந்த கொச்சகவெண்பாவிரண்டும் ஐஞ்சீரடியும் ஆசிரியத்தளையும் விரவி ஈறு வேறோர் சீரான் இற்ற கொச்சக வெண்பாவும் **ஐஞ்சீரடுக்கியவற்றிற் குறுவெண்பாட்டும் ஐஞ்சீரடுக்கிய நெடு வெண்பாட்டிரண்டும் தனிச்சொல்லும் சுரிதகமும் பெற்றுவந்த கலிவெண் பாவின்வேறுபட்ட (ச)கொச்சகம். "வெண்டளை விரவியு மாசிரியம் விரவியு,

---

க. (அ) "உருமிடி முரசமொடு" (ஆ) "இடிமுரசியம்ப" (இ) "இடியுமிழ் முரசம்" (ஈ) இடியென முழங்கு முரசின்" (உ) "உருமின் முர செழுந் தியம்ப" (ஊ) உருமுரற் றன்ன வுட்குவரு முரசமொடு" (எ) "உருமி னிரங்கு முரசின்" (ஏ) "முரசம்.........உருமி னாறுபு சிலைப்ப" (ஐ) "உருமிசை முரசம்" (ஒ) "முர சிடியுமிழ் தழங்கென முழங்க" (ஓ) "உருமி னிடிமுர சார்ப்ப" என முரசினொலிக்கு உரு மொலி உவமையாய் வருதல் காண்க.

உ. தொல். அகத். சூ. உக.

௩. தொல். அகத். சூ. ௫௩.

ச. (அ) "மலிதிரை யூர்ந்து" என்னு முல்லைப்பாட்டுள், "இரிபெழு பதிர் பதிர் பிகந்துடன் பலர் நீங்க" 'தாளெழு துணிபிணி யிசைதவிர் பின்றி' எனவு முடுகுதலிற்கொச்சகமாயிற்று; இதனுட் சொற்சீரடியும் வந்தது என்பர் நச்; தொல். செய். சூ. க௫௫. (ஆ) இச்செய்யுள்

(பிரதிபேதம்) * வாழ்த்துமதற்கு, † ஆயரினுங் கிழத்தியரும், ‡ ஆதலின், || மென்பதூஉ நாடக, ÷ தழுவ வரைவு, ╪ பாட்டுக்களுக்கு மிதுவே, × வழியசைப் புணர்த்த, ** ஐஞ்சீரடுக்கிய வெண்பாட்டிரண்டுந் தனிச்சொல்லும்.

ஐஞ்சீ ரடியு முளவென மொழிப" (௧) என்பதனான் மூவகைப் பாவிற்கும் ஐஞ்சீரடிவருதல் பெற்றும். (௪)

(௧௦௫.) அரைசுபடக் கடந்தட் டாற்றிற் றந்த
முரசுகெழு முதுகுடி முரண்மிகு செல்வற்குச்
சீர்மிகு சிறப்பினோன் றொல்குடிக் குரித்தெனப்
பார்வளர் முத்தமொடு படுகடல் பயந்த
வார்கலி யுவகையா ரொருங்குடன் கூடித்
தீதின்று பொலிகெனத் தெய்வக் கடியயர்மார்
வீவில் குடிப்பி னிருங்குடி யாயருந்
தாலி னுள்ளமொடு துவன்றி யாய்புடன்
வள்ளுரு ணேமியான் வாய்வைத்த வளைபோலத்
தெள்ளிதின் விளங்குஞ் சுரிநெற்றிக் காரியு
மொருகுழை யவன்மார்பி லொண்டார்போ லொளிமிகப்
பொருவறப் பொருந்திய செம்மறு வெள்ளையும்
பெரும்பெயர்க் கணிச்சியோன் மணிமிடற் றணிபோல
விரும்பின ரெருத்தி னேந்திமிற் குராலு
மணங்குடை வச்சிரத்தோ னாயிரங் கண்ணேய்க்குங்
கனங்கொள் பல்பொறிக் கடுஞ்சினப் புகரும்
வேல்வலா னுடைத்தாழ்ந்த விளங்குவெண் டுகிலேய்ப்ப
வாலிது கிளர்ந்த வெண்காற் சேயுங்
கால முன்பிற் பிறவுஞ் சால
மடங்கலுங் கணிச்சியுங் காலனுங் கூற்றுந்
தொடர்ந்துசெல் லமையத்துத் துவன்றுயி ருணீஇய
வுடங்குகொட் பனபோற் புகுத்தனர் தொழூஉ;

௨௩ அவ்வழி,
காரெதிர் கலியொலி கடியிடி யுருமி னியங்கறங்க
வூர்பெழு கிளர்புளர் புயர்மங்குலி னறைபொங்க
நேரிதழ் நிரைநிரை நெறிவெறிக் கோதைய ரணிநிற்பச்
சீர்கெழு சிலைநிலைச் செயிரிகன் மிகுதியிற் சினப்பொதுவர்

---

புணர்தற்பொருண்மைத்தாயினும் முல்லைக்குரிய கருப்பொருளான் வருதலின் முல்லையாயிற்றென்பர் இளம்; தொல். அகத். சூ. ௨௪.

௧. தொல். செய். சூ. ௬௩:

தூர்பெழு துதைபுதை துகள்விசும் புறவெய்த
வார்புடன் பாய்ந்தா ரகத்து;

௩௦ மருப்பிற் கொண்டு மார்புறத் தழீஇயு
மெருத்திடை யடங்கியு மிமிலிறப் புல்லியுந்
தோளிடைப் புகுதந்துந் துதைந்துபா டேற்று
நிரைபுமேற் சென்றுரை நீண்மருப் புறச்சாடிக்
கொளவிடங் கொளவிடா நிறுத்தன வேறு;

௩௫ கொள்வாரைக் கொள்வாரைக் கோட்டுவாய்ச் சாக்குத்திக்
கொள்வார்ப் பெறாஅக் குரூஉச்சேகில் காணிகா
செயிரிற் குறைநாளாற் பின்சென்று சாடி
யுயிருண்ணுங் கூற்றமும் போன்ம்;

௩௯ பாடேற் றவரைப் படக்குத்திச் செங்காரிக்
கோடெழுந் தாடுங் கணமணி காணிகா
நகைசா லவிழ்பத நோக்கி நறவின்
முகைசூழுந் தும்பியும் போன்ம்;

௪௩ இடைப்பாய்ந் தெருத்தத்துக் கொண்டானோ டெய்தி
மிடைப்பாயும் வேள்ளேறு கண்டைகா
வாள்பொரு வானத் தரவின்வாய்க் கோட்பட்டுப்
போதரும் பான்மதியும் போன்ம்;

௪௭ ஆங்க, ஏறும் பொதுவரு மாறுற்று மாறு
விருபெரு வேந்தரு மிகலிக்கண் ணுற்ற
பொருகளம் போலுந் தொழூஉ;

௫௦ வெல்புக ழுயர்நிலைத் தொல்லியற் றுதைபுதை துளங்கிமி
னல்லேறு கொண்ட பொதுவன் முகனோக்கிப்
பாடில வாயமகள் கண்;

௫௩ நறுநுதா லென்கொலோங் கூந்த லுளரச்
சிறுமுல்லை நாறிய தற்குக் குறுமறுகி
யொல்லா துடன்றெமர் செய்தா ரவன்கொண்ட
கொல்லேறு போலுங் கதம்;

௫௭ நெட்டிருங் கூந்தலாய் கண்டை யிஃதோர்சொல்;

௫அ கோட்டினத் தாயர் மகனொடியாம் பாட்டதற்
கெங்க ணைமரோ பொறுப்பர் பொருதார்
தங்கண் பொடிவ தெவன்;

௬௧ ஒண்ணுதால்;
இன்ன வுவகை பிறிதியாதி யாயென்னைக்
கண்ணுடைக் கோல ளலைத்ததற் கென்னை
மலரணி கண்ணிப் பொதுவனோ டெண்ணி
யலர்செய்து விட்டதிவ் வூர்;

௬௪ ஒன்றிப் புகரினத் தாயமகற் கொள்ளிழா
யின்றெவ னென்னை யெமர்கொடுப்ப தன்றவன்
மிக்குத்தன் மேற்சென்ற செங்காரிக் கோட்டிடைப்
புக்கக்காற் புக்கதென் னெஞ்சு;

என,

௭௧ பாடிமிழ் பரப்பகத் தரவணை யசைஇய
வாடுகொ ணேமியாற் பரவுது நாடுகொண்
டின்னிசை முரசிற் பொருப்பன் மன்னி
யமைவர லருவி யார்க்கு
மிமையத் தும்பரும் விளங்குக வெனவே.

*இஃது ஏறுதழுவியவாற்றைத் தோழி தலைவிக்குக் காட்டிக் கூறி, அவள் ஏறுதழுவிய தலைவனை விருப்பொடு நோக்கியவற்றைத் தன்னுள்ளே கூறி, முன்னர்க் களவின்கண் தமர்கோபித்ததனையும் அயலார்பொறாதிருந்த தன்மையினையும் தலைவிக்குக் கூற, அவளும் அவர் அலர்கூறியது நன்றென்று கூறி, †அன்றே என்னெஞ்சு கலந்துவிட்டது; இனிஅவர் கொடுப்பதாகக் கூறிய நாளிற் செய்வதென்னென மகிழ்ந்து ‡கூற, அதுகேட்ட தோழி யாம் அங்ஙனங் கூடி இனிதிருக்குமாறு காக்கின்ற பாண்டியன் நீடு வாழுமாறு தெய்வத்தைப் பரவுகம் வாவெனக் கூறியது.

இதன் பொருள்.

(௧) அரைசுபடக் கடந்தட் டாற்றிற் றந்த
முரைசுகெழு முதுகுடி முரண்மிகு செல்வற்குச்

௧. (அ) அரைசு என்பது உயர்திணை யாண்பாலை யுணர்த்தி வருதற்கு 'அரைசுபடக் கடந்தட்டு' என்பது மேற்கோள்; தொல். கிளவி. ௬.

(பிரதிபேதம்) * இது ஏறுதழுவியவற்றைத் தோழி. † இன்றே, ‡கூறுவதுகேட்ட.

சீர்மிகு சிறப்பினோன் (க)றொல்குடிக் குரித்தெனப்
பார்வளர் முத்தமொடு படுகடல் பயந்த
வார்கலி *யுவகைய ரொருங்குடன் கூடித்
தீதின்று பொலிகெனத் தெய்வக் கடியயர்மார்
(உ)வீவில் குடிப்பி னிருங்குடி யாயருந்
(ங)தாவி லுள்ளமொடு துவன்றி யாய்புடன்
வள்ளுரு ணேமியான் வாய்வைத்த வளைபோலத்
தெள்ளிதின் விளங்குஞ் (ச)சுரிநெற்றிக் காரியு
(ரு)†மொருகுழை யவன்மார்பி லொண்டார்போ லொளிமிகப்
பொருவறப் பொருந்திய செம்மறு வெள்ளையும்

---

ருஎ. நச். (ஆ)"அரசுபடக் கடந்த வானுச் சீற்றத்தவன்" பரி. உஉ: ங. (இ) "அரைசுபடக் கடக்கு முரைசா றேன்றல்" புறம். உகக: சு,

க. "நெல்லு நீரு மெல்லார்க்கு மெளியவெண, வரைய சாந்தமுந் திரைய முத்தமு, .மிமிழ்குரன் முரச மூன்றுட னுளுந், தமிழ்கெழு கூடற் றண்கோல் வேந்தே" புறம். ருஅ: க0 - கங.

உ. "தொல்லிசை நட்ட குடியொடு தோன்றிய, நல்லினத் தாயர்" கலி. க0ச: ரு-சு.

ங. இப்பகுதி 'தூவி லுள்ளமொடு' என்றும் படிக்கும்படி ஒரு பிரதியி லுள்ளது; தாவென்னுஞ் சொற்போலவே தூவென்னுஞ் சொல்லும் வருத்தமென்னும் 'பொருளை யுடையதாயின் மோனை நயமுற, "தூவி லுள்ளமொடு" என்றும் கொள்ளலாம்.

ச. "சுரிநெற்றிக் காரி" கலி. க0க: உக.

ரு. (அ) பலராமன் யமுனையால் அளிக்கப்பட்டதும் மிகச் சிறந்ததுமான ஒரு குண்டலத்தை அணிந்தனனென்பது புராணகதை; (ஆ) அவனிலை யைக் கூறுவதாகிய "கண்களியா" என்னு முதலையுடைய வெண்பாவி லுள்ள 'ஒண்குழையொன் றொல்கி யெருத்தலைப்ப' என்பதை இனத் தெனவறிந்தபொருள்வினைப்படுதொகுதியின்உம்மைபெற்றுவருமென் பதற்கு மேற்கோள்காட்டி, (தொல். கிளவி. சூ. ங௩) சேனாவரை யரும் (நேமி. சொல். கக) நேமிநாத வுரைகாரரும் (நன். பொது. சூ. சஅ) மயிலைநாதரும் 'ஒன்றும்' எனற்பாலது, 'ஒன்று' என உம்மை யின்றி வந்தது செய்யுள் விகாரமென்றும் (தொல். கிளவி. சூ. ங௩) நச்சினார்க்கினியர் (குழை) ஒன்றேனும் இனத்தென அறிந்தபின் உம்மை வேண்டும்; அது விகாரத்தாற் றொக்கதென்றும் எழுதியிருப்ப வையும் இவன் ஒரே குழையினனென்பதை வலியுறுத்தும். (இ)

(பிரதிபேதம்) * உவகையார். † ஒருகுழை யொருவன் மார்பினொண்டார்.

பெரும்பெயர்க் கணிச்சியோன் மணிமிடற் றணிபோல
விரும்பிணை றெருத்தி னேந்திமிற் குரானு
மணங்குடை வச்சிரத்தோ னாயிரங் கண்ணேய்க்குங்
கணங்கொள் பல்பொறிக் கடுஞ்சினப் புகரும்
*வேல்வலா னுடைத்தாழ்ந்த விளங்குவெண் டுகிலேய்ப்ப
வாலிது கிளர்ந்த வெண்காற் சேயுங்
(க)கால முன்பிற் பிறவுஞ் சால
மடங்கலுங் கணிச்சியுங் (உ)†காலனுங் கூற்றுந்
தொடர்ந்துசெல் லமையத்துத் துவன்றுயி ருணீஇய
வுடங்குகொட் பனபோற் புகுத்தனர் தொழூஉ

எ - து: ‡அரசுகள் படும்படியாக வென்று கொன்று நெறியாலே கொண்டுவந்த தலைமைமிகுகின்ற || சிறப்புக்களையுடையோனுடைய பழைதாகிய குடிக்குரித்தென்றுகூறிய, பாண்டிமண்டலம் பயந்த விளைவுகளும் ஒலிக்குங் ÷கடலில் வளர்ந்த முத்தத்தோடே மற்றும் பயந்த பொருள்களும் (ங)மூன்று ×முரசமுங் கெழுமும் முதிய குடியிற்பிறந்த மாறுபாடு மிகுகின்ற

---

"ஒருகுழை யொருவன்போ லிணர்சேர்ந்த மராஅமும்" கலி. உசு: க. (அ) "காதொரு குழையோ னிளவலே" வில்லி. இராசசூய. கசக. (உ) "எரிமணிக் குன்றிரண் டென்ன வேந்துதோ, ளொருகுழை யொருவனும்" (ஊ) "கங்கையிற் றிருவ மாநகர், வரவொரு குழையினன் வாங்க" (எ)செக்கர்மாமணி, யொருகுழை யுலாவரு வுலங்கொ டோனினன்" (ஏ) "திருநகர்..................கங்கையில் வீழ்தல் போன்றுமற், றொருகுழை யவன்வலியுணர்த்து கின்றதால்" பாக. (கo) அக்குரூரன் வந்த. உஉ. சாம்பன்மணம்புரி. ருo, ருங, ருச. என வருபவையும் இங்கே அறிதற்பாலன.

க. (அ) "காலமுன்ப" புறம்: உங: கஎ. (ஆ) "ஆற்றல் காலனோ டொக்கும் ...........கேள்வியன்" பெருங். (க) ஙசு: கOO - கOஉ. (இ) "வெந்திறற் காலனை" கந்த. மார்க்கண்டேய. உகசு.

உ. (தென் புலத்திறைவன்) "நெற்றியிற் காலன் செல்ல நீள்பெருங் கால பாச, மற்றைவெங் கால தண்டம் வர்திரு மருங்குஞ் செல்ல, வுற்றபே ரூழிக் காலத் துருத்திர மூர்த்தி யொப்பச், சுற்றிய சேனை யோடுந் தோன்றின னுலகத் துட்க" இராமா. திக்குவிசயப். சுசு.

ங. "முரைசுமூன் றாள்பவர்" கலி. கஙஉ: ச. என்பதும் அதன் குறிப்பும் ஈண்டு அறிதற்பாலன.

(பிரதிபேதம்) * வேல்வல்லான். † காலமுங்கூற்றும். ‡ அரைசுகளம்படும்படியாக, || சிறப்புக்களையுடைய பழைதாகிய, ÷ கடல்விளைந்தமுத்தத். × முரசுங்கெழுமும்.

அச்செல்வனுக்குத் தீதின்றிப்பொலிவனவாகவென்று உட்கொண்டு, தெய்வத்திற்குச் சிறப்புக்களைச் செய்தற்கு அவனுடைய கேடில்லாத குடியின்பின்பு தோன்றிய பெரியகுடியிற் பிறந்த ஆயரும், ஒருங்குநிறைந்த செருக்கினையுடைய உவகையராய்ச் சேரக்கூடி, ஏறுதழுவுங்காற் பிறர்க்குத் துன்பம் நிகழுமென்னும் வருத்தமில்லாத உள்ளத்தோடே நிறைந்து ஏறுகளை ஆராய்ந்து, வள்ளிய உருண்ட நேமிப்படையவன் ஊதிய சங்குபோலத் தெள்ளிதாக விளங்குஞ் சுட்டியையுடைத்தாகிய நெற்றியையுடைய கரிய ஏற்றையும், (௧)நம்பிமூத்தபிரானுடைய திருமார்பில் ஒள்ளிய சிவந்த(௨)மாலைபோல ஒளிமிகும்படியாக ஒப்புமிகநீண்டு பொருந்திய சிவந்தமறுவினையுடைய வெள்ளியஏற்றையும், பெரிய *பெயரையுடையகணிச்சிப்படையினையுடையவனுடைய நீலமணிபோலுந் திருமிடற்றில் அழகுபோலக் கரிய சர்ச்சரையையுடைய கழுத்தினையும் ஏந்தினகுட்டேற்றினையுமுடைய (௩)குரால் நிறத்தினையுடைய ஏற்றையும், வருத்தமுடைய வச்சிரப்படையையுடையோனுடைய ஆயிரங் கண்களையொக்குந் திரட்சிகொண்ட பலவாகிய புள்ளிகளையுங் கடிய † சினத்தையுமுடைய நிறத்தையுடைய ஏற்றையும், முருகனுடைய உடையாய்த் தாழ்ந்த விளங்குகின்ற வெள்ளியதுகிலையொப்ப நன்றாய் உயர்ந்த வெள்ளிய கால்களையுடைய சிவந்த ஏற்றையும், ‡ காலனது வலிபோலும் வலியையுடைய பிற ஏறுகளையும், சால நிறைகின்ற பல்லுயிர்களை உண்ண வேண்டி ஊழித்தீயும் கணிச்சியும் காலனும் கூற்றுவனும் அவ்வுயிர்களை விடாமற்செல்கின்ற ஊழிமுடிவாகிய காலத்தே அவை சேரச் சுழன்று திரியுமாறுபோலச் சுழன்று திரியும்படி தொழுவிடத்தே சேரப் || புகுதவிட்டார். எ - று.

பார்பயந்தன கடல்பயந்தனவென இரண்டிற்கும் பயந்தன என்னுந் தொழிற்பெயரைக் கூட்டுக. இனிப் பார்(வளர்முத்தம்)-(௪) நிலத்தில் வளர்ந்த

---

௧. இந்நூற்பக்கம் ௧௫௪: ௨-ஆம் குறிப்புப் பார்க்க.

௨. "கொடிமிட ஞுஞ்சிலான் முர்போன் மராத்து, நெடுமிசைச் சூழுமயிலாலுஞ் சீர" கலி. ௩௬: ௧ - ௨.

௩. குரால்நிறம் - கபிலநிறம்; ."குராலான் படுதுய ரிராவிற்கண்ட, வுயர்திணை யூமன் போலத், துயர்பொறுக் கல்லேன்" குறுந். ௨௨௪.

௪. முன்பொருகாலத்துப் பாண்டியனவையிற் பொருளீட்டுதற்குச்சிறந்த வழியாதென்று கேள்வி வந்தது. அப்போது ஒரு வணிகன் வாணிகஞ் செய்தலென்றும், ஒரு வேளாளன் பயிர்செய்தலென்றும் கூறினர். அரசன் அவ்விருவருக்கும் சிறிது பொருளுதவி இதனைக்கொண்டு நீங்கள் கூறியவழியால் பெரும்பொருளாக்குகவென்று விடுத்துச் சில யாண்டு கழித்துத் தன் றாதனை நோக்கி அவர் நிலையை வினவினன்.

(பிரதிபேதம்) * பெயரையுமுடைய, † சினத்தையுமுடைய வேற்றையும், ‡ காலதுவலி, || புகுதவிட்டார். எ-று: பயந்தனகடல்பயந்தன.

முத்தென்றுமாம். உடன்*புகுத்தனரென்க.(௧)முருகன் தனக்கு உரித்தல்லாத வெண்டுகில் உடுத்தாற்போலக் கால் வெளுத்த எருது. முன் இறைவன் கையதாய் ஊழிமுடிவின்கண் அவன் ஏவலால் உயிர்த்திறமேற் றிரியுங் கணிச்சி. (௨)காலன், †கூற்றுவனேவலாளன்.

---

அத்தூதர் வணிகன் வாணிகத்தாற் பெருஞ்செல்வம் ஈட்டியுளானென்றும் வேளாளன் செழிப்பாக ஒரு கருப்பந்தோட்டம் பயிர்செய்திருக்கிறானென்றும் சொன்னார்கள். அரசன் அதனைக்கேட்டு அவர் நிலையை நேரே அறியக் கருதியதனால் அவ்விருவரும் உறையும் ஊரிலுள்ள கொற்றவையின் திருவிழாவிற்குச் சென்றிருந்தபொழுது முதலில் வணிகனையழைப்பித்து வினவ அவன் தனக்குக் கொடுத்த பொருளைப் பதின்மடங்கு பெருக்கியிருப்பதாகச் சொன்னான். பின்பு அரசன் வேளாளனை யழைப்பித்து வினவ, அவன் அங்கிருந்தே தன் கருப்பந்தோட்டத்தைக் காட்டி இது என் பொருளீட்டம் என்றனன். அரசன் இது செழித்த தோட்டமேயாயினும் வணிகனீட்டிய பொருளிற் பத்திலொரு பங்கிற்கேனும் இணையாமோவென வேளாளன் அவன் பொருள் இதன்விலையிற்பத்திலொருபங்கிற்கும்இணையாகாதென்றான். அரசன் அதனைக்கேட்டு வேளாளனை இகழ்ந்துரைக்க, அவன் தன் தோட்டத்திலிருந்து ஒரு கரும்பைக் கொணர்ந்து அரசன் முன்னிலையில் அடித்து முறித்தனன். அதிலிருந்து முத்துக்கள் தெறித்தன. அரசன் அம்முத்துக்களை நோக்கி ஒவ்வொன்றும் மிக்க விலைபெறுமென்பதையறிந்து மகிழ்ந்து அவ்வேளாளனுக்கு முத்து என்றும் அக்கரும்படித்தவிடத்திற்கு முத்தடித்த களமென்றும், அங்குள்ள அம்பிகைக்கு முத்துநாச்சியம்மனென்றும் அந்நாட்டுக்கு முத்துநாடென்றும் பெயர் புனைந்தனன் என்ப. இச்செவி வழிநிலைச் செய்தி இங்கே கருதத்தக்கது.

௧. "உடையு மொலியலுஞ் செய்யை" என்பதனால், (பரி. ௧௧: ௬௭) முருகனுக்கு வெண்டுகில் உரித்தன்றென்றார்.

௨. (அ) "ஆல மென்ன வனலென்ன வந்தகன், ஞால மெல்லா நடுங்கக் கொதித்திடும், வேலை வெங்கனலென்ன வெகுண்டுவெங், காலனன்னவற் கின்ன கழறினன்" (ஆ) "என்னை யேவுதி யென்னி லிராவணன், றன்னை நானுயி ருண்பன்" இராமா. திக்குவிசய. ௭௨ - ௭௩. (இ) "அந்தக னத்துணை யமைச்ச னாகிய, வெந்திறற்காலனை விளித்துக் காசியி, லந்தண னொருமக னவன தாவியைத், தந்திடு கென்றலுந் தரணி யெய்தினன்" (ஈ) "போன காலனு மறலியை வணங்கியே புகுந்த, பான்மையாவையு முரைத்தலும்" கந்த. மார்க்கண்டேய. ௨௧௬, ௨௨௬. (உ) "கடையுகத்திடியிற்பாய கடற்படை வடக்குவாயிற்,

(பிரதிபேதம்) * புகுத்தினரென்க. † கூற்றுவனேவலாள். அவ்வழி,

௨௩ அவ்வழி

எ - து: அங்ஙனம் அவர் புகுத விட்ட இடத்து. எ - று.

(௧)காரெதிர் கலியொலி கடியிடி (௨)யுருமி னியங்கறங்க
(௩)வூர்பெழு கிளர்புளர் புயன்மங்குலி னறைபொங்க
நேரிதழ் நிரைநிரை நெறிவெறிக் கோதைய ரணிநிற்பச்
சீர்கெழு சிலைநிலைச் செயிரிகன் மிகுதியிற் சினப்பொதுவர்
தூர்பெழு துதைபுதை துகள்விசும் புறவெய்த
வார்புடன் *பாய்ந்தா ரகத்து

எ - து: 'கார்காலத்துத் தம்மில் எதிர்ந்த கலிப்பினையுடைய உருமினது கடிய இடியொலிபோல வாச்சியங்கள் ஒலியாநிற்கப் பரந்து உயர்ந்து எழுகின்ற அசைதலையுடையமேகம்போலத் திசைகளிலே புகைமூச்செழாநிற்கப் புறவிதழ் ஒடிந்த மணத்தையுடைய ஒத்தவிதழாற் கட்டின மாலையையுடைய மகளிர் நிரைநிரையாக அணியாநிற்கக் குற்றத்தைச் செய்த மாறுபாட்டின் மிகுதியாலே தலைமைபொருந்தினசிலைக்கின்றநிலைமையினையுடைய சினத்தையுடைய பொதுவர் எழுகின்ற நெருங்கின கண்கள்மறைத்தற்குக் காரணமான துகளாலே விசும்பு † தூர்ந்துமிகும்படி அத்துகள் சென்று சேரும்படியாக ஆர்த்து அத்தொழுவினுள்ளே சேரப் பாய்ந்தார்' எ - று.

மருப்பிற் கொண்டு மார்புறத் தழீஇயு
மெருத்திடை யடங்கியு ‡மிமிலிறப் புல்லியுந்
தோளிடைப் ||புகுதந்துந் துதைந்துபா டேற்று
நிரைபுமேற் சென்றுரை நீண்மருப் புறச்சாடிக்
கொளவிடங் கொளவிடா நிறுத்தன வேறு

---

புடைவிளித் தார்க்கு மோதைப் பொருமுழக் கியமன் கேளா, விடை தெரித்துரைமினென்ன விலங்கெயிற்றுலங்கொ டிண்டோண், மிடை வலி மிருத்துக்கால்திருவரை விடுப்பச் செல்வார்" வேதாரணிய. சோரச். ௧௭.

௧. கலிப்பாவில் ஐஞ்சீரடி முடுகி வந்ததற்கு, "காரெதிர்..........ரணி நிற்ப" என்பது மேற்கோள்; தொல். செய். சூ. ௬௬. பேர்.

௨. "இடியார் பணைதுவைப்ப" பு - வெ. உழிஞை. ௨௭.

௩. "படுமழை யாடும் வரையகம் போலுங், கொடிநறைசூழ்ந்த தொழூஉ" கலி. ௧௦௩: ௨௦ - ௨௧.

(பிரதிபேதம்) * பாய்ந்தனரகத்து. † தூர்ந்துபோம்படியத்துகள், ‡ இமிலிற்புல்லியும், || புகுந்தங்கைந்து.

௩௫ கொள்வாரைக் கொள்வாரைக் (௪) *கோட்டுவாய்ச் சாக்குத்திக்
கொள்வார்ப் பெறுஅக் குரூஉச்சேகில் காணிகா
(௧)செயிரிற் குறைநாளாற் பின்சென்று சாடி
யுயிருண்ணுங் கூற்றமும் போன்ம்

ஏ - து: அங்ஙனம் பாய்ந்து கொம்பிடத்தே பிடித்துக்கொண்டும் மார்பிலே உறும்படி தழுவிக்கொண்டும் †கழுத்திடத்திலே அடங்கிக்கிடந்தும் குட்டேறு முறியும்படி தழுவியும் தோளுக்குநடுவே கழுத்தைப் புகுதவிட்டுப் பிடித்தும் நெருங்கிக் கொம்புகள் தம்மேலேபடுதலை எற்றுக்கொண்டும் நிரைத்துத் தம்மேலே சென்ற ஆயரைப் பின்னர்க் கீழேவீழ்த்து நீண்ட மருப்புத் தைக்கும்படி குத்தி அவர்கள் தழுவுகின்ற கழுத்திடத்தைத் தழுவக்கொடாதே ஏறுகள் அவரை நீக்கி நிறுத்தின; அங்ஙனம் நிறுத்தினபின்பும் சென்று தழுவுவாரைத் தழுவுவாரைக் கோட்டிடத்தே சாம்படி குத்திப் பின்பு சென்று

க. "சாப்புல்லற் பாற்று" என்பதற்கு, 'சாம் வண்ணம் பொருந்தற் பான்மை யுடைத்து' என்று பொருள்கூறி, 'சாவவென்பதனிறுதிநிலை விகாரத்தாற் றொக்கது' என இலக்கணமெழுதி, 'கோட்டின்வாய்ச் சாக்குத்தி' என்புழிப்போல வென இதனை மேற்கோளுங் காட்டினர் பரிமேல்; குறள். ௮௨௧. இந்நூற்பக்கம் ௬௨௩: உ-ஆம் குறிப்புப்பார்க்க.

உ. (அ) "காலனுங் காலம் பார்க்கும்" புறம். ௪௧: ௧. (ஆ) "எண்ணி யுயிர் கொள்வான் வேண்டித் திரியினு, முண்ணுந் துணைக்காக்குங் கூற்று" பழ. ௮௧. (இ) "ஞாலத் தின்னுயிர் வாழ்வோர் நாப்பட், காலம் பார்க்குங் காலன் போல" பெருங். (௧) ௩௭: ௨0௪-௨0௫. (ஈ) "சாற்று நாளற்ற தெண்ணித் தருமம்பார்த், தேற்றும் விண்ணெனன்ப தன்றி யிவளைப்போ, ஞற்றங் கேட்டலுந் தின்ன நயப்பதோர், கூற்றுண்டோ" கம்ப. தாடகை. ௬௪. (உ) "நோற்றநோன் புடைய வாழ் நாள் வரமினை நுனித்த வெல்லாம், கூற்றினுக் கன்றே வீரன் சரத்திற்குங் குறித்ததுண்டோ" கம்ப. நிந்தனைப். ௬௩. (ஊ) "அடுதலோம்பிய செய்கைய னென்பதா லவனைக், கொடிய னென்பரா லறிவிலார் செய்வினை குறித்து, முடிவி லாருயி ரெவற்றிற்கு முறை புரிந் திடலா, னடுவ னென்கின்ற தவன்பெய ருலகெலா நவிலும்" (எ) "கொல்வன் னெனக் காலந்தெரி கூற்றுமென நின்றேன்" கந்த. மார்க்கண்டேய. ௨௨௨. இரண்டாநாட் சூரபன்மன். ௨௧௩. (ஏ) "நாள் வரைக்கு நமனொத்த வாளியார்" கழுக்குன்ற. பசுவராக. ௮. (ஐ) "மாயு நாளுற நடுவ ணோர்ந்தே,யாட்படுந்தூதர் நீர்போ யாங்கவற் கொணர்மி னென்ன" வேதாரணிய. சோரச். ௧௩. (ஒ) "நாள்வரை யறையே நோக்கு நடுவனூர் தூத ரேய்ப்ப" திருவானைக்கா. திருநாட்டுச். ௮௩.

(பிரதிபேதம்) *கோட்டின்வாய்ச். † கழுத்திலே.

தழுவுவாரைப் பெறுமல் நின்ற திறத்தையுடைய சிவந்த ஏறு உயிர்குறை இன்றநாளிடத்தே அவர்பின்னேசென்று குற்றத்தைச்செய்து துகைத்து உயிரையுண்ணுங் கூற்றுவனையும்போலும்; இதனைப்பாராயென்றான். எ - று.

௩௯ பாடேற் றவரைப் படக்குத்திச் செங்காரிக்
கோடெழுந் தாடுங் கணமணி காணிகா
*நகைசா லவிழ்பத நோக்கி நறவின்
முகைசூழுந் தும்பியும் போன்ம்

எ - து: சிவந்த கரிய ஏற்றினுடையகொம்புகள் †படுதலை மார்பிலே ஏற்றவர்களைக் கொம்புகளாலே படும்படி குத்தி மேனோக்குதலாலே வீழ்ந்த குருதியால் நனைந்து அசையும் பலவாகத் திரண்ட திரட்சியையுடைய சிறிய மணிகள் ஒளியமைந்த நறும்பூவினது முகையவிழுஞ் செவ்வியைநோக்கி அதனைச் சூழ்ந்து திரியும் தும்பியையும்போலும்; அதனைப்பாராயென்றான். எ - று.

"நறுவிதழ் கண்டன்ன ‡செவ்விரற் கேற்ப" (௧) என உவமைகூறலின் நறும்பூவைஈண்டுமணிக்கு (௨)உவமைகூறவே சிறியமணிகள்கோத்துக்கட்டினமையும் கோடெழுந்தென்றதனால் அக்கோடு எழுந்தகாலத்து வீழ்ந்த குருதியால் அவை சிவந்தமையும் பெற்றாம்.

௪௩ இடைப்பாய்ந் தெருத்தத்துக் கொண்டானோ டெய்தி
மிடைப்பாயும் வெள்ளேறு கண்டைகா
(௩)வாள்பொரு வானத் தரவின்வாய்க் கோட்பட்டுப்
போதரும் பான்மதியும் போன்ம்

---

௧. கலி. அ௪: ௨௨.

௨. நறும்பூவை ஏற்றின் கொம்புக்கும் தும்பியை அக்கொம்பிற் கட்டிய மணிக்கும் உவமையாகக் கொள்வது பொருத்த மென்று தோற்று கிறது. "அவ்வளை வெரிநி னரக்கீர்த் தன்ன, செவ்வரி யிதழ சேணாறு நறவி, னறுந்தா தாடிய தும்பி பசுங்கேழ்ப், பொன்னுரை கல்லி னன்னிறம் பெறூஉம், வளமலை" (நற். ௨௫)என்பதனால்நறும்பூ, செவ்வரியையும் தும்பிமொய்த்தலையுமுடைய தென்பது விளங்கும்; "நளிர் கொடியன நறுவிரையக நறுமலரன நறவம்" (சூளா. தூது. ௪.) என வருதலால் இதன் முதல் ஒருகொடி யென்று தெரிகிறது. மயிலைநாதரும் ஒருகொடியென்றே கூறினர். இதனை ஓடையென்பது போல ஒரு மரத்துக்கும் ஒருகொடிக்கும் பெயரென்பாரு முளர்.

௩. "வாள்போழ் வானத்து வயங்குகதிர் சிதறி" நாற். ௬. ௧௪௭. மேற்.

(பிரதிபேதம்) * தகைசால், † படுத்தலை மார்பிலே, ‡ மெல்விரற்கேற்ப,

எ-து: நடுவே பாய்ந்தெய்திக் கழுத்திடத்தே தழுவிக்கொண்டு கிடந்தவனோடே பரணின்மேலே தாவிப்பாயும் வெள்ளிய ஏறு பாம்பின்வாயாற் சிறிதிடம் விழுங்கப்பட்டு அப்பாம்புடனே ஒளியைத்தருகின்ற விசும்பிலே போதலைச்செய்கின்ற, பால்போலும் மதியையும்போலும்; இதனைக்காணுயென்றாள்' எ - று.

(௧)*இகா முன்னிலையசை. அது காவெனத் திரிந்தது.

௪௭ ஆங்க, ஏறும் பொதுவரு மாறுற்று †மாறு
விருபெரு வேந்தரு மிகலிக்கண் ணுற்ற
பொருகளம் போலுந் தொழூஉ

எ - து: அங்ஙனே ஏறுகளும் இடையரும் தம்மின் மாறுபடுகையினாலே அத்தொழு இருவராகிய பெரியவேந்தர் மாறுபட்டு எதிர்ப்பட்ட போர்மாறாத பொருகளத்தையொக்கும் என்றாள். எ - று.

இத்துணையும், தோழி தலைவிக்குக்காட்டிக் ‡கூறியது.

௫0 வெல்புக ழுயர்நிலைத் தொல்லியற் றுதைபுதை துளங்கிமி
னல்லேறு கொண்ட பொதுவன் முகநோக்கிப்
பாடில வாயமகள் கண்

எ - து: நெருங்கின கழுத்தையெல்லாம் மறைத்தலையுடைய அசைகின்ற குட்டேற்றினையுடைய || நல்ல ஏற்றைத்தழுவின, வெல்கின்ற புகழ் உயர்கின்ற நிலைமையையுடைய, பழைதாகிய குலத்தியல்பினையுடைய, பொதுவன் முகத்தை நோக்கி ஆய்ச்சாதியிற்பிறந்த மகளுடைய கண் இமைத்தலை ×யிலவாயிருந்தன. எ - று.

இது, தோழி தன் னெஞ்சோடே அவள் விரும்பக் கூறியது.

---

௧. "நில்லிகா வென்பாள்போ னெய்தற் றொடுத்தாளே, மல்லிகா மாலை வளாய்" என்புழி, நில்லிகா வென்பாள் போல் என்பதற்கு நில்லென் பாள் போல் என்று பொருள் கூறி, 'இகவென்னும் அசை இகாவெனவீறு திரிந்தது' என்று (பரிபாடல். ௧௧: ௧0௪-௧0௫.) பரிமேலழகரும் காணிகா வென்பதற்குக் காண்பாயாக வென்று பொருள்கூறி, 'இகவென்னும் முன்னிலையசை இகாவென ஈறு திரிந்தது' என்று (சிலப். ௧௮: ௪௬) அரும்பதவுரைகாரரும் அடியார்க்கு நல்லாரும் எழுதியிருப்பதை நோக்க இங்கும் 'இக, முன்னிலையசை; அது இகாவெனத் திரிந்தது' என்று இருக்கவேண்டுமென்று தோற்றுகிறது.

(பிரதிபேதம்) * இகமுன்னிலையசை. † மாறுவிருபெரு, ‡கூறினாள் வெல்புகழ். ||வல்லேற்றை, × இல்லவாயிருந்தனவெனத் தோழி தன்னுள்ளேயவள்விரும்பக்கூறினாள், கூறுஞ்தலாய்.

ருக *நறுநுதா லென்கொ(க)லைங் கூந்த லுளரச்
சிறுமுல்லை நாறிய தற்குக் †குறுமறுகி
யொல்லா துடன்றெமர் செய்தா ரவன்கொண்ட
கொல்லேறு போலுங் கதம்

எ-து: நறிய நுதலினையுடையாய்! ஐவகைப்பட்ட கூந்தலை ஆற்ற அது (உ)வெண்ணெயின் நாற்றம் நீங்கிச் சிறிய முல்லைப்பூவின் நாற்றம் மேவி மிக நாறியதற்கு ‡எம்முடைய சுற்றத்தார் பொருந்தாதே ||அண்ணிதாக மனஞ் சுழன்று மாறுபட்டு அவன் தழுவின கொல்லுகின்ற ஏறுபோலுங் கோபத் தினைச்செய்தார்; அன்று அவர் இங்ஙனம் ÷கோபித்தது என்னபயனையுடைத் தாயிற்றென்றாள். எ - று.

இது தலைவியைநோக்கிக் கூறியது.

ருஎ (ங)நெட்டிருங் கூந்தலாய் கண்டை ✝யிஃதோர்சொல்;
கோட்டினத் தாயர் மகனொடியாம் ×பாட்டதற்
கெங்க ணைமரோ பொறுப்பர் பொறாதார்
தங்கண் பொடிவ தெவன்

எ - து: நெடிய கரிய கூந்தலையுடையாய்! இன்னும் யான்கூறுகின்ற ஈதொரு சொல்லையும் நெஞ்சால் ஆராய்ந்துபாராய்; கொம்பையுடைய வாகிய எருமையினத்தை யுடைய ஆயர்மகனோடே யாங் **கூடியதற்கு எம் முடைய சுற்றத்தாரோ இன்னும் பொறுப்பர்; அதுபொறாத அயலார் ††தம் முடைய கண்கள் எங்கண்களை நோக்கித் தீய்ந்துபோவது என்னபயனை ‡‡யுடைத்தென்றாள். எ - று.

கூக ஒண்ணுதால்
இன்ன வுவகை பிறிதியாதி (ச)யாயென்னைக்
(ரு)கண்ணுடைக் கோல வளைத்ததற் கென்னை

---

க. இந்நூற்பக்கம் ருஅகூ: க-ஆம் குறிப்புப் பார்க்க.

உ. பாலையும் வெண்ணெயையும் நெய்யையும் தந்தலையில் தடவிக் கொள் ளுதல் ஆய்ச்சாதியாருக்கு இயல்பு.

ங. "நெட்டிருங் கூந்தற் கடவுளர்" கலி. கூங: கூரு.

ச. "அன்னை, யலையு மலைபோயிற்று" ஐந்திணையெழு. ங.

ரு. (அ) "நுண்ணிய மென்பா ரலைக்குங்கோல் காணுங்கால், கண்ணல்ல தில்லைபிற" என்பதும், 'நுண்ணிய மென்றிருக்கு மமைச்சரை அரசர்

(பிரதிபேதம்) * நறுநுதலா யென்கொலைங் கூந்தலுளாயச். † குறுமறுகுபொல்லாது, ‡ நம் முடைய, || அண்ணிதாக அண்ணிதாக மனம், ÷ கோபித்தென்ன பயனை, ✝ இஃகுதோர், × பட்டதற்கெங்கண். ** கூடியவதற்கு, †† தம்முடைய தங்கண்கள், ‡‡ உடைத்தென்னத் தலைவியைநோக்கிக்கூறினாள், ஒண்ணுதால்.

மலரணி கண்ணிப் பொதுவனோ டெண்ணி
யலர்செய்து விட்டதிவ் வூர்

எ-து: அதுகேட்ட தலைவி, ஒள்ளிய நுதலினையுடையாய்! (க)யாய் தன் கண்களுடையவாகிய கோலை *யுடையளாய் என்னைவருத்தியதற்கு இவ்வூர் என்னை மலரணிந்த கண்ணியை யுடைய பொதுவனோடே கூட்டமென்றெண்ணி (உ)அலரையுண்டாக்கிவிட்டது; இத்தன்மைத்தாகியஉவகை நமக்கு வேறியாதுதானெனை மகிழ்ந்து கூறினாள். எ - று.

அலைக்குங்கோலின் காரியத்தைக் கண்கள் செய்தமைபற்றிக் கண்களுடையவாகிய கோலென்றாள்.

௬௬ ஒன்றிப் புகரினத் † தாயமகற் கொள்ளிழா
யின்றெவ னென்னை யெமர்கொடுப்ப தன்றவன்
மிக்குத்தன் மேற்சென்ற செங்காரிக் கோட்டிடைப்
புக்கக்காற் புக்கதென் னெஞ்சு

எ - து: அங்ஙனம் கூறியபின்னரும் ஒள்ளிய இழையினையுடையாய்! தன்மேல் மிக்குச்சென்ற சிவந்த கரிய ஏற்றினுடைய கோட்டிடையிலே இற்றைநாள் ‡அவன்செல்ல என்னெஞ்சும்உடன்சென்றது; இனிநஞ்சுற்றத்தாரெல்லாரும் பொருந்திப் புகரையுடைய பசுத்திரளையுடைய ஆய்ச்சாதியிற் பிறந்த மகனுக்கு என்னைக்கொடுப்பதாக அறுதியிட்ட அற்றைநாளிற் கொடுக்கின்றது என்னபயனை யுடைத்தென்று தலைவி மகிழ்ந்து கூறினாள். எ - று.

என (௩)

---

அலைக்குங்கோலாவது கண்ணெனவுரைத்துத் தன்வெகுளிநோக்கால் அவர் வெகுடற் குறிப்பறிக வென்பது கருத்தாக்கு வாருமுளர்' எனப் பரிமேலழகர் பிறர்கோட் கூறி யிருத்தலும் (குறள். எகo) (ஆ)"கொந்தார் மலர்க்குழல் வல்லிநம் மன்னை குரிசில்வந்த, செந்தா மரையடி கண்டனள் போலுமித் திண்சிலம்பில், வந்தா ரெவரென வந்தார் சிலரிலர் மற்றிங் கென்றே, னொந்தா ணெடிதுயிர்த் தாள்கொடி தாயென்னை நோக்கினளே" (அம்பிகாபதிகோவை. உ௩க) என்பதும் ஈண்டு அறிதற்பாலன.

க. யாய் - என் தாய். "யாயு ஞாயும் யாரா கியரோ" குறுந். ௪o.

உ. "களித்தொறுங் கள்ளுண்டல் வேட்டற்றாற் காமம், வெளிப்படுந்தோறு மினிது" குறள். ககசரு.

௩. எனவென்பது, இங்கே அசைநிலை.

(பிரதிபேதம்) * உடையாயாய் † ஆயர்மகற்கு. ‡ இவன்செல்ல.

எக (க)பாடிமிழ் பரப்பகத் தரவணை யசைஇய
வாடுகொ ணேமியாற் பரவுது நாடுகொண்
டின்னிசை முரசிற் (உ)பொருப்பன் *மன்னி
யமைவர லருவி யார்க்கு
மிமையத் தும்பரும் †விளங்குக வெனவே.

எ-து: அதுகேட்ட தோழி, யாம்(ங) இல்லறம்நிகழ்த்தி இனிதிருக்குமாறு காத்தற்குப் பிறநாடுகளைக்கொண்டு இனிய ஓசையையுடைத்தாகிய முரசினை யுடைய பாண்டியன் அமைந்து வருதலை யுடைய அருவி ஆரவாரிக்கும் இமயத்திற்கு வட ‡திசையிலேயும் மன்னி விளங்குகவென்று உட்கொண்டு முறிதலையுடைத்தாகிய முழங்குகின்ற கடலிடத்துப் பாம்பணையிலே பள்ளி கொண்ட வெற்றி கொண்ட சக்கரத்தினை யுடையோனை வாழ்த்துவே மென்றாள். எ - று.

இதனால், தலைவிக்குப் புணர்வாகிய உவகை பிறந்தது.

இது தரவும் தனிச்சொல்லும் ஐஞ்சீரடி பலவும் விராய் முடுகுவண்ணம் அடியிறந்தோடிய கொச்சகவெண்பாவும் கொச்சகமும் இரண்டு நெடுவெண் பாட்டும் "வெண்பாட் டீற்றடி முச்சீர்த்தாகும்" (ச)என்றதனான் இடையீற்று முச்சீரடிவந்த நெடுவெண்பாட்டும் ஐஞ்சீரடி பெற்ற குறுவெண்பாட்டும் ஐஞ் சீரடி முடுகியலோடு தொடர்ந்த கொச்சகவெண்பாவும் நெடுவெண்பாட்டும் ஓரடியானொன்றும் குறுவெண்பாட்டும் தனிச்சொல்லும் இரண்டு நெடுவெண் பாட்டும் தனிச்சொல்லும் சுரிதகமும் பெற்று வந்த கொச்சகம். (ரு)

(க0ரு.) கழுவொடு சுடுபடை சுருக்கிய தோற்கண்
ணிமிழிசை மண்டை யுறியொடு தூக்கி
யொழுகிய கொன்றைத் தீங்குழன் முரற்சியர்
வழூஉச்சொற் கோவலர் தத்த மினநிரை
பொழுதொடு தோன்றிய கார்நனை வியன்புலத்தார்;

---

க. முல்லை நிலத்துக்குத் திருமால் தெய்வ மென்பதற்கு "பாடிமிழ் பரப்பகத் தரவணை............பரவுதும்" என்பது மேற்கோள்; தொல். அகத். சூ. ரு. நச்.

உ. இந்நூற் பக்கம் கககு: க-ஆம் குறிப்புப் பார்க்க.

ங. "காவற்பொருட்டு அரசன் வாழ்க...........என யாய் இல்லறத்திற்கு வேண்டுவன விரும்பி ஒழுகியதல்லது பிறிது நினைத்திலள்" என்னும் (ஐங்குறுநூறு. க.) உரைப்பகுதி இங்கே நோக்கற்பாலது.

ச. தொல். செய். சூ. எஉ.

(பிரதிபேதம் * முன்னி, † விளங்குகெனவே, ‡ திசையிலே மின்னி.

௬ அவ்வழி,
நீறெடுப்பவை நிலஞ்சாடுபவை
மாறேற்றுச் சிலைப்பவை மண்டிப்பாய் பவையாய்த்
துளங்கிமி னல்லேற் றினம்பல களம்புகு
மள்ளர் வனப்பொத் தன;

௧௧ தாக்குபு தம்முட் பெயர்த்தொற்றி யெவ்வாயும்
வைவாய் மருப்பினன் மாறுது குத்தலின்
மெய்வார் குருதிய வேறெல்லாம் பெய்காலைக்
கொண்ட னிரையொத் தன;
அவ்வேற்றை;

௧௬ பிரிவுகொண் டிடைப்போக்கி யினத்தோடு புனத்தேற்றி
யிருதிறனு நீக்கும் பொதுவ
ருருகெழு மாநில மியற்றுவான்
விரிதிரை நீக்குவான் வியன்குறிப் பொத்தனர்;

௨௦ அவரைக், கழல வுழக்கி யெதிர்சென்று சாடி
யழல்வாய் மருப்பினாற் குத்தி யுழலை
மரத்தைப்போற் றொட்டன வேறு;

௨௩ தொட்டதம், புண்வார் குருதியாற் கைபிசைந்து மெய்திமிரித்
தங்கார் பொதுவர் கடலுட் பரதவ
ரம்பியூர்ந் தாங்கூர்ந்தா ரேறு;

௨௬ ஏறுதங், கோலஞ்செய் மருப்பினாற் றேண்டிய வரிக்குடர்
ஞாலக்கொண் டெழூஉம் பருந்தின் வாய்வழீஇ
யாலுங் கடம்பு மணிமார் விலங்கிட்ட
மாலைபோற் றூங்குஞ் சினை;
ஆங்கு;

௩௧ தம்புல வேறு பரத்தர வுய்த்தத
மன்புறு காதலர் கைபிணைந் தாய்ச்சிய
ரின்புற் றயர்வர் தழூஉ;

௩௪ முயங்கிப் பொதிவே முயங்கிப் பொதிவே
முலைவேதி னொற்றி முயங்கிப் பொதிவேங்
கொலையேறு சாடிய புண்ணையெங் கேளே;

௧௭ பல்லூழ் தயிர்கடையத் தாஅய புள்ளிமேற்
கொல்லேறு கொண்டான் குருதி மயக்குறப்
புல்லலெந் தோளிற் கணியோவெங் கேளே;

௨௦ ஆங்கு, போரேற் றருந்தலை யஞ்சலு மாய்ச்சியர்
காரிகைத் தோள்கா முறுதலு மிவ்விரண்டு
மோராங்குச் சேற லிலவோவெங் கேளே;

௨௫ கொல்லேறு கொண்டா னிவள்கேள்வ னென்றாரார்
சொல்லுஞ்சொற் கேளா வளைமாறி யாம்வருஞ்
செல்வமெங் கேள்வன் றருமோவெங் கேளே;

ஆங்க;

௨௭ அருந்தலை யேற்றெருடு காதலர்ப் பேணிச்
சுரும்பிமிர் கானநாம் பாடினம் பரவுது
மேற்றவர் புலங்கெடத் திறைகொண்டு
மாற்றாரைக் கடக்கவெம் மறங்கெழு கோவே.

இது தத்தம் இனம் தத்தம்புலத்துப் பிரிப்பான்புக்கவர்ஏறுகொண்ட வாறுகண்டு*ஆய்ச்சியர்தங்காதன்மிகுதியால்†தங்காதலரைக்கைபிணைந்து குரவையாடித் ‡தென்னன்வாழ்கெனக் கானம்பாடியது.

இதன் பொருள்.

(௧)கழுவொடு சுடுபடை சுருக்கிய தோற்கண்
ணிமிழிசை மண்டை யுறியொடு தூக்கி

௧. "கொன்றையந் தீங்குழல்............கேளாமோ தோழீ" (சிலப். ௧௭. 'கன்றுகுணிலா')என்னும்தாழிசைகளின்விசேடவுரையில்,"கொன்றை ஆம்பல் முல்லை என்பன சிலகருவி. இனி அவற்றைப் பண்ணென்று கூறுபவெனின் அங்ஙனம் கூறுவாரும் ஆம்பலும் முல்லையுமே பண்ணுதற்குப் பொருந்தக் கூறினல்லது கொன்றை என ஒருபண்இல்லையாதலா(...    .)னும் கலியுள் முல்லைத் திணையின்கண் ஆறும்பாட்டினுள், இப்பாட்டில் 'கழுவொடு...........வியன் புலத்தர்' எனக்கருவி கூறினமையானும் 'அன்றைப் பகற்கழிந் தாளின் றிராப்பகற், கன்றின் குரலுங் கறவை மணிகறங்கக், கொன்றைப் பழக்குழற் கோவலராம்பலு மொன்றல் சுரும்பு நரம்பென வார்ப்பவும்' என வளையாபதியுள்ளும் கருவி கூறிப் பண்கூறுதலானும் இவை ஒரு பொருண்மேல் மூன்றடுக்கிவந்த வொத்தாழிசையாகலானும் இரண்டு பண்ணும்

(பிரதிபேதம்) * ஆச்சியர், † தங்கிளைகாதலரை, ‡ தென்னவன்வாழ்கென.

யொழுகிய கொன்றைத் தீங்குழன் முரற்சியர்
*வழூஉச்சொற் கோவலர் தத்த மினநிரை
பொழுதொடு தோன்றிய கார்நனை வியன்†புலத்தார்

எ -து: பால் பற்றறச் சீவுதலைச்செய்த(க)கறவைக்கலங்கள் வைத்த உறியோடே தோற்பையிடத்தே கழுவோடேசூட்டுக்கோல்களையும்இட்டுச்சுருக்கிய பைகளையுந் தூக்கி நீளவளர்ந்த கொன்றைக்காயைத் திறந்து சமைத்த இனிய குழலில் உண்டான ஓசையராய் வழுவின சொல்லையுடைய ‡கோவலர் தம்முடைய தம்முடைய இனமாகிய பசுக்கள் கார்காலத்தோடே தோன்றின அப்பொழுது வரும் மழையாலே நனைந்த அகற்சியையுடைய நிலத்திடத்தாராயினர். எ - று.

பழிசை ||பாடமாயின், பழித்தலையுடையதென்க. பழித்தலையுடையது பழிசை. முரற்சியர் என்னும் எச்சம் உடையவென்னும் வினைக்குறிப்போடு +முடிக்தது. (உ) கழுவாவது கறத்தற்கரிய பசுக்களைக் கறத்தற்கு இரண்டு தலையுஞ் சீவி மாலையாகக்கட்டிக் கழுத்தில் இடுவது.

௬ அவ்வழி

(ங)நீறெடுப்பவை நிலஞ்சாடுபவை
மாறேற்றுச் சிலைப்பவை மண்டிப்பாய் பவையாய்த்

---

ஒன்று கருவியுமாகக் கூறின் செய்யுட்கும் பொருட்கும் வழூஉச் சேறலானும் அங்ஙனங்கூறாத லமையாதென்க" என்று அடியார்க்கு நல்லார் எழுதியிருப்பது ஈண்டு அறிதற்பாலது.

க. "திண்கா லுறியன் பானைய னகலன்" அகநா. உ௭௪: ௬.

உ. (அ)"நாகுசூ வீங்கிய சேதாத் தொகுத்துக், குளம்புங் கோடும் விளங்கு பொன் னுறீஇத், தளையுந் தாம்பு மளைகடை மத்துங், கழுவுங் கலனும் வழுவில பிறவும், பைம்பொனி னியன்றவை பாற்பட வகுத்துக், குன்றுக் கோடி கொடுத்தவப் போரும்" பெருங். (௧) ௩௬: ௬௭-௬௬.
(ஆ) "கழுவொடு பாகர் கலங்காமல் யாத்துத், தொழுவிடை யாயந் தொகுமின்" (தொல். புறத். சூ. ௩. நச். மேற்.) என்பவற்றில் இச்சொல் வருதல் காண்க.

௩. (அ) "அடியிட்டு நிலங் கிளைத்தண்டமெண் டிக்கும் போர்ப்பப், பொடியிட்டுயிர்த்துப் பொருகோட்டினிற் குத்திக் கோத்திட், டிடியிட் டதிர்கா ரெதிரேற்றெழுந் தாங்கு நோக்கிச், செடியிட்டிருகண் ணழல் சிந்த நடந்த தன்றே" திருவிளை. மாயப்பசுவை. ௧௭. (ஆ) "கானிலங்

(பிரதிபேதம்) * வழுச்சொல், † புலத்தர் எ-து: கழுவாவது............கழுத்திலிடுவது பால் பற்றறச், ‡ கோவர் தம்முடைய, || பாடமாயின் பழித்தலையுடையது பழிசையாம்.முரற்சியா ரென்னும், + முடிந்தது அவ்வழி.

துளங்கிமி னல்லேற் றினம்பல களம்புகு
மள்ளர் வனப்பொத் தன

எ - து: அவ்விடத்துத் துளங்குகின்ற குட்டேற்றினையுடைய நல்ல ஏற்றினங்கள் பலவும் முன்பு காலாலே வெட்டி நீற்றை எழுப்புமவை இப்பொழுது (க)மழைபெய்தமையிற் (உ) கோட்டுமண் கொள்ளுமவை ஒன்றோடொன்று மாறுபடுதலை மேற்கொண்டு முழங்குமவை மிக்குப்பாயுமவையாய்ப் போர்க்களத்தே *செல்லும் வீரர் அழகையொத்தன. எ - று.

கக தாக்குபு தம்முட் பெயர்த்தொற்றி யெவ்வாயும்
வைவாய் மருப்பினான் மாறுது குத்தலின்
மெய்வார் குருதிய வேறெல்லாம் பெய்காலைக்
கொண்ட னிரையொத் தன

எ - து: ஒன்றோடொன்று தாக்கி மீண்டு அடிப்பறித்துச்சேர்ந்து கூரிய இடத்தையுடைய கொம்பாலே மாறாமல் எவ்விடத்துங் குத்துகையினாலே மெய்யினின்றும் வடிகின்ற குருதியையுடைய †ஏறுகளெல்லாம் நாட்காலைப் பெய்யும் ‡மேகநிரையையொத்தன. எ - று.

நாட்காலைமேகம் சிவந்திருத்தலின், உவமையாயிற்று. பெய்யு மேகம் அதற்கு அடைகூறிற்று.

கரு அவ்வேற்றை
பிரிவுகொண் டிடைப்போக்கி யினத்தோடு புனத்தேற்றி
யிருதிறனு நீக்கும் பொதுவ

---

கீறி வான்மிசை யுயர்த்துக் கதிர்மணி மருப்பிடை நோக்கி, யானிள வேறு யடுசமர்க் கெழுந்தா னசனியே றென்னவோ ரவுணன்" பாக. (கo) ஸ்ரீ நாரதர். ௬.

க. "பெயல, கடுநீர் வரித்த செந்நில மருங்கின், விடுநெறி யீர்மணல் வாரணஞ் சிதறப், பாம்புறை புற்றத் தீர்ம்புறங் குத்தி, மண்ணுடைக் கோட்ட வண்ண னல்லேஎ, றுடனிலை வேட்கையின் மடநாகு தழீஇ, யூர்வயிற் பெயரும் பொழுதில்" அகம். கூசு: எ - கரு.

உ. (அ) "கோட்டுமண் கொண்ட மார்பம்" சீவக. உஉகூசு. (ஆ)"கோட்டு மண் கொள்ளா முலை" முத்........... (இ) "கோட்டுமண் கொண்ட குளிர்திங்கள்" நள. சுயம். கoஉ. (ஈ) "கோட்டுமண் கொண்டு" கூர்ம. ஆதவர்சிறப்பு. அ. (உ) கோட்டுமண் கொள்ளும் வேழம்" தணிகை. வீராட்ட. கூஉ.

(பிரதிபேதம்) * கொல்லும் வீர, † ஏறெல்லாம், ‡ மேகநிரையொத்தன.

ருருகெழு (௧)மாநில மியற்றுவான்
*விரிதிரை நீக்குவான் வியன்குறிப் பொத்தனர்

எ - து: † அவ்வேறுகள் போர்செய்யாமற் பிரிதலைத் தாம் உட்கொண்டு அவை இரண்டு கூறாக நீங்கும்படி நடுவே சிலஏறுகளைச்செலுத்தி விலக்கிப் பின்னர்ப் பசுத்திரளோடே மேயும்புலத்திலே ஏற்றித் தத்தம் இனங்களைப் பிரிக்கும் இடையர் பழையவடிவுகளெல்லாங்கெழுமும்படி பெரியநிலத்தைப் ‡படைத்தற்கு அகற்சியையுடைய கருத்தினையுடைய,(௨) அந்நிலத்தை மறைத்துக்கிடந்த கடலைப் போக்கும் நான்முகனையொத்தார். எ - று.

ஏற்றையென்றது ஏற்றிற்கு ஐகாரவீற்றதோர்பெயர்; "ஆற்றலொடு புணர்ந்த வாண்பாற் கெல்லா, மேற்றைக் கிளவி யுரித்தென மொழிப" (௩) என்றலின்.

அவரைக், (௪)கழல வுழக்கி யெதிர்சென்று சாடி
யழல்வாய் மருப்பினாற் குத்தி (௫)யுழலை
மரத்தைப்போற் றொட்டன வேறு

எ - து: அங்ஙனம் நீக்குகின்றவர்களை அவ்வேறுகள் ஓடும்படி மிதித்து ஓடாமல் நின்றவர்களை எதிர் சென்று அழலுகின்ற இடத்தையுடைய கொம்பாலே குத்திச் சாடி உழலைகோத்த மரத்தைப்போலத் துளைத்தன. எ - று.

---

௧. (அ) "மாறியுலகம் வருத்தநாள் வரம்பு கடந்து மண்முழுது, மேறி யொடுங்கு மெறிகடல்போ லெயின்மா நகர மெய்தினார்" (ஆ) "தேர் செலும் வேகத்து வேலைநீ, ரோங்கு நாளி னொதுங்கு முலகுபோற், றூங்க லாற்றகில் லார்தடு மாறித்தா, நீங்கினார்"

௨. "உரைசெய் நான்முக னுறங்குழிப் புவிகொள வொருங்கே, திரை செய் வான்கடல் சென்றெனச் சென்றது சேனை" கந்த. திக்கு. ௧௦.

௩. தொல். மரபி. சூ. ௬௧.

௪. "கோவலர், கழலக் காடுபோய்" சீவக. ௪௨௨.

௫. உழலைமரம், தொழுவமுதலியவற்றுள் மாடுகளைப் புகாமல் தடுப்பதற்கு அவற்றின் வழியில் இருபக்கத்தும் உழலையை (கழிகளை) இழுத்துப் போடும்படி துளைத்துநிறுத்தியிருக்கும் மரம்; இது கடப்புக்காலென வழங்கும். "கன்று தாம்பரிந், துழலை பாய்ந்துலா முன்றில்" என்பது சீவக. ௪௨௨.

(பிரதிபேதம்) * விரைதிரை, † ஏற்றையென்றது..............என்றலின் அவ்வேறுகள், ‡ படைத்தற்கு இந்நிலத்தை மறைத்துக்கிடந்த அகற்சியையுடைய கடலைப் போக்குங் கருத்தினையுடைய நான்முகனையொத்தார், அவரைக்.

உங தொட்டதம், புண்வார் குருதியாற் கைபிசைந்து மெய்திமிரித்
தங்கார் பொதுவர் கடலுட் பரதவ
(க)ரம்பியூர்ந் தாங்கூர்ந்தா ரேறு

எ - து: பொதுவர் அவ்வானேறு துளைத்த தம்முடைய புண்களினின்றுஞ் சோருகின்ற குருதி வழுக்குதலாலே மணலை அள்ளிக் கையைப் பிசைந்து *உடம்பையுந் (உ)திமிர்ந்து தாழ்க்க நில்லாராய்க் கடலுக்குள்ளே பரதவர் (ங)சிறிய தெப்பத்தை ஏறினாற்போல ஏற்றைத் தழுவினர். எ - று.

உசு ஏறுதங், கோலஞ்செய் மருப்பினாற் றோண்டிய வரிக்குடர்
ஞாலக்கொண் டெழூஉம் பருந்தின் †வாய்வழீஇ
யாலுங் கடம்பு மணிமார் விலங்கிட்ட
மாலைபோற் றூங்குஞ் சினை

எ - து: அவ்வேறுகள் தம்முடைய அழகுசெய்கின்ற கொம்பாலே தோண்டிய வரிகளையுடைய குடர்கள் நான்று விழும்படி எடுத்துக்கொண்டு உயர்ந்துபோம் பருந்தின் வாயினின்றுந் தப்பி ஆலமரத்தையுந் ‡கடம்பமரத்தையும் (ச)ஆண்டு உறையுந்தெய்வங்கட்கு ||மகிழ்ச்சியுண்டாகவேண்டி அணிதலைச்செய்தற்கு விலங்க இட்டுவைத்த மாலைகள்போலே கொம்புகளோடுந் +தூங்காநிற்கும். எ - று.

ஙo ஆங்கு
தம்புல வேறு பரத்தர வுய்த்தத
மன்புறு (ரு)காதலர் கைபிணைந் × தூய்ச்சிய
ரின்புற் றயர்வர் தழூஉ

---

க. "மறை யேற்றின் மேலிருந் தாடித் துறையம்பி, யூர்வான்போற் றோன்று மவன்" கலி. கoங: ங அ-ஙக.

உ. திமிர்தல் - பூசுதல்; "திமிரத் திமிரக் கனலாய சந்தன சீதளமே" என வருதல் காண்க. திமிருறச் செய்தலென்பாரு முளர்.

ங. அம்பியென்பது தெப்பத்துக்கும் நீரிற் செலுத்தும் எல்லாக் கருவிகளுக்கும் பெயரென்பவாயினும் ஓரேற்றுக்கு உவமையாய் வருதலிற் சிறியதெப்பமென்று பொருள்கூறினார். "தண்புன லாடுந் தடங்கோட் டெருமை, திண்பிணியம்பியிற் றோன்றூஉம்" என்பது ஐங்குறு. கஅ.

ச. இந்நூற்பக்கம் கூஉக: கூ, கூஉஉ: க-ஆம் குறிப்புக்கள் பார்க்க.

ரு. குரவை யென்பது: (அ) "குரவை யென்பது கூறுங் காலைச், செய்தோர் செய்த காமமும் விறலு, மெய்த வுரைக்கு மியல்பிற் றென்ப" (ஆ) "குரவை யென்ப தெழுவர் மங்கையர், செந்நிலை மண்டலக்

(பிரதிபேதம்) * உடம்புந்திமிர்ந்து, † வாய்வழியானும், ‡ கடம்பமரத், || மகிட்சியுண்டாக வேண்டியதணிதலைச்செய்தற்கு, + தூங்காநிற்கும். தம்புல. × ஆச்சியர்.

எ - து: அப்பொழுது ஆய்ச்சியர் தாம் மேயும் புலத்திலே ஏறு பரத்தலைச் செய்யும்படி செலுத்தின தம்முடைய அன்புமிக்க காதலருடைய கையைக் கோத்து இன்பமுற்றுக் குரவையாடுவர். எ - று.

௩௪ முயங்கிப் பொதிவே முயங்கிப் பொதிவே
(௧)முலைவேதி னொற்றி முயங்கிப் பொதிவேங்
கொலையேறு சாடிய புண்ணையெங் கேளே

எ - து: எம்முடைய தோழீ! கொலைத்தொழிலையுடைய ஏறுகள் சாடின புண்களைத் தழுவிக்கொண்டு பொதிந்துவிடக் கடவேம்; எங்ஙனந் தழுவுவதென்று கேட்பாயாயின் முலையின் வெம்மையாலே ஆறும்படி ஒற்றித்தழுவிக் கொண்டு பொதிந்துவிடக் கடவேம். எ - று.

---

கடகக் கைகோத், தந்நிலைக் கொட்பநின் றுட லாகும்" என்னும் (சிலப். பதி. ௭௭. உரைமேற்.) சூத்திரங்களால் தலைவனது காமமும் வென்றியும் தோன்றக்கூறி எழுமங்கையர் கைகோத்துச் சுழன்று ஆடுவதென்றே அறியப்படுமாயினும், (சிலப். ௩: ௧௨.) "இருவகைக் கூத்தின்" என்பதன் விளக்க வுரையால், குரவையென்றது: காமமும் வென்றியும் பொருளாகக் குரவைச்செய்யுள் பாட்டாக எழுவரேனும் எண்மரேனும் ஒன்பதின்மரேனும் கைபிணைந்தாடுவது என்றுஅறியப் படுகின்றது. இவையும் (இ) "மாயவனுடன் றம்முனாடிய, வாலசரிதை நாடகங்களில், வேனெடுங்கட் பிஞ்ஞையோடாடிய குரவை யாடுதும்" (ஈ) "மாயவன்றன் முன்னினொடும் வரிவளைக்கைப் பின்னை யொடுங், கோவலர்தஞ் சிறுமியர்கள் குழற்கோதை புறஞ்சோர, வாய்வளைச்சீர்க் கடிபெயர்த்திட் டசோதையார் தொழுதேத்தத், தாதெருமன் றத்தாடுங் குரவையோ தகவுடைத்தே" சிலப். ௧௭. என வருபவைகளும் (உ) "இடவல" என்பதற்கு, 'ஆய்ச்சியரோடு குரவைகோத்தலால் அவர்க்கு இடமும் வலமும் ஆயினோய்' பரி. ௩: ௮௩ என்று எழுதியிருக்கும் உரையும் (ஊ) "நளிதலென்பதற்கு தன்னைச் சேவிக்கு மகளிரொடு குரவையாடிச் செறிதல்" (பதிற். ருஉ: ௧௬) என்று எழுதியிருக்கும் உரையும் (எ) "பரதவர், வெப்புடைய மட்டுண்டு, தண்குரவைச் சீர் தூங்குந்து" (ஏ) "குறவர் மாக்கள், வாங்கமைப் பழுனிய தேறன் மகிழ்ந்து, வேங்கை முன்றிற் குரவை யயரும்" புறம். ௨௪: ௪ - ௬, ௧௨௯: ௧ - ௩, என வருபவைகளும் இங்கே அறிதற்பாலன.

௧. (அ) "புண்களைத் தடமுலை வேதுகொண் டொற்றியும்" கலிங்க. கடை. ௧௩.(ஆ) "புண்வருத்தந் தன்னைநோக்கிக், கொங்கையையொற் றிடங்கொடுத்து" தனிப்பாடல். என்பவையும் (இ) "கொம்மை வரி முலை வெம்மை வேதுறீஇ" சிலப். ௨௮: ௧௬. (ஈ) "கொம்மை வரு முலை வெம்மையிற் றடைஇ" நெடுநல். ௬௬. என்பவையும் இங்கே அறிதற்பாலன.

௩௭ பல்லூழ் (க)தயிர்கடையத் தாஅய *புள்ளிமேற்
கொல்லேறு கொண்டான் குருதி மயக்குறப்
புல்லலெந் தோளிற் கணியோவெங் கேளே

எ - து: எம்முடைய தோழீ! பலமுறையாகத் தயிரைக் கடைகையி னாலே பாய்ந்த புள்ளிகளின்மேலே கொல்லுகின்ற ஏற்றைத் தழுவினவ னுடைய குருதி மயக்கமுறும்படி தழுவுதல் எம்முடைய தோளிற்கு அழகு மாத்திரையோ? அதிலுஞ்சிறந்ததொன்றன்றோ. எ - று.

௪௦ ஆங்கு, போரேற் றருந்தலை யஞ்சலு மாய்ச்சியர்
காரிகைத் தோள்கா முறுதலு மிவ்விரண்டு
மோராங்குச் சேற லிலவோவெங் கேளே

எ - து: எம்முடைய தோழீ! ஆயர் பொருகின்ற ஏற்றினது சேருதற் கரிய†தலையைஅஞ்சுதலும் ஆய்ச்சியர்ஏறுதழுவாதவருடைய காரிகைத்தோளை விரும்புதலுமாகிய இவ்விரண்டு நிலையும் இக்குடிப்பிறந்தவர்களுக்கு ஒன்றாகச் ‡செல்லுதல் ஈண்டு இல்லையோ. எ - று.

காரிகைத்தோளென்றது, இகழ்ச்சி; வடுப்படாததோளாதலின்.

௪௩ கொல்லேறு கொண்டா னிவள்கேள்வ னென்றூரார்
சொல்லுஞ்சொற் கேளா வளைமாறி யாம்வருஞ்
செல்வமெங் கேள்வன் றருமோவெங் கேளே

எ - து: எம்முடைய தோழீ! இவளுடைய கணவன் கொல்லுகின்ற ஏற்றைத் தழுவினனென்று ||ஊரார் புகழ்ந்துசொல்லுகின்ற அச்சொல்லைக் கேட்டு மோரைவிற்று யாம் வருஞ்செல்வத்தை எங்கணவன் தருமோ. எ-று.

ஓகாரம், தெரிநிலை. என்றது, அவன் புறத்துப்×போய் இப்புகழ்கேட்க ஈன்னைவிடானென அவன் தன்மேலுள்ள விருப்பங் கூறிற்று. இவை குரவைப்பாட்டு.

௪௬ ஆங்க
(௨)அருந்தலை யேற்றொடு காதலர்ப் பேணிச்
சுரும்பிமிர் கானநாம் பாடினம் பரவுது
மேற்றவர் புலங்கெடத் திறைகொண்டு
மாற்றாரைக் கடக்கவெம் மறங்கெழு கோவே

க. "தயிர்ப்புளி, மொய்த்த தோணலார்" சீவக. ௪௨௩.

௨. அருந்தலை யென்பதற்கு இங்கும் இச்செய்யுள் ௪௦-ஆம்அடியிற்குறித்த பொருளே கொள்க.

(பிரதிபேதம்) * புள்ளியின்மேற், † தலையஞ்சுதலும், ‡ சொல்லுதலினடுவில்லையோ, ||ஊர் புகழ்ந்து, × போயப்புகழ்.

எ - து: எற்றையும் நங்காதலரையும் பாதுகாத்துச் சுரும்பினம் ஒலிக்கின்ற கானத்தை நாம் பாடினமாய்த் திருமாலைப் பரவுவேம்; அப்பயனாலே எம்முடைய மறம்பொருந்திய பாண்டியன் பகைவர்நிலமென்னும் பெயர் கெட்டுத் தன்னிலமென்னும் பெயர்பெறும்படி அவர்நாட்டைத் திறைகொண்டு பகைவரை வெல்வானாக என்றாள். எ - று.

இந்நிலப்பண்பிருந்தவா*றென்னென்று கண்டோர் கூறிற்றாகக்கொள்க.

இது, கண்டார்க்குப் புதுமையாகிய மருட்கை பிறந்தது.

இது முன் ஒருகொச்சகமும் தனிச்சொல்லும் முட்டடியின்றிக் குறைவுசீர்த்தாகிய சொற்சீரடிபெற்ற கொச்சகவெண்பாவும் நெடுவெண்பாட்டும் தனிச்சொல்லும் சொற்சீரடிவந்த கொச்சகமும் ஐஞ்சீரடுக்கிய குறுவெண்பாட்டிரண்டும் ஐஞ்சீரடுக்கிய நெடுவெண்பாட்டும் தனிச்சொல்லும் குறுவெண்பாட்டும் நான்கு தாழிசையும் தனிச்சொல்லும் சுரிதகமும் பெற்ற கொச்சகம்.

(௧௦௭.) எல்லா விஃதொன்று கூறு குறும்பிவர்
புல்லினத் தார்க்குங் குடஞ்சுட் டவர்க்குமெங்
கொல்லேறு கோடல் குறையெனக் கோவினத்தார்
பல்லேறு பெய்தார் தொழூஉ;

௫ தொழுவத்து;
சில்லைச், செவிமறைக் கொண்டவன் சென்னிக் குவிமுல்லைக்
கோட்டங்காழ் கோட்டி னெடுத்துக்கொண் டாட்டிய
வேழை யிரும்புகர் பொங்கவப் பூவந்தென்
கூழையுள் வீழ்ந்தன்று மன்;

௧௦ அதனைக், கெடுத்தது பெற்றார்போற் கொண்டியான் முடித்தத
கேட்டனை யென்பவோ யாய்;

௧௨ கேட்டா லெவன்செய்ய வேண்டுமோ மற்றிகா
வவன்கண்ணி யன்றோ வது;

௧௪ பெய்போ தறியாத்தன் கூழையு ளேதிலான்
கைபுனை கண்ணி முடித்தாளென் றியாய்கேட்பிற்
செய்வதி லாகுமோ மற்று;
எல்லாத் தவறு மறும்;
ஒஒ அஃதறு மாறு;

(பிரதிபேதம்) * என்றுகண்டோர்கூற்றாகக்கொள்க.

௨௩ ஆயர் மகனுயி னுயமக ணீயாயி
னின்வெய்ய னுயி னவன்வெய்யை நீயாயி
னின்னைநோ தக்கதோ வில்லைம னின்னெஞ்ச
மன்னைநெஞ் சாகப் பெறின்;

அன்னையோ;

௨௪ ஆயர் மகனையுங் காதலை கைம்மிக
ஞாயையு மஞ்சுதி யாயி னறிதரோ
நீயுற்ற நோய்க்கு மருந்து;

௨௫ மருந்தின்றியா னுற்ற துயராயி னெல்லா
வருந்துவே னல்லனே யான்;

௨௬ வருந்தாதி;
மண்ணிமா சற்றநின் கூழையு ளேறவன்
கண்ணிதந் திட்ட தெனக்கேட்டுத் திண்ணிதாத்
தெய்வமால் காட்டிற் றிவட்கென நின்னையப்
பொய்யில் பொதுவற் கடைசூழ்ந்தார் தந்தையோ
டையன்மா ரெல்லா மொருங்கு.

இது தலைவி தோழிக்குஅறத்தோடுநிற்பத் தமர் *வரைவுடன்பட்டமை அவட்கு அவள் சொல்லியது.

இதன் பொருள்.

எல்லா விலைதொன்று †கூறு குறும்பிவர்
(௧)புல்லினத் தார்க்குங் (௨)குடஞ்சுட் டவர்க்குமெங்
(௩)கொல்லேறு கோடல் (௪)குறையெனக் கோவினத்தார்
பல்லேறு பெய்தார் தொழூஉ

---

௧. (அ) "புல்லினத்தாயனை நீ யாயிற் குடஞ்சுட்டு, நல்லினத் தாயரெமர்" கலி. ௧௧௩: அ - ௯. (ஆ) "புல்லினத்தாய மகன்" கலி. ௧௧௫: ௪.

௨. (அ) "நீரார் நிழல குடஞ்சுட் டினத்துள்ளும்" கலி. ௧0௯: ௩. (ஆ) "கடுஞ் சுரையா னன்கு, குடஞ்சுட் டினத்தாற் கொடு" பு - வே. வெட்சிப். ௧அ.

௩. "கொல்லேறு கொண்டான்" கலி. ௧0௯: ௪௩.

௪. குறை யென்பதற்கு இன்றியமையாததென்று சேனாவரையரும் பரிமேலழகரும் முடிக்கப்படும் பொருளென்று புறநானூற்றுரையாசிரியரும் பொருள் கூறுவர்.

பிரதிபேதம்) * வரைவுடம்பட்டமை. † கூறுங்குறும்பு.

எ - து: ஏடா! குறும்பிடத்தே பாந்திருக்கின்ற ஆட்டிடையர்க்கும் இப்ப இன்னதனைக் குடம்பால் போதுமென்று சுட்டுதலையுடைய பசு விடையர்க் மாகக் கோவினத்தையுடைய நஞ்சுற்றத்தார் எம்முடைய கொல்லுகின் ஏற்றைத் தழுவுதலே காரியமென்று தொழுவிலே ஏறுகளைப்புகுதவிட்டார் எ - று.

௫ தொழுவத்துச்

சில்லைச், (௧)செவிமறைக் கொண்டவன் சென்னிக் குவிமுல்லைக்
(௨)கோட்டங்காழ் கோட்டி னெடுத்துக்கொண் டாட்டிய
வேழை யிரும்புகர் பொங்கவப் பூவந்தென்
கூழையுள் வீழ்ந்தன்று மன்

எ - து: அத்தொழுவிடத்துச் சிலுவைக்குணத்தையுடைய செவிமறை யாயிருக்கின்ற ஏற்றைத் தழுவினவனுடைய சென்னியிற் கிடந்த குவிந் (௩) முல்லைப் பூவாற் கட்டின வளைவினை யுடைய கண்ணியைக் கொம்பிலே எடுத்துக்கொண்டு அலைத்த ஏழையாகிய பெரிய புகரேறு துள்ளுகையினாலே அப்பூ வந்து என்மயிருக்குள்ளே மிகவும் வீழ்ந்தது. எ - று.

ஏழையென்றாள் களவொழுக்கம் *வெளிப்படுதல் இறவாமற் கோட்டாள் அலைத்தமைபற்றி.

௧0 அதனைக்,(௪)கெடுத்ததுபெற்றார்போற் கொண்டியான்முடித்தது
கேட்டன ளென்பவோ யாய்

எ - து: அக்கண்ணியை, கெடுத்ததொன்று மீண்டு பெற்றாரைப்போல எடுத்துக்கொண்டு யான்முடித்ததன்மையை யாய் கேட்டாளென்று சொல்லு வர்களோ? ஈதொரு வார்த்தையை எனக்கு விளங்கக் கூறுவாயென்றாள் எ - று.

†இஃதொன்று கூறு என்னுஞ்சொல்லை என்பவோ என்பதன் பின்னே கூட்டிப் பொருள்கூறுக.

---

௧. "செவிமறை நேர்மின்னு நுண்பொறி வெள்ளை" கலி. ௧0௧: ௨எ.

௨. (அ) "கோட்டங் கண்ணியுங் கொடுந் திரையாடையும்" புறம். ௨எ௫
(ஆ) "கோட்டுப்பூச் சூடினும்" குறள். ௧௩௧௩.

௩. "தேன்சொரி முல்லைக்கண்ணிச் செந்துவராடையாயர்" சீவக. ௪அ

௪. (அ)கெடுத்துப்படு நன்கல மெடுத்துக் கொண்டாங்கு" நற். ௧அ௨: ௫
(ஆ) "பழந்தன மிழந்தன படைத்தவரை யொத்தாள்" கம்ப. ௨௫ காட்டு: ௬௫. (இ) "இழந்ததனம் பெற்றவர்போ லிராக்கதர்க ளிரை தீண்டி யிழந்ததங்கள், பழம்பதியிற் குடிபுகுந்து" இராமா. வ யெடுத்த. ௫௫.

(பிரதிபேதம்) * வெளிப்படுத்தல், † இதுவொன்று.

கஉ கேட்டா லெவன்செய்ய வேண்டுமோ மற்(க)றிகா
வவன்கண்ணி யன்றோ வது

எ - து: மேல் தோழி, அக்கண்ணி வரைந்துகோடல் தாழாத அவனுடைய கண்ணியன்றோ? அதனாற் பின்னை யாய் கேட்டால் என்ன பரிகாரம் *யாஞ்செய்யவேண்டும்? அதற்கு ஒன்றும்வேண்டாவென்றாள். எ - று.

ஓ, அசை.

கச (உ)பெய்போ தறியாத்தன் கூழையு ளேதிலான்
கைபுனை கண்ணி முடித்தாளென் றியாய்கேட்பிற்
செய்வதி லாகுமோ மற்று

எ - து: அதுகேட்ட தலைவி, (ங)முடிக்கும் பூ †இதுவென்றறியாத தன்னுடைய மயிரில் ஏதிலான் கையாலே புனைந்தகண்ணியை முடித்தாளென்று தாய்கேட்கில் அதற்குப் பின்னை அவள் வெகுளாமற்செய்வதொரு பரிகாரம் இல்லையாயிருக்குமோ என்றாள். எ - று.

மயிருக்கு (ச)மணந்தரும் பூ முடித்தல் வேண்டுமென்று அறியாதவள்.

கரு எல்லாத் தவறு மறும்

எ - து: அதுகேட்ட தோழி, இனி எல்லாத் தவறுகளும் நீங்குங்காணென்றாள். எ - று.

அவன் வரைவுணர்ந்தமையின்.

கசு ஓஒ அஃதறு மாறு

எ - து: அதுகேட்ட தலைவி, ஓஒஎனவியந்து அத்தவறு அறுமாறென்னையென வினவினாள். எ - று.

---

க. இகுத்தல் - தாழ்த்தல்.

உ. "புல்லினத் தாய மகன் சூடி வந்ததோர், முல்லை யொருகாழுங் கண்ணியு மெல்லியால், கூந்தலுட் பெய்து முடித்தேன்" கலி. ககடு. ச - கூ.

ங. முடிக்கும் பூ - சூடும்பூ; சூடாப்பூ, எருக்கு முருக்கு முதலியவை.

ச. மணத்தின் பொருட்டே பூக்களை மக்கள் அணிவரென்பது, "ஆணிக் கனக மணந்தரிற் பூமண மார்கொள்ளுவர்" என்பதனாலும் எருக்கு முதலியன மணமில்லாதன வென்பது, "துன்னியவூ ரினும் விரை சார்ந், தறியாத புல்லெருக்கும்" (வாட்போக்கிக். கக.) என்பது முதலியவற்றாலும் அறியலாகும்.

(பிரதிபேதம்) * செய்யவேணுமதற்கொன்றுவேண்டா, †ஈதென்றறியாததன்மயிரில்.

௧௩. ஆயர் மகனாயி னாயமக ணீயாயி
(௧)னின்வெய்ய னாயி னவன்வெய்யை நீயாயி
னன்னைநோ தக்கதோ வில்லைம *னின்னெஞ்ச
மன்னைநெஞ் சாகப் பெறின்

எ - து: அதுகேட்ட தோழி, அவன் ஆயருடையமகனா யிருப்பானாயின், நீ ஆய்ச்சாதியிற் பிறந்த மகளா யிருப்பையாயின்; (உ)†அவன் உன்னைவிரும்பி யிருப்பானாயின், நீ அவனை விரும்பியிருப்பையாயின், தாய் மிகவும் நோவத் ‡தக்கதொருகாரிய மில்லைகாணென்றாள்; அதுகேட்டதலைவி, அன்னையுடைய நெஞ்சு நின்னுடைய நெஞ்சாகப் பெறின் அவள் || நோவத்தக்கதோ இல்லை யென்றாள். எ - று.

௨௩. அன்னையோ

எ - து: அதுகேட்ட தோழி, இன்னும் ÷அத்தன்மையையோவென்றாள். எ - று.

என்றது, யான் இத்துணையெல்லாம் கூறவும் கொள்ளாத தன்மையை யோ? எ - று.

௨௪ (௩)ஆயர் மகனையுங் காதலை ‡ கைம்மிக
(௪)ஞாயையு மஞ்சுதி யாயி னரிதரோ
நீயுற்ற நோய்க்கு மருந்து

---

௧. "தண்ணிய சிறிய வெய்ய தழற்சொலாற் சாற்று கின்றான்" (சீவக. எ௪எ:) என்புழி 'வெய்ய' என்பதற்கு, விரும்பப்படுதலின் வெய்ய வென்றாரென்று விசேடவுரையெழுதி, 'நின்வெய்யனாயின்' என்பதை மேற்கோள்காட்டினர். நச்.

௨. "தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரே, காமத்துக் காழில் கனி" குறள். ௧௧௯௧.

௩. 'ஆயர் வேட்டுவர்' என்னும் (தொல். அகத். ௨௧.) சூத்திரவுரையில், 'ஆயர் வேட்டுவரென்னும் இரண்டுபெயரே எடுத்தோதினாரேனும் ஒன்றெனமுடித்தலான் அந்நிலங்கட்குரிய ஏனைப் பெயர்களான் வருவனவுங் கொள்க' என்று கூறி, "ஆயர்மகனையுங்.........நோய்க்கு மருந்து" என்பதை மேற்கோள்காட்டுவர். நச்.

௪. ஞாய் - நின்றாய்; (அ) "யாயு ஞாயும் யாரா கியரோ" (குறுந். ௪௦.) என்பதனால் யாயென்பது தன்மைப் பெயரடியாகவும் ஞாயென்பது முன்னிலைப் பெயரடியாகவும் பிறந்த முறைப் பெயரென்று துணிய

(பிரதிபேதம்) * நின்னெஞ்சமென்னைநெஞ்சாகப், † இவன், ‡ தக்கதோர், || நோகத்தக்க தோ. ÷ அத்தன்மையோவென்றாள், ‡ கைமிக.

எ - து: *கைம்மிக ஆயர்மகனையுங் காதலித்தலையுடையையாய்க் *கைம் மிகயாயையும் அஞ்சியிரா†நின்றுயாயின், இனி நீயுற்ற காமநோய்க்குமருந்து அரிதென்றாள். எ - று.

அரோ, அசை.

௨எ மருந்தின்றியா னுற்ற துயராயி னெல்லா
வருந்துவே னல்லனோ யான்

எ - து: அதுகேட்ட தலைவி, எடீ! யானுற்ற வருத்தத்திற்கு மருந்தில்லையாயின், இனி வருந்தியே விடுவேனல்லனோ என்றாள். எ - று.

௨௯ வருந்தாதி

(௧)மண்ணிமா சற்ற(௨)நின் கூழையு ளேறவன்
கண்ணிதந் திட்ட தெனக்கேட்டுத் திண்ணிதாத்
தெய்வமால் காட்டிற் றிவட்கென நின்னையப்
பொய்யில் ‡பொதுவற் கடைசூழ்ந்தார் தந்தையோ
டையன்மா ரெல்லா மொருங்கு

எ - து: அதுகேட்ட தோழி, இனி வருந்தாதேகொள்; கழுவி அழுக்கற்ற நின்னுடைய மயிரிடத்தே ஏற அவன் கண்ணியைத் தந்ததென்று பிறர் சொல்லக் கேட்டு, தந்தையோடே தமையன்மாரெல்லாரும் சேரக் கூடியிருந்து, தெய்வமாகிய மால் இவளுக்கு இவனைத் ||திண்ணிதாகக்கொண்டு வந்து காட்டிற்றென மகிழ்ந்து, நின்னை அந்தக் களவொழுக்கத்தைப் பிறர் அறியாமல் ஒழுகவல்ல பொதுவனுக்கு அடுத்தலைச்சூழ்ந்தார் காணென்றாள். எ - று.

---

லாகும். பதிப்பில் ஞகரம் யகரமாக மாறியதனுல் ஞயமாறிக்கிடந்த இப்பகுதியைத் திருத்தி யின்புறுத்தியது தமிழ்நெறி விளக்கமே. யாயென்பது தன்மையொடடுத்த முறைப்பெயரென்பதுமட்டும் தொல்காப்பிய உரைகளிற் குறிக்கப்பட்டுள்ளது; ஞாயென்பது முன்னிலையொடடுத்த முறைப்பெயராதலை (ஆ) "ஞாயர் பயிற்ற" (இ) "ஞாயர்பா லுண்டி" (ஈ) "ஞாயர்மாட்டைப்பால்" கலி. அக: கஉ; அ௫: உஅ, ௩௬. என இந்நூலிற் பலவிடத்தும் வருதலும் வலியுறுத்தும். இவை இவ்வரம்புகடந்துதாயென்னும்பொருளிலும்வருதலுண்டு.

௧. "மாசற மண்ணுற்ற மணியேசு மிருங் கூந்தல்" கலி. எஎ: ௧௬. என்பதும் அதன் குறிப்புக்களும் பார்க்க.

௨. "அவன்கண்ணி நீபுனைந்தா யாயி னமரு, மவன்க ணடைசூழ்ந்தார் நின்னை" கலி. ௧௧௫: ௧எ - ௧அ.

(பிரதிபேதம்) * கைமிக, † நின்றுய் இனிநீ, ‡ பொதுவர்க்குடை. || திண்ணியதாக.

இதனால், தலைவிக்குப் புணர்ச்சியுவகை பிறந்தது.

இது கொச்சகவெண்பாவும் தனிச்சொல்லும் ஐஞ்சீரடுக்கிய கொச்சக *வெண்பாவும் ஐஞ்சீரடுக்கிய குறுவெண்பாட்டும் ஈரடியானென்றும் கொச்சகவெண்பாவும் †முச்சீரடியானென்றும் இருசீரடியானென்றும் நெடுவெண்பாட்டும் தனிச்சொல்லும் குறுவெண்பாட்டும் கொச்சகவெண்பாவும் தனிச்சொல்லும் சுரிதகமும்பெற்ற கொச்சகக்கலி. (எ)

(௧0அ) (க)இகல்வேந்தன் சேனை யிறுத்தவாய் போல
வகலல்குறுள் கண்ணென மூவழிப் பெருகி
நுதலடி நுசுப்பென மூவழிச் சிறுகிக்
கவலையாற் காமனும் படைவிடு வனப்பினோ
டகலாங்க ணளைமாறி யலமந்து பெயருங்கா
னகைவல்லேன் யானென்றென் னுயிரொடு படைதொட்ட
விகலாட்டி நின்னை யெவன்பிழைத்தே னெல்லாயான்;
அஃதவல மன்று மன;
௫ ஆய ரெமரானு லாய்த்தியேம் யாமிகக்
காயாம்பூங் கண்ணிக் கருந்துவ ராடையை
மேயு நிரைமுன்னர்க் கோலூன்றி நின்றாயோ
ராயனை யல்லை பிறவோ வமரருண்
ஞாயிற்றுப் புத்தேண் மகன்;
௧௪ அதனான் வாய்வாளேன்;
முல்லை முகையு முருந்து நிரைத்தன்ன
பல்லும் பணைத்தோளும் பேரம ருண்கண்ணு
நல்லேன்யா னென்று நலத்தகை நம்பிய
சொல்லாட்டி நின்னொடு சொல்லாற்று கிற்பார்யார் ;
௧௫ சொல்லாதி;
நின்னைத் தகைத்தனே னல்லல்காண் மன் ;
௨௧ மண்டாத கூறி மழருழக் காகின்றே
கண்ட பொழுதே கடவரைப் போலநீ

க. புணர்த லென்னு முரிப்பொருள் வந்த முல்லைப்பாட்டுக்கு இச் செய்யுள் மேற்கோள்; நாற்கவி. சூ. ௨௫௧.

(பிரதிபேதம்) * வெண்பாட்டு மீரடியானென்றுங்கொச்சகவெண்பாவுமைஞ்சீரடியானென்றும்நெடுவெண், † ஐஞ்சீரடியானென்றும் இரு.

பண்டம் விளைய படிற்றூற் றுடைஇயநிற்
கொண்ட தெவனெல்லா யான் ;

கொண்டது;

௨௬ அளைமாறிப் பெயர்தருவா யறிதியோ வஞ்ஞான்று
தளவமலர் ததைந்ததோர் கானச்சிற் றூற்றய
விளமாங்காய் போழ்ந்தன்ன கண்ணினா லென்னெஞ்சங்
களமாக்கொண் டாண்டாயோர் கள்வியை யல்லையோ; [கும்;
நின்னெஞ்சங், களமாக்கொண் டியாமாள லெமக்கெவ னெளிதா

௩௧ புனத்துளா னெந்தைக்குப் புகாவுய்த்துக் கொடுப்பதோ
வினத்துளா னென்னைக்குக் கலத்தொடு செல்வதோ
தினைக்காலுள் யாய்விட்ட கன்றுமேய்க் கிற்பதோ;

அனைத்தாக;

௩௫ வெண்ணெய்த் தெழிகேட்கு மண்மையாற் சேய்த்தன்றி
யண்ணணித் தூராயி னன்பகற் போழ்தாயிற்
கண்ஞேக் கொழிக்குங் கவின்பெறு பெண்ணீர்மை
மயிலெருத்து வண்ணத்து மாயோய்மற் றின்ன
வெயிலொ டெவன்விரைந்து சேறி யுதுக்காண்
பிடிதுஞ்சு வன்ன வறைமேல நுங்கின்
றடிகண் புரையுங் குறுஞ்சுனை யாடிப்
பனிப்பூந் தளவொடு முல்லை பறித்துத்
தனிக்காயாந் தண்பொழி லெம்மொடு வைகிப்
பனிப்படச் செல்வாய் நும் மூர்க்கு ;

இனிச்செல்வேம்யாம்;

௪௬ மாமருண் டன்ன மழைக்கட்சிற் றாய்த்தியர்
நீமருட்டுஞ் சொற்கண் மருள்வார்க் குரையவை
யாமுணியா வேறுபோல் வைகற் பதின்மரைக்
காமுற்றுச் செல்வாயோர் கட்குத்திக் கள்வனை
நீயெவன் செய்தி பிறர்க்கு;
யாமெவன் செய்து நினக்கு;

௫௨ கொலையுண்கட் கூரெயிற்றுக் கொய்தளிர் மேனி
யினைவனப்பின் மாயோய் நின்னிற் சிறந்தார்
நிலவுலகத் தின்மை தெளிநீ வருதி

மலையொடு மார்பமைந்த செல்வ னடியைத்
தலையினுற் ருெட்டுற்றேன் சூள் ;

௫௭ ஆங்குணரார் நேர்ப வதுபொய்ப்பாய் நீயாயிற்
றேங்கொள் பொருப்பன் சிறுகுடி யெம்மாயர்
வேந்தூட் டரவத்து நின்பெண்டிர் காணுமற்
காஞ்சித்தா துக்கன்ன தாதெரு மன்றத்துத்
தூங்குங் குரவையு ணின்பெண்டிர் கேளாமை
யாம்பற் குழலாற் பயிர்பயி ரெம்படப்பைக்
காஞ்சிக்கீழ்ச் செய்தேங் குறி.

இஃது "அடியோர் பாங்கினும் *வினைவல பாங்கினும், கடிவரை யில புறத் தென்மனர் புலவர்"(௧)என்பதனுற் பிறர் ஏவிய தொழிலைச்செய்தல் †வல்ல அகப்புறத் தலைவனும் தலைவியும் முன்னேருகாற் கூடிப் பின்னர் அவனெதிர்ப்பட்டுழி அவன்வயிற் பரத்தைமையால் ஊடிக் கூறிநேர்ந்தது.

இதன் பொருள்.

இகல்வேந்தன் (௨) சேனை யிறுத்தவாய் போல
(௩)வகலல்குற் ருேள் கண்ணென மூவழிப் பெருகி
நுதலடி நுசுப்பென மூவழிச் சிறுகிக்
கவலையாற்(௪) காமனும் ‡படைவிடு வனப்பினே
டகலாங்க ணளைமாறி ||யலமந்து பெயருங்கா
ணைகைவல்லேன் யானென்றென் னுயிரோடு படைதொட்ட
விகலாட்டி நின்னை யெவன்பிழைத்தே னெல்லாயான்

க. தொல். அகத். ௬. ௨௩.

௨. 'சேனை யிறுத்தவாய்போல' என்பது இறுத்தலென்பது வந்து விடு லென்னும் பொருளில் வருதற்கு மேற்கோள்; சிலப்: ௪: ௧௨ அடியார்க்கு நல்.

௩. "பெருந்தோண் மடந்தை" (சிலப். ௩: ௬.) என்பதற்கு, மகளிர்க்குத் தோள்பெருக்கை இலக்கணமென்று விசேடவுரை எழுதி 'அகலல்கு ருேள் கண்ணென மூவழிப் பெருகி' என்பதை மேற்கோள்காட்டின உரைகாரரிருவரும்,

௪. (அ) "உருவி லாள னொருபெருஞ் சிலையொடு, விரைமலர் வாளி வெறுநிலத் தெறிய" சிலப். ௩௦: ௨௫ - ௨௬. (ஆ) "படையிட்டு நடு குங் காமன்" மணி. ௩:௨௩.எனவருபவையும் இங்கேநோக்கற்பாலன.

(பிரதிபேதம்) * வினைவர் பாங்கினும், † வல்லாதவகப், ‡ படையிடுவெனப். || அலம்வந்து.

எ-து: அகன்றவல்குல் தோள் கண் என்று சொன்ன மூன்றிடமும் பெருத்து, நுதல் அடி இடை என்று சொன்ன மூன்றிடமுஞ் சிறுத்துக் காமனும் பிறர்க்கு மனக்கவலை செய்தலோடே தன் அம்பை *விடுதற்குக் காரணமான அழகோடே(௧) ஊரிடத்தே † அலமந்து மோரைவிற்று நீ மீளுங் காலத்தே யான் உகுதலைவல்லேனென்று நக்கு, பின்னர் இகலிடத்தே சென்று விட்ட பாண்டியன்சேனை உயிரோடு போம்படி படை தொடு மாறுபோல என் னுயிரோடு போம்படி படையைத் தொட்ட மாறுபாட்டையுடையவளே ! எல ! யான் நின்னை எப்படித் தப்பினேன் கூறென்றான். எ - று.

இகல்வாயிறுத்த வேந்தன்சேனைபோல என மாறுக.

அ ‡அஃதவல மன்று மன

எ - து: அதுகேட்ட தலைவி, அளைமாறித் திரிகின்றது மிகவும் எங்குலத் திற்குத் தீதன்று. எ - று.

௯ (௨)ஆய ரெமராணு லாய்த்தியேம் யாமிகக்
காயாம்பூங் கண்ணிக் (௩)கருந்துவ ராடையை
(௪)மேயு நிரைமுன்னர்க் (௫)கோலூன்றி நின்றாயோ
ராயனை ||யல்லை பிறவோ வமரருண்
ஞாயிற்றுப் புத்தேண் மகன்

எ - து: ×எஞ்சுற்றத்தார் ஆயராணுல், யாங்கள் மிகவும் ஆய்த்தியரேம்; அதுகிடக்க, நீதான் காயாம்பூவாற்செய்த கண்ணியையும் துவரூட்டின கரிய ஆடையயு ÷முடையாய்; மேய்கின்ற நிரைகளுக்குமுன்னே ஒருகோலை

௧. அகலாங்கண் - அகன்ற ஊரிடத்தே. மது. ௩௨௭.

௨. பார்ப்பார் அரசர் இடையர் குறவர்முதலியவர்பால்ஒருவரையொருவர் ஒவ்வாமற் கிடக்குஞ் சாதியியல்பாகிய தன்மை யென்னு மெய்ப்பாட் டின் இடையர் தன்மைக்கு, "ஆயரெமராணுல்.........புத்தேண் மகன்" (ஒரு பிரதியில் "காயாம்பூங்...........ஆயனையல்லை") என்பது மேற் கோள்; தொல். மெய்ப்பாட்டியல். சூ. ௧௨. இளம்.

௩. "அந்துவ ராடைப் பொதுவனோடு" (கலி. ௧௦௨: ௩௭.) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

௪. (அ) "மேயுநிரை.........மகன்" என்பது தலைவன் வினைவல பாங்கி னன் என்பதற்கும் தொல். அகத். சூ. ௨௩. நச்; (ஆ) பிறவென்பது அசைநிலையாய்வருதற்கும், நன். இடை. சூ, ௨௨. மயிலை. விருத்தி. இரா. மேற்கோள்.

௫. "தண்டுகா லூன்றிய தனிநிலை யிடையன்" அகம். ௨௭௪: அ.

(பிரதிபேதம்) * விடுத்தற்கு, † அலம்வந்து, ‡ அஃகுதவல, || அல்லபிறவோ. × நஞ்சுற்றத் தார், ÷ உடையையாய், உடையராய்.

ஊன்றி அந்நிரை மேய்த்து நின்றநீ இடையனுந்தன்மையை உடையையல்லை; வேறாகத் தேவர்களுள் ஞாயிறாகிய தெய்வத்தின் மகனோ? கூறென்றாள். எ - று.

மகன், கன்னன்; *இஃது இகழ்ச்சி. ஆய்த்தியேம் யாமாயின் என்றும் பாடம்.

௧௮ அதனான் வாய்வாளேன்

(௧)முல்லை முகையு முருந்து நிரைத்தன்ன
பல்லும் பணைத்தோளும் பேரம ருண்கண்ணு
நல்லேன்யா னென்று நலத்தகை நம்பிய
சொல்லாட்டி நின்னொடு †சொல்லாற்று கிற்பார்யார்

எ - து: அதுகேட்டவன் நீ இங்ஙனம் ‡ இகழ்ந்துகூறுதலால் நின்னோடு ஒன்றுங் ||கூறேன்; முல்லையினது முகையையும் (௨)பீலிமுருந்தையும் நிரைத்தாலொத்த பல்லும் (௩)பணைபோலுந் தோளும் பெரிய அமர்செய்யும் உண்கண்ணும் ÷யான் நல்லேனென்று, நின்னுடைய தகுதியைப் பிறர் நச்சுதலன்றி நீதானே நச்சியிருக்கின்ற ×சொல்லையுடையவளே! நின்னோடு மறுமாற்றஞ் சொல்லுதலை யார் நிகழ்த்துவாரென்றான். எ - று.

[முல்லை](பல்லு)முதலியன, சினைவினை முதலொடு முடிந்தது. ┼ஆற்றுகிற்பார் வினைத்திரிசொல்.

௧௯ சொல்லாதி

எ - து: அதுகேட்டவள், அங்ஙனமாயின் ஒன்றுஞ் சொல்லாதே கொள்ளென்றாள், எ - று.

௨௦ நின்னைத் தகைத்தனென்

எ - து: அதுகேட்டவன், **நின்னைப் போகாமல் விலக்கினேனென்றான். எ - று.

அல்லல் காண்மன்

எ - து: அதுகேட்டவள், இவன் நம்மிடத்து நிகழ்த்துகின்றதோர் வருத்தத்தைப் பாராயென நெஞ்சொடு கூறினாள். எ - று.

---

௧. (அ)உருவென்னு மெய்ப்பாட்டிற்கு, "முல்லை முகையு............யார்" என்பது மேற்கோள்; தொல். மெய்ப். சூ. ௨௫ பேர். (ஆ) "முல்லை முகையு முருந்துநிரைத்தன்ன, பல்லர்" (கலி. ௧௦௩: ௫-௭) என்பதும் அதன்குறிப்பும் இங்கே ஒப்புநோக்கற்பாலன.

௨. பீலி - மயிலிறகு. ௩. பணை - மூங்கில்.

(பிரதிபேதம்) *இது இகட்சி, †சொல்லாற்றகிற்பார், ‡ மகிழ்ந்து. || கூறேனென்றான். என்று முல்லை, ÷ யானல்லனென்று, × சொல்லுமுடையவளே, ┼ ஆற்றகிற்பார், **போகாமல் நின்னை விலக்கினென்னென்றான்.

உக (க)மண்டாத கூறி மழகுழக் (உ)*காகின்றே
கண்ட பொழுதே கடவரைப் போலநீ
பண்டம் வினைய படிற்ருற் ருடீஇயநிற்
கொண்ட தெவனெல்லா யான்

எ - து: கூறி, பின்னும் மனம் மயங்குதலையுடைய குழவிப்பருவத்துக்கு † ஆகின்றுஃ என்மனம் மிக்கு விரும்பிச் ‡செல்லாத சொற்களைச் சொல்லி என்னைக் கண்டபொழுதே (ங)தனிசு கடவாரிடத்துக் கொடுத்தவர்கள் ||அவரவர்களுக்குள்ள பண்டங்களை உசாவுமாறுபோல நீயும் என்னிடத்துள்ள பண்டங்களை இவை யாவை என்று வினவின வஞ்சனையாலே எனது வட்டியைப் பிடித்தற்கு ஏடா! நின்னிடத்து யாம் வாங்கிக்கொண்ட பொருள் எப்பொருள் என்ருள்? எ - று.

(ச)குழக்கு, "தரங்கக்கு ×வண்ணகக்கு" (ரு)என்ருற்போல் நின்றது.

உரு கொண்டது

எ - து: அதுகேட்ட(வன்) நீ என்னிடத்து வாங்கிக்கொண்ட பொருள் கூறக்கேள். எ - று.

உசு அளைமாறிப் பெயர்தருவா யறிதியோ வஞ்ஞான்று
+தளவமலர் ததைந்ததோர் கானச்சிற் ருற்றய
விளமாங்காய் போழ்ந்தன்ன கண்ணினு லென்னெஞ்சங்
களமாக்கொண் டாண்டாயோர் கள்வியை யல்லையோ [கும்
நின்னெஞ்சங், களமாக்கொண் டியாமாள லெமக்கெவ னெளிதா

க. "மண்டாத சொல்லி" கலி. கூ0: உ.

உ. கிடைத்த கையெழுத்துப்பிரதிகளுள் ஒன்றிலேனும்'ஆகின்றேன்' என னகரவீருன பாடம் இல்லை. முன்பதிப்பில் 'ஆகின்றேன்' என்று மூலமும் 'ஆகா நின்றேன்' என்று உரையும் உள்ளன. அவ்வாறு படிக்கும்படி ஓரேட்டிலிருப்பினும் அவற்றை "ஆகின்றென்" எனவும் 'ஆகா நின்று என்' எனவும் கொள்ளலாமென்று தோற்றுகிறது.

ங. தனிசு - கடன். பழ. கூஅ.

குழவென்பது இளமைப் பொருட்டென்பதை அறிஞர் பலரும் அறிவர். இங்கே குழக்கென்பதற்கு எடுத்துக்காட்டியிருக்கும் மேற்கோளை நோக்க, அச்சொல் குழமென மகர வீருகவும் இருக்குமோவென்று ஐயமுண்டாகிறது.

ரு. "தரங்கக்கும் வண்ணகக்கும்" என்பது: யா-கா. ஒழி. எ.

(பிரதிபேதம்) * ஆக்கின்றகண்ட, † ஆகாநின்றென்மனம், ‡ சொல்லாதசொற், || அவர்களுக்குள்ள. × வண்ணக்குஎன்ருற்,+ தளமலர்.

௩௧ (க)புனத்துளா னெந்தைக்குப் (உ)புகாவுய்த்துக் கொடுப்பதோ
இனத்துளா *னென்னைக்குக் கலத்தொடு செல்வதோ
தினைக்காலுள் †யாய்விட்ட கன்றுமேய்க் கிற்பதோ

எ - து: அந்நாளிலே மோர்விற்று மீள்கின்ற நீ செம்முல்லை நெருங்கின தோர் கானத்திடத்துச் ‡சிறிய யாற்றினயலிடத்தே (௩)||இளையமாவடுவைப் பிளந்தாலொத்த கண்ணாலே எனக்குஉரித்தாகிய என்னெஞ்சைநினக்கு இருப்பிடமாக வாங்கிக்கொண்டு அடிமைத் தொழில்கொண்டாய்; ஒரு கள்வியையல்லையோ? அது நீயறியாயோ என்றான்; அது கேட்டவள், நின் னெஞ்சை எனக்குஇருப்பிடமாக ÷வாங்கிக்கொண்டியாம்அடிமைத்தொழில்கொள்ளுதல் எமக்கு எங்ஙனம் எளிதாயிருக்கும்? நின்னெஞ்சு புனத்திடத்தானாகிய(௪)என் தமையனுக்கு உணவைக்கொண்டுசென்று கொடுக்குமதொன்றோ? பசுத்திரளிடத்தானாகியஎன் தந்தைக்குக்கறவைக்கலங்கொண்டு ×செல்லுமதொன்றோ? தினை அரிந்த ✝தாளிடத்தே, யாய் மேயவிட்ட கன்று மேய்க்குமதொன்றோ? அன்றே! ஆதலால் அரிதேகாணென்றாள். எ - று.

௩௨ அனைத்தாக

எ - து: அதுகேட்டவன், இனி நீ ஏவின தொழில்களை என்னெஞ்சு செய்வதொன்றாக என்றான். எ - று.

---

௧. தலைவி, வினைவல பாங்கின ளென்பதற்கு "புனத்துளா.......... மேய்க்கிற்பதோ" என்பதை, (தொல். அகத். சூ. ௨௩.) மேற்கோள் காட்டி, இஃது 'எமரேவலான் யாம் செய்வதன்றி யாங்களேவ நின் னெஞ்சம் இத்தொழில்கள் செய்கின்றனவில்லை யென்றலின், வினைவல பாங்கினளாய தலைவி கூற்றாயிற்று' என விளக்கினர். நச்.

௨. புகா-உணவு; தொல். களா. சூ. ௧௬: ௬. அற. ௧௧௧, ௧௨௨.

௩. (அ) "வடுவிடை போழ்ந்தகன்ற கண்ணாய்" கார். ௬. (ஆ) "வடுப்போழ்ந் தன்ன வாளரிநெடுங்கண்" (இ) "வடிப்போழ்ந் தன்ன வாளரித் தடங்கண்" பெருங். (க) ௪௬: ௨௨௩; (௨)௪: ௧௨. என்பவையும் கலி. ௬௪:, ௨௧-ஆம் அடியும் அதன் குறிப்பும் ஒப்புநோக்கற்பாலன.

௪. என்னை யென்பதற்கு என் தமையனென்ற பொருளும் எந்தை யென்பதற்கு என் தகப்பனென்ற பொருளுமே காணப்படுவதனால், இங்கே எதோ ஒரு முறைபற்றி அச்சொற்களை மாற்றி இயைத்தா ரென்று தோற்றுகிறது. அன்றி எந்தையென்பதற்கு என் தமைய னென்ற பொருளு முண்டெனின் பிரதிபேதத்தால் ஆற்றொழுக் காகவே பொருள் அமையும்.

(பிரதிபேதம்) *எந்தைக்கு. † யாம்விட்ட. ‡ சிற்றாற்றய, சிற்றியாற்றய, ||இளமாவடுவை. ÷ வாங்கிக்கொண்டு அடிமைத், × செல்லுவதொன்றோ, ✝ தாளிடத்தேயா யா [illegible]

வெண்ணெய்த் *தெழிகேட்டு மண்மையாற் சேய்த்தன்றி
(க)யண்ணணித் தூராயி னன்பகற் † போழ்தாயிற்
(உ)கண்ணேக் கொழிக்குங் கவின்பெறு பெண்ணீர்மை
மயிலெருத்து வண்ணத்து மாயோய்மற் றின்ன
வெயிலொ டெவன்விரைந்து சேறி (௩)யுதுக்காண்
(௪) ‡பிடிதுஞ்சு வன்ன வறைமேல நுங்கின்
றடிகண் புரையுங் (௫)குறுஞ்சுனை யாடிப்
(எ)பனிப்பூந் (௬)தளவொடு முல்லை பறித்துத்
தனிக்காயாந் தண்பொழி லெம்மொடு வைகிப்
பனிப்படச் செல்வாய்நும் மூர்க்கு

---

க. "இப்புனத்தின், மருங்கண் ணனையதுண் டோவந்த தீங்கொரு வான் கலையே" (கோவையார். ருங.) என்பதன் உரையில், 'மருங்கென்பது மருங்கணென ஈறுதிரிந்துநின்றது. அணித்தாகவென்னும் பொருட்டாய அணி, அண்ணெனக் குறைந்து நின்ற தெனினு மமையும்' எனப் பேராசிரியர் எழுதியிருப்பதும் தொல்காப்பியவுரையில் அண்ணணி யென்பது அடையடுத்ததென்று நச்சினார்க்கினியரெழுதியிருத்தலும் இங்கே அறியத்தக்கன.

உ. (அ) "கண்கவர் காரிகை"........(ஆ) "கண்டவர் மனமுங் கண்ணுங் கவர்ந்திட வனப்பு வாய்ந்த, வொண்டொடி" நைடத. போர்புரி. ரு. என்பவையும் (இ) "வாங்கெழி னல்லாரும்" (கலி. க0௮: ௬௧.) என்பதற்கு, 'நோக்கினார் கண்ணை வாங்கிக்கொள்ளும் அழகினையுடைய ஆய்ச்சியரும்' என்றெழுதியிருக்கு முரையும் இங்கே நோக்கற்பாலன.

௩. "உதுக்காண்" என்பது சுட்டு முதல் உகர ஈறுகிய சொல்லின்முன் வல்லெழுத்து மிக்கு வந்ததற்கு மேற்கோள்; தொல். உயிர். கூ. ௬௧. நச். நூறு. ககக; ஐங்குறு. க0க, ௮ருங; புறம். ௩0எ: ௩.

௪. "சுரும்புணக் களித்த புகர்முக வேழ, மிரும்பிணர்த் துறுகற் பிடி செத்துத் தழூஉநின், குன்று" ஐங்குறுநூறு. உ௩௯.

ரு. "குறுஞ்சுனைப் புறவம்" காஞ்சி. திருநாட்டுப். ௬௮.

௬. "பனிவளர் தளவின் சிரல்வாய்ச் செம்முகை"

எ. (அ) "தண்டுளிக் கேற்ற பைங்கொடி முல்லை, முகைதலை திறந்த நாற்றம் புதன்மிசைப், பூமலர் தளவமொடு தேங்கமழ்பு கஞல" (ஆ) "முல்லை, போதவிழ் தளவமொடு" (இ) "நெடுங்கொடி முல்லையொடு தளவமல ருதிர" (ஈ) "கல்லோர் புறவிற் கவினிப் புதன்மிசை, முல்லை தளவொடு போதவிழ" (உ)"வெருகு வேட்பச் சிரிப்பனபோன்

(பிரதிபேதம்) * தொழில்கேட்டு, † பொழுதாயின், ‡ பிடித்துஞ்சு வன்னவறைமேனுங்கின்

எ - து: என்று, பின்னர்க் கடைந்தமோரைக் கையால் *அலைக்கும் ஓசைகேட்கும் அணுமையினாலே தூரம் அன்றாய் ஊர் மிகவும் அணித்தாயின், பொழுது உச்சியம் பொழுதாயின், கண் வேறொரு வடிவை நோக்குதலைத் தவிர்க்கும் அழகைப்பெறுகின்ற பெண்டன்மையினையும் மயிலினுடைய கழுத்தினுடைய நிறத்தையுமுடையமாயோளே! இப்படி வெய்தாகிய பொழுதோடே விரைந்து செல்லாநின்றாய்; இதனால் மற்றுப் பெறும்பயனென்? காயாம் பூவையுடைய குளிர்ந்த பொழிலை அவ்விடத்தே பாராய்; அவ்விடத்திற் பிடி துஞ்சுவனவாற்றையொத்த †பாறையிடத்தனவாகிய (க) நுங்கினது வெட்டின கண்ணையொக்கும் (உ) நீர்நிறைந்த அண்ணியசுனைகளிலே ஆடிக் ‡குளிர்ச்சியையுடைத்தாகிய பூக்களையுடைய(ங)செம்முல்லைமலரோடேமுல்லை மலரையும் பறித்துத் தனியே அப்பொழிலிடத்தே எம்முடனே தங்கிப் பொழுது குளிர்ச்சியுண்டாக நம்மூர்க்குச் செல்வாயென்றான். எ - று.

சரு இனிச் ||செல்வேம்யாம்

எ - து: அதுகேட்டவள், நீ போகவேண்டா என்கின்றாயாதலின் யாம் போவேமென ஊடல்தோன்றக் கூறினாள். எ - று.

சசு (ச)மாமருண் டன்ன மழைக்கட்சிற் றாய்த்தியர்
நீமருட்டுஞ் சொற்கண் மருள்வார்க் குரையவை
யாமுனியா வேறுபோல் வைகற் பதின்மரைக்
காமுற்றுச் செல்வாயோர் கட்குத்திக் கள்வனை

முகைத்த முல்லை...........குருதிக் கூரெயிறு கூத்தியர்கட் கொண்ட கொடித் தளவமே" என்பவற்றால் தளவமும் முல்லையும் வேறுவேறாதலை அறிக.

க. "நுங்கின் தடிகண்ணிலுள்ள நீர் சுனையின் நீருக்கும் அதன் நீர்நிறைவு சுனையின் நீர் நிறைவுக்கும் உவமை.

உ. "அகளத்தன்ன நிறைசுனைப் புறவின்" மலை. கoச.

ங. தளவம் செம்முல்லைக்குப் பெயராய்வருதலை (அ) "சிரல்வா யுற்ற தளவின்" (ஆ) "புதன்மிசைத் தளவி னிதன்முட் செந்நனை" (இ) "சிரல்வாய் வனப்பின வாகி நிரலொப்ப, வீர்ந்தண்டளவந் தகைந்தன" என்பவற்றாலும் இந்நூற்பக்கம் சுசுகூ: சு; சுகூக: எ (உ) குறிப்புக்களாலும் அறிக. இது முல்லையென்னும் பொருளிலும் வரும்.

ச. தலைவி குறிப்பானன்றிக் கூற்றால் வழிபாடு மறுத்தற்கு, "மாமருண் டன்ன........நினக்கு" என்பது மேற்கோள்; தொல். களவி. சூ. உ0. இளம்.

(பிரதிபேதம்) * அலைக்கும் ஓசைஓசைகேட்கும். † பாறையிடத்துக்கனவாகிய. ‡ குளிச்சியை, || செல்வேம், எ-து: அது.

நீயெவன் செய்தி பிறர்க்கு
யாமெவன் செய்து நினக்கு

எ - து: கூறி,: பின்னும் *மான் மருண்டு நோக்கினாலொத்த குளிர்ச்சியை யுடைய கண்ணையுடைய சிறியஆய்த்தியராய் நீமயக்கிக்கூறுஞ் சொல்லிடத்தே மயங்குவார்க்கு அம்மொழிகளைக் கூறு; யான் அதற்கு மருளேன்; நீதான் பல பசுக்களையும் தெவிட்டாமற் கூடும் ஏறுபோல நாடோறும் பதின்மரை ஒருவரைப்போலே விருப்பமுற்று அவர்மேற் செல்வாய்; ஒரு கட்குத்தியாகிய கள்வன்; ஆதலால் நீ பிறர்க்கு என்ன நன்மை செய்வாய்? இத்தன்மையை யுடைய நினக்கு யாம் என்ன நன்மை செய்வேமென்றாள். எ - று.

கட்குத்திக்கள்வன் என்றது, (க)†"விழித்திருக்கவிண்டையைக்கொள்வான்" என்னும் பழமொழி. ஓ, அசை. நீ அம்மகளிரையும் அவர் கருத்து முற்ற நுகராது அவர்வருந்தநீங்குவையென்பதுதோன்ற 'நீயெவன்செய்தி' என்றாள். 'யாமெவன் செய்தும்' என்றது எம்மிடத்து நீங்காத அன்புடையையல்லை என் பது தோன்ற நின்றது.

ரு௨ கொலையுண்கட் கூரெயிற்றுக் கொய்தளிர் மேனி
யிணைவனப்பின் மாயோய் நின்னிற் சிறந்தார்
நிலவுலகத் தின்மை தெளிநீ வருதி
மலையொடு மார்பமைந்த செல்வ னடியைத்
(௨)தலையினாற் றொட்டுற்றேன் சூள்

எ - து: அதுகேட்டவன், கொலைத்தொழிலையுடைய கண்ணிணையும் கூரிய எயிற்றினையும் கொய்யப்படுந் தளிர்போலும் நிறத்தினையும் கண்டார் வருந்தும் அழகினையுமுடைய மாயோளே! யான் விரும்புதற்கு உரியாராய் நின்னிற்காட்டிற் சிறந்தமகளிர் மண்ணுலகத்தில் இல்லாமையை நீதானே தெளிவாய்; இனி நீ நினைத்த தவறுக ளின்றென்று யான் தெளிவித்தற்கு நீ அணுக வருவாய்; மார்பு மலையோடு ஒப்பமைந்த திருமாலடியைத் தலையி னாலே வணங்கிக் கையினாற் றொட்டுச் சூளுற்றேனென்றான். எ - று.

ருஎ ‡ஆங்குணரார் நேர்ப வதுபொய்ப்பாய் நீயாயிற்
(ங)றேங்கொள் பொருப்பன் சிறுகுடி யெம்மாயர்

---

க. 'விழித்திருக்கச்[சே](செய்தே) விழியைக் கொண்டுபோய் விடுவான்' என ஒருவன், திறமை மிகுதியைச் சிறப்பித்தற்கு வழங்கும் வாக்கியம் இப்பழமொழியின்பொருட்டென்று தோற்றுகிறது.

௨. "தலைதொட்டேன் றண்பரங் குன்று" பரி. ஈ: கூ௫.

ங. தலைவி மறுத்தெதிர்கோடலுக்கு, "தேங்கொள் ...... .....குடி" என்பது மேற்கோள்; தொல். களவி. சூ. ௨0. இளம்.

(பிரதிபேதம்) * மாமனமருண்டு. †மிழித்திருக்க. ‡ஆங்குணர்வார்நேர்வது.

வேந்தூட் டரவத்து நின்பெண்டிர் காணுமற்
(க)காஞ்சித்தா துக்கன்ன (உ)தாதெரு மன்றத்துத்
தூங்குங் குரவையு ணின்பெண்டிர் கேளாமை
(ங)யாம்பற் குழலாற் பயிர்பயி ரெம்படப்பைக்
காஞ்சிக்கீழ்ச் செய்தேங் குறி

எ - து: அதுகேட்டவள், அப்படியை மெய்யென்று உணரும் அறியா * மகளிர் கூட்டத்திற்கு உடன்படுவோர்; அச்சூளுறவு பொய்க்குமவன் நீ; நின் கருத்தத்தை ஆராய்ந்து பார்க்கில் அதற்கு உடன்படுதலே வேண்டுதலின் எம்முடைய புழைக்கடையிற் காஞ்சிமரத்தின் கீழே குறியிடஞ்செய்தேம்; ஆண்டு வருங்கால் தேனைத் தன்னிடத்தே கொண்ட (ச) பொதியின்மலையை யுடையவனுடைய சிறுகுடியில்வாழும் எம் ஆயர் அவ்வேந்தன் இனிதிருந்து வாழ்வதற்கு அந்நிலத்திற் றெய்வத்திற்கு மடைகொடுக்கும் ஆரவாரத்தாலே வந்த நின்னுடைய பெண்டிர் நின்னைக் காணுமல், காஞ்சிப்பூவின் தாது உதிர்ந்தாற்போன்ற தாதாகியஎருவையுடைய மன்றத்திடத்து ஆடுங் குரவைக் கூத்திடத்து வந்த நின்னுடைய பெண்டிர் கேளாமல், நீசெய்யுங்(ரு)குறியை

---

க: (அ) "புன்காஞ்சித் தாதுதன் புறம்புதையக் கிளியெனக்கண், டன்புகொண் மடப்பெடை யலமந்தாங் ககல்வதனை, யென்புருகு குர லழைஇ யிருஞ்சிறகர் குலைந்துகுத்துத், தன்பெடையைக் குயிறழுவத் தலைவந்த திளவேனில்" (சீவக. கூசஅ.) என்பதனுல் காஞ்சித் தாது பச்சைநிறமுடையதென்பது அறியலாகும். (ஆ) "குயிற்கு ழாங்குடை காஞ்சியின் கோமளத் தாது, வெயிற்கு ழாமறைத் திருவிசும் பிருள் செய" என்பது காஞ்சீப்புராணம்.

உ. (அ) "தாதெரு மன்றத் தயர்வர் தழூஉ" கலி. க0ங: கூஉ. (ஆ) "தா தெரு மன்றந் தானுடன் கழிந்து" (இ) "தாதெருமன் றத்தாடுங் குரவையோ தகவுடைத்தே"(ஈ)"தாதெரு மன்றத்து மாதரியெழுந்து" (சிலப். ககூ: க0உ, கஎ: 'மாயவன்றன்', உஎ: எச எனத் தாதெருக் கூறப்பட்டிருக்கும் இடங்களையும் அதற்கு இங்கே காஞ்சித்தாதை உவமை கூறியிருப்பதையும் நோக்க, தாதெருவென்றது சாணகத்தை யென்று தோற்றுகிறது. இது யானை குதிரைகளின் இலத்தி முதலிய வற்றிற்கும் வரும்.

ங. ஆம்பற் குழலென்பது வெண்கலத்தால் ஆம்பற்பூவடிவாக அணைசு பண்ணிச்செறித்த குழலென்று விளக்குவர் அடியார்க்குநல்லார்.

ச. இந்நூற் பக்கம் ககரு: க-ஆம் குறிப்புப் பார்க்க.

ரு. "நின்னு ரகம்புகுந் தாற்குறி காட்டு நெடுந்தகையே" தஞ்சை. கஅஅ.

(பிரதிபேதம்) * மகளிரக்கூட்டத்திற்கு.

(க) ஆம்பலென்னும் பண்ணையுடைய குழலாலே குறிசெய்து வருவாயாக என்றாள். எ - று.

இதனால், இருவர்க்கும் புணர்ச்சியுவகைபிறந்தது.

இதனுள்,தலைவன் வினைவலபாங்கினனாயவாறு காண்க. இது கைக்கிளை.

இது தரவும் சொற்சீரடியும் நெடுவெண்பாட்டும் சொற்சீரடியும் கொச்சகமும் தனிச்சொல்லும் சொற்சீரடியும் நெடுவெண்பாட்டும் தனிச்சொல்லும் ஒருதாழிசையும் ஐஞ்சீரடியாறொன்றும் கொச்சகமும் தனிச்சொல்லும் நெடுவெண்பாட்டும் சொற்சீரடியும் நெடுவெண்பாட்டும் மூச்சீராறொன்றும் நெடுவெண்பாட்டும் வெள்ளைச்சுரிதகமும் பெற்று வந்த கொச்சகக்கலி. (அ)

(க0௯.) காராரப் பெய்த கடிகொள் வியன்புலத்துப்
பேராது சென்று பெரும்பதவப் புன்மாந்தி
நீரார் நிழல குடஞ்சுட் டினத்துள்ளும்
போராரா வேற்றின் பொருநா கிளம்பாண்டி
௫ றேரூரச் செம்மாந் ததுபோன் மதைஇனள்
பேரூருஞ் சிற்றூருங் கௌவை யெடுப்பவள்போன்
மோரோடு வந்தா ளுகைகண்டை யாரோடுஞ்
சொல்லியா ளன்றே வனப்பு;

௯ பண்ணித் தமர்தந் தொருபுறந் தைஇய
கண்ணி யெடுக்கல்லாக் கோடேந் தகலல்குல்
புண்ணில்லார் புண்ணாக நோக்கு முழுமெய்யுங்
கண்ணளோ வாய மகள்;

க௩ இவடான், திருத்தாச் சுமட்டின ளேனைத்தோள் வீசி
வரிக்கூழ வட்டி தழீஇ யரிக்குழை
யாடற் றகையள் கழுத்தினும் வாலிது
நுண்ணிதாத் தோன்று நுசுப்பு;

கஎ இடைதெரியா வேள ரிருவருந் தத்த
முடைவனப் பெல்லா மிவட்கீத்தார் கொல்லோ
படையிடுவான் மற்கண்டீர் காமன் மடையடும்
பாலொடு கோட்டம் புகின்;

க. (அ) "இயவர், தீங்குழ லாம்பலி னினிய விமிரும்" ஐங். உகடு. (ஆ) "ஆய ரினம்பெயர்த் தாம்ப லடைதர" திணைமொழியைம். உஎ.

உக இவடான், வருந்தநோய் செய்திறப்பி னல்லான் மருந்தல்லள்
யார்க்கு மணங்காதல் சான்றுனோன் றார்ப்பெண்டிர்
மாங்காய் நறுங்காடி கூட்டுவேம் யாங்கு
மெழுநின் கிளையொடு போகென்று தத்தங்
கொழுநரைப் போகாமற் காத்து முழுநாளும்
வாயி லடைப்ப வரும்.

இது வினைவலபாங்கிற் றலைவியைக்கண்ட வினைவலபாங்கிற் றலைவன் "காமஞ் சாலா விளமை யோள்வயி, னேமஞ்சாலா விடும்பை யெய்தி"(க) கூறியது.

இதன் பொருள்.

காரரப் பெய்த கடிகொள் வியன்புலத்துப்
பேராது சென்று பெரும்பதவப் புன்மாந்தி
நீரார் நிழல (உ)குடஞ்சுட் டினத்துள்ளும்
(ங)போராரா வேற்றின் பொருநா (ச)கிளம்(ரு)பாண்டி
றேரூரச் (சு)செம்மாந் ததுபோன் *மதைஇனள்
பேரூருஞ் சிற்றூருங் கெளவை யெடுப்பவள்போன்
(எ) †மோரோடு வந்தா டகைகண்டை யாரோடுஞ்
சொல்லியா என்றே வணப்பு

---

க. தொல். அகத். சூ. ருO. இச்சூத்திரத்தின் இவருரையிலும் இச்செய்யுள் இச்செய்திக்கே மேற்கோள்.

உ. கலி. க0எ: உ-ஆம் அடியையும் அதன் குறிப்பையும் பார்க்க.

ங. மத வென்னு முரிச்சொல் மிகுதிப்பொருளில் வருமென்பதற்கு "போராரா வேற்றின்...........மதைஇயினள்" என்பது (தொல். உரிச். சூ. அO. நச்.) உரையிலும். "காகிளம் பாண்டில்.................மதை இயினள்' என்பது (தொல். உரிச். சூ. சுச. "மிகுதியும்" தெய்.) உரையிலும் மேற்கோள்.

ச. "செல்லு மழவிடைபோற் செம்மாந்து" நள. சுயம். கருசு.

ரு. (அ)பாண்டில், தேர்பூணு மெருதென்பர், பதிற்றுப்பத்துரைகாரர்; பதிற். சுச: க0. (ஆ) எருத்தைப் பாண்டி லென்பது தெலுங்குச் சொல்லென்பர்; இ - வி. சூ. களச. நன். பெயரி. சூ. கசு. இரா;

சு. செம்மாத்தல். பழ. ஙகரு, ஙகூங.

எ. 'கண்டை' என்பது அசைநிலையாய் வந்ததற்கு, "மோரோடு.......... வணப்பு" என்பது மேற்கோள்; தொல். எச்ச. சூ. ஙO. 'கேட்டை யென்று' தெய்.

(பிரதிபேதம்) * மதைஇயினள், † மோருடன் வந்தா.

௭-து: மழைநிறையப்பெய்த விளக்கங்கொண்ட அகற்சியையுடையநிலத்தே *சென்றுநின்று அவ்விடத்தேநின்ற(௧)பெரிய அறுகாகியபுல்லை நிறையத்தின்று நீர் நிறைந்த நிழலிடத்தனவாய (௨)இன்னதனைக் குடம்பால் போதுமென்று கருதப்படும் பசுத்திரளில் †வைத்துக்கொண்டும் ஏனையவற்றிற்கு (௩) ஒப்புச் சொல்லப்படும் நாகு (௪) போர்த்தொழில் அமையாத ஏற்றினுக்கின்ற இளைய எருது(௫)கொல்லர்வண்டியையூராநிற்க இளமையால்இறுமாக்குமாறுபோலத் தலையில் மோர்ப்பானையுடனே அழகாலும் இளமையாலும் மிகுதியையுடைய ளாய்ப் பெரிய ஊர்களையுஞ் சிறிய ஊர்களையும் ஆரவாரத்தை உண்டாக்கு வாள்போலே மோரோடே வந்தவளழகை நெஞ்சே காண்பாயாக; இவள்தான் மிக்க வனப்புடைய மகளிரெல்லாரொடும் தன் அழகு ஒவ்வாமை சொல்லப் பட்டவள். எ - று.

இது சினைவினை முதலொடு முடிந்தது.

௬ (௬)‡பண்ணித் தமர்தந் தொருபுறந் தைஇய
கண்ணி ||யெடுக்கலாக் கோடேந் தகலல்குற்

---

௧. பெரிய அறுகு - யானை யறுகு.

௨. இன்னதனைக் குடம் பால் போதும் - இத்தனை குடம் பால் கறக்கும்.

௩. "பொருந" என்பதற்கு, உவமிக்கப்படுவா யென்று பொருள் கூறி, 'பொருவப் படுமவன் பொருந னென நின்றது' என்றும் (முருகு. ௨௭௬.) ஒப்பற்றவனேயென்று பொருள் கூறி, 'பொருநனென்றது தான் பிறர்க்கு உவமிக்கப்படுவானென்னும் பொருட்டு' என்றும் (மது. ௪௨.) இவரால் எழுதப்பெற்றிருக்கும் விசேடவுரை வாக்கியங் களும் இங்கே அறிதற் பாலன.

௪. "கொய்புற் கொடுத்துக் குறைத்தென்றுந் தீற்றினும், வையம்பூண் கல்லா சிறுகுண்டை" நாலடி. ௩௫௦.

௫. 'கள்ளிக் கோட்டை முதலிய இடங்களில் மாடுகட்டிய கூட்டு வண்டி கொல்லர் வண்டி யென வழங்கப்படுகின்றதென்பர்' என்பது சீவக. ௩-ஆம் பதிப்பு அரும்பத. பக். ௬௬௫. இது கொல்லா வண்டியெனவும் கொல்லாப்பண்டியெனவும் சிலப். உரையிற் காணப்படுகின்றது.

௬. "சிறந்துழியையஞ்சிறந்ததென்ப" என்னும் (தொல்.களவி. ௩.) சூத்தி ரத்தின் விசேடவுரையில் 'உலகத்துத் தலைமகனும் தலைமகளுமாக நம்மால்வேண்டப்பட்டார் அந்தணர்முதலாகிய நான்குவருணத்தினும் ஆயர் வேட்டுவர் குறவர் பரதவ ரென்னும் தொடக்கத்தினும் அக் குலத்தா ராகிய குறுநில மன்னர் மாட்டும் உளராவ ரன்றே. அவ

(பிரதிபேதம்) * கன்றுநின்றவ்விடத்தே நின்றுபெரிய, † வைத்துக்கொண்டு ஏனைய.
‡ மண்ணித் தமதந்தொரு, || எடுக்கல்லா.

புண்ணில்லார் புண்ணாக நோக்கு (க)முழுமெய்யுங்
கண்ணளோ *வாய மகள்

எ - து: சுற்றத்தார் கட்டிக்கொண்டு †வந்து, மயிர்முடியில் ஒருபுறத்தே செருகிவைத்த கண்ணியைச்சுமக்கமாட்டாத பக்கம் எந்தின அகன்றவல்குலை யுடைய இவ்வாயர் மகள், மனத்திற் (உ)காமவேட்கையில்லாத ‡இருடிகளும் புண்பட்டு நெஞ்சு வருந்தும்படி பார்க்கும்; அதுவேயன்றி மெய்முழுதுங் கண்ணையுடையவளோ? எ - று.

||என்பது,(ந)கண்கள்செய்கின்றவருத்தம்போல மெய்ம்முழுதும்வருத்து தலின், மெய்முழுதுங் கண்ணளோ என்றதாயிற்று.

கந. (ச)இவடான் ÷ திருத்தாச் சுமட்டினளேனைத்தோள் வீசி
வரிக்× கூழ வட்டி தழீஇ யரிக்குழை
யாடற் றகையள் கழுத்திலும்+வாலிது
நுண்ணிதாய்த் தோன்று நுசுப்பு

எ - து: இவள் தான் பல நிறத்தையுடைய செல்லையுடையவாகிய (ரு)வட்டியை ஒருகையால் அணைத்து மற்றைத்தோளை இளமைச் செருக்குத்

ரெல்லாரினும் செல்வத்தானும் குலத்தானும் வடிவானு முயர்ந்த தலைமகனுந் தலைமகளு மாயினார் மாட்டே ஐயம் நிகழ்வது. அல்லாதார் மாட்டு அவ்வழி மரபினையே சுட்டியுணர நிற்கும்" என்று எழுதி "பண்ணித்..............மகள்" என்னும் பகுதியை ஐயமின்றிச் சுட்டி யுணர்ந்தமைக்கு மேற்கோள்காட்டுவர் இளம்.

க. "முழுமெயும்" சீவக. நசுO, உகருக; 'முழுமெயும் - மெய்முழுது மென மாறுக' என்பர் அடியார்க்கு நல்லார்; சிலப். ச: ௩.

உ. (அ)"காமமொடு, கடுஞ்சினங் கடிந்த காட்சியர்.........முனிவர்" முருகு. கநச - கநஎ. (ஆ) "பெண்டிரு முண்டியு மின்பமென் றுலகிற், கொண்டா ருறூஉங் கொள்ளாத் துன்பங், கண்டன ராகிக் கடவுளர் வரைந்த, காமம்" சிலப். கச: நக - சஉ.

ந. (அ) "கண்ணாற் கலைஇய நோய்செய்யு, நடாஅக் கரும்பமன்ற தோளாரை" கலி. ககஉ: ரு-சு. (ஆ) "இருநோக் கிவளுண்க ணுள்ள தொருநோக்கு, நோய்நோக்கு" குறள். க0கா.

ச. ஐஞ்சீரடுக்கி வந்ததற்கு "இவடான், றிருந்தாச்...........நுசுப்பு" என்னும்" பகுதி மேற்கோள்; தொல். செய். சூ. கருச. நச்.

ரு. வட்டி - கடகப்பெட்டி, இஃது உட்புறம் பனங்குருத்தாலும் வெளிப் புறம் பனையகணியாலும் தெற்றி மிடையப்படுவது.

(பிரதிபேதம்) * ஆயர்மகள், †வந்த.........சொருகிவைத்த, ‡இருடிகளுக்குமுட்படநெஞ்சு || என்றது. ÷திருந்தாச், × கூழைவட்டி, + வாலிதி னுண்ணிதாத்தோன்று.

தோன்ற வீசித் தன் அழகிற்குத் திருந்தியிராத (க) சுமையினையுடையளாய் மெய்க்கட் பூண்டனவன்றிக் கழுத்திடத்திலும் அழகையுடைய மகரக்குழை யாகேதுண்டான அழகையுடையவள்; அதுவேயன்றி அல்குலுந் தோளுஞ் சுமந்து இளைத்த நுசுப்புக் கண்ணியெடுக்கலா மென்மைக்கேற்ப நுண்ணிதாய் *நன்றாய்த் தோன்றாநிற்கும். எ - று.

கஎ இடைதெரியா வேள ரிருவருந் தத்த
†முடைவனப் பெல்லா மிவட்கீத்தார் கொல்லோ
‡படையிடுவான் மற்கண்டீர் காமன் (உ) மடையடும்
பாலொடு கோட்டம் புகின்

எ-து: தம்மில்வேறு||பெயர்விளங்கிஅழகையுடையாராகிய(ங)உருப்பசியும் திலோத்தமையும் தம்முடைய தம்முடைய அழகையெல்லாம் இவட்குக் கொடுத்தார் கொல்லோ? அது தெரிந்ததில்லை;+இவள் தெய்வத்திற்குப் பலியாகச்சமைக்கும் பாலோடே காமன்கோயிலிலேசெல்லில்(ச)அக்காமனும் நெஞ்சழிந்து தன்கையிற் படையை மிகவும்×போகவிடுவன். எ - று.

---

க. "தந்தை யிலேச்சுமடன்" என்புழி, சுமடென்பது சுமையென்னும் பொருட்டுப்போலும்; "குழிசி பூஞ்சுமட்டிரீஇ" என்புழி இது சும்மாடென்னும் பொருளில் வருகிறது.

உ. "பான்மடை கொடுத்துப் பண்பிற் பெயர்வோ, ளாயர் முதுமகள்" (சிலப். கடு: கஎ - ககஅ.) என்பதனாலும் ஆய்ச்சியர் தெய்வத் தருள்பெறப் பலியாக அட்டபாலளித்தல் அறிய லாகும்.

ங. உருப்பசியும் திலோத்தமையும் அழகிய மகளிர்க்கு உவமை கூறும்படி மிகச் சிறந்த அழகுடையராய் விளங்கும் தேவதாசியர்; இவர்களுள் உருப்பசியாவாள் திருமாலின்கூறாகிய நாராயணமுனிவர் வதரிகாரணியத்துத் தவஞ் செய்வதை அழித்தற் பொருட்டுத் தேவேந்திரனால் விடுக்கப்பட்ட தேவதாசியர்கள் வெட்கியோடும்படி அம்முனிவரால் தமது தொடையில் உண்டாக்கப்பெற்றவளென்றும் ஊரு (தொடை) வில் தோன்றினமையால் அவளுக்கு ஊர்வசி யென்று பெயர்வந்த தென்றும் சொல்லுவர். அப்பெயர் உருப்பசி யெனத்திரிந்து நின்றது. திலோத்தமையாவாள் பிரமதேவரால் அழகுடையபொருளொவ்வொன் றினுமுள்ள சிறந்த அழகை எள்ளளவு எள்ளளவாக எடுத்துச்சேர்த்துப் படைக்கப் பெற்றவளென்ப. இப்பெயரே இப்பொருளை அறிவிக்கும்.

ச. "சிலை வல்லான் போலுஞ் செறிவினன்" கலி. (கசங: ஙச.) என்று சிறப்பிக்கப் படுதல் கருதி, காமனும் என உம்மை கொடுத்தார்.

(பிரதிபேதம்) * நன்றாயதோன்றாநிற்கும், † உடையவனப்பெல்லாமிவட்கீய்த்தார், ‡ படைவிடுவான், || பேர்விளங்கி, + அவள். × போடுவன்.

காயன் மாயோன்மகனுதலின் அவனும் அந்நிலத்திற்குத் தெய்வமாதல் "அவ்வகைபிறவும்" (க) என்றவழி வகை என்றதனாற் கொள்ளப்பட்டது. தெரியாளன்பது *செய்தெனெச்சம். இருவர், திருமகளும் † பூமகளுமெனினு மாம். (உ)கண்டீர் வினாவொடு சிவணிநின்ற அசை.

உக (ங)இவடான்

இவடான் ‡என்று நெஞ்சொடு வினையினன்.

வருந்தநோய் செய்திறப்பி னல்லான் மருந்தல்லள்
யார்க்கு மணங்காதல் சான்றாளென் றார்ப்பெண்டிர்
மாங்காய் ||நறுங்காடி கூட்டுவேம் யாங்கு
மெழுநின் (ச) ÷ கிளையொடு போகென்று தத்தங்
கொழுநரைப் போகாமற் காத்து முழுநாளும்
வாயி லடைப்ப வரும்

எ - து: அதுவேயுமன்றித் தன்னை நோக்கினாரெல்லார்க்கும் வருத்த மாதல் அமைந்தவளென்று கருதிஇவ்வூர்களிற் பெண்டிரெல்லாரும் மோருக்கு மாறாக மாங்காயை நறிய × ஊறுகாயாகக் கூட்டி நுகரக்கடவேம்; நீ எவ்விடத் தும் ✝ போய் மோர்முதலியன விற்றுத்திரியும் நின் சுற்றத்தாருடனே போவாயாக என்று கூறித் தம்முடைய கணவரைப் புறத்துப் போகாமற் காத்துக்கொண்டு இவள்வருங்காலமேயன்றி ஒருநாள்முழுதும் வாயிலை இடை

---

க. தொல். அகத். சூ. கஅ. இவ்வுரைகாரர் தொல். அகத். ரு - ஆம் சூத்திரவுரையில் "படையிடுவான்.........புகின்" என்னும் பகுதியை மேற்கோள் காட்டி இக்குறிப்பையும் எழுதியுள்ளார்.

உ. "படையிடுவான்..........புகின்" என்னும் பகுதி கண்டீரென்பது அசைநிலையாய்வருதற்கு மேற்; தொல். எச்ச. சூ. உக. 'கண்டீர்' தெய்.

ங. ஐஞ்சீரடுக்கிய சுரிதகத்தான்வந்ததற்கு "இவடான், வருந்தநோய்...... ......வரும்" என்னும் பகுதி மேற்கோள்: தொல்.செய்.சூ. கருச. நச்.

ச. "கிளையொடுங் காக்கதன் கொழுநன் மார்பே" குறுந். அ0. என்னுந் தொடர் இங்கே நோக்கற்பாலது.

ரு. காடியென்பது ஊறுகாயென்னும் பொருளில் வருதலை, "காடி வைத்த கலனுடை மூக்கின்" என்புழி, 'புளியங்காய் நெல்லிக்காய் முதலியன ஊறவிட்டு வைத்ததனைக் காடியென்றார்' என்று இவர் எழுதியிருக்கும் விளக்கத்தால் அறிக.

(பிரதிபேதம்) * செய்ததெனெச்சம், ✝ பூமகளுமாம் கண்டீர், ‡ என்றது நெஞ்சொடு || நறுங்கடி 'கூட்டு,' ÷ கிளையொடும் போவென்று, × ஊறுகறியாகக், ✝போயம்மோர்.

யிட்டுக்கொண்டு நிற்கும்படியாக வாராநிற்கும் ; இவள் தான் மனம்வருந்தும் படி நோயைச்செய்து போவதன்றி அந் நோய்தீர்க்கும் *மருந்தல்லளெனச் சொல்லெதிர் பெறாஅன் சொல்லி யின்புற்றான். எ - று.

சுற்றத்தொடு போவென்றார், அவரோடு இவள் போங்காலத்து, தங் கணவற்குப்பின் †சேறல் இயையா[ன]தென்பது பற்றி.

இதனால், இவனுக்கு அசைவு பிறந்தது.

இது காமஞ்சாலாவிளமையோளென்னும்(க)சூத்திரத்து வினைவலபாங்கி னோரும் இங்ஙனங் கூறலா மென்றமைத்தாம்.

மருந்தல்லளென்றது, காமஞ்சாலா விளமையோளென்றது.

மோர்விற்கின்றமை கூற வினைவலபாங்கினளாயிற்று.

இஃது இவடானெனை ஐஞ்சீர் அடுக்கிய சுரிதகத்தான் இற்ற கலிவெண் பாட்டு. (கூ)

(ககO.) கடிகொ ளிருங்காப்பிற் புல்லினத் தாயர்
குடிதொறு நல்லாரை வேண்டுதி யெல்லா
விடுதேண் மருந்தோநின் வேட்கை தொடுதரத்
துன்னித்தந் தாங்கே நகைகுறித் தெம்மைத்
திளைத்தற் கெளியமாக் கண்டை யளைக்கெளியாள்
வெண்ணெய்க்கு மன்ன ளெனக்கொண்டா யொண்ணுதா
லாங்குநீ கூறி னனைத்தாக நீங்குக;

அ அச்சத்தான் மாறி யசைவினாற் போத்தந்து
நிச்சந் தடுமாறு மெல்லிய லாய்மகண்
மத்தம் பிணித்த கயிறுபோ லின்னலஞ்
சுற்றிச் சுழலுமென் னெஞ்சு;

கஉ விடிந்த பொழுதினு மில்வயிற் போகாது
கொடுந்தொழுவி னுட்பட்ட கன்றிற்குச் சூழுங்
கடுஞ்சூலா னாகுபோ னிற்கண்டு நாளு
நடுங்கஞ ருற்றதென் னெஞ்சு;

கசு எவ்வ மிகுதர வெந்திறத் தெஞ்ஞான்று
நெய்கடை பாலிற் பயன்யாது மின்றாகிக்

---

க. தொல். அகத். சூ. ௫௦.

(பிரதிபேதம்) * மருந்தல்லள். எ - று. மருந்தல்லளென்றது காமஞ்...........ளென்றது மோரை விற்கின்றமைகூற.........ளாயிற்று. இது இவடானெனை வஞ்சீரடுக்கிய ...பாட்டு. †சேறலியையாமையான் என்பது.

கைதோயன் மாத்திரை யல்லது செய்தி
யறியா தளித்தென் னுயிர் ;
அன்னையோ, மன்றத்துக் கண்டாங்கே சான்றோர் மகளிரை
யின்றி யமையேனென் றின்னவுஞ் சொல்லுவாய்
நின்றாய்நீ சென்றீ யெமர்காண்பர் நாளையுங்
கன்றொடு சேறும் புலத்து.

இது வினைவலபாங்கினால் *வெண்ணெய் (௧) நொடைக்குச் சென்ற தலைவியைக்கண்டு வினைவலபாங்கிற்றலைவன் மெய்தீண்டித் தனது ஆற்றாமையை அறிவித்துழி, அவள் ஈண்டுப் பிறரறிவர், நாளைக்கன்றொடு †சேறுமென இடங்கூறியது.

இதன் பொருள்.

கடிகொ ளிருங்(௨)காப்பிற்(௩)புல்லினத் தாயர்
குடிதொறு நல்லாரை வேண்டுதி யெல்லா
விடுதேன் மருந்தோநின் ‡வேட்கை தொடுதரத்
துன்னித்தந் தாங்கே நகைகுறித் தெம்மைத்
திளைத்தற் கெளியமாக் கண்டை யளைக்கெளியாள்
||வெண்ணெய்க்கு மன்ன ளெனக்கொண்டா ÷யொண்ணுதா
லாங்குநீ கூறி னனைத்தாக நீங்குக

எ - து: எடா! வரைவுகொண்ட பெரிய குறும்பிடத்தே இருக்கின்ற ஆட்டிடையருடைய குடிதோறுமுள்ள மகளிரை விரும்பாநின்றாய்; =நினது காம வேட்கை எறிந்த தேளுக்குக் கடுப்பற +அப்பொழுதே இட்டுத் தீர்க்கும் மருந்துபோல வேட்கைதோன்றியபொழுதே கூடத்தீர்க்க வேண்டுவதொன்றோ? அல்லவே! நின்னோடு ஓர்நகைசெய்தலைக் குறித்து நீ என் மெய்யைத் தீண்டுதற்கு யாம் நின்னை அணைந்து மெய்யைத் தந்த +அப்பொழுதே, எம்மைப் புணர்ச்சிக்கும் ×எளியேமாக நீ மனத்தாலேகண்டாய்; அங்ஙனங் கண்டது, மோரை வேண்டினார்க்குச் சிறிது மோரைவார்த்து எளியளானவளொருத்தி வெண்ணெயை வேண்டினார்க்கு**வெண்ணெயை இட்டு எளியளா

௧. நொடைக்கு - விற்பதற்கு. இது நொடுவென்னும் பகுதியடியாகப் பிறந்த தொழிற் பெயர்.

௨. காப்பினென்றும் படிக்கலாம்.

௩. "புல்லினத்தாயர்" (கலி. ௧0௩: ௬௭.) என்பது மதன்குறிப்பும்பார்க்க.

(பிரதிபேதம்) * வெண்ணை, † சென்றுமென, ‡ வாழ்க்கைதொடிதர, || வெண்ணைக்கும் ÷ ஒண்ணுதலாங்கு, = நின்காமவாட்கை, + இப்பொழுதே, × எளியேமாதனீ. ** வெண்ணையை.

பிருப்பள் என்று நெஞ்சாலே * கருதினாற்போலே இருந்ததென்றாள் ; அது கேட்ட தலைவன் ஒள்ளிய நுதலினையுடையாய் ! அங்ஙனம் நீ கூட்டத்தை மறுத்துக் கூறுவையாயின், அக்கூட்டம் இல்லையாவதாக இனி நின்னை விட்டு நீங்குக என்றான். எ - று.

அ அச்சத்தான் மாறி யசைவினாற் போத்தந்து
நிச்சந் தடுமாறு மெல்லிய லாய்மகண்
(க)மத்தம் பிணித்த கயிறுபோ னின்னலஞ்
சுற்றிச் சுழலுமென் னெஞ்சு

எ - து: மெல்லிய இயல்பினையுடைய ஆயச்சாதியிற் பிறந்த மகள் ! மத்தைச் † சுற்றிய கயிறுபோல ‡ நின்னுடைய நலத்தைச் சூழ்ந்துகொண்டு சுழன்றுதிரிகின்ற என்னுடைய நெஞ்சு நீ கூறிய கூற்றினால் தனக்கு உண்டாகிய அச்சத்தினாலே நின்னிடத்துநின்று மீண்டு தான் நிலைபெறமாட்டாது பின்னரும் அசைகின்ற அசைவாலே என்னிடத்தினின்றும் புறப்பட்டு நாடோறும் மீளத் தடுமாறாநிற்கும் என்றான். எ - று.

கஉ விடிந்த பொழுதினு மில்வயிற் போகாது
(உ)கொடுங்தொழுவி னுட்பட்ட கன்றிற் சுழுங்
(ங)கடுஞ்சூலா நாகுபோ னிற்கண்டு நாளு
|| நடுங்கஞ ருற்றதென் னெஞ்சு

---

க. (அ) "மத்தம் புல்லிய கயிற்றின் மற்றவ, ரத்த லைவிடி னித்த லைவிடார்" சீவக. சஉங. (ஆ) "போயொருகான் மீளும் புகுந்தொருகான் மீண்டேகு. மாயர் நொணர்ந்த வடுபாலின்—றேயல், கடைவார்தங் கைபோலு மாயிற்றே காலன், வடிவாய வேலான் மனம்" நள. கலி தொடர். கOங.

உ. "நோக்கிநின் றாள்சிறைப் பட்டதன், காவற்கன் றிற்புனிற் றாவன கார்மயிற் சாயலே" சீவக. ககடுங. (ஆ) "கன்று தடையுண் டெதிரழைக்கக் கதறிக் கனைக்கும் புனிற்றாப்போல்" பெரிய.கழறிற். கஙடு. (இ) "கன்று பிடியுறத் தீங்குறு, தாயைப்போல" கம்ப. பிணிவீட்டு. ஙசு. (ஈ) "கன்றெழி புனிற்ற வென்னக் கதறினர்" கந்த. பானு. உOடு.(உ) "அணித்தாவின்ற,கன்றெஞ்ச வினைந்தினைந்து மறுகாநின்ற கபிலையைப்போலென் பட்டாள்" வில்லி. பதினேழாம்போர். உருஎ. என்பவையும் (ஊ) இந்நூற்பக்கம் சஅடு: உ-வது குறிப்பில் இவ்விடத்திற்குப் பொருந்துவனவும் ஈண்டு அறிதற்பாலன.

ங. கடுஞ்சூல் என்பது (அ) "கடுஞ்சூன் மந்தி" பெரும். ஙகடு. (ஆ) "பிடிக்குற்ற, கடுஞ்சூல் வயாவிற்கு" கலி. சO: உசு-உஎ. (இ) "கடுஞ்

(பிரதிபேதம்) * கருதினைப்போலே, † சுழற்றிய. ‡ நின்னலஞ்சூழ்ந்து, || நடுங்கஞரிட்டதென்.

எ - து: என்று, பின்னும் முதற்சூல்கொண்ட பசு, இல்லிடத்தினின்றுந் *தூரிய இடத்தில் இடப்படாத வளைந்த தொழுவினுள்ளே கட்டிவைத்த தன் கன்றிற்குப் பொழுது விடிந்த காலத்திலும் மேயப்போகாது சூழ்ந்துதிரியும்; அந்நாகு போலே நின்னைக் கண்டு என்னெஞ்சு நாடோறும் (க) நடுங்குகின்ற வருத்தத்தை உற்றதுகாணென்றான். எ - று.

(உ)நாகு, ஈண்டு இளமை.

கசு எவ்வ மிகுதர வெந்திறத் தெஞ்ஞான்று
(ங)நெய்கடை பாலிற் பயன்யாது மின்றாகிக்
கைதோயன் மாத்திரை யல்லது செய்கி
யறியா தளித்தென் னுயிர்

எ - து: †என்று பின்னரும் என்னிடத்து‡எந்நாளும் வருத்தம் மிகுகையி னாலே அளித்தக்க என்னுடைய உயிர் மருந்தையிட்டு நெய்யைக் கடைந்து வாங்கின பாலிடத்து நுகர்வார்க்குச் சிறிதும் ||பயன்படுதலில்லையாய் அவர் கைசென்று தோய்ந்து விடுகின்ற அளவாய்விட்டது; அதுவும் ஒழிய மேல் தான் செய்வதோர் செயலையும் அறியாதென்றான். எ - று.

என்றதனால், நீ என் உயிரிடத்துள்ள நன்மையை ஒருவழியாலே வாங்கிக் கொண்டு விட்டாயென்றும் அது பின்னர் நீ பயன் கொள்ளுங்காலத்து நினக்கு ஓர் இன்பந் +தருதல் ஆற்றாதென்றுங் கூறினானாயிற்று.

---

சூன் மடப்பிடி" அகம். எஅ: சு. என விலங்குகட்கும், (௬) "கடுஞ் சூன் மகளிர்" மது. சுOக; (உ) "கடுஞ்சூற் சிறுவன்" (௨௱) "கடுஞ் சூன் மகளே" ஐங். நOக, ந அசு; (எ) "கடுஞ்சூன் மகளிர்" மணி. எ: அஉ. என மக்கட்கும் கூறப்படுதலுமன்றி. (ஏ) "கடுஞ்சூல் முண் டகங் கதிர்மணி கழாஅலவும்" சிறுபாண். கசஅ. என ஓரறிவுயிர்க்குங் கூறப்படுகிறது.

க. "நடுங்கஞர் - நடுங்குதற்கு ஏதுவாய அஞர்" கலி. நிங: கஅ; குறள். கOஅசு. உரைபார்க்க.

உ. நாகு, ஈண்டு இளமை யென்றது: நாகென்பதனை, (தொல். மர. சூ. ங.) பெண்பாற் பெயராகக் கொள்ளாது (தொல். மர. சூ. உசு.) இளமைப் பெயராகக்கொண்டு இளமையையுடைய கன்றென்று பொருள்கொள்ளவேண்டுமென்று கருதிப்போலும்; இஃது இப்பொரு ளில் வருவது, "நல்லாவின் கன்றாயி னாகும் விலைபெறாஉம்" (நாலடி. ககரு.) என்பதனாலும் அறியலாகும்.

ங. பாலைக் காய்ச்சாமலே இயந்திரத்தினுதவியால் அதிலுள்ள வெண்ணெ யை யெடுத்துவிட்டு, சென்னை முதலிய இடங்களில் விற்கும் பால் உண்பவர்க்குப் பயன்படாமை இங்கே அறிதற்பாலது.

(பிரதிபேதம்) * தூரிய இடப்படாத. † பின்னரும், ‡ எந்நாளும். ||பயன்படுதலில்லையாய வாசைசென்று, + தருமாதலாற்றாதென்றும்.

உ0 (ங)அன்னையோ, மன்றத்துக் *கண்டாங்கே சான்றோர் மகளிரை
†யின்றி யமைமயேனென் றின்னவுஞ் சொல்லுவாய்
நின்றாய்நீ சென்றீ யெமர் காண்பர் ‡நாளையுங்
கன்றொடு சேறும் புலத்து

எ - து: அதுகேட்டவள், நீ அத்தன்மையையுடையையோ என அருள் செய்து, பல்லுந் திரிகின்ற மன்றத்திலே எதிர்ப்பட்ட அப்பொழுதேநின்னைப் போலன்றி அமைதியை யுடையோர் மகளிரை இவ்விடத்துப் புணர்ச்சி யின்றாயின் உயிர்வாழேனென்று நின்றாய்; இவ்விடத்து நின்றால் எம்முடையசுற்றத்தார் காண்பர்; இனிஇன்றேயன்றி நாளையும் புலத்திலே கன்று மேய்த்தற்குப் போவேம்; ஆண்டு வந்து இத்தன்மையன || உற்றவை மேற் சொல்லுவாய்; நீதான்இனி ஈண்டு நில்லாமற்போவென இடங்கூறினாள்.எ-று.

இதனால், இருவர்க்கும் புணர்ச்சிவேட்கை பிறந்தது.

இது நெடுவெண்பாட்டும் ×பின்னர் மூன்றுவெண்பாட்டும் தனிச்சொல்லும் சுரிதகமும் பெற்ற அகப்புறக் கலிவெண்பாட்டு. (கO)

(கக்க.) (உ) தீம்பால் கறந்த கலமாற்றிக் (ங)கன்றெல்லாந்
தாம்பிற் பிணித்து மனைநிறீஇ யாய்தந்த

---

க. பழிதீர் முறுவல் சிறிதே தோற்றலென்பதற்கு, (அ) "அன்னையோ.........புலத்து" என்னும் பகுதியை மேற்கோள் காட்டி, இதனுள் 'அன்னையோ' என்பது நகையொடு கூடிய சொல் என்பர் இளம்பூரணர்; தொல். களவி. சூ. உ0. (ஆ) வறிது நகை தோற்றற்கு "அன்னையோ.........சொல்லுவாய்" என்னும் பகுதியை மேற்கோள் காட்டுவர் நாற்கவிராசநம்பியும்; நாற்கவி. சூ. கஉஎ.

உ. (அ) "ஆயர் வேட்டுவர்" என்னும் (தொல். அகத். உக.) சூத்திர வுரையில், 'ஆயர் வேட்டுவரென்னும் இரண்டு பெயரே எடுத்து ஓதினரேனும் ஒன்றெனமுடித்தலான் அந்நிலங்கட்குரிய ஏனைப்பெயர்களான் வருவனவுங் கொள்க' என்றுகூறி, அதற்கு இச்செய்யுளை மேற்கோள் காட்டினர் நச்சினார்க்கினியர்; (ஆ) இதனைத் தலைமகள் உள்ளப் புணர்ச்சியின் உரிமைபூண்டிருந்தவாற்றிற்கும் வரைந்தெய்தக் கூறலுற்ற வாற்றிற்கும் (தொல். களவி. சூ. அ.) (இ) * பிறதளையான் (* இயற்றளையான் என்றும் பிரதிபேதம்) வந்த கலிவெண்பாட்டுக்கும் (தொல். செய். சூ. கசகூ. 'ஒருபொருள்') மேற்கோள் காட்டினர் இளம்பூரணர். (ஈ) இந்நூற்பக்கம் எகஎ: க-ஆம் குறிப்பும்பார்க்க.

ங. (அ) "சிறுதாம்பு தொடுத்த பசலைக்கன்றின்" முல்லைப்பாட்டு. கஉ. (ஆ)"கன்று தாம்பரிந்து" சீவக. சஉஉ.

(பிரதிபேதம்) * கண்டாங்குச் சான்றோர், † அன்றியமையலனென். ‡ நாளையெங் கன்றொடு, || உற்றமேற். × பின்னிரண்டுவெண்பாட்டும், பின்னரிரண்டுவெண்பாட்டும்.

(௧)பூங்கரை நீலம் *புடைதாழ மெய்யசைஇப்(௨)பாங்கரு
முல்லையுந் †தாய (௩)பாட்டங்காற் றேழிநம்
(௪)புல்லினத் தாயர் மகளிரோ டெல்லா
மொருங்கு விளையாட வவ்வழி வந்த
(௫)குருந்தம்பூங் கண்ணிப் பொதுவன்மற் றென்னை
‡முற்றிழை யேஎர் மடநல்லாய் நீயாடுஞ்
சிற்றில் புனைகோ சிறிதென்றா னெல்லாநீ
பெற்றேம்யா மென்று பிறர்செய்த வில்லிருப்பாய்
கற்ற திலைமன்ற காணென்றேன் ||முற்றிழாய்
(௬)தாதுசூழ் ÷கூந்தற் றகைபெறத் தைஇய
கோதை புனைகோ நினக்கென்றா னெல்லாநீ
யேதிலார் தந்தபூக் ×கொள்வாய் நனிமிகப்
பேதையை மன்ற பெரிதென்றேன் ┼மாதரா
யைய (௭)பிதிர்ந்த (௮)சுணங்கணி மென்முலைமேற்
றொய்யி லெழுதுகோ மற்றென்றான் யாம்பிறர்

---

௧. "பூங்கரை நீலந் தழீஇ" கலி. ௧௧௫: ௧௪.

௨. 'பாங்கரும்' என்பதை நான்காமடியின் முதற்சீராகக்கொண்டு அதனை ஐஞ்சீரடியாக்கலுமாம்.

௩. "பாங்கரும் பாட்டங்காற் கன்றொடு செல்வேம்" கலி, ௧௧௬: ௧.

௪. இந்நூற்பக்கம் ௬௮எ: ௧-ஆங் குறிப்புப்பார்க்க.

௫. (அ) "குருந்தங் கண்ணிக் கோவலர்" ஐங். ௪௩௬. (ஆ) "குருந்தலை வான்படலை சூடிச் சுரும்பார்ப்ப, வாயன் புகுதரும் போழ்தினான்" ஐந் - எழு. ௨அ. (இ) "குருந்தமென் கண்ணி சூடுங் கோவலர் கொழுந்து" பாகவதம். (௧0) வேய்ங்குழலிசைத்த. ௧௬.

௬. "தாதுசூழ் கூந்தல்" என்பதனொடு, (அ) "கொய்பூந், தாதுகொண் டளகத் தப்பி" சீவக. ௨௬௪அ; (ஆ) "போதுகொண் டணியிற் பொறுக்க லாற்றாத், தாதுகொண் டிருந்த தாழிருங் கூந்தலர்" பெருங். (௧) ௪௩: ௧௪0 - ௧௪௧. என்பவை ஒப்புநோக்கற்பாலன.

எ. (அ) "சுணங்கு பிதிர்ந்து........வெம்முலை" சிறுபாண். ௨௪ - ௨௬. (ஆ) "பிதிரு முலைமேற் சுணங்கு" திணைமொழி. ௨அ. (இ) "பிதிர் சுணங்கணி வெம்முலை" நைடத. வேற்றுரு. ௬.

அ. "சுணங்கணி வனமுலை" நற். ௬: ௬; கலி. ௬0: ௧.

(பிரதிபேதம்) * புடைத்தாழ, † தாயப்பாட்டங்கால், ‡ முற்றிழையொணமட, முற்றிழை யேர்மட. || முற்றிய. ÷ கூந்தறகை. × கொள்வானனி, ┼ ஆயிழாய்.

*செய்புற நோக்கி யிருத்துமோ நீபெரிது
மையலை மாதோ †விடுகென்றேன் றையலாய்
சொல்லிய வாறெல்லா மாறுமா றியான்பெயர்ப்ப
வல்லாந்தான் போலப் பெயர்ந்தா னவனைநீ
யாயர் மகளி (க)ரியல்புரைத் (உ)தெந்தையும்
(ங)யாயு மறிய வுரைத்தீயின் யானுற்ற
நோயுங் களைகுவை மன்.

இது தலைவி ஆயத்திடைத் தலைவனைக் கண்டவாறும் அவனைக்கூறி யனவும்கூறி, தோழியைத் தலைவனை வரைவுகடாவி யாய்க்கு அறத்தோடு நிற்கவேண்டுமென்றது.

இதன் பொருள்.

தோழீ ! இனிய பாலைக் கறந்த கலங்களை அவ்விடத்து நின்றும் எடுத்துவைத்துக் கன்றுகளையெல்லாந் தாம்பாற் கட்டி மனைக்கண்ணே நிறுத்தித் தாய்தந்த பூத்தொழிலினையுங்கரையினையுமுடைய நீலத்தையுடைய ஆடை பக்கத்தே தாழாநிற்க மெய்யை அசைத்துப் (ச) பாங்கர்க்கொடியும் முல்லைக்கொடியும்பரந்த (ரு)முற்றூட்டாகிய தோட்டத்திடத்தே நம்முடைய ஆட்டினத்தையுடைய ஆயர்மகளிரோடே(சு)மற்றை இருகூற்றில் ‡ஆயர்மகளி ரெல்லாருஞ் சேர விளையாடாநிற்ப அவ்விடத்தேவந்த குருந்தம்பூவாற் செய்த கண்ணியையுடைய பொதுவன் ||பின்னை என்னைநோக்கிச் சூழ்ந்த அணிகலங் களையும் ÷அழகினையும் மடப்பத்தையுமுடைய நல்லாய்! நீ இழைத்து விளை யாடுஞ் சிற்றிலை யானுஞ் சிறிது புனைவேனோ என்றான்; யான் அதற்கு எடா!

க. 'இயல்' என்பது 'இலக்கணம்' என்னும் பொருளில் வருதல் பெரு வழக்கு. 'இயல்பு' என்பதும் அப்பொருளில்வருதலை(அ)"அந்நான்கே மொழிபுண ரியல்பே" (ஆ) "இயல்புற நாடின்" என்னுந் தொல்காப் பியப்பகுதிகட்கு இவரெழுதியிருக்கும் உரையானுமறிக.

உ. "எந்தையும்...........மன்" என்பது குரவரை வரைவெதிர் கொள்ளு வித்தற்கு மேற்கோள்; நாற்கவி. சூ. கசுச.

ங. "வாவியுறையு மடவனமே யென்னுடைய, ஆவி யுவந்தளித்தா யாதி யால் - காவினிடைத், தேர்வேந்தற் கென்னிலைமை சென்றுரைத்தி" நள. சுயம்வர. ருO.

ச. இந்நூற்பக்கம் சுஙஅ: ரு-ஆம் குறிப்புப் பார்க்க.

ரு. முற்றூட்டு - ஸர்வமானியம்.

சு. மற்றை இருகூறு - பசுவினம், எருமையினம்.

(பிரதிபேதம்) * செய்வுற. † விடுவென்றேன். ‡ ஆயமகளிர், || பின்னேயென்னை. ÷ அழ கினையுமுடையமடப்பத்தையுடைய நல்லாளேநீ.

வரைந்துகொண்டு எமக்கு ஓரில்லே அமைத்தலறியாயாய்த் தன் சுற்றத்தார் எடுத்த இல்லிலே இவளிருக்க யாம்பெற்றேமென்று நினைத்திருக்குமவன் நீ; ஆதலால், உறுதியாக நீ உலகியலிற்கற்றதொன்றும் இல்லேக்காணென்றேன்; *அதன்பின்புமுற்றிழாய்! கட்டினமாலையை நினக்குத் தாதுசூழ்ந்தகூந்தலிலே அழகு பெறப் புனேவேனே என்றான்; யான் †அதற்கு எடா! நீ வரைந்து கொண்டு, விடாமற் கோதை புனேதல்அறியாயாய், (க)எஞ் சுற்றத்தார் மிகக் கொண்டுவந்து சூட்டின பூவை மிகப் பூவென்றுகொள்ளுமவன் நீ; ‡ஆதலால் உலகில் உறுதியாகப் பெரிதும் பேதைத்தன்மையையுடையை என்றேன்; அதன்பின்பு || மாதராய்! வியக்கத்தக்க சிதறின சுணங்கு அணிந்த மெல்லிய (உ)முலேமேலே தொய்யில்எழுதுங் குழம்பால் எழுதுவேனே என்றான்; யான் அதற்கு நீ வரைந்துகொண்டு வெளியாக எழுதுதல் நின் மனத்து இல்லே,யாம் எப்பொழுதும் (ங) என்சுற்றத்தார் கோலஞ்செய்து எழுதுங்காலம் பார்த் ÷திருப்பேமோ? இனி இங்ஙனம் இருத்தலாற்றேம், ∴இங்ஙனங்கூறுதலின் நீ பெரிதும் மயக்கத்தையுடையை, இங்ஙனம் × அன்புள்ளார்போலக் கூறு கின்றாய், அவற்றைத்தவிர் என்று கூறினேன்; தையலாய்! அவற்றின் பின்னர் அவன் சொன்ன நெறிகளெல்லாவற்றையும் +இங்ஙனம் மாறாய் மாறாய் யான் மறுக்க, = இனிக் களவு நிகழாதென்று(ச) ** அலமந்தான் போலே மீண்டு போயினான்; அவனே நீ ஆயர்மகளிரை ††வரைந்துகொள்ளும் இலக்கணத்தை அறிவித்து, பின்னர் என்னுடைய தந்தையும் (ரு) யாயும் இக்களவொழுக்கம் அறியும்படி அறத்தொடு ‡‡ நிலேவகையால் உரைப்பை

க. "பண்ணித்தமர்தந் தொருபுறந் தைஇய, கண்ணி" கலி. கoகூ: கூ-கo.

உ. "இளமுலேமேற், றொய்யி லெழுதவும் வல்லன்" கலி. கசங:நஉ-ஙங.

ங. "என்றேனென்மேற், கரும்பெழுது தொய்யிற்கு" (கலி. சுங: சு - எ.) என்பதனுரையால் மகளிர்க்கு அவர்கணவரேயன்றிச் சுற்றத்தாரும் கோலஞ்செய்தலுண்டென்பது அறியலாகும்.

ச. அலமருதல் - சுழலுதல்; என்றது, மனமயங்குதலே. இப்பொருளில் அல்லாத்தலென்னுஞ்சொல் வருதலே, (அ) "அல்லாந்தா ரலவுற" (கலி. உகூ: உ) (ஆ) "அல்லாந் தவணடுங்க" (இ) "அல்லாந் தகன் கோயி லாழ்கடல்போ லாயிற்றே" (ஈ) "அலறி யல்லாப்ப போன் றாரே" (சீவக. உககுங,உககுச, உககுகு) என்பவற்றின் உரையாலும் அறிக. (உ) "அல்லாப்புற் றஞ்சினேன்" (சீவக. ஙoகஎ) என்புழி, அல்லாப்பென்பதற்கு, வருத்தமென்னும்பொருளும்காணப்படுகிறது.

ரு. யாய் - என் தாய். (அ) "யாயு ஞாயும் யாரா கியரோ" குறுந். சo. (ஆ)"யாயேகண்ணினுங் கடுங்காதலளே" அகம்.கஉ: க;(இ)"நீனின்ற

(பிரதிபேதம்) * அதன்பின்பு கட்டினமாலேயை நினக்கு முற்றினதாது, † அதற்குவரைந்து, ‡ ஆதலாலுறுதியாக. || ஆயிழாய், ÷ இருப்போமோ. ∴ அங்ஙனம், × அன் புள்ளாரைப்போல, + இங்ஙனமாறாயான். = இக்களவு, ** அலமாந்தான். †† வந்துகொள்ளும். ‡‡ நிலேவகையாயுரைப்பையாயின்.

யாயின், அவன் உற்ற நோயன்றி யான் உற்ற நோயையும் மிகப்போக்குவை; இதனைக் குறிக்கொள் என்றாள். எ-று.

இதனால், தலைவிக்கு அசைவு பிறந்தது.

இது (க)பன்னீரடியின் இகந்து தளையும் விரவி ஐஞ்சீரடியும்வந்து ஒரு பொருணுதலாது வந்த கலிவெண்பாட்டு. (கக)

(ககஉ.) யாரிவ னென்னை விலக்குவா னீருளார்
பூந்தா மரைப்போது தந்த விரவுத்தார்க்
கல்லாப் பொதுவனை நீமாறு நின்னொடு
சொல்லலோம் பென்றா ரெமர்;

ரு எல்லா, கடாஅய கண்ணாற் கலைஇயநோய் செய்யு
நடாஅக் கரும்பமன்ற தோளாரைக் காணின்
விடாஅலோம் பென்றா ரெமர்;

அ கடாஅயார், நல்லாரைக் காணின் விலக்கி நயந்தவர்
பல்லித ழுண்கண்ணுந் தோளும் புகழ்பாட
நல்லது கற்பித்தார் மன்ற நுமர்பெரிதும்
வல்ல ரெமர்கட் செயல்;

கஉ ஓஓ, வழங்காப் பொழுதுநீ கன்றுமேய்ப் பாய்போல்
வழங்க லறிவா ருரையாரே லெம்மை
யிகழ்ந்தாரே யன்றோ வெமர்;

ஒக்கு, மறிவல்யா னெல்லா விடு;

கரு விடேன்யா, னென்னீ குறித்த திருங்கூந்தா
னின்னையென் முன்னின்று
சொல்லலோம் பென்றமை யன்றி யவனைநீ
புல்லலோம் பென்ற துடையரோ மெல்ல

---

படிவத்தா னெடியோனை முதற்பயந்த, தாயென்று முதுமறை பரவி னும், யாயென் றல்ல தியாந்துணி யலமே" (தொல். செய். சூ. கஅக. பேர். உரை.மேற்கோள்) என்பவையும் இது தன்மையொடடுத்தபெய ரென்று கல்லாடரும் தன்மையொடொட்டிய பெயரென்று நச்சினார்க் கினியரும் எழுதியிருப்பவையும் இங்கே அறிதற்பாலன.

பன்னிரண்டடியின் இகந்து ஒரு பொருணுதலாதுவரும் கலிவெண் பாட்டுக்கு இச்செய்யுள்மேற்கோள்; தொல். செய். சூ. கருரு. பேர். நச்.

முயங்குநின் முள்ளெயி றுண்கு மெவன்கொலோ
மாயப் பொதுவ னுரைத்த வுரையெல்லாம்
வாயாவ தாயிற் றலைப்பட்டாம் பொய்யாயிற்
சாயலின் மார்பிற் கமழ்தார் குழைத்தநின்
ஞாயித ழுண்கண் பசப்பத் தடமென்றோள்
சாயினு மேஎ ருடைத்து.

இது வினைவலபாங்கிற் றலைவியை ஆற்றிடைக் கண்டு வினைவலபாங் கிற்றலைவன் விலக்கி நகையாடி இருவருஞ் சிலமொழி கூறியவழி அவள் கூட்டத்திற்கு உடம்பட்டது. இது (க)கைக்கிளை.

இதன் பொருள்.

(௨)யாரிவ னென்னை விலக்குவா *னீ(௩)ருளர்
பூந்தா மரைப்போது தந்த விரவுத்தார்க்
(௪)கல்லாப் பொதுவனை நீமாறு நின்னொடு
சொல்லலோம் பென்று மெமர்

எ - து: என்னை விலக்கு வானாகிய இவன் எமக்கு என்ன உறவுடைய னென(௫)முன்னிலைப்புறமொழியாகப் †புலந்துகூறி, பின்னர் அவனைநோக்கி நீரிலே‡அசைகின்ற பொலிவையுடைய தாமரையினது பூவை எமக்கு விளை

---

க. (அ) "கல்லாப் பொதுவனை நீமாறு" எனப்பொதுவியர் கூறலும் "நடாஅக் கரும்பமன்ற தோளாரைக் காணின், விடாஅலோம் பென்று ரெமர்" எனப் பொதுவர் கூறலும் மிக்க காமத்து மிடலாகிய பெருந் திணை யாதலின் முல்லையுட் கோத்தாரென (தொல். அகத். சூ. கந.) உரையில் இவரே வேறு திணையாக எழுதியிருப்பது இங்கே ஆராயத் தக்கது.

௨. தலைவன் சொல்லெதிர் தலைவி உடம்பாடிருப்பவும் இசைவில்லா தாரைப்போல அல்ல கூற்றுக் கூறுதற்கு, 'யாரிவ னென்னை......... .........ரெமர்' என்பதனை மேற்கோள் காட்டி, 'எவன்கொலோ...... .........ஏருடைத்து' என உடம்பாடு கூறினாளாதலின் முற்கூறியது அல்ல கூற்றாயிற்று என்பர் இளம்பூரணர்; தொல். களவி. சூ. கக.

௩. உளர்தல் - அசைதல்.

௪. "கல்லாக் கோவலர்" (ஐங். ௩0௪) என்பது இங்கு ஒப்புநோக்கற் பாலது.

௫. 'யாரைநீ யென்னை விலக்குவாய்' என்றது "யாரிவனென்னை விலக்கு வான்" என்றது முன்னிலையிற் புறமாக மொழிந்தது.

(பிரதிபேதம்) * நீருளபூந்தாமரை. † புலாந்து. ‡ அசைக்கின்ற பூவையுடையதாமரை.

யாடத் தந்த, (க)பலமலர் விரவுதலையுடைத்தாகிய தாரினையுடைய, * நினது சாதித்தன்மை கல்லாதபடி இயல்பாகப்பட்ட இடையனுந் தன்மையை உடையை; இவ்வொழுக்கம் அறிந்தாரைப்போல எம்முடைய சுற்றத்தார் நின்னோடு சிலசொல்லுதலைப் பாதுகாத்துக்கொள் என்றார்; ஆதலால் நீ ஈண்டு நில்லாது போ என்றாள். எ - று.

"எந்நில மருங்கிற் †பூவும்" (உ)என்பதனுல், தாமரை கூறினர்.

ரு எல்லா, கடாஅய (ங)கண்ணாற் கலைஇயநோய் செய்யு
நடாஅக் (ச)கரும்பமன்ற தோளாரைக் காணின்
விடாஅலோம் பென்று ரெமர்

எ - து: அதுகேட்டவன் எடீ! வேட்கை செலுத்தின கண்ணாலே மனத்தைக் கலக்கின காமநோயை உண்டாக்கும் எழுதுகரும்பு நெருங்கின தோளினையுடைய மகளிரைக் கண்டாயாயிற் போகவிடாதே கொள்; அவர் செய்த நோயை அவரைக் கொண்டே பரிகரித்துக்கொள்ளென்று கூறினர் எம்முடைய சுற்றத்தார் என்றான். எ - று.

அ கடாஅயார், நல்லாரைக் காணின் விலக்கி நயந்தவர்
பல்லித ழுண்கண்ணுந் தோளும் புகழ்பாட
நல்லது கற்பித்தார் மன்ற நுமர்பெரிதும்
வல்ல ரெமர்கட் செயல்

எ - து: அதுகேட்டவள் அங்ஙனம் பரிகரித்துக்கொள்ளென்று கூறினவர்கள் அதுவேயன்றி நல்ல மகளிரைக் கண்டாயாயிற் போகாமல் தடுத்து விரும்பி அவருடைய (ரு) பல பூக்களையும் போலுங் கண்ணையும் புகழப்படுந்

---

க. (அ) "பிடவமுங்.........கோடலும்.........காயாவும் பிறவு, மணிகொள மலைந்த கண்ணியர்" (ஆ) "மெல்லிணர்க் கொன்றையு மென்மலர்க் காயாவும், புல்லிலை வெட்சியும் பிடவுந் தளவுங், குல்லையுங் குருந்துங் கோடலும் பாங்கருங், கல்லவுங் கடத்தவுங் கமழ்கண்ணி மலைந்தனர்" கலி. க01: உ - கூ; க0ங: க - ச என்பவையும் இந்நூற்பக்கம் கூங அ: உ-ஆம் குறிப்பும் ஒப்புநோக்கற்பாலன.

உ. தொல். அகத். சூ. கக.

ங. இந்நூற்பக்கம் எ0கூ: ங-ஆங் குறிப்புப்பார்க்க.

ச. "தோண்மேற், கரும்பெழுது தொய்யிற்கு" கலி. கூங. எ - அ என்பதும் அதன் குறிப்பும் இங்கே அறிதற்பாலன.

ரு. பல பூக்களென்பதற்கு, மகளிர் கண்ணுக்கு உவமையாகக் கூறப்படும செந்தாமரை,குவளை,கருநெய்தல்,கருவிளை,நறுமுதலியமலர்களென்று

(பிரதிபேதம்) * சாதித்தன்மையைக்கல்லாதவடிவியல்பாக. † பூவும்புள்ளும்.

தோளையும் பாடும்படியாக நல்லதொரு தொழில் கற்பித்தார்; அவர்தாம் அறுதியாக; எம்முடைய சுற்றத்தாரிடத்து அவர் வரைவுநேர்தற்குச் செய்யுஞ் செயலை நம்முடைய சுற்றத்தார் பெரிதும் வல்லராயிருந்தாரென்றாள். எ-று.

*இஃது, இகழ்ச்சி.

ஓஒ, (க)வழங்காப் பொழுதுநீ கன்றுமேய்ப் பாய்போல்
வழங்க லறிவா ருரையாரே †லெம்மை
யிகழ்ந்தாரே யன்றோ வெமர்

எ - து: அதுகேட்டவன் தன் மனத்தே ஓஒ! என வியந்து, பின்னர் வெயில்வெம்மையால் ஒருவரும் வழங்காத உச்சிக்காலத்தே நீ கன்று‡மேய்ப் பாய்போலப் பிறர்க்கு நோயைச்செய்து திரிகின்றதன்மையை அறிந்திருக் கின்றவர்கள் இப்படித் திரிகின்றாளென்று எனக்குஉரையாதிருப்பாராயில் எம் முடைய சுற்றத்தார் எம்மை இகழ்ந்தாரேயல்லவோ என்றான். எ - று.

ஒக்கு, மறிவல்யா னெல்லா விடு

எ - து: அதுகேட்டவள் நீ கூறியது ஒக்கும்; எடா! இது பொய் யென்று யான் அறியவேண்டா; இக்கூற்றைக் கைவிடென்றாள். எ - று.

விடேன்யா, னென்னீ குறித்த திருங்கூந்தா
ஞின்னையென் முன்னின்று
சொல்லலோம் பென்றமை யன்றி யவனீ
புல்லலோம் பென்ற துடையரோ மெல்ல
||முயங்குநின் முள்ளெயி றுண்கு மெவன்கொலோ
மாயப் பொதுவ னுரைத்த வுரையெல்லாம்

---

கொள்ளலாம். இவ்வுரையாசிரியர் இதழெனப்பதைச் சினையாகு பெய ராக்கிப் பல்லிதழென்பதற்கு, பல பூவென்று பொருள் கூறினார். இதற்கே பலவாகிய இதழினையுடையதென்று அன்மொழித் தொகை யாக்கிப் பூவென்று பொருள் கூறுவாருமுளர். 'பல்லித ழுண்கண்' என்னுந்தொடர்மொழி, (நற். உ௪0: கக; குறுந். ரு; ஐங். கஎ0, கக0, ௩௩௪, ௩௫க, ௪எக; கலி. ௪௫: கக, க00: க0) பலவிடங்களிலும் வருதல்காண்க.

க. வினைவல பாங்கின ளாய தலைவியை நோக்கித் தலைவன் கூறியதற்கு, "வழங்காப் பொழுதுநீ.........வெமர்" என்பது மேற்கோள்; தொல். அகத். சூ. உ௩. நச்.

(பிரதிபேதம்) * இதுஇகட்சி. † என்னை. ‡ மேய்ப்பாரைப்போலே. || முயங்கின் முள்ளெ யிறுண்டுமெவன்.

வாயாவ தாயிற் றலைப்பட்டாம் பொய்யாயிற்
(௩)சாயலின் மார்பிற் கமழ்(௨)தார் *குழைத்தநின்
ஞுயித ழுண்கண் பசப்பத் தடமென்றோள்
சாயினு மேஎ ருடைத்து

எ - து: அதுகேட்டவன் யான் நின்னை விடேன்; கரிய கூந்தலை யுடையாய்! யான் கூறிய கூற்றை நீ பொய்யாகக் குறித்ததென்? யான் பொய்கூறிற்றிலேன்; அது நிற்க, நின் சுற்றத்தார் நின்னை என்முன்னே நின்று சில சொல்லுதலைப் பாதுகாத்துக்கொள்ளெனச் சொன்னமையன்றி அவனை நீ புல்லுதலைப் பாதுகாத்துக்கொள்ளென்ற வார்த்தையை அவர் உடையரோ? இல்லையன்றே! ஆதலால் நீ மெத்தென முயங்குவாய், அப்பொழுது யான் நின் கூரிய (௩) எயிற்றை உண்பேனென்றான்; அதுகேட்டவள், இவன்கூறியது எத்தன்மைத்தோவென நெஞ்சொடு உசாவி, பின்னும் தன்னெஞ்சை நோக்கி, பொய்யை வல்ல பொதுவன் கூறிய கூற்றெல்லாம் மெய்யாயிருப்பதோர் வார்த்தை யாயில் அவனிடத்து †மனைவாழ்க்கையிலே பட்டேமாகின்றேம்; அன்றி அது பொய்யாயிற்றேல் மென்மை இனிதாகிய மார்பிற் கமழ்கின்ற மாலையை வருத்தின நின்னுடைய அழகிய இதழ்போலுங் (௪)கண்கள் பசலைநிறங் கொள்ளப்‡பெருமையையுடைய மெல்லியதோள் பின்னர் மெலியினும் நின் மேனி இப்பொழுது பெறுகின்ற அழகையுடைத்துக் காண் எனக் கூட்டத்திற்கு உடம்பட்டுக் கூறினாள். எ - று.

குழைத்த என்னும் பெயரெச்சம் நின் என்னும் பெயரொடு முடிந்தது. நன்று மேய்ப்பாய் போ லென்பதனால், வினைவல பாங்காயிற்று. "நோயு

---

௧. (அ) "ஊரன் மார்பே,.........இன்சா யற்றே" (ஐங். க௪.) என்பதும் (ஆ) "இன்சாயன் மார்பன்" (கலி. சுடு: ரு.) என்பதும் அதன் குறிப்பும் ஈண்டு அறிதற்பாலன.

௨. தார்குழைதலைக்குறித்து, சீவக. உ0௩௪, உ0சுஉ; பு - வெ. பெருந். கஉ; இவற்றில் வருபவையும் "குழைந்தநின் றாரும்" (கலி. ககக: கக - கஉ.) என்பதும் அதன் குறிப்பும் இங்கே நோக்கற்பாலன.

௩. (அ) "கரும்பின், காலரி சுடுகைக் கண்ணயின் றன்ன, வாலெயி றூறிய வசையி நீநீர்" குறுந். உசுஎ. (ஆ) "முள்ளுறழ் முளையெயிற் றமிழ்தூறுந் தீநீரைக், கள்ளினு மகிழ்செய்யுமெனவுரைத்தும்" கலி. ௪: க௩ - க௪. (இ) "பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி, வாலெயி றூறிய நீர்" குறள். ககஉக. என்பவையும் (௬)இந்நூற்பக்கம் ௩௩: க-ஆங்குறிப்பில் இவ்விடத்துக்குப்பொருந்துவனவும் அப்பக்கம் ௩ - ஆங் குறிப்பும் பார்க்க.

௪. இந்நூற்பக்கம் உஎசு: ரு - ஆம் குறிப்புப் பார்க்க.

(பிரதிபேதம்) * குழைத்தவென், † மனைவாட்கையிலே. ‡ பெருமையையுடைய தோள்.

மின்பமும்" என்னும்(௧)சூத்திரத்து, "உறுப்புடை யதுபோ லுணர்வுடையது போன், மறுத்துரைப் பதுபோ னெஞ்சொடு *புணர்த்தும்"என்பதனால் உறுப்புடைத்தாகக் கூறினாள்.

இதனால், இருவர்க்கும் புணர்ச்சியுவகை பிறந்தது.

இது முச்சீரடியும் இருசீரடியும் இடையேவந்த கொச்சகக் கலி. (௧௨)

(௧௧௩.) நலமிக நந்திய நயவரு தடமென்றோ
ளலமர லமருண்க ணந்நல்லாய் நீயுநீஇ
யுலமர லுயவுநோய்க் குய்யுமா றுரைத்துச்செல் ;
௪ பேரேமுற் றார்போல முன்னின்று விலக்குவா
யாரெல்லா நின்னை யறிந்ததூஉ மில்வழி ;
௬ தளரியா லென்னறிதல் வேண்டிற் பகையஞ்சாப்
புல்லினத் தாயர் மகனேன் மற்றியான் ;
௮ ஒக்குமன் ;
புல்லினத் தாயனீ யாயிற் குடஞ்சுட்டு
நல்லினத் தாயரெமர் ;
௧௧ எல்லா ;
நின்னொடு சொல்லி னேதமோ வில்லைமன் ;
ஏதமன் றெல்லை வருவான் விடு ;
௧௪ விடேன் ;
உடம்பட்டு நீப்பார் கிளவி மடம்பட்டு
மெல்லிய வாத லறியினு மெல்லியா
ளின்மொழிகொண் டியானே விடுவேன்மற் றென்மொழிகொண்
டென்னெஞ்ச மேவல் செயின் ;
௧௬ நெஞ்சேவல் செய்யா தெனநின்றாய்க் கெஞ்சிய
காதல்கொள் காமங் கலக்குற வேதிலார்
பொய்ம்மொழி தேறுவ தென் ;
௨௨ தெளிந்தேன் றெரியிழா யான் ;
௨௩ பல்கால்யாங் கான்யாற் றவிர்மணற் றண்பொழி
லல்க லகலறை யாயமொ டாடி

---

௧. தொல். பொருளி. சூ. ௨.

(பிரதிபேதம்) * கிளந்துமென்பதனால், கிளர்ந்து மென்பதனால்.

முல்லை குருந்தொடு முச்சிவேய்ந் தெல்லை
யிரவுற்ற தின்னங் கழிப்பி
யரவுற் றுருமி னதிருங் குரல்போற் பொருமா
ணல்லேறு நாகுட னின்றன
பல்லா னினநிரை நாமுடன் செலற்கே.

இது வினைவலபாங்கிற் றலைவியை ஆற்றிடைக்கண்டு அவளை வினைவலபாங்கிற் றலைவன் விலக்கி அவளோடு சிறிது கூறியவழி அவள் *கூடலுறுகின்றாள் கூறியது. இது கைக்கிளை.

இதன் பொருள்.

நலமிக நந்திய நயவரு தடமென்றோ
(௧)ளலமர (௨)லமருண்க ணல்லாய்†நீயுறீஇ
(௩)யுலமர லுயவுநோய்க் குய்யுமா றுரைத்துச்செல்

எ - து: நன்மை மிகப் பெருகிய விருப்பம் வருகின்ற பெருமையையுடைய மெல்லிய தோளினையும் சுழலுதலுடைய, முகத்தோடு பொருந்தின கண்ணினையும் அழகினையுமுடைய நல்லாளே! நீ ‡உற்றதனால் உழத்தலையுடைய வருந்து நோய்க்கு (௪) உய்யும் நெறியைக் கூறிப் பின்புபோ என விலக்கினேன். எ - று.

௪ (௫)||பேரேமுற் றார்போல முன்னின்று விலக்குவா
யாரெல்லா நின்னை யறிந்ததூஉ மில்வழி

---

௧. "அலமர லுண்கண்ணோர்" (கலி. ௭௩: ௧௨) என்பதும் இந்நூற்பக்கம் ௪௪௧: ௨-ஆம் குறிப்பும் பார்க்க.

௨. அமர்க்கண் கலி ௪௦: ௧; ௫௭: ௨௩.

௩. (அ) "உலமரல் வருத்த முறுதும்" அகம். ௧௮: ௧௩; (ஆ) "யா முலமர" கலி. ௮௩: ௨.

௪. உய்யும் நெறி - தப்பிப் பிழைக்கும் வழி; உயவு நோயைப் போக்குகின்ற வழியென்றுமாம்.

௫. (அ)எல்லான் என்பது எல்லாமென அண்மைக்கண் ஈறழிந்ததென்று கொண்டு, "பேரேமுற் றார்போல......யாரெல்லா" என்னும்பகுதியை மேற்கோள்காட்டுவர், மயிலைநாதர்; நன். பெயரி.சூ. ௫௦ (ஆ) "ஏமுற விரண்டு முளவென மொழிப" என்புழி, ஏமுறல் மயங்குதலையுணர்த்திவருதற்கு, "பேரேமுற் றார்போலமுன்னின் றுவிலக்குவாய்"

(பிரதிபேதம்) * கூடவுடம்பட்டாளாக அவள் கூறியது. இது, † நீயுறீஇயவுலமரல், ‡ உறுதி சூழ்தலையுடைய, || பேரேமுற் றுய்போல.

எ - து: அதுகேட்டவள், எடா! நின்னை முன்பு கண்டு அறிந்ததூஉ மில்லாத என்னிடத்தே பெரிய பித்தேறினாரைப் போல முன்னே நின்று (க)விலக்குகின்ற நீ யார்தான் என்றாள். எ - று.

௬ (உ)தளரியா லென்னறிதல் வேண்டிற் பகையஞ்சாப்
(ங)புல்லினத் தாயர் மகனேன் மற்றியான்

எ - து: அதுகேட்டவன், என்னை நீ அறிதலை விரும்பின் மனந்தளர் கின்ற இயல்பினையுடையாய்! யான் பகைக்கு அஞ்சாத ஆட்டினத்தை யுடைய ஆயரானவர்க்கு ஒருமகனாத * லுளேனென்று தன் செல்வக்குடிப் பிறப்பு உணர்த்தினன். எ - று.

அ †ஒக்குமன்
புல்லினத் தாயனைநீ யாயிற்(௪)குடஞ்சுட்டு
நல்லினத் தாய ரெமர்

எ - து: அதுகேட்டவள், அது மிகவும் ஒக்குமென அதற்குடம்பட்டு, பின்னர் நீ ஆட்டினத்தையுடைய ஆயனுந் தன்மையையுடையையாயின் எம்முடைய சுற்றத்தார் நும் இனத்திற் சிறந்த இன்னதனைக் குடம் பால் போதுமென்று கருதப்படும் பசுவினத்தையுடைய இடையரெனத்தன்செல்வக் குடிப்பிறப்பு உணர்த்தினள். எ - று.

கக எல்லா
நின்னொடு சொல்லி னேதமோ வில்லைமன்

எ - து: அதுகேட்டவன், எடீ! இங்ஙனஞ் சிறந்த நின்னோடே சில மொழி கூறின் மிகக் குற்றமோ இல்லை என்றான். எ - று.

கங ‡ஏதமன் றெல்லை வருவான் விடு

எ - து: அதுகேட்டவள், இருவரும் ஒத்த குடியாயிற் பின்னைச் சில ||கூறிற் குற்றமென்? யான் நாளைவருதற்கு இப்பொழுது போகவிடு என்றாள். எ - று.

---

என்பது மேற்கோள்; தொல். களா. சூ. கஅ. நச். (இ) "எம்மை, முன்னைநின் றாங்கே விலக்கிய வெல்லாநீ, யென்னேமுற் றாஅய் விடு" (கலி. ககசு: உ - ௪.) என்பது இதனோடு ஒப்புநோக்கற்பாலது. (ஈ) "பேரே முறுநர்" என்பது நற். உஉ0: எ. (உ) இந்நூற்பக்கம் ௪௪டு: ௪—ஆங் குறிப்பும் பார்க்க.

க. "நின்னைத் தகைத்தனென்" கலி. க0அ: உ0.

உ. "தளரிய லவரொடு" கலி. ௬௬: கள. என்பதும் அதன் குறிப்பும்பார்க்க.

ங. கலி. க0எ: உ. அடியையும் அதன் குறிப்பையும் பார்க்க.

௪. இந்நூற்பக்கம் ௬அஎ: உ - ஆம் குறிப்புப் பார்க்க.

(பிரதிபேதம்) * உடையேனென்று, † ஒக்கும்புல்லி. ‡ஏதமன்றென்னை, ||கூறிக்குற்றமென்.

கச விடேன்

உடம்பட்டு நீப்பார் கிளவி மடம்பட்டு
மெல்லிய *வாத லறியினு மெல்லியா [கொண்
(க) னின்மொழிகொண் டியானோ † விடுவேன்மற் றென்மொழி
டென்னெஞ்ச மேவல் செயின்

எ - து: அதுகேட்டவன், யான் விடேனென்று கூறி, பின்னரும் (உ)என்னுடைய வார்த்தையைக்கேட்டு என் நெஞ்சம்அறியாமையிலேபுகுந்து எனக்கு ஏவலைச்செய்யுமாயின், உலகத்தில் ஒருகாரியக்கூற்றால் (௩) உடன்பட்டு மனத்தால் உடன்படாதார் கூற்றுச் செவிக்கு மெத்தென்றிருத்தலை அறிந்திருந்தே‡னாயினும், மெல்லியஇயல்பினையுடையாய்! நின்னுடைய வஞ்சமானமொழியை உண்மையாகக்கொண்டு யானோ போகவிடுவேன்; அதனாற் பெற்றதென் ? அஃது ஏவல்செய்யாதாயிற்றே என்றான். எ - று.

கரு நெஞ்சேவல் செய்யா தெனநின்றாய்க் கெஞ்சிய
(ச)காதல்கொள் காமங் கலக்குற (௫)வேதிலார்
||பொய்ம்மொழி தேறுவ தென்

எ - து: நின்னைக் கைகடந்து நின்ற காதலைக்கொண்ட காமங் கலக்குதலுறுகையினாலே என்னெஞ்சு எனக்கு ஏவலைச்செய்யாதெனச் சொல்லிநின்ற உனக்கு ஏதிலார் கூறிய பொய்யாகிய வார்த்தையைத் தெளியுந்தன்மை எங்ஙனே உண்டாயிற்று என்றாள். எ - று.

---

"நின்மொழி...........செயின்" என்பது மறுத்துரைப்பதுபோல் தலைமகன் கூற்று உ.வகைபற்றிவந்ததற்கு மேற்கோள்; தொல். பொருளி. சூ. உ. இளம்.

"அவர்நெஞ் சவர்க்காதல் கண்டு மெவனெஞ்சே, நீயெமக் காகாதது" குறள். கஉகக.

(அ) "மனத்தி னமையா தவரை யெனைத்தொன்றுஞ், சொல்லினாற் றேறற்பாற் றன்று" (ஆ) "நட்டார்போ னல்லவை சொல்லினு மொட்டார்சொ, லொல்லை யுணரப் படும்" குறள். அஉ௫, அஉசு.

(அ) "காதற் காமங் காமத்துச் சிறந்தது" பரி. கூ: கஅ. (ஆ) "காதல் செய் காமங் கனற்ற" பு-வெ. கைக்கிளை. பெண்பாற். ௪.

"ஏதிலார் யாதும் புகல விறைமகன், கோடுதாரீஇக் கொள்கை முதுக்குறைவு - நேர்நின்று, காக்கை வெளிதென்பா ரென்சொலார் தாய்க்கொலை, சால்புடைத் தென்பாரு முண்டு" நீதிநெறி. ௩௩.

(பிரதிபேதம்) * ஆகலறியினும். † விடுவேனென்மொழி, ‡ஆயினும், ||நின்மொழி.

எதிலாரென்றது, தான் எதிலேனல்லேனென்னும்பொருண்மை குறிப்பாய்த் தோன்றக் கூறியது. பொய்ம்மொழியென்றது தான் உண்மைகூறவும் பொய்யாகக் கொண்டானென்பது தோன்றக் கூறியது.

௨௨ தெளிந்தேன் *றெரியிழா யான்

எ - து: அதுகேட்டவன், தெரிந்த இழையினையுடையாய்! நீ இப்பொழுது கூறிய கூற்றால் நீ முன்னர் 'வருவான் விடு' என்றது உண்மையென்று யான் †தெளிந்தேன் என்றான். எ - று.

௨௩ பல்கால்யாங் கான்யாற் றவிர்மணற் றண்பொழி
லல்க லகலறை யாயமொ டாடி
முல்லை குருந்தொடு முச்சிவேய்ந் தெல்லை
யிரவுற்ற ‡தின்னங் கழிப்பி
யரவுற்(௧)றுருமி னதிருங் குரல்போற் பொருமுர
ணல்லேறு நாகுட னின்றன
பல்லா னினநிரை நாமுடன் செலற்கே

எ - து: என்று பின்னர், யாம் முல்லைப்பூவைக் குருந்தம்பூவோடே முடியிலே சூடிப் பலகாலுங் காட்டாற்றில் விளங்குகின்ற மணலையுடைய குளிர்ந்த பொழிலிடத்து யாம் முன்பு || தங்கும் அகன்ற பாறையிலே ஆயத்தோடே விளையாடுகையினாலே பகற்பொழுது போய் இராப்பொழுது வந்து தோன்றிற்று; அது வருவதற்குமுன்னர்ப் போகாமல் + தாழ்க்கின் நம்மைக் கோபிப்பார்கள்; அதனை உணராது நீ இன்னங் காலங்கழியாநின்றாய்; பல பசுவினத்தினுடைய திரளுக்குள்ளே,(௨)பாம்புசேர்கையினாலே அதிரும் உருமினுடைய குரல்போல அதிரும் பொருகின்ற மாறுபாட்டினையுடைய நல்ல (௩)எருநாகுடனே தம்மிற் கூடி நின்றன; அவைபோல நாமுங்கூடிச் சேரப் போதற்குக் கூட்டத்திற்கு உடம்படுவாயாக என்றான். எ - று.

---

௧. (அ) "வானேறு வானத் துரற்ற வயமுரா, ஞானேற் றெருத்த லதனோ டெதிர்செறுப்ப" கார். ௧0. (ஆ) "இடியார் கடுமுழக் கேறு" தே. (இ) "இடிக்குர லானேற் றினமெதிர் செறுப்ப" கல். ௬௮: ௧0. (ஈ) "(அடலேறு)இடியிட்டதிர்கா ரெதிரேற்றெழுந் தாங்கு நோக்கி" திருவிளை. மாயப்பசுவை வதைத்த. ௧௩.

௨. இந்நூற்பக்கம் ௨௭௪: ௫-ஆம் குறிப்புப் பார்க்க.

௩. "மல்லன் மறுகின் மடநா குடனாகச், செல்லு மழவிடைபோற் செம்மாந்து" நள. சுயம். ௧௫௯.

(பிரதிபேதம்) * தெரியிழாய் எ-து, † தெரிந்தேன், ‡ இன்னும், || தங்கும்பாறையிலே + தாட்கின்.

"ஓங்குசினைத் தொடுத்த*வூசல் பாம்பென, முழுமுத றமிய வுருமெறிந் தன்றே"(க)என்றார் பிறரும்.

(உ)யாங் கூட ஆயத்தோடு ஆடியெனத் தானுங்கூட ஆடிஞனென்றதனுனும், பொழுது †வைகிப்போதற்குத் தாம் தமக்குரியரல்லரென்றமையானும், ஏறும் நாகுங் கூடப் போமாறுபோல நாமுங் கூடப்போக என்றமையானும், வினைவல பாங்கினராயிற்று. அரவுறவெனத் திரிக்க.

இதனால், இருவர்க்கும் புணர்ச்சிவேட்கை பிறந்தது.

இது தரவும் இரண்டடியான் இரண்டு கொச்சகமும் தனிச்சொல்லும் குறுவெண்பாட்டும் தனிச்சொல்லும் ஓரடியான் இரண்டும் தனிச்சொல்லும் நெடுவெண்பாட்டும் குறுவெண்பாட்டும் சிந்தடி ‡யோரடியா னொன்றும் சொற்சீரடியும் ஐஞ்சீரும் வந்து (ங) போக்கிலக்கண ||மில்லாத ஆசிரியச் சுரிதகமும் பெற்ற × உறழ்கலி. (கங)

(ககச.) வாரி நெறிப்பட் டிரும்புறந் தாஅழ்ந்த
வோரிப் புதல்வ னழுதன னென்பவோ
புதுவ மலர்தைஇ யெமரென் பெயரால்
வதுவை யயர்வாரைக் கண்டு மதியறியா
வேழையை யென்றகல நக்குவந் தீயாய்நீ
தோழி யவனுழைச் சென்று ;
எ சென்றியா னறிவேன் கூறுக மற்றினி ;

க. அகம். கூஅ: கூ - எ.

உ. "அடியோர் பாங்கினும்" என்னும் தொல். அகத். உங-ஆம் சூத்திர வுரையிலும் இவ்வுரையாசிரியர் தலைவனும் தலைவியும் வினைவல பாங்கின ரென்பதற்கு "பல்கால்யாங்......செலற்கே" என்னும்பகுதியை மேற்கோள்காட்டி, இக்குறிப்புக்குச் சிறிது வேறாக "இது தாழ்த்துப் போதற்குத் தலைமையின்றிக் கடிதிற்போகல் வேண்டுமென்றமை யானும், நல்லேறும் நாகும்போல் நாமுங் கூடப் போகல் வேண்டு மென்றமையானும் தலைவன் வினைவலபாங்கின னாயிற்றென்க. வினை வல்லானென்னாதுபாங்கினென்றதனால்தமரேவல்செய்வதுபெறுதும்; இஃது அவ்வந்நிலத்து இழிந்தோர்க்கு எஞ்ஞான்றும் தொழிலேயாய் நிகழும்" என்று எழுதி யிருக்கிறார்.

ங. இது போக்கிலக்கணமில்லாத ஆசிரியச்சுரிதகம் பெற்று உறழ்கலி யாயிற்றென்பர் பேராசிரியரும். நச்சினார்க்கினியரும் அவ்வாறே கூறு வர். தொல். செய். சூ. கருகூ.

(பிரதிபேதம்) * பூதலம்பாம்பென, † வைகிற்போதற்கு. ‡ஓரடியானொன்றுமஞ்சீரும். ||இல் வழிஆசிரியச், × ஒத்தாழிசைக்கலி.

அ சொல்லறியாப் பேதை மடவைமற் றெல்லா
நினக்கொரூஉ மற்றென் றகலகலு நீடின்று
நினக்கு வருவதாக் காண்பா யனைத்தாகச்
சொல்லிய சொல்லும் வியங்கொளக் கூறு ;

கஉ தருமணற் ருழப்பெய் தில்பூவ லூட்டி
யெருமைப் பெடையோ டெமரீங் கயரும்
பெருமண மெல்லாந் தனித்தே யொழிய
வரிமணன் முன்றுறைச் சிற்றில் புனைந்த
திருநுத லாயத்தார் தம்முட் புணர்ந்த
வொருமணந் தானறியு மாயி னெனைத்துந்
தெருமரல் கைவிட் டிருக்கோ வலர்ந்த
விரிநீ ருடுக்கை யுலகம் பெறினு
மருநெறி யாயர் மகளிர்க்
கிருமணங் கூடுத லில்லியல் பன்றே.

இஃது "ஆங்கதன் புறத்துப் புரைபட வந்த மறுத்தலொடுதொகைஇ (க) *என்பது, அவன் வரைவுவேண்டின †இடத்து அவ்வரைவு புறத்ததாகியவழித் தலைவி தன்னுயர்வு உண்டாகத் தோன்றிய மறுத்தலோடே முற்கூறியவற்றைத் ‡தொகுத்து" என்று பொருள்கூறி, "அதன்புறமெனவே அதற்கு அயலாகிய நொதுமலர்வரைவாயிற்று" என்றும்; உயர்வு, (உ)குடிப் பிறப்புங் கற்பும்; அதற்கேற்பப் பிறர்வரைவு மறுத்துத் || தலைவன் வரையுமாறு நீ கூறெனத் தோழிக்குக் =கூறியது.

இதன் பொருள்.

வாரி நெறிப்பட் டிரும்புறந் ÷தாஅழ்ந்த
(ங)வோரிப் புதல்வ னழுதன +னென்பவோ

க. தொல். களவி. சூ. கசு. இதனுரையில் இவர் இச்செய்திக்கே இச் செய்யுளைமேற்கோள்காட்டி, சிறிதுவேறுபட இக்குறிப்பையும் எழுதியிருக்கிறார்.

உ. (அ) "இற்பிறப்பு மொழுக்கு மிழுக்க மில், கற்பும் யான்பிறர்க் கெங்ஙனங் காட்டுகேன்" (ஆ) "இற்பிறப் பென்ப தொன்று மிரும் பொறையென்ப தொன்றுங், கற்பெனும் பெயர தொன்றுங் களிநடம் புரியக் கண்டேன்" சூ. ப. சூடாமணி. கஎ, திருவடி. சுஉ.

ங. ஓரி-ஆண்பிள்ளையின் தலைமயிர்.

(பிரதிபேதம்) * என்றது. † இடத்தே வரைவு, இடத்துவரைவு. ‡தொகுத்தென்பதற்குப் பொருள். அதன்புறமெனவேநொதுமலர்வரைவாயிற்று. உயர்வு. || தலைவனை வரையுமாறு. = கூறினள். ÷ தாழ்ந்த. + என்பவோ வோரும்புதல்வ.

புதுவ மலர்தைஇ யெமரென் பெயரால்
வதுவை யயர்வாரைக் * கண்டு மதியறியா
வேழையை யென்றகல நக்குவந் தீயாய்நீ
தோழி யவனுழைச் சென்று

†எ - து: தோழீ! புதியனவாகிய மலர்களைச் சூடி எம்முடைய சுற்றத்தார் என்பெயரைச் சொல்லிப் பெண்பிள்ளைக்கலியாணஞ் செய்கின்றவர்களைக் ‡கண்டு வைத்தும், கோதி நெறித்தற்றொழிலிலே பட்டுப், பெரிய முதுகிலே தாழ்ந்துகிடக்கின்ற மயிரினையுடைய புதல்வன் அழுதனனென்பவோ? அங்ஙனங் கூறுவார்களாயின், நீ அவனிடத்தே சென்றுஇவ்வதுவை நின்னை விட்டு அகலாநிற்க அது நின்னிடத்தே ஆம்படி வரைந்துகொள்ளும் மதியை அறியாதஏழைத்தன்மையையுடையையென்றுசிரித்துவாரா||யென்றாள் எ-று.

கோதி நெறித்து முதுகிலே கிடக்கின்ற மயிரினையுடைய புதல்வனென்றதனாற் பயன், மயிர்முடி கூடி இளமை முதிர்ந்து காமச்செவ்வி அறிந்து களவொழுக்கத்திற்கு உரியனாயும் தான் வரைந்துகொள்ளுந் தன்மை அறியாமல் இருமுதுகுரவர்கீழே நிற்கின்றபிள்ளையாயிருக்கின்றவனென்பது உணர்த்திற்று.

அழுதனனென்பவோ என்றது, (க)நொதுமலர்வரைவுவந் தூழியும் தான் வரைவின்முயலாது வருந்தினானென்று ஊரிலுள்ளார் கூறுவார்களோ என்றவாறு. இஃது அழுகையென்னும் மெய்ப்பாடு. பெயராலென்பது உருபுமயக்கம்.

எ சென்றியா னறிவேன் கூறுக =மற்றினி

எ - து: அதுகேட்ட தோழி ஆண்டுச்சென்று அவனிலையை அறிவேன்; பின்னை, அவற்குக் கூறுவனவற்றை இனிக் கூறுவாயாக என்றாள். எ - று.

அ சொல்லறியாப் பேதை மடவைமற் றெல்லா
நினக்கொருஉ ÷மற்றென் றகலகலு நீடின்று
நினக்கு வருவதாக் காண்பாய் யனைத்தாகச்
சொல்லிய சொல்லும் வியங்கொளக் × கூறு

எ - து: அதுகேட்ட தலைவி, மடவாய்! நீ அவனிடத்தே சென்று எடா! நின்குரவரை நோக்கி இவ்வதுவை என்னிடத்தே +யாகவேண்டு

க. நொதுமலர் - அயலார்.

(பிரதிபேதம்) * கண்டுவிலக்கிமதி, † எ-து. கோதி நெறித்தற்........தாழ்ந்துகிடக்கின்ற புதல்வனென்றதனாற் பயன்.........களவொழுக்கத்திற்கு முரியனாயுங்......... மெய்ப்பாடு. தோழீ! புதியவாகிய, ‡ கண்டுவைத்துமோரிப்புதல்வன், || என்றாள். பெயராலென்பது, = மாற்றினி, ÷ மற்றென்றகல். எ-து: அதுகேட்ட தலைவி மடவாய் என்றாள்.........வினையினமைபற்றி. அகலநீடின்று நினக்கு. + கூறு என்பது மடவாய்நீ, × ஆகவேணுமென்று.

மென்று சொல்லுஞ் சொல்லை அறியாதபேதை; ஆகையினலே *இவ்வதுவை நினக்குரித்தன்றி அகலும்; அவ்வகற்சிதான் நீட்டித்தலில்லை; அது நொது மலர்க்கின்றி நினக்குவருவதாக நெஞ்சாலே காண்பாய்; அங்ஙனங் †காணு யாயின் அது நின்னை ஒருவுமென்று நீங்கு; அங்ஙனம் நீங்கும்பொழுது இவ்வதுவை தனக்குரித்தாக முயலும்படி நீ சொல்லிய சொற்றானும் முன்பு வரைவுகடாயவுஞ் ‡சொல்லாத அவன் நினையாமல்(௧)நின் ஏவலை அவன்மனங் காரியமென்றே கொள்ளும்படி கூறுவாயாக ||என்றாள். எ - று.

மடவாயென்றாள், ஆண்டுக்கூறுவனவற்றைத்(௨)தான் அறியாள்போலத் தன்னை வினையினமைபற்றி.

௧௨ (௩) தரு(௪)மணற் றாழப்பெய் தில்(௫)பூவ லூட்டி
யெருமைப் பெடையோ டெமரீங் கயரும்
பெருமண மெல்லாந் (௬)தனித்தே (௭)யொழிய
(௮)வரிமணன் முன்றுறைச் சிறுசில் ÷புனைந்த

---

௧. "விரைந்து தொழில்கேட்கு ஞால நிரந்தினிது, சொல்லுதல் வல் லார்ப்பெறின்" குறள் ௬௪௮.

௨. "தானறிந்து கூறுந் தலைமற் றிடையது, கோனறைந்த தீதென்று கூறுமால்" பாரதம்.

௩. (அ) "தருமணன் ஞெமிரிய திருநகர் முற்றத்து" நெடுநல். ௯௦. நற். ௧௪௩. ௨. பெருங். (௧) ௪௭: ௧௯௭.(ஆ) "தருமணன் ஞெமிரிய திருநகர் முற்றம்" அகம். ௧௮௭. ௯. (இ) "தருமணன் முற்றத்து" மது. ௬௮௪; பெருங். (௧) ௩௪: ௭௦.(ஈ) "தருமணன் ஞெமிரிய திருநா ளொருசிறை" மணி. ௧௮: ௪௪. (உ) "தருமணற் பேரில்" (ஊ) "தருமணற் பந்தர்" (எ) "தருமணன் ஞெமரிய தண்பூம் பந்தருள்" பெருங். (௧) ௩௩: ௧௩௪; ௩௬: ௪௧; (௪) ௬: ௧௨.

௪. "வரைப்பின் மணற்றாழப் பெய்து" கலி. ௧௧௫: ௧௧.

௫. (அ) "பூவலூட்டிய புனைமாண் பந்தர்க், காவற்சிற்றிற்கடிமனை" சிலப். ௧௬: ௫ - ௬. (ஆ) "பூவற் படுவில்" புறம். ௩௧௧: ௧. (இ) "பூவலங் குன்றம்" களவழி. ௧௨.

௬. "தனித்து" என்பதைத் தனிக்கவெனத் திரித்து, யான் தனியே நீங்கினேனாக என்க.

௭. 'ஒழிய' என்பதற்கு அவனையன்றி வேறு சிலரிடத்தே தங்குகையி னலே என்பதைப பொருளாகக்கொள்க; ஒழிதல் - நீங்குதல். இஃது இப்பொருட்டாதலை 'ஒழிய' 'ஒழிந்திட்டாள்' (சீவக. ௨௩௬௧,௨௫௦௪) என்பவற்றுக் கெழுதியிருக்கும் உரையான் உணர்க.

௮. "வரிமணல்" பட். ௬௦. கலி. ௧௨௭: ௫.

(பிரதிபேதம்) * பின்னை இவ்வதுவை, † காணாயிற் பின்னை அது, ‡ சொல்லாக அவன். || என்றாள்தருமணல், ÷ புனைந்துதிருதுதல்.

திருநுத லாயத்தார் * தம்முட் புணர்ந்த
வொருமணந் தானறியு மாயி னெனைத்துந்
தெருமரல் கைவிட் டிருக்கோ † வலர்ந்த
விரிநீ ருடுக்கை(க)யுலகம் பெறினு
மருநெறி யாயர் மகளிர்க்
கிருமணங் ‡ கூடுத லில்லியல் பன்றே

எ-து: என்று பின்னுந் தோழியை நோக்கி, ஆராய்ந்து பார்க்கில் அறலினை யுடைத்தாகிய மணலினையுடைய (உ) துறையின்முன்னே சிற்றிலிழைத்து விளையாடிய அழகிய நுதலினையுடைய ஆயத்தார் தம்முள்ளே நின்று || யான் தனியே நீங்கினேனாக அவன் புணர்ந்த ஒருமணத்தை நம்முடைய நெஞ்சு தான் அறியும்; அங்ஙனம் அறிந்திராநிற்கவும். (ங)கொண்டுவந்து குவித்த மணலைத் தங்கப் பரப்பி இல்லைச் (ச)செம்மண்ணைப்பூசித் தெய்வமாக வைக்க (ரு)எருமையாகிய பேட்டின் கொம்போடே எம்முடைய சுற்றத்தார் இவ்விடத்து நடத்தும் பெண்பிள்ளைக் கல்யாணமெல்லாம் அவனை யின்றி வேறுசிலரிடத்தே தங்குகையினாலே இருமணம் ÷ உண்டாகாநின்றது; இவ்விருமணம் பரந்த திரை விரிகின்ற கடலை உடுக்கையாகவுடைய உலகத்தைப் பெறினும் அரிய நெறியையுடைய ஆயர்மகளிர்க்கு உண்டாதல் குடிப்பிறப்பிற்கு இயல் பன்றென்று யான் தெருமருதலைச் × சிறிது கைவிட்டிருக்கவோ? கைவிட் டிருக்கின், குடிப்பழுதுமாய்க் கற்பும் நீங்குமன்றோ என்றாள். எ - று.

இனி, இருமணங்கூடுதல் இயல்பன்றாயிருக்க ஒருமணந்தான் அறியு மாயிற் பெருமணமெல்லாந் தனித்தே + ஒழியச்செய்தே தெருமரல் கைவிட் டிருக்கோ என்றாற் பொருண்முடியாமை காண்க.

இதனால், தலைவிக்குத் தம் மிறையால் அச்சமே தோன்றிற்று.

---

க. "பழியெனி, னுலகுடன் பெறினுங் கொள்ளலர்" புறம். கஅஉ: ரு - சு.

உ. "முன்றுறை" என்பதற்குத் 'துறை முன்' என்றே பொருள் கூறுவர், பிறரும்; பரி. கஉ: ஙசு: புறம். கஙசு: உரு.

ங. "தாயே, புனைமா ணிஞ்சி பூவ லூட்டி, மனைமண லடுத்து மாலை நாற்றி, யுவந்தினி தயரும்" அகம். ககூரு: உ - ரு.

ச. "பூவலூட்டி" (அகம். ககூரு: ங) என்பதற்கு, சுவரைப் புதுக்கோலஞ் செய்து என்றும் பூவல் - சிவப்பு என்றும் குறிப்புக் காணப்படுகிறது.

ரு. இச்செய்தி வேறெங்கும் கண்டதன்று.

(பிரதிபேதம்) * தம்மிற்புணர்ந்த, † மலர்ந்த, ‡ கூறுதல். || யானீங்கினேனாக. ÷ உண்டா நின்றது, × சிறிதுங்கை, + ஒழிகைசெய்தே.

எருமைப் பெடையென்றது * "பேடையும் பெடையும்" என்னும் (க) சூத்திரத்து நாடினென்றதனுல் அமைத்தநம்.

(உ)இது வெள்ளைக்கொச்சகமும் ஓரடியாலென்றும் கொச்சகமும் போக்கிலக்கண †மில்லாத ஆசிரியச்சுரிதகமும் பெற்ற உறழ்கலி. (கசு)

(ககரு.) தோழிநாங், காருமை யுண்ட கடுங்கள்ளை மெய்கூர
நாணாது சென்று நடுங்க வுரைத்தாங்குக்
கரந்ததூஉங் கையொடு கோட்பட்டாங் கண்டாய்நம்
புல்லினத் தாய மகன்சூடி வந்ததோர்
முல்லை யொருகாழுங் கண்ணியு மெல்லியால்
கூந்தலுட் பெய்து முடித்தேன்மற் றோழியாய்
வெண்ணெ யுரைஇ விரித்த கதுப்போடே
யன்னையு மத்தனு மில்லரா யாய்நாண
வன்னைமுன் வீழ்ந்தன்றப் பூ ;
அதனை, வினவலுஞ் செய்யாள் சினவலுஞ் செய்யா
ணெருப்புக்கை தொட்டவர் போல விதிர்த்திட்டு
நீங்கிப் புறங்கடைப் போயினள் யானுமென்
சாந்துளர் கூழை முடியா நிலந்தாழ்ந்த
பூங்கரை நீலந் தழீஇத் தளர்பொல்கிப்
பாங்கருங் கானத் தொளித்தே னதற்கெல்லா
வீங்கெவ னஞ்சு வது ;
அஞ்சல், அவன் கண்ணி நீபுனைந்தா யாயி னமரு
மவன்க ணடைசூழ்ந்தார் நின்னை யகன்கண்
வரைப்பின் மணற்றாழப் பெய்து திரைப்பில்
வதுவையு மீங்கே யயர்ப வதுவேயா
மல்கலுஞ் சூழ்ந்த வினை.

இது தலைவிகளவுவெளிப்பட்டதென்று அஞ்சித்தோழிக்குச்‡சொல்ல, ‖நமர் நின்னை அவற்கே கொடுக்கச் சூழ்ந்தாரெனச் சொல்லி அச்சம் நீக்கியது.

---

க. தொல். மரபியல். சூ. ருசு.

உ. இச்செய்யுள் போக்கிலக்கணமில்லாத ஆரியச் சுரிதகம்பெற்ற உறழ்கலிக்கு மேற்கோள்; தொல். செய். சூ. கருக. பேர். நச்.

(பிரதிபேதம்) * பேடை பெடையும், பெட்டையும் பெடையும், † இல்லாவாசிரிய. ‡ சொல்லவேயின்னை. ‖ எமர்.

இதன் பொருள்.

(க)தோழிநாங், (உ)காணுமை(௩)யுண்ட கடுங்கள்ளை மெய்கூர
(ச)நாணுது சென்று நடுங்க வுரைத்தாங்குக்
கரந்ததூஉங் (௫)கையொடு கோட்பட்டாங் கண்டாய்நம்
(௬)புல்லினத் *தாய மகன்சூடி வந்ததோர்
௫ முல்லை யொருகாழுங் கண்ணியு மெல்லியால்
கூந்தலுட் பெய்து முடித்தேன்மற் றோழியாய்
(எ)†வெண்ணெ யுரைஇ விரித்த கதுப்போடே
யன்னையு மத்தனு ‡மில்லரா யாய்நாண
வன்னைமுன் வீழ்ந்தன்றப் பூ

---

க. 'ஆயர்வேட்டுவர்' என்னும் (தொல். அகத். உக.) சூத்திரவுரையில் 'ஆயர்வேட்டுவரென்னும் இரண்டு பெயரே எடுத்தோதினுரேனும் ஒன்றென முடித்தலான் அந்நிலங்கட்குரிய வினைப்பெயர்களான் வருவனவுங் கொள்க' என்று கூறி, "தோழி நாங்...............மகன்" என்னும் பகுதியை மேற்கோள் காட்டுவர். நச்.

உ. (அ) "நம்மு ணுணுநர் போலத் தம்முண், மதுமறைத் துண்டோர் மகிழ்ச்சிபோல, வுள்ளத் துள்ளே மகிழ்ப" தொல். களவி. சூ. உ௩. நச்; நாற். சூ. கசக. மேற். (ஆ) "கள்ளொற்றிக் கண்சாய் பவர்" குறள். கூஉஎ. (இ) "மட்டொளித் துண்ணு மாந்தர் மாண்புபோன் மறைந்து வண்ணப், பட்டொளித் தொழிய வல்குற் பசுங்கதிர்க் கலா பந் தோன்ற" சீவக. உ௫௩௩.

௩. "அந்தீந்தேறன் மாந்தினர் மயங்கி...................புலவிக்காலத்துப் போற்று துரைத்த, காவியங்கண்ணார் கட்டுரை யெட்டுக்கு, நாவொடு நவிலா நகைபடு கிளவியும்" சிலப். கச: க௩௩ - க௩௯.

ச. "நாணென்னு நல்லாள் புறங்கொடுக்குங் கள்ளென்னும், பேணுப் பெருங்குற்றத் தார்க்கு" குறள். கூஉச.

௫. "தலைப்பெய்து, கையொடு கண்டாய்" கலி. கூ௫: உஎ - உஅ என்பதும் அதன் குறிப்பும் இங்கே அறிதற்பாலன.

௬. "புல்லினத் தாயர்மகன்" (கலி. க0௩: சஎ) என்பதும் அதன்குறிப்பும் பார்க்க.

எ. "ஐங் கூந்த லுளரச், சிறுமுல்லை நாறியதற்கு" (கலி. க0௫: ௫௩-௫ச.) என்றதற்கு, 'ஐவகைப்பட்ட கூந்தலை ஆற்ற அது வெண்ணெயின் நாற்றம் நீங்கிச் சிறிய முல்லைப்பூவின் நாற்றம் மேவி மிக நாறியதற்கு' என்று எழுதியிருக்குமுறை ஈண்டு அறிதற்பாலது.

(பாடபேதம்) * ஆயர்மகன். † வெண்ணெயுரைஇ. ‡ இல்லாராயாய்நாண.

*எ - து: மெல்லிய இயல்பினையுடையாய்! நம்யாட்டினத்தையுடைய (க)ஆயர்மகன் சூடிவந்ததொரு முல்லைத்தொடையினையும் அதனாற் †செய்ததோர்(உ)கண்ணியையுங் கூந்தலிலேயிட்டுமிகவும்‡முடித்தேன்; தோழீ! அப்பூச் செவிலித்தாய் ||வெண்ணெய்தேய்க்கவிரித்த மயிரோடே நற்றாயுந் தந்தை முதலியோரும் இல்லிடத்தேயிராநிற்க நற்றாயுங் கெட்டுநாணும்படியாகச் செவிலிமுன்னே வீழ்ந்தது; ஆகையினாலே () தோழீ! பிறர் காணாமையுண்ட (௩)கள்ளின்களிப்பு மெய்யிடத்தே தோன்றி மிகுகையினாலே பின்னை நாணு மற்சென்று பிறர் நடுங்கும்படி அக்கடுங்கள்ளைத் தாமுண்டபடியை உரைத் தாற்போல ÷நாம் கரந்தகளவொழுக்கமுங் கையோடே பிடித்துக்கொள்ளப் பட்டேங் காணென்றாள். எ - று.

௧0 அதனை, ┼வினவலுஞ் செய்யாள் சினவலுஞ் செய்யா
ணெருப்புக்கை தொட்டவர் போல விதிர்த்திட்டு
நீங்கிப் புறங்கடைப் போயினாள் யானுமென்
சாந்துளர் கூழை முடியா நிலந்தாழ்ந்த
(௪)பூங்கரை நீலந் தழீஇத் தளர்பொல்கிப்
(௫)பாங்கருங் கானத் தொளித்தே னதற்கெல்லா
வீங்கெவ × னஞ்சு வது

எ - து: பின்னரும் அப்பூவை வந்தபடி என்னென்று கேட்டலுஞ் செய் யாளாய்ச் சினத்தலுஞ் செய்யாளாய் நெருப்பைக் கைபாலே தீண்டினவர்கள் =அக்கையைப் பிதிர்க்கு மாறுபோலக் கையைப் பிதிர்த்து நீங்கிப் புறமாகிய புறத்தேபோனாள்; அவள்போன பின்பு யானும் என்னுடைய மயிர்ச் ∴சந்தனம் பூசி உலர்த்தின மயிரை முடித்து நிலத்தே ** தாழ்ந்த பூத்தொழிலையுடைத்

க. (அ) "முல்லைக் கண்ணிப் பல்லான் கோவலர்" பதிற். உக: உ0.
(ஆ) "முல்லையங் கண்ணிசிந்தக் கால்விசை முறுக்கியாய, ரொல்லென வொலிப்ப வோடி" சீவக. ௪௩அ.

உ. "கூழையு ளேதிலான், கைபுனை கண்ணி முடித்தாள்" கலி. க0எ: க௪ - கரு.

௩. "மெய்க்கண், மகிழா னறிப நறா" நான்மணி. எக.

௪. "பூங்கரை நீலம் புடைதாழ" கலி. ககக: ௩.

௫. "பாங்கரும் பாட்டங்கால்" கலி. கககூ: க.

(பிரதிபேதம்) * எ - து, மெல்லியலாய் நம்மாட்டினத்தை. † செய்தவழகினையுடைய கண்ணியையும். ‡ முடித்தேன் அப்பூ. || வெண்ணைதேய்க்க. எண்ணெய்தேய்க்க. () தோழி. ÷ நாங்கரந்த ஒழுக்கமும். ┼ வினவலுஞ்சொல்லாள் சினவலுஞ் சொல்லாள். × அஞ்சுவது அஞ்சல், எ-து: = தங்கையைப், ∴ சந்தனமெழுகி யுலர்த்தின, ** தாழ்ந்தபூத்தொழிலை.

தாகிய கரையினையுடைய நீல ஆடையைக் கையாலே சிறிதேறத் தழுவிக் கொண்டு அச்சத்தால் தளர்ந்து நடந்து பக்கத்திலுண்டான செல்லுதற்கரிய கானத்திலே சென்று ஒளித்தேனென்றாள்; அதுகேட்டதோழி, ஏடீ! அப்பூ வீழ்ந்ததற்கு நீஅவ்விடத்தே அஞ்சுவது என்னகாரியத்திற் *கென்றாள். எ-று.

கஎ அஞ்சல், (க)அவன்கண்ணி நீபுனைந்தா யாயி னமரு
மவன்க ணடைசூழ்ந்தார் நின்னை யகன்கண்
வரைப்பின் (உ)மணற்றாழப் †பெய்து திரைப்பில்
வதுவையு மீங்கே யயர்ப வதுவேயா
மல்கலுஞ் சூழ்ந்த வினை

எ - து: என்று பின்னும் நின் தலைவன் கண்ணியை நீ சூடினையாயின் அதற்கேற்ப நம்முடைய சுற்றத்தாரும் நின்னை அவனிடத்தே அடுத்தலைச் சூழ்ந்தார்; அதுவேயன்றி அகன்ற இடத்தையுடைய முற்றத்தே மணலைத் ‡தங்கப்பெய்து திரையிட்டுக் கல்யாணமும் இப்பொழுதே செய்வார்கள்; பகலேயன்றிப் போன இரவிலும் ஆராய்ந்த காரியம் || அக்காரியமேயாம்; நீ அஞ்சாதேகொள்ளென்றாள். எ - று.

இதனால், தலைவிக்குப் புணர்ச்சியுவகை பிறந்தது.

╋இஃது ஐஞ்சீரடுக்கி வந்த தாவும் பாட்டுஞ் சுரிதகமும் பெற்ற கலி வெண்பா. (கரு)

(ககரு.) பாங்கரும் பாட்டங்காற் கன்றொடு செல்வேமெந்
தாம்பி னொருதலை பற்றினை யீங்கெம்மை
முன்னைநின் றாங்கே விலக்கிய வெல்லாநீ
யென்னையே முற்றாய் விடு;

ரு விடேஎன், தொடீஇய செல்வார்த் துமித்தெதிர் மண்டுங்
கடுவய நாகுபோ னோக்கிக் கொடுமையா
னீங்கிச் சினவுவாய் மற்று ;

---

க. "நின் கூழையு ளேறவன், கண்ணிதந் திட்ட தெனக்கேட்டு........... நின்னையப், பொய்யில் பொதுவற் கடைசூழ்ந்தார் தந்தையோ, டையன்மா ரெல்லா மொருங்கு" கலி. க0எ: ௩0 - ௩௪.

உ. "மணற்றாழப் பெய்து" (கலி. கக௪: கஉ) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

(பிரதிபேதம்) * என்றாள் அவன்கண்ணி, †பெய்து வதுவையும், ‡தங்கப்பெய்து கல்லியாணமிப்பொழுதே. || அக்காரியமேயாமினியஞ்சாதே, ╋இதுஐஞ்சீரடுக்கி.

அ நீநீங்கு, கன்றுசேர்ந் தார்கட் கதவீற்றுச் சென்றாங்கு
வன்கண்ண னாய்வர லோம்பு ;"
௧௦ யாய்வருக வொன்றோ பிறர்வருக மற்றுநின்
கோவரினு மிங்கே வருக தளரேன்யா
னீயருளி நல்கப் பெறின் ;
௧௩ நின்னையான் சொல்லினவும் பேணாய் நினைஇக்
கனைபெய லேற்றிற் றலைசாய்த் தெனையதூஉ
மாறெதிர் கூறி மயக்குப் படுகுவாய்
கலத்தொடியாஞ் செல்வுழி நாடிப் புலத்தும்
வருவையா னாணிலி நீ.

இது வினைவலபாங்கிற் றலைவியை ஆற்றிடைக்கண்டு * விலக்கிய தலைவனோடு அவள் சில மொழிகூறித் துறியிடங் கூறியது.

இதன் பொருள்.

(௧)பாங்கரும் (௨)பாட்டங்காற் (௩)கன்றொடு செல்வேமெந்
† தாம்பி னொருதலை பற்றினை யீங்(௪)கெம்மை
முன்னைநின் றாங்கே விலக்கிய வெல்லாநீ
‡ யென்னை (௫)யே முற்றாய் விடு

எ - து: மனைப் ||பக்கத்திற், பிறர் சேருதற்கரிய, நாம் பயிர் செய்யுந் தோட்டத்திடத்தேகன்றோடுபோகாநின்றேம்; அங்ஙனம்போகின்றஎம்முடைய கையில் தாம்பின் ஒரு தலையைப் பிடித்தனையாய் எம்மை இவ்விடத்தே ÷ முன் பேயும் ஒருதா நின்று விலக்கினாற்போல விலக்குதற்கு, எடா ! நீ என்ன பித்தேறினாய் ? நீ என்னைப் போகவிடு என்றாள். எ - று.

௧. "பாங்கருங் கானத்து" கலி. ௧௧௫: ௧௫.

௨. "பாட்டங்கால்" கலி. ௧௧௧: ௪.

௩. "கன்றெல்லாந் தாம்பில்" கலி. ௧௧௩: ௧ - ௨. என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

௪. "பேரேமுற்றார்போல முன்னின்று விலக்குவா, யாரெல்லா நின்னை யறிந்ததூஉ மில்வழி" கலி. ௧௧௩: ௪ - ௫.

௫. இந் நூற்பக்கம் ௪௨௩: ௫ - ஆங் குறிப்புப் பார்க்க

(பிரதிபேதம்) * விலக்கியவத்தலைவனோடு, † தாம்பிலொருதலை, ‡ என்னே முற்றாயவிடு || பக்கத்திற்சேருதற்கரிய நாம்பயிரைச்செய்யும், ÷ முன்பேவுமொருத்த நின்று விலக்கினாரைப்போல.

௫ * விடேஎன், (க)தொடீஇய செல்வார்த் துமித்தெதிர் மண்டுங்
கடு †வய நாகுபோ னோக்கித் (உ)தொடுவாயி
னீங்கிச் சினவுவாய் ‡ மற்று

எ - து: அதுகேட்டவள், யான் நின்னைப் போகவிடேன்; தன்னைத் தீண்டுதற்குச் செல்லுமவர்களை இடையே விலக்கி எதிரே மிக்குச்செல்லுங் கடிய வலியினையுடைய நாகுபோலே செறுத்துநோக்கித் தொழுவின் வாயிலி னின்றும் போந்து நின்று பின்னைச் சினப்பா ||யென்றான். எ - று.

௮ நீநீங்கு, கன்றுசேர்ந் தார்கட் ÷ கத (௩)வீற்றாச் சென்றாங்கு
வன்கண்ண ளாய்வர லோம்பு

எ - து: அதுகேட்டவள், நீ இவ்விடத்து நின்றும் போ; அதுவென் னெனில் தன்னுடைய கன்றைச் சேர்ந்தார்மேலே கோபத்தையுடைய புனிற் றாச் ×சென்றாற்போல நீ என்மேலே வந்தது காணில் யாய் தறுகண்மையை யுடையளாய் வந்துசீறுதலுமுண்டுகாண்; அவ்வரவை நீபேணிக் +கொள்வா யென்றாள். எ - று.

௧௦ யாய்வருக வொன்றோ பிறர்வருக மற்றுநின்
கோவரினு மிங்கே வருக **தளரேன்யா
(௪)னீயருளி நல்கப் பெறின்

---

க. வயாவென்பது வேட்கைப் பெருக்கத்தை யுணர்த்துமென்பதற்கு, "தொடீஇய செல்வார்த் துமித்தெதிர் மண்டுங், கடுவயா நாகுபோ னோக்கி"என்பதனை மேற்கோள்காட்டி, வயாவென்பது கன்றின்மேற் காதன்மிகுதி குறித்து நின்றதென்பர், தெய்வச்சிலையார்; தொல். உரி. சூ. ௫எ. 'வயாவென்'

உ. எழுப்புதல் எடுப்புதலென வருதல்போல, தொழு, தொடுவென ழகரம் டகரமாய் வந்ததுபோலும்.

௩. (அ) "ஈற்றா, அச்சப்பொருளில் ஒன்றாகக் (தொல். மெய்ப். சூ. ௪) கூறப்பட்டிருத்தலும் (ஆ) "கடுஞ்சூலா நாகுபோ னிற்கண்டு நாளு, நடுங்கஞ ருற்றதென் னெஞ்சு" (கலி. ககo: க௪- க௫.) என்பதும் (இ) "கன்றமர் கறவை மான, முன்சமத் தெதிர்ந்ததன் றோழற்கு வருமே" (புறம். உஎ௫: அ - க.) என்பதும் ஈண்டு அறிதற்பாலன.

௪. (அ) "நின்றோழி யென்னை, யருளீயல் வேண்டுவல்" (ஆ) "களிறன் னான் றன்னையொரு, பெண்டி ரருளக் கிடந்த தெவன்கொலோ"

(பிரதிபேதம்) * விடேன் தொடிய செல்வோர்த். †. வயாநாகுபோனோக்கிக் கொடுமையா. ‡ மற்று நீநீங்கு. எ-து: || என்றான் தன் கன்று, ÷ கதவீற்றாய், × சென் றாப்போல, செற்றாற்போல, + கொள்ளென்றாள். யாய்.

எ - து: அதுகேட்டவன், நீ அருள்செய்து என்னைக் கூடப்பெறின், அவ்விடத்தே ஒன்று தாய் வருக; ஒன்று, அயலார் வருக; அவர்களேயன்றிப் பின்னை நின் தந்தை தான் வரினும் வருக; அதற்கு யான் வருந்தேனென்றான். எ - று.

௧௩ *நின்னையான் சொல்லினவும் பேணாய் நினை இக்
(௧)கனைபெய †லேற்றிற் றலைசாய்த் தெனையதூஉ
மாறெதிர் கூறி மயக்குப் படுகுவாய்
கலத்தொடியாஞ் செல்வுழி நாடிப் புலத்தும்
‡வருவையா ணிலி நீ

எ-து: அதுகேட்டதலைவி, நின்னையான் எத்தன்மையவாகவுஞ்சொன்ன || வார்த்தைகளைப் பரிகரியாயாய்க் கூட்டத்தையே நினைந்து செறிந்த மழையிடத்து ஏறுபோலே தலையைச் சாய்த்து யான் கூறியவற்றிற்கு எதிராகச் சில சொற்களைக் கூறி இங்ஙனம் மயக்கமுறுகின்றவனே! நாணமில்லாதவனே! நீ கறவைக்கலத்தோடே யாஞ் செல்லும் பசுமேய்க்கின்ற இடத்தையும் நாடி என் தமையன்மார் நிற்கும் புலத்திலும் வருவையாயிருந்தாய்; ஆண்டுக் கூடுதுமெனக் குறியிடங் கூறினள். எ - று.

இதனால், ÷இருவர்க்கும் புணர்ச்சியுவகை பிறந்தது.
இஃது ஐஞ்சீரடுக்கிவந்த கலிவெண்பாட்டு.

(௧௧எ) மாண வுருக்கிய நன்பொன் மணியுறீஇப்
பேணித் துடைத்தன்ன மேனியாய் கோங்கின்
முதிரா விளமுகை யொப்ப வெதிரிய
தொய்யில் பொறித்த வனமுலையாய் மற்றுநின்
கைய தெவன்மற் றுரை;

கையதை, சேரிக் கிழவன் மகளேன்யான் மற்றிஃதோர்
மாதர்ப் புலைத்தி விலையாகச் செய்ததோர்
போழிற் புனைந்த வரிப்புட்டில் புட்டிலு ளென்னுள
காண்டக்கா யெற்காட்டிக் காண்;

(இ) "இருளுறழ் கூந்தலா ளென்னை, யருளுறச் செயினுமக் கறனுமாரதுவே" (அ) "நீநல்கி னுண்டென் னுயிர்" கலி: ௬௧: ௧௬ - ௧எ, ௧௯ - ௨௦; ௧௪௦: ௩௩ - ௩௪; ௬௪: ௧௨.

௧. "கனைபெயல்" (கலி. ௪௫: ௪) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

(பிரதிபேதம்) * நினைஇயான், † ஏற்றித் தலைசாய்த்து, ‡ வருகுவையால், || வார்த்தைகளையும். பரிகரியாய், ÷ இருவரும் புணர்ச்சியுவகை யெய்தினர் இது அஞ்சீர்,

காணினி, தோட்டார் கதுப்பினென் றேழி யவரொடு
காட்டுச்சார்க் கொய்த சிறுமுல்லை மற்றிவை
முல்லை யிவையாயின் முற்றிய கூழையா
யெல்லிற்றுப் போழ்தாயி னீதோளிக் கண்டேனுற்
செல்லென்று நின்னை விடுவேன்யான் மற்றெனக்கு
மெல்லிய தோரா வறிவு.

*இஃது ஆற்றிடைத்தலைவன் தலைவியைக் கையதுவினுயச்சேர்ந்தது.

இதன் பொருள்.

மாண வருக்கிய நன்(க)பொன் மணியுறீ இப்
பேணித் தூடைத்தன்ன மேனியாய்(உ)கோங்கின்
முதிரா விளமுலை யொப்ப வெதிரிய

---

க. "பொன்னுரை மணியன்ன மாமைக்கண்" (கலி. ௬அ: கஎ) என்பதும் அதன் குறிப்பும் ஒப்புநோக்கற்பாலன.

உ. கோங்கு பாலைநிலத்துக்குரித்தாகக் கூறப்படுவது; பொரியரையுடையது; வேனிற்காலத்து மலரும் இயல்பினது; தோகதச்செய்கையில் மகளிர்குதலை கேட்டு மலர்வதாகக் கூறப்படுவது. இம்மலர் பொன்னிறமும் விரிந்து தோன்றலுமுடையதாதலால், இதற்கு விளக்கும் பொற்கிண்ணமும் பொற்றட்டும் பொற்றாசுத்தட்டும்பொற்குடையும் சரிதகமென்னுமாபரணமும் உவமையாகக் கூறப்படுகின்றன. இவை (அ) "அலர்முலை யதுமே ரான கோங்கமு, மிலவமு மெல்லடி யினை வுருவகைத், தலைவரே டவ்வழிச் சார்ந ரின்புற, நிலைபெறு பஞ்சியி னெறிக ரெக்குமே" எனவும் (ஆ) "பொரியரைக் கோங்கின் பொன்மருள் பசுவீ" எனவும் (இ) "திணிநிலைக் கோங்கம பயந்த, வணிமிகு கொழுமுகை யுடையும் பொழுதே" (ஈ) "வேனிற் கோங்கின் பூம்பொருட்டு" எனவும் (உ) "கோங்க மாதர் குதலையைக் கேட்டலுந், தேங்கொள் போது சினைதொறும் பூத்தலால்" எனவும் (ஊ) "பொன்போதலர் கோங் கோங்கு சோலை" எனவும் (எ) "கோங்கின், கானுறக் கழன்ற கண்கமழ் பனிமலர், கைவிடு சுடரிற் றோன்றும்" (ஏ) "செல்சுடர் நெடுங்கொடி போலப், பல்பூங் கோங்க மணிந்த காடே" எனவும் (ஐ) "வள்ளம்போற் கோங்கு மலருந் திருநாடன்" எனவும் (ஒ) "கோங்கலர் சேர்ந்த மாங்கனி தன்னைப், பாங்குற விருந்த பல்பொறி மஞ்ஞையைச், செம்பொற்றட்டிற் றீம்பாலேந்திப், பைங்கிளி யூட்டுமோர் பாவையா மென்றும்" எனவும் (ஓ) "பொன்

பிரதிபேதம்.) * இது ஆற்றிடைத்தலைவியை.

(க)தொய்யில் பொறித்த வனமுலையாய் மற்றுநின்
கைய தெவன்மற் றுரை

எ - து: மாட்சிமைப்பட உருக்கி ஓடவைத்த நல்ல பொன்னிலே நீல் மணியை அழுத்திப் பேணி ஒப்பமிட்டாற்போன்ற கரிய நிறத்தையுடையாய்! முதிராத கோங்கினது இளைய முகையையொப்பத் தோன்றின தொய்யி லெழுதினவனமுலையையுடையாய்! பின்னை நின் கையிடத்தது யாதுதான் உரையென்றான். எ - று.

௰ கையதை, சேரிக் கிழவன் மகளேன்யான் மற்றிஃதோர்
மாதர்ப் புலைத்தி விலையாகச் செய்ததோர்
போழிற் புனைந்த வரிப்புட்டில் புட்டிலு ளென்னுள
*காண்டக்கா யெற்காட்டிக் காண்

எ - து: அதுகேட்டவள், என் கையிடத்தது, இச்சேரிக்குரிய இடையர்மகளாயிருப்பேன் யான், பின்னை என் கையில் இருக்கின்ற இது காதலையுடைய புலைத்தி விற்கப்படுவதொன்றாக முடைந்ததொரு புட்டில்; அது தான் பின்பு பனங் குருத்தின் வகிராற் பொத்தின தொழிலையுடைய புட்டி லென்றாள். அதுகேட்டவன், (உ) காட்சிதக்கவளே! இப்புட்டிலுள் என்ன பண்டங்களுள? அவற்றை எனக்குக் காட்டிக்கா†ணென்றான். எ - று

---

செய் கன்னம் பொலிய வெள்ளி, நுண்கோ லறைகுறைந் துதிர்வன போல, வரவ வண்டின மூதுதொறுங் குரவத், தோங்குசினை நறுவீ கோங்கல ருறைப்ப" எனவும் (ஔ) "புல்லிதழ்க் கோங்கின் மெல்லிதழ்க் குடைப்பூ" (ஃ) "குடைமாக மெனவேந்திக் கோங்கம்போ தவிழ்ந்தனவே" (அஅ) "குடையவிழ்வன கொழுமலரின குளிர்களியன கோங்கம்" (ஆஆ) கோங்கு பொற்குடை கொண்டு கவித்தன" எனவும் (இஇ) "கைவல் வினைவன் றையுபு சொரிந்த, சுரிதக வு'ந் வின வாகிப் பெரிய, கோங்கங் குவிமுகை யவிழ" எனவும் வருவன வற்றால் அறியலாகும். இதன் றாது பொன்னிறமுடையதென்பது கலி. ௩௩: ௧௨-ஆம். அடியானுணரப்படும். இதன் காய் சால்போன்றதென்றும் பஞ்சுடையதென்றும் கூறுவர்; இதன் அரும்பும் மகளிர் கொங்கையும் ஒன்றற்கொன்று உவமையாகக் கூறப்படுதலை இந்நூற் பக்கம் ௩௪௪: ௨ - ஆம் குறிப்பால் உணர்க.

௧. (அ) "தொய்யில் பொறித்த சுணங்கெதி ரிளமுலை" மது. ௪௧௬. (ஆ) "தொய்யில் பொறித்த வனமுலை" (இ) "தொய்யில் பொறித்த வழி" கலி. ௧௭: ௧௨; ௧௪௪: ௩௪.

௨. காண் - அழகுமாம்.

பிரதிபேதம்) *காண்டக்காய் காட்டிக்காண். †என்றான் தோட்டார்.

காணினி, (௧)தோட்டார் கதுப்பினென் றோழி யவரொடு
காட்டுச்சார்க் கொய்த சிறுமுல்லை மற்றிவை
முல்லை யிவையாயின் முற்றிய கூழையா
யெல்லிற்றுப் போழ்தாயி னீதோளிக் கண்டேனாற்
(௨)செல்லென்று நின்னை விடுவேன்யான் மற்றெனக்கு
மெல்லிய தோரா வறிவு.

எ - து: அதுகேட்டவள், இனிக்காண்பாயாக; பின்னை இவை இத் தூலே நிறையப்பட்ட மயிரினையுடைய என் தோழி ஆயத்தாருடனே காட்டிடத்தே பறித்த சிறுமுல்லையென்றாள்; அது கேட்டவன், முடிகூடின மயிரினையுடையாய்! யான்தனியே இவ்விடத்தே*கண்டேனால்; இருந்தஇவை முல்லைப்பூவாயின், இவை தொடுத்துமுடித்து நாங் கூடுதற்குப் பொழுதாயின், ஒளி இத்தன்மைத்தாயிராநின்றது; நின் நினைவு போக்கிலேயாகில் யான் போவென்று விடுவதுஞ் செய்வேன்; பின்னை எனக்கு நின்னைப் போகவிடுதலை †ஓராது இவள்ன் என் அறிவு இளைத்திராநின்றது; இனி இக் கூட்டத்திற்கு உடம்பட நில்லென்றான். எ - று.

இது (௩)‡இதோளி ஈதோளியெனச் சுட்டு நீண்டு நின்றது; இது சுட்டு முதலாகிய இகரவீற்று வல்லெழுத்து மிக்கு நின்றது.

---

௧. (அ) "தோட்டார் கதுப்பினாள்" குறள். ௧௧௦௫. (ஆ) "தோட்டார் குழலியொடு" சிலப். ௧௫: ௧௧௮.

௨. "நின்மொழிகொண் டியானோ விடுவேன்மற் றென்மொழிகொண், டென்னெஞ்ச மேவல் செயின்" கலி. ௧௧௩: ௧எ - ௧௮.

௩. "ஒரு காலத்து வழங்கப்பட்ட சொல் ஒரு காலத்து வாராதாகலும் பொருள் வேறுபடுதலுமுடைய; அதோளி இதோளி உதோளி எனவும் குயின் எனவும் நின்ற இவை ஒருகாலத் துளவாகி இக்காலந் தில வாயின. இவை முற்காலத்துளவென்பதேகொண்டு வீழ்ந்தகாலத்தும் செய்யுள் செய்யப்படா. அவை ஆசிரியர் நூல் செய்த காலத்து உளவாயினும் கடைச்சங்கத்தார் காலத்து வீழ்ந்தமையிற் பாட்டினுந் தொகையினும் அவற்றை நாட்டிக்கொண்டு செய்யுள் செய்திலர்; அவற்றுக்கு இது மரபிலக்கண மாகலி னென்பது" என்று பேராசிரியரும் "ஒருகாலத்து வழங்கிய சொற்கள் ஒருகாலத்து வழங்காதனவு முள" என்பதற்கு, அதோளி இதோளி உதோளி குயின் என்பவற்றை மேற்கோள் காட்டி, 'இவை இடைச்சங்கத்திற் காகாவாயின'

பிரதிபேதம்) * கண்டேனா யிருந்தஇவை, † ஓராதிவளனறிவு, ஓராதி வயனைரறிவு, ‡ இது தொளி யீதொளியென.

இதனால், இருவர்க்கும் புணர்ச்சியுவகை *பிறந்தது.

---

என்று நச்சினார்க்கினியரும், "மரபேதானும்" என்னும் (தொல். செய். அ௦.) சூத்திரத்தினுரையில் எழுதி யிருக்கிறார்கள்; 'இவை இடைச் சங்கத்திற் காகாவாயின' என்ற நச்சினார்க்கினியருக்குக் கடைச்சங்கத்திற் காகுமென்பது கருத்தென்று கொள்ளலாகாது; இச்சொற்கள் வழக்கி லில்லையென்பதே கருத்தென்று கொள்ள வேண்டும். ஆனல், 'சுட்டு முதலாகிய விகரவிறுதியும்' என்னும் (தொல். தொகை. கள) சூத்திரவுரையில் இளம்பூரணர்சுட்டுமுதலாகிய இகரவிறுதிக்கு, அதோளி, இதோளி, உதோளி என்னுஞ் சொற்களை உதாரணங்காட்டி யிருக்கிறார். நச்சினார்க்கினியரும் அவரையே பின் பற்றி அச்சூத்திரவுரையில் அப்பகுதிக்கு அச்சொற்களையே உதாரணங் காட்டி யிருப்பதோடு 'அதோளி - அவ்விடமென்னும் பொருட்டு' என்று குறிப்பும் எழுதியிருக்கிறார். "ஞமவவென்னும் புள்ளிமுன்னர், யவ்வொ னிற்றன் மெய்பெற் றன்றே" என்னும் (தொல். நூன்மரபு உள.) சூத்திரத்துரையில், இங்ஙனம் ஆசிரியர் சூத்திரஞ்செய்தலின் அக்காலத்து இந்நான்கு புள்ளிகளின் முன்னும் யகரம் வரப்பெற்று ஒரு மொழியாக வழங்கிய சொற்கள் உளவென்பது பெற்றாம். அவை இக்காலத்து இறந்தன என்று கூறுபவராகிய இவர், அதோளி முத லியசொற்கள் முற்காலத்துளவாகி இவர்காலத்து இலையாயின் 'சுட்டு முதலாகிய விகரவிறுதியும்' என்னுஞ்சூத்திரவுரையிலும் 'இங்ஙனம் ஆசிரியர்சூத்திரஞ்செய்தலின் அக்காலத்துச், சுட்டுமுதல் இகரவீறான சொற்கள் உளவென்பது பெற்றாம்; அவை இக்காலத்து இறந்தன' என்றன்றோ கூறவேண்டும். இவர் கூற்றுள்ளே முன்னுக்குப் பின் முரணுகின்றதே எனின் முரணாது அமைத்துக்கொள்ளல் வேண்டும். நாமறிந்த அளவில் இச்சொற்குப் பொருளறிவித்தவர் இவரே. அங்கு, அதோளியென்பதற்கு அவ்விடமென்று பொருள்கூறி யிருப்பது போலவே இந்நூலிலும் இச்செய்யுளில் 'இதோளி' என்னுஞ் சொல் லுக்கு 'இவ்விடம்' என்று பொருள் கூறியிருக்கிறார். இவற்றையும் செய்யுளியலுரையில் இவர் எழுதியிருப்பதையும் நோக்கின், இச் சொற்கள் மிகுதியாக வழங்காமை கருதிச் செய்யுளியலில் அவ்வாறு எழுதினரென்றும் இவை அருகி வழங்குமென்பதே இவர் கருத்தென் றும் கொள்ளுதலேதகுதியாம். "கதிர்த்ததண் பூணி கம்புடாழ் பீலிக் கனைகுர ஞரைவண் டானம்" (சீவக. உ௩௦அ.) என்பதனுரையில் 'பூணிகம்பு ளென்பன இறந்தவழக்கு' என்று இவர் எழுதியுள்ள

(பிரதிபேதம்) * தோன்றிற்று.

இது கொச்சகக் கலி. (௧௭)

*முல்லைக்கலி முற்றும்.



கருத்தையும் நோக்குக. 'இதோளி' என்னுஞ்சொல் ஒன்றே முதல் நீண்டாவது இந்நூலிற் காணப்படுகின்றது; அதோளி உதோளி யென்பன நாமறிந்தஅளவில் ஓரிடத்துங் காணப்படவில்லை. வடமலை யாளமாகிய தளிச்சேரிப்பக்கத்து இப்போதும் ஒளியென்பது இட மென்னும் பொருளில் பெரியோரைச் சுட்டி உயர்சொற் கிளவியாய் வழங்குமென்ப; இச்சொற்கள்பண்டைக்காலத்தே சுற்றிகரங்குறைந்து ளகர ஈறாயும் வழங்கின வென்பது தொல். புள்ளி. ௧0௩-ஆம் சூத்திர வுரைகளிலுள்ள உதாரணங்களால் அறியலாகும். கன்னடத்தில் அத ரொள் இதரொள் என்பன அதில் இதிலென்னும் பொருளில் வழங்கு மென்பதும் இங்கேகருதத்தக்கது. அன்றியும் இக்காலத்து அவ்விடம் இவ்விடமென்னும் பொருளில் வழங்கும் அதோ இதோ என்னுஞ் சொற்களும் அதோள் இதோள் என்பவற்றின் சிதைவோஎன்றும் ஐயமுண்டாகிறது. இவற்றைப் பாகதச் சிதைவென்பாருமுளர். இவற்றுள், இதோவென்பது சிவஞானமுனிவராற் செய்யுளிலும் பல இடத்து எடுத்தாளப்படுகிறது. "மற்றிதோ தோன்றுகின்ற, சோலைசூழ் வரையினெற்றி" (சீவக. ௧௨௩௨) என்புழி. இதோ வென்பது இவ்விட மென்னும் பொருளில் சிந்தாமணியிலும் வந்துள்ளது. அங்கு 'இதோ, திசைச்சொல்' என்று இவ்வுரையாசிரியர் குறிப்பு எழுதியிருக்கிறார்.

(பிரதிபேதம்) * முல்லைப்பாட்டு முற்றும், முல்லை முற்றும்.